




# ஸ்ரீமத் பாகவதம்

## தமிழ் வசனம்

### பாகம் –6



ஸ்கந்தம் 10 அத்தியாயம் 55 முதல்
ஸ்கந்தம் 11 அத்தியாயம் 13 வரை



இஞ்சிக்கொல்லை
R. சிவராம சாஸ்திரிகள்
அவர்களால் 1908ல் மொழி
பெயர்க்கப்பட்டது.



---

ஸ்ரீ ராம நாம வங்கியின் ப்ரசாரப் பிரசுரப் பிரிவு
ராம மந்திரம் –2, விநாயகம் தெரு,
சென்னை – 600 033. ☎: 24893736

ஸ்ரீமத் பாகவதம்
தமிழ் வசனம்


| | | |
|---|---|---|
| TITLE | : | SRIMAD BHAGAVATHAM, TAMIL VACHANAM |
| AUTHOR | : | INZIKOLLAI R. SIVARAMA SASTRIGAL WRITTEN IN 1908 |
| SIZE | : | CROWN OCTAVE |
| EXTENT | : | 2736 PAGES CONSISTING OF SEVEN VOLUMES |
| PRICE | : | RS.600/ SET |
| FIRST EDITION | : | 1996 |
| SECOND EDITION | : | 2004 |
| THIRD EDITION | : | 2007 |


## பகவன் நாம விஷயம்

பகவன் நாம ரஸோதயம்

நாம ஸாம்ராஜ்யம்

மனாசே ஸ்லோக

பக்த ஸாம்ராஜ்யம்

பக்த ரத்தினங்கள்

பகவன்நாமரஸாயனம்

நாமப்ரபாவம்

ராம நாம மகிமை

ராமநாமத்தின்பெருமை

திருமாலை

ஸ்ரீபகவன் நாம மகிமை

ஆயிரம் நாமகுறிப்புகள்

ஜய கல்யாண ஸூக்திலஹரீ

நாமவைபவம்

நாமச் சிறப்பு

நாமவிசேஷம்

ஸ்ரீ பகவன் நாமா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு :

# ஸ்ரீமஹாபெரியவா ட்ரஸ்டின்

தேவீ நாமஸ்தோத்திர மஞ்ஜரீ பாகம் 1,2
ஸ்ரீ வாஞ்சிய க்ஷேத்ர மாஹாத்ம்யம்
ஸ்ரீ நடராஜ ஸ்தவ மஞ்ஜரீ
ஸ்ரீ நடராஜ நாம மஞ்ஜரீ
ஸ்ரீ சிவ நாம மஞ்ஜரீ
ஸ்ரீ பாலாஸபர்யா
ஸ்துதி த்ரயீ
ஸ்ரீ ஸ்கந்த ஸ்தவ மஞ்ஜரீ
ஸ்ரீ மீனாக்ஷீ ஸ்தோத்ர மஞ்ஜரீ
ஸ்ரீ தத்தாத்ரேய ஸ்துதி மஞ்ஜரீ
ஸ்ரீ மத்யார்ஜுனக்ஷேத்ரமாஹாத்ம்யம்
ஸ்ரீவிஷ்ணுஸ்துதிமஞ்ஜரீ
ஆத்மநாதஸ்துதிமஞ்ஜரீ
ஸ்ரீபகவதீஸ்துதிமஞ்ஜரீ

# ஸ்ரீ ஸ்வாமிநாதஆத்ரேயனின் எழுத்துக்களில்

ஸ்ரீமத் பாகவத சங்க்ரஹம்
ஸ்ரீமத் ராமாயண சங்க்ரஹம்
ராம மாதுரி நாம சாம்ராஜ்யம் பக்த சாம்ராஜ்யம்
ஐயாவாளின் நாமஅனுபவங்கள்
தியாகராஜ அனுபவங்கள்
துளஸி ராமாயணம்
துளஸிதாஸரின் திவ்ய சரித்திரம்
ஹனுமான் சாலீசா

ஸ்ரீ பகவன் நாமா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு :-

<u>ஸ்ரீ ராம நாம வங்கியின் ராம நாம நோட்டு வாங்குவோருக்கும் மற்ற உதவிகள் செய்வோருக்கும் அளிக்கப்படும் ப்ரஸாதங்கள்.</u>

ஸ்ரீமத் பாகவத ரஹஸ்யம்
ஸ்ரீமத் ராமாயண ரகசியம்
கலியுக தர்ம சாஸ்திரம்
பூஜா கல்பம்
கோஸம்ரக்ஷணம் (பசு பாதுகாப்பு)
ஆசாரமும் ஆஹாரமும்
ஸ்ரீ வாசுதேவ ப்ரம்மம் திவ்ய சரித்திரம்
மன அமைதி வேண்டுமா?
போதேந்த்ர அமுதம் (போதேந்திரரின் பொன்மொழிகள்)
நாம வைபவம்
நாம விசேஷம்
நாமச் சிறப்பு
ஸ்ரீ ஆலங்குடி சுவாமிகள் திவ்ய சரித்திரம்
ஸ்ரீ சைதன்ய மஹாப்ரபு ஸஹஸ்ர நாமம்
சுந்தரகாண்டம்
தின்சரி ராமாயணம்
தினசரி பாகவதம்
ராம நாம மஹிமை
ஸ்ரீ ஸூக்தம்
புருஷ ஸூக்தம்
ஸ்ரீபகவன் நாம மகிமை
ஆயிரம் நாமகுறிப்புகள்
ஜய கல்யாண ஸூக்திலஹரீ

# ஸ்ரீமத் பாகவதம்-தமிழ் வசனம்

## பாகம்-6

### பொருளடக்கம்.

### ஸ்கந்தம்-10


| | | பக்கம் |
|---|---|---|
| 55. | ப்ரத்யும்ன ஜனனம் | 1 |
| 56. | சத்தியபாமையின் விவாகம் | 7 |
| 57. | கிருஷ்ணன் சததன்வாவைக் கொன்றது | 15 |
| 58. | கிருஷ்ணன் காளிந்தி முதலியவர்களை....... | 22 |
| 59. | நரகாசுர வதம் | 31 |
| 60. | கிருஷ்ணன் ருக்மிணியுடன் பரிகாசமாய்..... | 40 |
| 61. | கிருஷ்ணனுடைய புத்திர பௌத்ர சந்ததி | 54 |
| 62. | அநிருத்தனுடைய சரிதம் | 61 |
| 63. | பாணாசுர யுத்தம் | 67 |
| 64. | நிருகருடைய கதை | 77 |
| 65. | பலராமன் யமுனா நதியை இழுத்தது | 85 |
| 66. | பகவான் பௌண்ட்ரகனைக் கொன்றது | 90 |
| 67. | பலராமன் துவிதனைக் கொன்றது | 96 |
| 68. | கௌரவர்கள் ஸாம்பனைக் கட்டியது | 100 |
| 69. | நாரதர் கிருஷ்ணனுடைய கிருஹஸ்த..... | 107 |
| 70. | ஸ்ரீகிருஷ்ணனுடைய நித்தியக் கடமைகள் | 115 |
| 71. | கிருஷ்ணன் ராஜஸூயத்திற்காக இந்திரப்ரஸ்தம்..... | 124 |
| 72. | பீமசேனர் ஜராசந்தனைக் கொன்றது | 133 |
| 73. | கிருஷ்ணன் அரசர்களை விடுவித்தது | 140 |
| 74. | தர்மபுத்திரர் ராஜசூய யாகம் செய்தது | 145 |
| 75. | தர்மபுத்திரர் அவபிருதஞ் செய்தது | 155 |
| 76. | ப்ரத்யும்னன் சால்வனுடன் யுத்தஞ் செய்தது | 162 |
| 77. | சால்வவதம் | 166 |

பக்கம்

78. தந்தவக்கிர வதம் 173
79. பலராமன் தீர்த்தயாத்திரை செய்தது 179
80. குசேல சரித்திரம் 184
81. பகவான் குசேலருக்கு ஐஸ்வர்யத்தை..... 191
82. ஸ்ரீகிருஷ்ணன் முதலியவர்கள் சூரிய..... 198
83. திரௌபதியும் ருக்மிணி முதலியவர்களும்... 207
84. வசுதேவர் யாகஞ் செய்தது 217
85. கிருஷ்ணன் தாய்தந்தைகளுக்கு ஞானத்தை...... 232
86. அர்ச்சுனன் சுபத்திரையை அபகரித்தது 243
87. சுருதி கீதை 253
88. விருகாசுரன் வரம் பெற்றது 312
89. தேவர்களில் விஷ்ணு மேலானவர்........ 319
90. ஸ்ரீகிருஷ்ணன் லீலைகளின் சுருக்கம் 328

ஸ்கந்தம்–11

1. யதுகுலத்தை ப்ராஹ்மணர்கள் சபித்தது 337
2. வஸுதேவருக்கு நாரதர் பாகவத தர்மத்தை ... 342
3. மாயையும் பூஜாவிதியும் 354
4. நாராயண மஹரிஷியின் மஹிமை 370
5. பகவானிடத்தில் பக்தி.... 377
6. தேவர்கள் கிருஷ்ணனை வைகுண்ட..... 389
7. பகவான் உத்தவருக்கு உபதேசித்தது 399
8. மலைப்பாம்பு முதலியவைகளிடம் .... 413
9. குரரம் முதலியவைகளிடத்தில்.... 424
10. தத்வக்ஞான ஸாதனங்கள் 431
11. பக்த முக்த லக்ஷணங்கள் 439
12. ஸாது ஸங்கத்தின் மஹிமை 449
13. ஹம்ஸோ பாக்யானம். 455

# அத்தியாயம்–55

## ப்ரத்யும்ன ஜனனம்

வாஸுதேவருடைய அம்சமான மன்மதன் முற்காலத்தில் ருத்திரனுடைய கோபத்தால் எரிக்கப்பட்டு சரீரமில்லாதவனாக இருந்தான். அவன் திரும்பவும் சரீரத்தை அடைய விரும்பி ஸ்ரீ கிருஷ்ணனை அடைந்தான். அந்த மன்மதன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய வீரியத்திற்கு ருக்மிணியிடத்தில் ப்ரத்யும்னன் என்ற பெயருடன் பிறந்தான். அவன் ஸகல குணங்களிலும் கிருஷ்ணனுக்கு சமமாக இருந்தான். அவன் பிறந்த பத்து நாளைக்குள், இஷ்டப்படி ரூபமெடுக்கச் சக்தியுள்ளவனான சம்பரனென்ற அஸுரன் அந்தக் குழந்தையைத் தனக்குச் சத்ருவென்று நினைத்து, ஒருவருக்குந் தெரியாமல் அந்தக் குழந்தையை அபஹரித்து, ஸமுத்திரத்தில் போட்டுத் தன்னுடைய கிருஹஞ்சென்றான்.

பின்பு ஸமுத்திரத்திலுள்ள ஒரு பருத்த மத்ஸ்யமானது அந்தத் குழந்தையை விழுங்கிற்று. அதன் பின் வலையர்கள் ஸமுத்திரத்தில் மீன் பிடிப்பதற்காக வலையை வீசும்பொழுது குழந்தையை விழுங்கிய மீனும், மற்ற மத்ஸ்யங்களும் வலையில் அகப்பட்டு வலையர்களால் பிடிக்கப் பட்டன. அந்தப் பருத்த மத்ஸ்யத்தை வலையர்கள் சம்பரனிடம் காணிக்கையாக கொடுத்தார்கள். அத்புதமான அந்த மத்ஸ்யத்தை சமையல்காரர்கள் பாகசாலைக்குக் (சமையல் கட்டு) கொண்டு போய் கத்தியால் பிளந்தார்கள். அதன் வயிற்றில் அத்புதமான ஒரு குழந்தை இருக்கக் கண்டு

மாயாவதியினிடம் அந்தச் சிசுவைக் கொடுத்தார்கள். அதனைக் கண்டு மாயாவதி, "இதென்ன மத்ஸ்யத்தின் வயிற்றில் குழந்தையிருக்கிறேதே" என்று ஸந்தேஹிக்கும் பொழுது நாரதர் அவ்விடம் வந்து அவளை நோக்கி, மத்ஸ்யத்தின் வயிற்றில் இந்தக் குழந்தை வந்த விஷயத்தை நன்றாகச் சொன்னார்.

அந்த மாயாவதி யென்பவள் மன்மதனுடைய பத்னியாகிய ரதிதேவி. அவள் சம்பரனுடைய பாகசாலையில் அன்னம்,பருப்பு, முதலியவைகளைச் சமையல் செய்யும்படி சம்பரனால் ,ஏற்படுத்தப்பட்டி ருந்தாள். மேலுமவள் ருத்திரனுடைய கோபத்தால் மன்மதன் எரிக்கப்பட்டுச் சரீரமற்றவனான பின் அவனுக்கு எப்பொழுது சரீரம் உண்டாகப் போகிறதென்று அதனை எதிர்பார்த்துக்கொண்டு, சம்பரனுடைய கிருஹத்தில் வசித்திருந்தாள். அப்ப டிப்பட்ட மாயாவதி மிக அழகுள்ள அந்தக் குமாரனைப் பார்த்து முகம் மலர்ந்து, மன்மதனே இந்தக் குழந்தையென்று தெரிந்துகொண்டு அவனிடத்தில் மிக்க அன்பு வைத்திருந்தாள். ஸ்வல்ப காலத்தில் அந்தக் குழந்தை யௌவன வயதை யடைந்தான். அப்பொழுது அவன் தன்னைப் பார்க்கும் ஸ்திரீ களுக்கு விளையாட்டையுண்டுபன்னினான்.

அப்பொழுது அந்த மாயாவதி தாமரைப் புஷ்பத்தின் இதழ் போன்ற கண்களுள்ளவரும், தொங் குகின்ற கைகளுள்ளவரும், மிக்க ஸௌந்தரியமுள்ள வரும், தனக்குப் பர்த்தாவுமான ப்ரத்யும்னரை வெட்கச் சிரிப்புள்ள பார்வையால் பார்த்துக் கொண்டு, அவரிடம் மன்மத விகாரமுள்ளவளாகி நின்றாள்.





அதனைக்கண்ட ப்ரத்யும்னர், "ஓ அம்மா ஸாதாரண ஸ்திரீபோல நீ வேறு எண்ணங்கொண்டிருப்பது ஸரியல்ல; நீ எனக்குத் தாயல்லவா ? என்றார். அதனைக் கேட்ட ரதியானவள் (மாயாவதி), "நீர் ஸ்ரீமந் நாராயணருடைய புத்திரர்; நான் ரதி; நீர் மன்மதன்; ஆனதால் நான் உமக்குப் பத்தினி; இந்தச் சம்பரன் உம்மைக், குழந்தையாக இருக்கும் பொழுதே (பிறந்து பத்து நாளைக்குள்) கிருஷ்ணனுடைய கிருஹத்திலிருந்து அபஹரித்து ஸமுத்திரத்தில் போட்டான். அப்பொழுது ஒரு மத்ஸ்யம் விழுங்கிற்று அதன் வயிற்றிலிருந்து உம்மை நான் எடுத்துக் கொண்டேன். தாயான ருக்மிணி புத்திரனை விட்டுப் பிரிந்து குரரிபக்ஷி போல் கதறுகிறாள். ஆனதால் இந்த சம்பரனை மோஹனம் முதலிய மாயையால் கொல்லும்; உமக்கு இவன் சத்ரு; பிறரால் கொல்ல முடியாதவன். அநேக மாயைகளை அறிந்தவன்" என்று சொல்லி ஸகல மாயைகளையும் நாசஞ் செய்யக் கூடிய மஹாமாயா வித்தையை உபதேசித்தாள்.

17 – 24. அந்த பிரத்யும்னர் அதனைப் பெற்றுக்கொண்டு சம்பரனிடஞ் சென்று, 'யுத்தத்திற்கு வா' என்று அழைத்தார். ஸஹிக்க முடியாத நிந்தா வார்த்தைகளைச் சொல்லி, அவனுக்குக் கோபத்தை யுண்டுபண்ணினார். அதனைக் கேட்ட சம்பரன் காலால் மிதிக்கப்பட்ட ஸர்ப்பம் போல மிகவும் கோபங்கொண்டு, சிவந்த கண்களுள்ளவனாகி, கதாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு வெளியில் வந்தான். மேலுமவன் வஜ்ரம் போல் கெட்டியான கதாயுதத்தைச் சுழற்றி, ப்ரத்யும்னரை நோக்கி

ப்ரயோகித்தான். அதனைக் கண்ட ப்ரத்யும்னர் தமது கதையால் அந்தக் கதாயுதத்தை அடித்து, மிக்க கோபத்துடன் தமது கதாயுதத்தை சம்பரன் மீது பிரயோகித்தார். அப்பொழுது அந்த அஸுரன் மயனுடைய மாயா பலத்தால் ஆகாயத்தில் மறைந்திருந்து கிருஷ்ணனுடைய புத்திரனாகிய ப்ரத்யும்னர் மீது அஸ்திரங்களை வர்ஷித்தான். அவைகளால் பீடிக்கப் பட்ட ப்ரத்யும்னர் ஸகல மாயைகளையும் நாசஞ் செய்யக் கூடியதும், ,அதிக ஸத்வ குணம் பொருந்தியதுமான வித்தையைப் ப்ரயோகித்தார். அஸுரனும், காந்தர்வம், பைசாசம், குஹ்யகம், உரகம், ராக்ஷஸம் முதலிய பல அஸ்திரங்களைப் ப்ரயோகித்தான். ப்ரத்யும்னர் கூர்மையான கத்தியை யெடுத்து அவைகளையும், கிரீட குண்டலங்களுள்ளதும், சிவந்த மீசையுள்ளதுமான சம்பரனுடைய தலையையும் வெட்டினார். தேவர்கள் புஷ்பங்களை வர்ஷித்து ஸ்துதித்தார்கள்.

25–30. பின்பு ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ஸாமார்த்தியமுள்ளவளான மாயாவதி ப்ரத்யும்னரைத் தூக்கிக் கொண்டு கிருஷ்ணனுடைய அந்தப்புரஞ் சென்றாள். மின்னலுடன் மேகம் வந்தாற் போல அந்தப்புரத்தில் ஆகாயத்திலிருந்து ரதியுடன் இறங்கிய ப்ரத்யும்னரைக் கண்டு அவ்விடத்திலுள்ள ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனென்று நினைத்து வெட்கப்பட்டு ஒளிந்து கொண்டார்கள். ப்ரத்யும்னர் மேகம் போல கருத்த நிறமுள்ளவராகவும் பீதாம்பரத்தைத் தரித்தவராகவும், தொங்குகின்ற கைகளுள்ளவராகவும், சிவந்த கண்களுள்ளவராகவும், கருத்தும் வக்ரமுமான மயிர்களால் அலங்கரிக்கப் பெற்றதும், புன்சிரிப்புள்ளதும், அழகு பொருந்தியதுமான முகமுள்ளவராகவுமிருந்ததனால் ஸ்ரீகிருஷ்ணன் என்றே நினைக்கக்கூடியதாக இருந்தது. பின்பு அவர்கள் கிருஷ்ணனுக்கும் இவருக்குமுள்ள ஸ்வல்ப பேதத்தை மெள்ள மெள்ளக் கண்டு பிடித்து, உத்தம ஸ்திரீயுடனிருக்கும் அவருடைய ஸமீபஞ் சென்றார்கள்.





31–34. அப்பொழுது ப்ரத்யும்னரைப்பார்த்து அழகாகப் பேசக்கூடிய ருக்மிணியானவள் ஸ்நேஹத்தால் பால்சுரந்த ஸ்தனங்களுள்ளவளாகி, முன்பு காணாமற்போன தன்னுடைய குழந்தையை நினைத்துக் கொண்டாள். மேலும் அவள், "இந்த புருஷ ச்ரேஷ்டன் யார்? தாமரைக் கண்ணனாகிய இவன் யாருடைய புத்திரன்? எவளுடைய கர்பத்திலிருந்தவன்? எவ்வித புண்ணியஞ்செய்து இவனை இவள் புத்திரனாக அடைந்திருக்கிறாள்? என்னுடைய குழந்தை ப்ரஸவ கிரஹத்திலிருந்தே காணாமற் போயிற்று; அந்தக்குழந்தை எவ்விடத்திலாவது ஜீவித்திருக்குமானால் இவனுக்குச் சமமான வயது, சரீரம் இவைகளுள்ளதாக இருக்கும். ஆனால் இவன் ஆகிருதி,அவயவங்கள், கண்ட ஸ்வரம் (பேச்சுக் குரல்), நடை, சிரிப்பு, பார்வை இவைகளில் ஸ்ரீ கிருஷ்ணனை ஒத்திருக்கிறான். இதெப்படிப் பொருந்தும், அல்லது, காணாமற்போன என்னுடைய குழந்தை இவன் தானோ; இவனென்ற நினைக்கிறேன்; இவனிடத்தில் எனக்கு மிக்க ப்ரியமுண்டாகியிருக்கிறது; இடது கை துடிக்கிறது" என்று யோசித்தாள்.

35–39. அந்தச் ஸமயத்தில் உத்தம ச்லோகராகிய

கிருஷ்ணன் தேவகி, வஸுதேவர் இவர்களுடன் அவ்விடம் வந்தார். ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ப்ரத்யும்னருடைய பிறப்பு முதலியவைகள் நன்றாகத் தெரியுமானாலும் மௌனமாக இருந்தார். அப்பொழுது அவ்விடம் வந்த நாரதர், பிறந்தவுடன் குழந்தையைச் சம்பரன் தூக்கிக் கொண்டு போனது முதலியவைகளை விஸ்தாரமாகச் சொன்னார். இந்த அத்புதமான செய்தியைக் கேட்ட கிருஷ்ணனுடைய அந்தப்புர ஸ்திரீகள் வெகுநாளாகக் காணாமற்போய் இப்பொழுது திரும்பவும் வந்தவரான ப்ரத்யும்னரைப் பார்த்து மிகவும் ஸந்தோஷித்தார்கள். மேலும் தேவகி, வஸுதேவர், ராம கிருஷ்ணர்கள், அவர்களுடைய ஸ்திரீகள் ஆகிய இவர்கள் தம்பதிகளான ப்ரத்யும்னன் ரதிகளைத் தழுவி மிகவும் ஆனந்தத்தையடைந்தார்கள். பின்னும் த்வாரகாவாஸிகளான ஜனங்கள், காணாமற்போன ப்ரத்யும்னன் வந்ததைக் கண்டு, "மரணமடைந்தவன் பிழைத்து வந்தாற்போல இவன் தைவாதீனமாகத் திரும்பி வந்தான்" என்று சொல்லிக் கொண்டார்கள்.

40. அந்த பிரத்யும்னர் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சமமான ஆகிருதியுள்ளவராக இருந்ததால் அந்த ஸ்திரீகள், தமது பர்த்தாவென்று நினைத்தது ஆச்சரியமல்ல. நினைத்த மாத்திரத்தில் மனத்தைக் கலக்குகிறவனாகிய மன்மதனை நேரில் பார்த்தால் மனம் ஏன் கலங்காது? மேலும், லக்ஷ்மீக்கு வாசஸ்தலமாகிய கிருஷ்ணனுடைய பிரதிபிம்பமும், மன்மதனுமாகிய ப்ரத்யும்னர் ஸ்திரீகளுடைய மனத்தை அபஹரிப்பதில் என்ன ஆச்சரியம்?



# அத்தியாயம் –56

## ஸத்தியபாமையின் விவாஹம்

ஸத்ராஜித் என்பவர் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஒரு ஸமயம் அபராதஞ் செய்து அதனை நிவர்த்தித்துக் கொள்வதற்காகத்தம்முடைய கன்னிகையான ஸத்தியபாமையையும், ஸ்யமந்தகமென்ற ரத்னத்தையும் ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்தார் என்று சுகர் சொல்ல அதனைக்கேட்ட பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி, "ஓ ப்ராஹ்மண, ஸத்ராஜித் என்பவர் கிருஷ்ணனுக்கு என்ன அபராதஞ் செய்தார்? ஸ்யமந்தகமென்ற ரத்தினம் அவருக்கு எப்படி கிடைத்தது? அவர் எதற்காகத்தமது பெண்ணாகிய சத்தியபாமையைக் கிருஷ்ணனுக்குக் கொடுத்தார்?" என்று கேட்டார்.

8–9. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, ஸத்ராஜித் என்பவர் ஸூர்யனை உபாஸித்து ஸூர்யனிடம் பக்தி செய்தார்; அவருடைய பக்தியால் ஸூர்யன் மிகவும் ஸந்தோஷத்தை அடைந்து, அவருக்குத் தோழனாகவுமிருந்தார். அதனால் ஸூர்யன் ஸத்ராஜித் என்பவருக்கு ஒரு ரத்தினத்தைக் கொடுத்தார். அந்த ரத்தினத்தைக்கழுத்தில் ஹாரமாகத் தரித்துக் கொண்டு ஸத்ராஜித் த்வாரகைக்கு வந்தார். அவர் ஸூர்யன் போலப் ப்ரகாசித்ததனால் அவருடைய தேஜஸ்ஸால் ஸத்ராஜித்தென்று தெரிந்து கொள்ள முடியாமலிருந்தது. அவருடைய தேஜஸ்ஸால் கண் தெரியாதவர்களாகி ஜனங்கள் ஸூர்யன் என்று

ஸந்தேஹித்துச், சொக்கட்டான் விளையாடிக் கொண்டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "ஓ நாராயண!' சங்கம், சக்கிரம், கதாயுதம் இவைகளைத் தரிப்பவரே! தாமோதர! தாமரைமலர்ப் போன்ற கண்களுள்ளவரே! கோவிந்த! யதுநந்தன! உமக்கு நமஸ்காரம்; இந்த ஸூர்யன் உம்மைத் தர்சிப்பதற்காக வருகிறார்; அவருடைய தேஜஸால் மனிதர்களுடைய கண்கள் அடக்கப்படுகின்றன; தேவர்கள் உம்முடைய மார்க்கத்தைத் தேடுகிறார்களல்லவா ? நீர் இப்பொழுது யதுவம்சத்தில் அவதரித்து மறைந்திருப்பதால் உம்மைத் தர்சிப்பதற்காக ஸூர்யன் வருகிறார்" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட கிருஷ்ணன் சிரித்து, "இவர் ஸூர்யனல்ல; ஸத்ராஜித் ரத்தினத்துடன் வருகிறார்" என்றார்.

10–29. பின்பு ஸத்ராஜித் தம்முடைய கிருஹஞ் சென்று, மங்கள கார்யங்களைச் செய்து ப்ராஹ்மணர்களைக் கொண்டு ஸ்வஸ்திவாசனம் முதலிய வைகளைச் செய்து, அந்த ரத்தினத்தைப் பூஜா கிருஹத்தில் ஸ்தாபித்தார். அந்த ரத்தினம் ஒவ்வொரு தினத்திலும் எட்டுபாரம் ஸ்வர்ணத்தையுண்டுபண்ணிற்று எந்த விடத்தில் இந்த ரத்தினம் பூஜிக்கப்படுகிறதோ, அந்த விடத்தில் பஞ்சம், அகால மரணம், அமங்களம், மன வருத்தம், சரீரவ்யாதி, அசுபங்கள் இவைகள் நேரிடுகிறதில்லை. மேலும் அவ்விடத்தில் மாயாவிகள் வஸிக்க மாட்டார்கள். பின்னொருகால் ஸ்ரீ கிருஷ்ணன் உக்ரஸேனருக்காக அந்த ரத்தினத்தைக் கொடுக்கும்படி ஸத்ராஜித்தைக் கேட்டார். அவர் பணத்தாசையால் "கிருஷ்ணன் கேட்கும் பொழுது





கொடாமலிருந்தது ஸரியல்ல" என்று எண்ணாமல் ரத்னத்தைக் கொடுக்கவில்லை.

பின்பு ஒரு நாள் ஸத்திராஜித் என்பவருடைய ஸஹோதரனாகிய ப்ரஸேனன் என்பவன் அந்த ரத்தினத்தைத் தரித்துக்கொண்டு குதிரையின் மீதேறி வேட்டைக்குச் சென்றான். அப்பொழுது ஒரு சிங்கம் ப்ரஸேனனைக் கொன்று அந்த ரத்னத்தை எடுத்துக் கொண்டு ஒரு குஹையில் சென்றது. அந்த சிங்கத்தை ஜாம்பவான் கொன்று, அந்த ரத்தினத்தை எடுத்துக் கொண்டு தம்முடைய குஹைக்குச் சென்று, ரத்தினத்தைக் குழந்தைக்கு விளையாட்டுச் ஸாமானாகச் செய்தார். (தொட்டிலில் கட்டினார். பகவானிடத்தில் ஸமர்பியாமல் அனுபவிப்பவர்கள் கெடுதியடைவார்களென்று காட்டப்பட்டது) பின்பு ஸத்ராஜித் ஸஹோதரரைக் காணாமல் மிகவும் வருத்தமடைந்தார். மேலும் அவர், 'ரத்தினத்துடன் காட்டிற்குச்சென்ற என்னுடைய ஸஹோதரன் கிருஷ்ணனால்தான் கொல்லப்பட்டிருக்கவேண்டும்' என்று சொன்னார். (கிருஷ்ணன் ரத்தினத்தில் ஆசை பட்டிருந்தமையால்) அதனைக் கேட்டு ஜனங்களும் அப்படியே ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

அதனைக் கேட்ட பகவான், தமக்கு நேர்ந்த அபகீர்த்தியை நிவர்த்தித்து கொள்வதற்காகப் பட்டணத்து ஜனங்களை அழைத்துக் கொண்டு, ப்ரஸேனன் சென்ற மார்க்கமாகச் சென்றார். வனத்தில் ப்ரஸேனனும் அவனுடைய குதிரையும் சிங்கத்தால் கொல்லப்ப்ட்டிருப்பதையம் அந்தச் சிங்கம் மலையின்

தாழ்வரையில் கொல்லப்பட்டிருப்பதையும் பார்த்தார்; ஜனங்களுக்கும் காண்பித்தார். மேலும் அவர் ஜனங்களை வெளியில் நிறுத்தி தாமொருவராகக் குஹைக்குட் சென்றார். அது மிக்க இருளுள்ளதாக இருந்தது. அந்தக் குஹையில் குழந்தைக்கு விளையாட்டு ஸாமானாகச் செய்யப்பட்டிருக்கும் அந்த ரத்தினத்தைக் கிருஷ்ணன் பார்த்து, அதனையெடுத்துக் கொள்ளுவதற்காக குழந்தையின் ஸமீபத்தில் நின்றார், ஒரு பொழுதும் பார்க்கப்படாத குழந்தையின் அருகிலிருந்த உபமாதா (வேலைகாரி) பயந்து உரக்கக்கதறினாள்.

அதனைக் கேட்டு மிக்க பலசாலியான ஜாம்பவான் மிக்க கோபத்துடன் ஓடிவந்தார். பின்னும் அவர் ஸ்ரீகிருஷ்ணனுடைய மஹிமையை அறியாமல், அவரை ஸாமான்ய மனிதனாக நினைத்துத் தமக்கு யஜமானனானாலும் அவருடன் யுத்தஞ் செய்தார். அது மாமிசத்திற்காக இரண்டு பருந்துகள் யுத்தஞ் செய்தாற்போலிருந்தது. அவ்விருவர்களும் இடிபோலக் கெட்டியான முஷ்டிகளால் ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டு இருபத்தெட்டு நாள் இரவும் பகலும் இடைவிடாமல் யுத்தஞ் செய்தார்கள். கிருஷ்ணனுடைய முஷ்டிகளால் அடிக்கப்பட்ட ஜாம்பவானுடைய கை கால் முதலிய அவயவங்கள் சோர்வு அடைந்தன; அவருடைய சரீரம் முழுவதும் வியர்வையை அடைந்தது; பலங்குறைந்தது.

அப்பொழுது ஜாம்பவான் மிகவும் ஆச்சரியமடைந்து கிருஷ்ணனை நோக்கி, "நீர் ஸகல ப்ராணிகளுக்கும் ப்ராணனாகவும், இந்திரியங்களின்





சக்தியாகவும், ஹிருதயத்தின் சக்தியாகவும், தேஹ பலமாகவும் இருக்கிறீர் என்பது எனக்குத் தெரியும். மேலும், நீர் மஹாவிஷ்ணு; புராணபுருஷன்; எல்லாவற்றையும் படைத்தவர்; அதிபதி; நீர் ஸகல ப்ரஜாபதிகளையும் ஸிருஷ்டித்தவர்; ஸிருஷ்டிக்கப்பட்ட ஸகல வஸ்துக்களுக்கும் நீர் உபாதான காரணம். (முக்கிய காரணம்) மேலும் நீர், கால ஸ்வரூபியாகவும் இருக்கிறீர்; பரமேச்வரர்;ஸகல ஆத்மாக்களுக்கும் ஆத்மாவாக இருப்பவர்; நீர் ஸ்ரீ ராமனாக அவதரித்திருக்கும்பொழுது ஸமுத்திரனிடம் கோபங்கொண்டு அதனைப் பார்த்தீர். அதனால் முதலை, திமிங்கலம் முதலியவைகளடங்கிய சமுத்திரம் மேலும் கீழுமாகக் கலங்கி மார்க்கத்தைக் கொடுத்தது. அதன் வழியாக அணை கட்டினீர். அதனால் உம்முடைய கீர்த்தி ப்ரகாசிக்கிறது. பின்பு அந்த ஸேதுவின் வழியாக லங்காநகரஞ் சென்று அந்த பட்டணத்தை எரித்தீர். பின்பு உம்முடைய பாணங்களால் வெட்டப்பட்ட ராவணனுடைய தலைகள் பூமியில் விழுந்தன. அப்படிப்பட்ட பகவான் என்று எனக்குத் தெரியும்" என்றார்.

30–34. இப்படித் தம்மைத் தெரிந்து கொண்ட ஜாம்பவானைத் தேவகியின் புத்திரராகிய கிருஷ்ணன் க்ஷேமத்தைச் செய்யக்கூடிய தமது திவ்ய ஹஸ்தத்தால் தடவிக்கொடுத்து, "ஓ கரடிகளுக்கு அதிபதியே வீணான அபகீர்த்தி எனக்கு வந்திருப்பதால் அதனை நிவர்த்தித்துக் கொள்வதற்காக இந்த ரத்னத்தைத் தேடிக்கொண்டு இவ்விடம் வந்தேன்" என்று மிகுந்த கிருபையுடன் பக்தனை நோக்கி மேகம் கர்ஜிப்பது

போல உரக்கச்சொன்னார். அதனைக்கேட்ட ஜாம்பவான அந்த ரத்தினத்தைப் பகவானிடத்தில் ஸமர்பித்துத் தமது பெண்ணாகிய ஜாம்பவதி யென்பவளையும் கொடுத்தார். பின்னும் அவர், மற்றும் சிறந்த ரத்தினங்களால் ஸ்ரீகிருஷ்ணனைப் பூஜித்தார். அதனால் பகவான் ஸந்தோஷித்து, மிக்க ப்ரீதியுடன் ஜாம்பவானுக்கு மோக்ஷத்தைக் கொடுத்தார்.

35–47. குஹையின் வாயிற்படியிலிருந்து ஜனங்கள் பன்னிரண்டு நாட்கள் கிருஷ்ணனுடைய வரவை எதிர்பார்த்திருந்தும் கிருஷ்ணன் குஹையிலிருந்து வெளியில் வராததனால் மிகவும் துக்கித்து, த்வாரகைக்குச் சென்றார்கள். அதனைக்கேட்டு தேவகியும், ருக்மிணி தேவியும், வஸுதேவரும், ஸுஹ்ருத்துக்களும், பந்துக்களும், கிருஷ்ணனைப் பாராமல் துக்கித்தார்கள். மேலும் த்வாரகாவாஸிகளான ஜனங்கள் ஸத்ராஜித்தை நிந்தித்துக்கொண்டு, "கிருஷ்ணன் க்ஷேமமாகத் திரும்பிவரவேண்டும்" என்று சந்திரபாகாவென்ற துர்க்காதேவியைப் பூஜித்தார்கள். இப்படி அவர்கள் துர்க்கையைப் பூஜிக்க, அவள் அவர்களை ஆசிர்வதித்தாள். அதனால் ஸ்ரீகிருஷ்ணன் குஹையிலிருந்து வெளிக்கிளம்பி ரத்தினத்துடனும் ஜாம்பவதியுடனும் ஜனங்களைச் ஸந்தோஷிக்கச் செய்தார். மரணமடைந்தவன் திரும்பி வந்தாற்போல் பகவான் ரத்தினத்துடனும், ஜாம்பவதியுடனும் வந்ததைக் கண்ட எல்லோரும் மிக்க ஆனந்தத்தை அடைந்தார்கள். அதன்பின் ஸ்ரீகிருஷ்ணன் உக்ரஸேனருடைய முன்பாக ஸபையில் ஸத்ராஜித்தை அழைப்பித்து ரத்தினங்கிடைத்த மார்க்கத்தைச் சொல்லி, ரத்னத்தை அவரிடம் கொடுத்தார்.





அப்பொழுது ஸத்ராஜித் மிகவும் வெட்கமடைந்து, தலைகுனிந்து தாம் செய்த குற்றத்தால் மனவருத்தமடைந்து, ரத்தினத்தை வாங்கிக்கொண்டு தம்முடைய கிரஹஞ் சென்றார். பின்னும் அவர், "மிக்க பலிஷ்டராகிய கிருஷ்ணனுக்கு அபராதஞ் செய்து அவருடைய விரோதத்தை ஸம்பாதித்துக் கொண்டோமே இதனால் என்ன கெடுதி நேருமோ, இதற்கு என்ன செய்யலாம். எதைச் செய்தால் எனக்கு க்ஷேமமுண்டாகும்? எதைச் செய்தால் ஜனங்கள் நிந்திக்காமலிருப்பார்கள். நான் தீர்க்கமான ஆலோசனையில்லாமல் பணத்தில் ஆசையால் மூடனாகிக் கிருஷ்ணனுக்கு அபராதஞ் செய்தேனே; ஆனதால் அதனை நிவர்த்தித்துக் கொள்வதற்காக அந்த ரத்தினத்தையும், என்னுடைய பெண்ணாகிய ஸ்திரீ ரத்தினத்தையும் கிருஷ்ணனிடம் சமர்பித்து கிருஷ்ணனை மணப்பிள்ளையாகச் செய்து கொள்ளுகிறேன்.

இப்படிச்செய்தால் அவர் நம்மிடத்தில் ப்ரியப் படுவார். இது நல்ல உபாயம். இல்லாவிட்டால் இதற்கு நிவர்த்தியில்லை" என்று யோஜித்து அந்த ரத்தினத்தை எடுத்துக்கொண்டு தமது பெண்ணாகிய ஸத்தியபாமையுடன் கிருஷ்ணனிடஞ் சென்று, பெண்ணையும், ரத்தினத்தையும் பகவானிடம் ஸமர்பித்தார். அந்தப் பெண் மேலான ஸ்வபாவம், ரூபம், ஓளதார்யம் முதலிய நற்குணம் பொருந்தியவள்; அவளை அநேகர் கல்யாணஞ் செய்துகொள்ள விரும்பித் தங்களுக்குக் கொடுக்கும்படி ஸத்ராஜித்தைக் கேட்டதுண்டு. அப்படிப்பட்ட உத்தம குணங்கள் பொருந்திய ஸத்தியபாமையை ஸ்ரீ கிருஷ்ணன் விதிப்படி விவாஹஞ் செய்து கொண்டார். மேலும்

ஸ்ரீகிருஷ்ணன் ஸத்ராஜித்தை நோக்கி, "இந்த ரத்தினம் நமக்கு வேண்டாம், ஸூர்ய பக்தராகிய உம்மிடத்திலேயே இருக்கட்டும். இதன் பயனை நாம் அடைவோம்" என்றார். (உமக்குப் புத்திரனி ல்லாததனால் உம்முடைய தனங்கள் யாவும் என்னுடையதுதான் என்று கருத்து).

நோட்டு

எட்டுபாரம்: நான்கு நெல்கள் கொண்ட நிரை. குஞ்ஜம். ஐந்து குஞ்சம் பணமெனப்படும்; எட்டு பணங்கள் கொண்டது தரணமெனப்படும்; எட்டு தரணங்கள் கொண்டது கர்ஷமெனப்படும்; நான்கு கர்ஷங்கொண்டது பலமெனப்படும்; நூறு பலங் கொண்டது துலாமெனப்படும்; இருபது துலாங் கொண்டது பாரமெனப்படும்.

♣ ♣ ♣ ♣



# அத்தியாயம் – 57

## கிருஷ்ணன் சததன்வாவைக் கொன்றது

பாண்டுவின் புத்திரர்களாகிய தர்மபுத்திரர் முதலி யவர்களும், குந்தியும் அரக்குமாளிகையில் எரிக்கப் பட்டு மரணமடைந்தார்கள் என்ற ஸமாசாரத்தை ஸ்ரீ கிருஷ்ணன் கேள்விப்பட்டு அவர்கள் ஜீவித்திருக் கிறார்களென்ற உண்மையை அறிந்தவரானாலும் அறியாதவர்போல திருதராஷ்டிரர் முதலியவர்களை துக்கப்ரச்னஞ் செய்வதற்காக பலராமனுடன் ஹஸ்தி னாபுரஞ் சென்றார். அவ்விடத்தில் பீஷ்மர், திரு தராஷ்டிரர், விதுரர், காந்தாரி, த்ரோணர் ஆகிய இவர்களைப் பார்த்து இராமகிருஷ்ணர்கள் 'ஐயோ கஷ்டம்' என்று சொல்லி ஸமதுக்கர்களாக அழுதார்கள்.

3–24. அந்த ஸமயம் துவாரகையில் அக்ரூரர், கிருதவர்மா, இவர்கள் சததன்வா என்பவரை நோக்கி, "இந்த ஸத்ராஜித் பெண்ணை நமக்குக் கொடுப்பதாக உறுதிசொல்லி, அப்படிச் செய்யாமல் நம்மை விரோதித்து ஸ்ரீகிருஷ்ணனுக்குக் கொடுத்தான். மேலும் ஸஹோதரனாகிய பிரசேனன் மரணமடைந்த பின் இவன் ஏன் உயிரையிழக்கவில்லை? ஆனதால் இவனுடைய ரத்தினத்தை ஏன் பிடுங்கிக் கொள்ளக் கூடாது" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட மிக்க அஸத்தாகிய சததன்வா புத்தி மயங்கி, அவர்களுடைய வார்த்தையை அங்கீகரித்து, மரணம் சமீபத்து விட்டதனால், ஸத்ராஜித்தை தூங்கும் ஸமயத்தில் கொன்றான். ஸ்திரீகள் அனாதர்கள்

போல கதறும்பொழுது அவர்களை லக்ஷ்யஞ் செய்யாமல் கசாப்புக்கடைக்காரன் பசுவைக் கொல்வது போல ஸத்ராஜித்தைக் கொன்று, அந்த ரத்தினத்தை எடுத்துக்கொண்டு சென்றான். ஸத்திய பாமையும் தன்னுடைய தகப்பனார் சததன்வாவினால் கொல்லப் பட்டதைப் பார்த்து மிக்க துக்கத்தை அடைந்து, "கஷ்டம்; நான் அடிக்கப்பட்டேன்! ஓ அண்ணா! ஓ அண்ணா" என்று கதறினாள். மேலும் அவள் எண்ணெய்க் கொப்பரையில் மரித்த தந்தையை வைத்துவிட்டு அஸ்தினாபுரஞ் சென்றாள். பின்னு மவள் அவ்விடத்தில் ஸ்ரீகிருஷ்ணனைத்தர்சித்து, மிகுந்த தாபமுள்ளவளாகித் தந்தையின் மரணத்தைத் தெரிவித்தாள். பகவான் ஸகல விஷயங்களையும் அறிந்தவரானாலும், அதைக்கேட்டு உலக வழக்கப் படி, "நமக்கு மிகுந்த கஷ்டம் நேர்ந்தது" என்று சொல்லிக் கண்ணீரைப் பெருக்கி அழுதார். பலராமனும் துக்கித்தார். பின்பு ஸ்ரீகிருஷ்ணன் பலராமன், ஸத்தியபாமை இவர்களுடன் த்வாரகா நகரஞ் சென்று சததன்வாவைக் கொன்று, அந்த ரத்தினத்தைப் பிடுங்கிக் கொள்ள வேண்டுமென்று முயன்றார். அதனைக் கேள்விப்பட்ட சததன்வா வென்பவன் பயந்து உயிரை காப்பாற்றிக் கொள்ள விரும்பி கிருதவர்மாவென்பவரிடஞ் சென்று, தனக்கு ஒத்தாசை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டான்.

அதனைக்கேட்ட கிருதவர்மா வென்பவன் எல்லாவற்றிற்கும் ஈச்வரர்களான ராமகிருஷ்ணர் களுக்கு நான் அபராதஞ் செய்யமாட்டேன்.





அவர்களுக்கு அபராதஞ் செய்பவன் க்ஷேமத்தை அடைவானா? அவர்களை விரோதித்ததால் கம்ஸனும்,அவனைச் சார்ந்தவர்களும் நாசமடைந் தார்கள். ஜராஸந்தன் பதினேழுதரம் அவர்களுடன் யுத்தஞ்செய்தும் அபஜயத்தையடைந்து ரதமில்லாமல் நடந்து சென்றான். ஆனதால் அவர்களை ஜயிப்பதற்கு யாரால் முடியும்" என்றான். அதனைக் கேட்ட சததன்வா அக்ரூரரிடஞ் சென்று. அவரைத் தனக்கு ஸஹாயஞ் செய்ய வேண்டுமாறு கேட்டுக் கொண்டான்.

அதனைக் கேட்ட அக்ரூரர், "ஈச்வரர்களான ராமகிருஷ்ணர்களுடைய பலத்தையறிந்தவன் அவர்களை விரோதித்துக் கொள்வானா? எவர் இந்த ஜகத்தை விளையாட்டாகப் படைக்கிறாரோ. எவர் காப்பாற்றுகிறாரோ, ஸம்ஹரிக்கிறாரோ, எந்தப் பகவானுடைய மாயையால் மோஹித்து ப்ரஜா பதிகளும் எவருடைய உண்மையை அறியவில்லையோ, எவர் ஏழு வயது சிறுவனாக இருக்கும் பொழுது ஒரு கையால் கோவர்த்தன மலையைத் தூக்கி, சிறுவன் நாய்க் குடையைப்பிடித்தாற் போல் குடையாகப் பிடித்தாரோ, அந்தக் கிருஷ்ணனை நமஸ்கரிக்கின்றோம். அவர் அத்புதமான கர்மங்களைச் செய்தவர்; நாசமில்லாதவர்; எல்லாவற்றிற்கும் ஆதியாக இருப்பவர்; கூடஸ்தர்; (கூடம் போலிருப்பவர்; தட்டானுடைய பட்டரைக்குக் கூடமென்று பெயர். அது தன்னிடம் வந்த தங்கம் முதலியவைகளை ஆபரணங்களாக மாற்றித் தான் விகாரத்தை அடையாமலிப்பதுபோல் விகாரமற்றவரென்று கருத்து.) எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பவர்.

ஆனதால் அவருக்கு அபராதஞ் செய்யமாட்டேன்? என்றார். அதனைக் கேட்ட சததன்வா, அந்த ரத்தினத்தை அவ்ரிடங்கொடுத்து விட்டு, நூறு யோஜனை தூரம் செல்லக்கூடிய குதிரையின் மீதேறிச்சென்றான். ராமகிருஷ்ணர்களும் கருடத்வஜமுள்ள ரதத்தின் மீதேறிக்கொண்டு குருவை (மாமனாரை) கொன்றவனான சததன்வாவைத் தூரத்தினார்கள். பின்பு மிதிலா நகரத்தின் அருகிலுள்ள தோட்டத்தில் சததன்வாவின் குதிரைகளைத்துக் கீழே விழுந்தது. சததன்வா அதை விட்டிறங்கிக் காவால் நடந்து ஓடினான். ஸ்ரீ கிருஷ்ணனும் மிகுந்த கோபத்துடன் அவன்பின் ஓடினார். இப்படிப் பதாதியாக ஓடும் சததன்வாவின் பின் பகவான் ஓடி கூர்மையான முனையுள்ள சக்கரத்தினால் அவனுடைய தலையை வெட்டி அவனுடைய வஸ்திரத்தில் ரத்தினமிருக்கிறதாவென்று தேடினார். பின்னுமவர் பலராமனிடஞ் சென்று. சததன்வாவை வீணாகக் கொன்றோம். அவனிடத்தில் ரத்தினமில்லை" என்றார். அதனைக் கேட்ட பலராமன், "அந்த ரத்தினத்தைச் சததன்வா எவனிடத்திலாவது கொடுத்திருக்க வேண்டும். ஆனதால் நீ துவாரகா நகரஞ் சென்று அந்த புருஷனைத் தேடவேண்டும். எனக்கு ஜனகமஹாராஜன் மிகவும் மித்திரரானதால், அவரைப் பார்ப்பதற்காக மிதிலா நகரம் போகிறேன். நீ த்வாரகைக்குப்போகலாம் என்று சொல்லிப் பலராமன் மிதிலைக்குச் சென்றார்.

25–27. அப்பொழுது மிதிலா நகரத்து அரசனாகிய ஜனக மஹாராஜன் அந்தப் பலராமனைப் பார்த்து, சீக்கிரமாக எழுந்து மிகுந்த ப்ரியத்துடன்





பூஜிக்கத்தக்கவரான பலராமனைப் பூஜித்தார். அதனைப் பெற்றுகொண்ட பலராமன் அந்த நகரத்தில் சில வருஷகாலம் வஸித்தார். அந்தச் ஸமயத்தில் திருதராஷ்ட்ரருடைய குமாரனாகிய துர்யோதனன் மகாத்மாவாகிய ஜனகரால் பூஜிக்கப் பட்டு, பலராமனிடம் கதாயுதத்தை அப்பியஸித்தார்.

28–42. ஸ்ரீகிருஷ்ணன் தம்முடைய பார்யையான ஸத்தியபாமைக்குப்பிரியத்தைச் செய்ய விரும்பினவரானதால் த்வாரகா நகரஞ்சென்று ஸத்திய பாமையை நோக்கி, "சததன்வாவைக்கொன்றும் ரத்தினம் கிடைக்கவில்லை" என்பதைச் சொன்னார். பின்னுமவர் மரணமடைந்தவரான ஸத்ராஜித்தை உத்தேசித்துச் செய்யவேண்டிய உத்திரகிரியைகள் எல்லாவற்றையும் பந்துக்களுடன் செய்வித்தார். அப்பொழுது ஸத்ராஜித்தைக் கொல்லும்படி சததன்வாவைத் தூண்டினவர்களான அக்ரூரரும், கிருதவர்மாவும் மிகவும் பயந்து நடுங்கினவர்களாக அயல்தேசஞ் சென்றார்கள். (அக்ரூரர் ஸ்ரீகிருஷ்ணனுடைய அனுமதியின் மீது தான் த்வாரகையை விட்டுச் சென்றார்; கிருதவர்மாவை பகவான் உபேக்ஷித்தாரென்று கருத்து.) அக்ரூரர் த்வாரகையை விட்டுச் சென்றபின் த்வாரகா நகரத்தில் அரிஷ்டங்களுண்டாயின. ஜனங்களுக்கு சரீர வ்யாதிகளும் மனவருத்தங்களும நேர்ந்ததுமின்றி இடிவிழுவது, பூமி அசைவது முதலிய கெடுதிகளும் ஸம்பவித்தன, அப்பொழுது சில பெரியோர்கள் ஸகல மஹர்ஷிகளாலும் த்யானஞ் செய்யப்படும் ஸ்ரீகிருஷ்ணன் இருக்குமிடத்தில் அரிஷ்டங்கள் சம்பவிக்குமா? இவை அவருடைய ஸங்கல்பத்தால் உண்டாகின்றன

என்று நினையாமல் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மஹிமையை மறந்து, "முன்னொருகால் காசி தேசத்தில் மழை பெய்யாமல் பஞ்சமும் நேர்ந்தது. அப்பொழுது அந்தத் தேசத்து அரசன் அவ்விடம் வந்த ச்வபல்கரென்பவருக்குத் தம்முடைய புத்திரியான காந்தினியென்பவளைக் கல்யாணஞ் செய்வித்தார். பின்பு மழை பெய்து ராஜ்யம் செழித்தது. அவருடைய புத்திரரான அக்ரூரரும் அவ்வளவு மஹிமையுள்ளவர்; அவர் எவ்விடத்தில் வஸிக்கிறாரோ அவ்விடத்தில் மழை பெய்யும்; தாபங்கள் உண்டாகா; வைசூரி முதலிய உபத்திரவங்கள் இல்லை என்று சொல்லிக் கொண்டார்கள். அதனைக்கேட்ட பகவான் அக்ரூரர் த்வாரகையில் இல்லாமலிருப்பது மாத்திரத்தால் அரிஷ்டங்களுண்டாகவில்லை; அந்த ரத்தினம் இல்லாமலிருப்பதுங் காரணம்' என்று யோசித்து, தூதர்களையனுப்பி அக்ரூரரை வரவழைத்தார். அவருக்கு மரியாதை செய்தார்; ப்ரியமான வார்த்தைகளை சொன்னார்.

பின்பு ஸ்ரீகிருஷ்ணன் எல்லோருடைய அபிப்பிராயத்தையும் அறிந்தவராகையால் சிரித்துக்கொண்டு அக்ரூரை நோக்கி, "ஓ அக்ரூரரே சததன்வா ஸ்யமந்தகமென்ற ரத்தினத்தை உம்மிடங் கொடுத்திருக்கிறாரென்பது முன்னமேயே நமக்குத் தெரியும். ஸத்ராஜித்துக்கு ஆண் ஸந்ததியில்லாததலால் அவருடைய பெண்ணாகிய ஸத்தியபாமையின் புத்திரர்கள் அந்த ரத்தினத்தை அடைய வேண்டியவர்களாகிறார்கள். மாதாமஹருக்குச் செய்யவேண்டிய தர்ப்பணம், பிண்டதானம் முதலியவைகளை பெண்ணின் பிள்ளைகள் செய்துவிட்டு அவருடைய தனத்தை எடுத்து கொள்ளவேண்டுமென்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் இந்த ரத்தினமானது, மற்றவர்களால் காப்பாற்ற முடியாதது. நீர் நல்ல வ்ரதங்களை அனுஷ்டித்தவரானதால் உம்மிடத்திலேயே இருக்கட்டும். ஆனதால் இந்த ரத்தினத்தின் விஷயமாக நான் சொல்வதைப் பலராமன் ஒப்புக்கொள்ளவில்லை. (நம்பவில்லை) ஓ மிகுந்த அதிஷ்டமுள்ளவரே அந்த ரத்தினத்தைக் காண்பித்து, பந்துக்களுக்கு என்னிடமிருக்கும் ஸம்சயத்தை நிவர்த்தியும்; நீர் அநேக யாகங்களை அனுஷ்டித்து வருவதால் அந்த ரத்தினம் உம்மிடத்தில் தான் இருக்கிறது" என்று நல்வார்த்தையாக சொன்னார். அதனைக்கேட்ட ச்வபல்கருடைய புத்திரராகிய அக்ரூரர் வஸ்திரத்தில் மறைத்து வைத்திருந்த ஸூர்யன் போன்ற அந்த ரத்தினத்தை ஸ்ரீ கிருஷ்ணனிடங் கொடுத்தார். அதனைப் பகவான் பந்துக்களுக்குக் காண்பித்துத் தனக்கு நேர்ந்த அடவாதத்தை (ஸ்ரீ கிருஷ்ணனே அக்ரூரரை தேசாந்திரம் அனுப்பினாரென்பதை) நிவர்த்தித்து அந்த ரத்தினத்தை அக்ரூரரிடமே கொடுத்தார்.

43. எல்லாவற்றிற்கும் அதிபதியும், எங்கும் இருப்பவருமான பகவானுடைய இந்த சரித்திரம் பாபத்தை போக்கக்கூடியது; மேலான மங்களத்தைக் கொடுக்கக்கூடிது; ஆனதால் இதை எவன் படிக்கிறானோ. பிறர் சொல்லக் கேட்கிறானோ, த்யானஞ் செய்கிறானோ, அவன் அபகீர்த்தியை அடைய மாட்டான். (அதற்கு காரணமான) பாபம் நிவர்த்தியடையும். ஸகல க்ஷேமத்தையும் அடைவான்.

# அத்தியாயம்–58

## கிருஷ்ணன் காளிந்தி முதலியவர்களை விவாஹம் செய்துக்கொண்டது

புருஷோத்தமராகிய பகவான் த்ருபத மஹாராஜனுடைய வீட்டில் வெளிப்பட்டவர்களாகிய பாண்டவர்களைப் பார்ப்பதற்காக யுயுதானர் முதலியவர்களுடன் இந்திரப்ரஸ்தத்திற்குச் சென்றார். எல்லாவற்றிற்கும் அதிபதியான ஸ்ரீ கிருஷ்ணன் வருவதைக்கண்ட வீரர்களான பாண்டவர்கள் எழுந்திருந்தார்கள். அது, ப்ராணனைக் கண்டு இந்திரியங்கள் ஸந்தோஷிப்பது போல இருந்தது. மேலும் வீரர்களான பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனை ஆலிங்கனஞ் செய்து கொண்டார்கள். அதனால் அவர்கள் பாபங்களற்றவர்களானார்கள்.

பின்னுமவர்கள் அன்பு பொருந்திய சிரிப்புள்ள பகவானுடைய முகத்தைத்தர்சித்து ஸந்தோஷத்தை அடைந்தார்கள். பின்பு ஸ்ரீகிருஷ்ணன் தர்மபுத்திரரையும், பீமஸேனரையும் நமஸ்கரித்தார். அர்ஜுனனை ஆலிங்கனஞ்செய்து கொண்டார். நகுல ஸஹதேவர்கள் கிருஷ்ணனை நமஸ்கரித்தார்கள். பின்பு கிருஷ்ண பகவான் உத்தமமான சிங்காதனத்தில் உட்கார்ந்தார். அப்பொழுது தோஷமற்றவளான த்ரௌபதி வெட்கத்துடன் மெள்ள மெள்ள நடந்து வந்து ஸ்ரீகிருஷ்ணனை நமஸ்கரித்தாள். பாண்டவர்கள் ஸாத்யகியைப் பூஜித்தார்கள். மற்றவர்களும் பாண்டவர்களால் பூஜிக்கப்பட்டு உட்கார்ந்தார்கள். பின்பு பகவான் தம்முடைய பிதாவின் ஸஹோதரியான





(அத்தை) குந்தியை நமஸ்கரித்தார். அவள் அன்பு பொருந்திய பார்வையால் பகவானைக் கடாக்ஷித்து, பந்துக்களுடைய க்ஷேமத்தை விசாரித்துக் கண்ணீரைப் பெருக்கினாள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் குந்தியை நோக்கி, 'நாட்டுப் பெண்ணுடன் க்ஷேமமா?' என்று கேட்டார்.

8–10. அதனைக்கேட்ட குந்தி அன்பு அதைர்யம் ஆகிய இவைகளுடன் கண்ணீரைப் பெருக்கி அதனால் தொண்டையடைத்தவளாகி ஸகல கஷ்டத்தையும் நிவர்த்திப்பவரான ஸ்ரீ கிருஷ்ணனை தர்சித்து தன்னால் அனுபவிக்கப்பட்ட கஷ்டங்களை நினைத்து "ஓ கிருஷ்ண! எப்பொழுது நீர் பந்துக்களான எங்களுடைய ஞாபகத்துடன் என்னுடைய ஸஹோதரனாகிய அக்ரூரரை அனுப்பினீரோ அப்பொழுதே நாதனுள்ளவர்களாக ஆனோம். நீர் ஸகல பிராணிகளுக்கும் மித்திரராகவும், ஆத்மாவாகவும் இருக்கிறீர். அதனால் உமக்கு தம்மைச் சார்ந்தவன், பிறன் என்ற பேதபுத்தியில்லை. ஆனால் யார் உம்மை த்யானஞ் செய்கிறார்களோ, அவர்களுடைய ஹ்ருதயத்திலிருந்து ஸகல தாபங்களையும் நிவர்த்திக்கிறீர்?" என்றாள்.

11–12. பின்பு தருமபுத்திரர் கிருஷ்ணனை நோக்கி, "யோகிகளாலும் பார்க்க முடியாதவராகிய உம்மை அல்ப புத்தியுள்ளவனாகிய நான் இன்றைய தினம் தர்சித்தேன். இம்மாதிரி நான் என்ன புண்ணியஞ் செய்தேனோ அறியேன்" என்று சொல்லி மழைக்காலமாகிய நான்கு மாஸங்களும் இவ்விடத்திலேயே வஸிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். ஸ்ரீகிருஷ்ணனும் அதனை ஒப்புக்கொண்டு இந்திர

ப்ரஸ்தத்தில் வஸிக்கும் ஜனங்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணிக்கொண்டு அவ்விடத்தில் வஸித்தார்.

*13–19.* ஒருநாள் அர்ஜுனன் வானரத்வஜமுள்ள ரதத்தின் மீதேறிக் காண்டீவமென்ற வில்லையும் குறைவற்ற பாணங்களுள்ள தூணீரங்களையும், எடுத்துக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடன் வனத்திற்குச் சென்றார். சத்துரு வீரர்களைக் கொல்பவராகிய அந்த அர்ஜுனன் அநேக துஷ்டமிருகங்களால் நிறைந்த வனத்தில் புகுந்து, புலி, பன்றி, எருமை, ருரு, சரபம், கவயம், கட்க மிருகம், மான்கள், சல்யக மிருகம், முயல், முதலியவைகளை பாணங்களால் அடித்தார். அடிக்கப்பட்ட மிருகங்களில் சுத்தமானவைகளை வேலைக்காரர்கள் எடுத்துப் பர்வகாலத்தில் தர்ம புத்திரரிடம் ஸமர்பித்தார்கள். அர்ஜுனனோ களைப்படைந்து, தாஹமுள்ளவராகி யமுனா நதிக்குச் சென்றார். மஹாரதர்களான அவ்விருவர்களும் சுத்தமான யமுனையின் ஜலத்தில் ஸ்நானபானஞ் செய்து களைப்பை நிவர்த்தித்து கொண்டார்கள்.

அப்பொழுது அவர்கள் தங்களுக்குச் சமீபத்தில் ஒருபெண் ஸஞ்சரிப்பதைக் கண்டார்கள். அவள் அழகான கண்களுள்ளவளாகவும், மனோஹரங்களான பற்களால் பிரகாசமுள்ளவளாகவுமிருந்தாள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணனால் தூண்டப்பட்டு அர்ஜுனர் அந்தப் பெண்ணிடம் வந்து, "ஓ நல்ல சுபாவமுள்ளவளே நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? எதைச்செய்ய விரும்பு கிறாய்? பர்த்தாவைத்தேடுகிறவள் போலத் தோன்றுகிறாய்? எல்லாவற்றையும் சொல்லு என்று கேட்டார்.





*20–23.* அதனைக்கேட்ட அந்தக் கன்னிகை அர்ஜுனனை நோக்கி, 'நான் தேவராகிய ஸூர்யனுடைய பெண். எல்லோராலும் பூஜிக்கத்தக்க ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப் பர்த்தாவாக அடைய விரும்பி, மிக்க தவஞ்செய்து கொண்டிருக்கிறேன். லக்ஷ்மீபதியாகிய அந்தப் பகவானைத்தவிர வேறொருவரையும் நான் கல்யாணம் பண்ணிக் கொள்வதில்லை. அனாதர்களை ஸம்ரக்ஷிப்பவரான ஸ்ரீ பகவான் என்னிடத்தில் ஸந்தோஷத்தை அடையட்டும். எனக்குக் காளந்தியென்று பெயர். யமுனையின் ஜலத்தில் எனது பிதாவாகிய ஸூர்யனால் ஏற்படுத்தப்பட்ட கிருஹத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் தர்சனங் கிடைக்கும் வரையில் வஸிக்கிறேன்' என்று சொன்னாள். அதனைக்கேட்டு அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணனிடம் தெரிவித்தான். ஸ்ரீ கிருஷ்ணன் முன்னமேயே இந்த ஸமாசாரத்தை அறிந்தவரானதால் அதைக் கேட்டுக் காளிந்தியை ரதத்திலேற்றிக்கொண்டு இந்திரப் பிரஸ்தஞ் சென்று தருமபுத்திரரிடஞ் சென்றார்.

*24–27.* அப்பொழுது பாண்டவர்கள் கேட்டுக் கொண்டபடி அப்பொழுதே ஸ்ரீ கிருஷ்ணன் விச்வ கர்மாவைக் கொண்டு அவ்விடத்தில் அத்புதமான பட்டணத்தையுண்டு பண்ணினார். இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் பந்துக்களுக்குப் பிரியத்தைச் செய்வதற்காக அவ்விடத்தில் வஸித்து ஒப்புயர்வற்ற மஹிமையுள்ளவரானாலும் அர்ஜுனருக்குச் ஸாரதியாக இருந்தார். அப்பொழுது இந்திரனால் காப்பாற்றப்பட்ட காண்டீவமென்ற வனத்தை அக்னிக்குக் கொடுத்து அவரைத்திருப்தி செய்தார். அதனால் அக்னி பகவான் காண்டிபமென்றவில்லையும், வெண்மை நிறமுள்ள

குதிரைகளையும் ரதத்தையும் குறைவற்ற பாணங்களுள்ள தூணீரங்களையும், சத்துருக்களால் பிளக்க முடியாத கவசத்தையும் அர்ச்சுனனுக்குக்கொடுத்தார். காண்டவவனத்தில் வஸித்துக்கொண்டிருந்த மயனை ஸ்ரீகிருஷ்ணன் ஸம்ரக்ஷித்தார். அதனால் மயன் ஸந்தோஷித்து கிருஷ்ணனுடைய மித்திரனான தரும புத்திரருக்கு அத்புதமான ஒரு ஸபையையுண்டு பண்ணினான். பின்னொரு ஸமயம் அந்த ஸபையில் துர்யோதனன் ஜலத்தைப் பூமியென்றும் பூமியை ஜலமுள்ள ஸ்தலமென்றும் ப்ரமித்தான்.

28—30. பின்பு ஸ்ரீகிருஷ்ணன் தர்மபுத்திரரிடம் விடைபெற்று பந்துக்களுக்குச் சொல்லிக் கொண்டு ஸாத்யகி முதலியவர்களுடன் த்வாரகைக்குச் சென்றார். அவ்விடத்தில் நல்ல ரிதுவில் சுப நக்ஷத்திரங் கூடிய சுபதினத்தில் காளிந்தியைப் பகவான விவாஹஞ்செய்து கொண்டார். பந்துக்கள் மிக்க ஆனந்தத்தை அடைந்தார்கள்.

31. அவந்தி தேசத்து அரசர்களான விந்தன், அநுவிந்தன் என்ற இருவர்களும் துர்யோதனனைச் சார்ந்தவர்களாக இருந்தார்கள். அவர்களுடைய ஸஹோதரியான மித்திரவிந்தா யென்பவள் ஸ்ரீகிருஷ்ணனை விவாஹஞ் செய்துகொள்ள விருப்பமுள்ளவளாக இருந்தாள், அதனை அவ்விருவர்களும் ஒப்புக்கொள்ளாமல் தடைசெய்தார்கள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் தமக்கு அத்தையான ராஜாதிதேவியின் புத்திரியாகிய அந்த மித்திரவிந்தா என்பவளை எல்லா அரசர்களும் பார்த்திருக்கும் பொழுது பலாத்காரமாகக் கொண்டு வந்தார்.





32—46. கோஸல தேசத்தில் நக்னஜித் என்ற ஒரு அரசன் இருந்தார். அவர் மிக்க தர்மிஷ்டர். அவருக்கு ஸத்யா என்ற பெயருள்ள ஒரு கன்னிகை இருந்தாள். அந்த அரசன் தம்மிடமிருக்கும் ஏழு எருதுகளை எவன் ஜயிக்கிறானோ, அவனுக்குத் தம்முடைய பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொடுப்பதாகப் ப்ரதிஜ்ஞை செய்திருந்தார். அவர் எருதுகள் கூர்மையான கொம்புகளுள்ளவையும் பிறரால் ஜயிக்க முடியாதவையும், துஷ்ட ஸ்வபாவமுள்ளவையுமாக இருந்தன அதனால் அவைகளை ஒருவராலும் ஜயிக்க முடியவில்லை. அதனைக் கேள்விப்பட்டு ஸ்ரீகிருஷ்ணன் மிகுந்த ஸைன்னியத்துடன் அந்த நகரத்திற்குச் சென்றார். அந்த அரசன் ஸ்ரீகிருஷ்ணன் வருகிறதைத் தெரிந்துக் கொணடு மிகுந்த பிரியத்துடன் ஆசனத்தை விட்டு எழுந்து எதிரில் சென்று அழைத்து, பூஜித்து, விசேஷ மர்யாதை செய்தார்.

ஸ்ரீகிருஷ்ணனும் அவரைச்லாகித்தார். நல்ல புருஷனை அடையவேண்டுமென்று வ்ரதங்களை அனுஷ்டித்துக் கொண்டிருந்த அந்த ராஜகுமாரியும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து, என்னால் அனுஷ்டிக்கப்பட்ட வ்ரதம் உண்மையானால் இவரே எனக்குப் பர்த்தாவாக வேண்டும்; என்னுடைய எண்ணம் பூர்த்தியாகவேண்டும்" என்று ப்ரார்த்தித்தாள். மேலும் அரசன் ஸ்ரீகிருஷ்ணனைப் பூஜித்து, 'ஓ நாராயண! ஜகதீச! ஆத்மானந்தத்தால் பூர்ணராக இருக்கும் உமக்கு மிக்க அல்பனாகிய நான் என்ன செய்யவேண்டும்? லக்ஷ்மீதேவியும் ப்ரஹ்மதேவரும், லோகபாலர்களும். தம்முடைய பாத தூளியைத் தரிக்கிறார்கள். பின்னும் நீர் தம்மால்

செய்யப்பட்ட மர்யாதையைக் காப்பாற்றுவதற்காக லோகத்தில் விளையாட்டாக அவதரிக்கிறீர். அப்படிப் பட்ட பகவானாகிய உமக்கு என்னால் செய்யக் கூடியதென்ன ? நான் எதைச்செய்து உம்மை ஸந்தோஷிக்கச் செய்வேன்' என்றார். அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் அரசனை நோக்கி, "ஓ ராஜன்! க்ஷத்திரியன் தன் ஜாதிக்குரியவைகளைச் செய்ய வேண்டுமேயொழியப் பிறரை யாசிக்கக் கூடாது என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் உம்முடைய ஸம்பந்தம் வேண்டுமென்று ஆசையால் உம்முடைய பெண்ணை எனக்குக் கன்னிகாதானஞ் செய்யவேண்டுமென்று யாசிக்கி றேன். ஆனால் கன்னிகைக்காகப் பணம் முதலியவை கொடுக்க மாட்டேன்" என்று சிரித்து கொண்டு மேகம் போல் உரக்கச்சொன்னார்.

அதனைக் கேட்ட அரசன் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "ஓ நாத! என்னுடைய பெண்ணுக்குத் தகுதியான வரன் உம்மைவிட வேறொருவருமில்லை. ஸகல குணங்களும் உம்மிடத்திலேயே வஸிக்கின்றன. லக்ஷ்மீதேவி உம்முடைய சரீரத்தில் நித்தியமாக வஸிக்கிறாள். ஆனால் பெண்ணின் விவாஹ விஷயத் தில் வரனுடைய பராக்கிரமத்தைப் பரீக்ஷிப்பதற்காக ஒரு ப்ரதிஞை செய்திருக்கிறேன். அதென்னவென் றால். இதோ ஏழு எருதுகளிருக்கின்றனவல்லவா! இவைகள் பழக்கப்பட்டவையல்ல; பிறரால் ஜயிக்கப்படாதவைகள்; இவைகளை யார் ஜயிக்கிறானோ, அவனுக்கு பெண்ணைக் கொடுக்கிறோமென்று ப்ரதிஞை செய்திருக்கிறேன். அநேக இராஜ குமாரர்களை இந்த எருதுகள் கிழித்துக் கொன்றன.





ஓ யதுக்களைச் ஸந்தோஷப் படுத்திகிறவரே! லக்ஷ்மீபதியே! நீர் எருதுகளை அடக்குவீரானால் என்னுடைய பெண்ணுக்கு தகுதியான வரனாவீர்" என்று சொன்னார். அதனைக்கேட்ட பகவான் அப்படியே செய்கிறோமென்று ஒப்புக்கொண்டு, கச்சை கட்டிக்கொண்டு தம்மை ஏழு வகையாகச் செய்து கொண்டு விளையாட்டாக அவைகளை நிக்கிரஹித்தார் (அடக்கினார்). பின்னுமவர் மதம், பலம் இவைகளற்றவைகளான அந்த எருதுகளைக் கயிற்றால் கட்டி இழுத்தார். அது சிறுவன் மரப்பொம்மைகளை இழுத்தாற் போலிருந்தது.

47–52. பின்பு அரசன் ஆச்சர்யமடைந்து ஸந்தோஷித்துத் தம்முடைய புத்திரியை ஸ்ரீ கிருஷ்ணனுக்குத் தானஞ் செய்தார். ஸ்ரீகிருஷ்ணனும் தமக்குத் தகுந்த பத்னியான அவளைப் பெற்றுக் கொண்டார். அரசனுடைய பத்தினிகளும் ஸ்ரீ கிருஷ்ணனை மணப்பிள்ளையாக அடைந்து மிகுந்த ஆனந்தத்தை அடைந்தார்கள். அப்பொழுது மஹோத் ஸவம் நடந்தது. சங்கம், பேரி, ஆனகம் முதலிய வாத்தியங்கள் முழங்கப்பட்டன. ப்ராஹ்மணர்கள் ஆசிர்வதித்தார்கள். புருஷர்களும், ஸ்திரீகளும் நல்ல வஸ்திரங்களாலும், மாலைகளாலும் அலங்கரிக்கப் பெற்று ஸந்தோஷமாக வஸித்தார்கள். பின்பு அரசன் தம்பதிகளை ரதத்திலேற்றி, மிகுந்த ஸேனைகளுடன் மிக்க ப்ரியத்துடன் த்வாரகைக்கு அனுப்பினார். மேலும் அவர் லக்ஷம் பசுக்களைக் கன்யாதனமாகக் கொடுத்தார். பின்னுமவர் ஆபரணங்களாலும், நல்ல வஸ்திரங்களாலும் அலங்கரிக்கப்பெற்ற மூன்று ஆயிரம் யௌவனப் பெண்களையும் ஒன்பது ஆயிரம்

யானைகளையும், அதற்கு நூறுமடங்கு ரதங்களையும் (9,00,000), அதற்கு நூறு மடங்கு (9,00,00,000) குதிரைகளையும், அதற்கு நூறு மடங்கு (9,00,00,00,000) காலாட்களையும் கொடுத்தனுப்பினார்.

53–55. இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் ஸத்யா என்பவளைக் கல்யாணஞ் செய்து கொண்டு போகிறார் என்பதைக் கேள்விப்பட்டு அநேக அரசர்கள் வழியில் பாணங்களைப் ப்ரயோகித்துப் பகவானைத் தடுத்தார்கள். அவர்கள் அந்த எருதுகளால் ஜயிக்கப்பட்டவர்கள். அப்பொழுது அர்ஜுனன் காண்டிவமென்ற வில்லையெடுத்து அவர்களை அடித்து துரத்தினார். அது சிங்கம் அல்ப மிருகங்களைத் துரத்தினாற் போலிருந்தது. பின்பு தேவகியின் புத்திரராகிய பகவான் த்வாரகைக்குச்சென்று ஸத்யையுடன் ரமித்தார்.

56. பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் பிதாவின் ஸஹோதரியான ச்ருதகீர்த்தியின் புத்திரியான பத்ரா என்பவளை அவளுடைய ஸஹோதரர்களுடைய அனுமதியினால் விவாஹஞ்செய்து கொண்டார்.

57. பின்னுமவர் மத்ரதேசத்து அரசனுடைய புத்திரியும், லக்ஷணமுள்ளவளுமான லக்ஷ்மணா என்பவளைத் தாமொருவராகச் ஸ்வயம்வரத்தில் அபஹரித்தார். அது கருடன் அமிருதத்தை அபஹரித்தாற் போலிருந்தது.

58. இன்னும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இம்மாதிரியாக பல ஸ்திரீகளுண்டு; நரகாஸுரனைக் கொன்று





அவனுடைய அரண்மனையிலிருந்து அநேக ஸ்திரீகளைக் கொண்டுவந்தார்.

♣♣♣♣♣

## அத்தியாயம்–59

### நரகாஸுரவதம்

அதனைக்கேட்ட அரசன் சுகரை நோக்கி, "பகவான் பூமியின் புத்திரனாகிய நரகனை எப்படிக் கொன்றார்? ராஜ கன்னிகைகள் நரகனால் எப்படி அபஹரிக்கப் பட்டிருந்தார்கள்? இந்தக் கிருஷ்ணனுடைய சரிதத்தைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

2–13. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "முன்னொருகால் பூமியின் புத்திரனாகிய நரகனென்ற அஸுரன் மஹேந்திரனுடைய குடையையும், அவன் மாதாவாகிய அதிதியின் குண்டலங்களையும், மணி பர்வதமென்ற ஸ்தலத்தையும் பிடுங்கிக் கொண்டான். பின்பு மஹேந்திரன் ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து நரகனுடைய நடையை தெரிவித்தார் (ஸத்திய பாமையின் கிரஹத்தில்) அதனைக் கேட்ட பகவான் ஸத்தியபாமையுடன் கருடன் மீதேறிக் கொண்டு

ப்ராக்ஜோதிஷமென்ற நரகனுடைய நகரத்திற்குட் சென்றார். அந்த நகரமானது மலைகளால் செய்யப் பட்ட கோட்டைகளாலும், ஆயுதங்களாலும், ஜலத்தாலும், அக்னியினாலும், காற்றினாலும் சுற்றப் பட்டுச் சத்துருக்களால் பிரவேசிக்க முடியாததாக இருந்தது. பின்னும் கோரமும், கெட்டியுமான முரபாசங்களாலும் சுற்றப்பட்டிருந்தது. அதனைக் கண்ட கிருஷ்ணன் மலைகளைக் கதாயுதத்தால் உடைத்தார். அக்னி, ஜலம், வாயு இவைகளை சக்கரத் தால் அடக்கினார். முரபாசங்களைக் கத்தியினால் வெட்டினார். சங்க சப்தத்தால் யந்திரங்களை நிறுத்தினார். மிக்க பருத்த கதாயுதத்தால் ப்ராகாரத்தை உடைத்தார். பாஞ்சஜன்யமென்ற சங்கத்தின் சப்த மானது பிரளய காலத்திய இடிபோல் பயங்கரமாக இருந்தபடியால் அதனைக்கேட்டு ஜலத்தில் படுத்துக் கொண்டிருந்த ஐந்து தலையுள்ள முரனென்பவன் எழுந்திருந்து, மூன்று முனைகளுள்ள சூலத்தைச் சுழற்றிகொண்டு ஸ்ரீகிருஷ்ணனுக்கு எதிரில் ஓடி வந்தான்.

அந்தச் சூலமானது பிரளய கால ஸூர்யனைப் போலப் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. மேலும் அந்த அஸுரன் ஐந்து முகங்களால் மூவுலகங்களையும் விழுங்குகிறவன்போலக் காணப்பட்டான். அந்த அஸுரன் கிருஷ்ணனை எதிர்த்தது, கருடனை ஸர்ப்பம் எதிர்த்தாற்போலிருந்தது. மேலுமந்த அஸுரன் அந்த சூலாயுதத்தைச் சுழற்றிக் கிருஷ்ணன் மீது பிரயோகித்து அதட்டி ஐந்து முகங்களாலும் அட்டஹாஸஞ் செய்தான். அந்தச் சப்தமானது ஆகாயம், பூமி எல்லா திக்குகள், அண்ட கடாஹம் இவைகளில் பரவியது. அப்பொழுது கிருஷ்ணன் அநேக பாணங்களை பிரயோகித்து, அந்த சூலத்தை மூன்று துண்டுகளாக வெட்டினார். அந்த அஸுரனு டைய முகங்களிலும் பாணங்களைப் பிரயோகித்தார். பின்பு அஸுரன் கதாயுதத்தைச் சுழற்றி மிகுந்த கோபத்துடன் கிருஷ்ணன் மீது ப்ரயோகித்தான். அதனைக்கண்ட கிருஷ்ணன் பாணங்களைப் பிரயோகித்து அந்த கதாயுதத்தை ஆயிரந் துண்டாக வெட்டினார். பின்பு அஸுரன் இரு கைகளையும் தூக்கிக்கொண்டு கிருஷ்ணனை நோக்கி ஓடிவந்தான். அதனைக் கண்ணுற்ற பகவான் சக்கராயுதத்தைப் பிரயோகித்து அஸுரனுடைய தலையை வெட்டினார். அஸுரன் மரணமடைந்து இந்திரனால் உடைக்கப் பட்ட சிகரமுள்ள மலைபோல் ஜலத்தில் விழுந்தான்.

அதனைக்கண்ணுற்ற தாம்ரன், அந்தரிக்ஷன், ச்ரவணன், விபாவஸு, வஸு, நபஸ்வான், அருணன் என்ற முரனுடைய பிள்ளைகள் தகப்பனாருடைய வதத்தைச் ஸஹியாமல் அதற்குப் பதில் செய்ய விரும்பி, நரகனால் தூண்டப்பட்ட பீடனென்ற ஸேனாபதியை முன்னிட்டுக் கொண்டு பட்டணத்திலி ருந்து வெளியில் வந்தார்கள். ஆயுதங்களுடன் வெளியில் வந்து மிகுந்த கோபங்கொண்டு பாணங்களை யும், கத்திகளையும் சக்திகளையும், கதாயுதங்களையும், யஷ்டிகளையும், ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் பிரயோகித் தார்கள். குறைவற்ற பராக்கிரமமுள்ள ஸ்ரீகிருஷ்ண பகவான் தமது பாணங்களால் அந்த ஆயுதங்களை எள்ளளவாக பேதித்தார். பின்னும் அவர் அந்த வீரர்களுடைய கை, கால் துடை, தலை இவைகளை வெட்டி, அவர்களை யமலோகத்திற்கு அனுப்பினார்.

14–22. இப்படி முரனுடைய புத்திரர்கள் கிருஷ்ணனால் கொல்லப்பட்டதைக் கேட்டு நரகாஸுரன் ஸமுத்திரத்திலிருந்து உண்டானவைகளும், மதப்பெருக்குள்ளவைகளுமான யானைப் படைகளுடன் வெளியில் வந்து, ஸத்தியபாமையுடன் கருடன் மீது மின்னலுடன் கூடிய மேகம்போல் பிரகாசிக்கும், ஸ்ரீகிருஷ்ணனை எதிர்த்தான். பின்னுமவன் சதக்னி யென்ற சக்தியால் கிருஷ்ணனை அடித்தான். அவனுடைய ஸைன்னியங்கள் பலவகையான ஆயுதங்களால் அடித்தார்கள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் அந்த நரகனுடைய ஸைன்னியத்தைக் கூர்மையான பாணங்களால் அடித்தார். அந்த ஸைன்னியமானது ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டு கை, கால், துடை, கண்டம், ஆகிய இவைகள் வெட்டுண்டு நாசமடைந்தன. பின்னும் யானைகளும் குதிரைகளும் கொல்லப்பட்டன.

இன்னும் ஸ்ரீகிருஷ்ணன் நரகாஸுரனுடைய யோதர்களால் ப்ரயோகிக்கப்பட்ட ஆயுதங்களையும் அஸ்திரங்களையும் மூன்று மூன்று பாணங்களால் வெட்டினார். ஸ்ரீகிருஷ்ணனுக்கு வாஹனமாகவிருக்கும் கருடன் இறக்கைகளாலும், நகங்களாலும், மூக்கினாலும் நரகனுடைய ஸைன்யங்களை அடித்தார். அதனால் மிகவும் பீடிக்கப்பட்டு ஸைன்யங்கள் பட்டணத்தை நோக்கிச் சென்றன. நரகன் மாத்திரம் யுத்தஞ்செய்தான். அப்பொழுது கருடனால் அடிக்கப் பட்டு பயந்து ஓடிய தன்னுடைய ஸைன்னியத்தைப் பார்த்து மிக்க கோபங்கொண்டு நரகன் சக்தியென்ற ஆயுதத்தால் கருடனை அடித்தான். முன்னொரு ஸமயம் கருடனிடத்தில் வஜ்ராயுதம் முனை மழுங்கிற்று. அப்படிப்பட்ட





கருடன் புஷ்ப மாலையால் அடிக்கப்பட்ட யானை போல ,அசையாமலிருந்தார். பின்பு நரகன் ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்வதற்காகச் சூலாயுதத்தை எடுத்துக்கொண்டான். அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் அதனைப் ப்ரயோகிப்பதற்கு முன்னமேயே சக்கரத்தைப் ப்ரயோகித்து யானையின் மீதிருக்கும் நரகனுடைய தலையை வெட்டினார். இப்படி சக்கிரத்தால் வெட்டப்பட்ட அவனுடைய தலையானது குண்டலங்கள், அழகான கிரீடம் இவைகளுள்ளதாகப் பூமியில் விழுந்தது. நரகனைச் சார்ந்தவர்கள் 'ஹாஹா' என்று கதறினார்கள். மஹர்ஷிகள் 'நல்லது' என்று ச்லாகித்தார்கள். தேவர்கள் புஷ்பங்களை வர்ஷித்துப் பகவானைத் ஸ்தோத்திரஞ் செய்தார்கள்.

23–31. அதன்பின் பூமிதேவி ஸ்ரீகிருஷ்ணனிடம் வந்து ஸுவர்ணாலங்காரமுள்ள உத்தம ரத்தின குண்டலங்களையும், வைஜயந்தியென்ற வனமாலையையும், வருணனுடைய குடையையும், மேருவிலுண்டான உத்தமமான ரத்தினத்தையும் கொடுத்து, பகவானை நமஸ்கரித்து, மிக்க பக்தியுடன் வணங்கி, அஞ்சலி செய்து பின்வருமாறு ஸ்தோத்திரஞ் செய்தாள். எப்படியெனில் "தேவர்களுக்கு அதிபதியாகிய தேவ! சங்கம், சக்கரம், கதாயுதம் இவைகளை தரிப்பவரே (பக்தர்களைக் காப்பாற்றுவதற்காகவென்று கருத்து) பக்தர்களை அனுக்கிரஹிப்பதற்காகத் தமது இஷ்டப்படி சரீரத்தையெடுத்துக் கொள்பவரும் பரமாத்மாவுமான உமக்கு நமஸ்காரம். (எந்த மந்திரத்தால் குந்தியை பகவான் அனுக்கிரஹித்தாரோ அதைச் சொல்லி நமஸ்கரிக்கிறாள்.) தாமரை மலரைத் தொப்புளில் வைத்துக் கொண்டிருப்பவருமான

உமக்கு நமஸ்காரம் (ஜகத்திற்கு காரணம் என்று காட்டப்பட்டது) தாமரை மலர் மாலையைத் தரித்தவராகிய உமக்கு நமஸ்காரம் (நல்ல கீர்த்தியாகிய மாலையைத் தரித்தவரென்று கருத்து) தாமரை மலர் போல் தாபத்தை நிவர்த்திக்கக்கூடிய நேத்திரங்களையுடையவரான உமக்கு நமஸ்காரம். தாமரை மலர் ரேகையுள்ளதான பாதங்களுள்ள உமக்கு நமஸ்காரம். ஒப்புயர்வில்லாத ஐச்வர்யங்களுள்ள உமக்கு நமஸ்காரம். ஸகலப்ராணிகளுக்கும் இருப்பிடமும், எங்கும் வியாபித்தவரும் எல்லாவற்றிற்கும் முந்தியவரும், ஜகத் காரணங்களாகிய மஹத்தத்துவம் முதலியவைகளுக்கும் காரணமாக இருப்பவரும், சைதன்ய ஸ்வரூபியுமான உம்மை நமஸ்கரிக்கிறேன். மேலும் உத்பத்தியற்றவரும், இந்த ஜகத்தை படைப்பவரும், ப்ரஹ்மமும், அளவற்ற சக்தியுள்ளவரும், ஸகல ப்ராணிகளின் ஸ்வரூபியாக இருப்பவரும், பரமாத்மாவுமான உமக்கு நமஸ்காரம்.

ஒ ப்ரபுவே! நீர் லோகத்தைப் படைப்பதற்காக, அதிக ரஜோ குணத்தையும், ஸம்ஹரிப்பதற்காகத் தமோ குணத்தையும், தரிக்கிறீர். ஆனாலும் குணங்களால் நீர் மறைக்கப்படுகிறதில்லை. மேலும் நீர் காலம், ப்ரதானம், புருஷன் ஆகிய இவைகளின் ஸ்வரூபமாகவிருக்கிறீர். நீர் எல்லாவற்றிற்கும் மேலானவர். நான் (பூமி) ஜலம், தேஜஸ், வாயு, ஆகாயம், தன்மாத்திரைகள், அதிஷ்டான தேவர்கள், மனம் இந்திரியங்கள், அஹங்காரம், மஹத் தத்துவம் ஆகிய சராசரங்களடங்கிய ஸகல ஜகத்தும் உம்முடைய ஸ்வரூபமேயாம். உம்மைவிட வேறாக இருக்கிறதென்று நினைப்பது ப்ரமையேயாம். ஒ சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுகிறவரே நரகனுடைய புத்திரனாகிய





பகதத்தனென்ற இவன் உம்முடைய பாதாரவிந்தத்தைச் சரணமடைந்திருக்கிறான். ஆனதால் இவனைக் காப்பாற்றும். பாபங்களை நிவர்த்திக்கக் கூடியதான உம்முடைய தாமரை மலர் போன்ற கையை இவனுடைய தலையில் வையும்" என்று ப்ரார்த்தித்தாள்.

32–37. இப்படி பூமிதேவி பக்தியுடன் வணக்கமாகத் ஸ்தோத்திரஞ் செய்ய, ஸ்ரீ கிருஷ்ணன் பகதத்தனுக்கு அபயத்தைக் கொடுத்து, ஸகல ஐச்வரியங்கள் நிறைந்ததான நரகனுடைய அரண்மனையில் ப்ரவேசித்தார். அந்த அந்தபுரத்தில் பதினாறு ஆயிரம் ராஜ குமாரிகள் இருந்தார்கள். அவர்கள் நரகனால் பலாத்காரமாக அபஹரிக்கப்பட்டவர்கள். அந்தப் பெண்கள் புருஷோத்தமராகிய ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்து, 'தைவம் தங்களுக்குப் பர்த்தாவை ஸமீபத்தில் தருவிக்கிறது' என்று நினைத்து அவர்களெல்லோரும் 'இவர் எனக்குப் பர்த்தாவாக ஆகட்டும். அதனைப் ப்ரஹ்மதேவர் ஒப்புக்கொள்ளட்டும்' என்று ஒவ்வொருவரும் ப்ரார்த்தித்து கொண்டார்கள். பின்பு கிருஷ்ணன் அழகான சுத்த வஸ்திரந்தரித்த அந்தப் பெண்களைப் பல்லக்கில் வைத்து, த்வாரகைக்கு அனுப்பினார். மேலும் ரதங்கள் குதிரைகள், பொக்கிஷம் முதலியவைகளையும் த்வாரகா நகரத்திற்கு அனுப்பினார். பின்னுமவர் ஐராவதத்தின் குலத்தில் பிறந்தவைகளும், நான்கு தந்தமுள்ளவைகளும், வெண்மை நிறமுள்ளவையுமான அறுபத்து நான்கு யானைகளையும் தமது பட்டணத்திற்கு அனுப்பினார்.

38–41. பின்பு ஸ்ரீகிருஷ்ணன் சத்தியபாமையுடன் ஸ்வர்க்க லோகஞ் சென்று அதிதியினிடத்தில்

குண்டலங்களைக் கொடுத்தார். மஹேந்திரனும், இந்திராணியும் பகவானைப் பூஜித்தார்கள். அப்பொழுது ஸத்தியபாமை பாரிஜாதத்தைப் பூமிக்குக் கொண்டுவர வேண்டுமென்று கேட்டு கொண்டதால் பாரிஜாத விருக்ஷத்தை வேரோடு பிடுங்கி கருடன் வைத்துக் கொண்டு த்வாரகாநகரஞ் செல்ல முயன்றார். அப்பொழுது தேவர்கள் தடை செய்தார்கள். அவர்களை ஜயித்துப் பட்டணத்திற்கு வந்து, ஸத்தியபாமை வீட்டு தோட்டத்தில் பாரிஜாதத்தை நட்டுவைத்தார். அதன் புஷ்ப, வாஸனை, தேன் இவைகளில் ஆசைப்பட்டு வண்டுகள் ஸ்வர்க்கத்திலிருந்து அதனுடன் பூமிக்கு வந்தன. தேவர்கள் தங்களுடைய கிரீடம் படும்படி பகவானுடைய பாதங்களில் நமஸ்கரித்துத் தங்கள் கார்யங்களை ஒவ்வொரு ஸமயத்திலும் முடித்துக் கொள்ளுகிறார்கள். அப்படிப்பட்ட தேவர்களும் பாரிஜாதத்திற்காக கிருஷ்ணனுடன் யுத்தஞ் செய்தார்கள். அவர்களுடைய தமோ குணம் வியக்கத்தக்கது.

42–43. பின்பு ஒரு நல்ல முஹூர்த்தத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் அநேக ஸ்வரூபத்தைத் தரித்து (தேவகி முதலியவர்கள் வீடுகளிலும் ஒரே காலத்தில் இருந்தாரென்று தாத்பரியம்), மனத்தாலும் நினைக்கமுடியாத அத்புத கர்மங்களைச் செய்பவரான பகவான் பிராகிருத ஜனங்கள் போல ஒப்புயர்வில்லாத அந்த ஸ்திரீகளுடைய அரண்மனைகளில் எப்பொழுதும் வஸித்து லக்ஷ்மியின் அம்சமுள்ளவர்களான ஸ்திரீகளுடன் தம்முடைய ஆனந்தத்தால் பூர்ணராகி, கிருஹஸ்த தர்மத்தை அனுஷ்டித்து வந்தார்.

44–46. எவருடைய மார்க்கத்தை ப்ரஹ்மதேவர்





முதலியவர் அறியவில்லையோ, அப்படிப்பட்ட லக்ஷ்மீ பதியைப் பர்த்தாவாக அடைந்த அந்த ஸ்திரீகள் அன்பு பொருந்திய சிரிப்புள்ள பார்வை, புதிதாகிய ஸங்கம காலத்திய வார்த்தை, வெட்கம் ஆகிய இவைகளை அடைந்தார்கள். மேலும் அந்தப் பெண்கள் அநேக வேலைக்காரிகளால் தாங்கள் உபசரிக்கப் பட்டிருந்தாலும் எதிர் கொண்டழைப்பது, ப்ரியப் படுவது, பயப்படுவது, ஆஸனங் கொடுப்பது. பாதங்களை அலம்புவது, தாம்பூலங் கொடுப்பது, விசிறுவது, சந்தனம் பூசுவது, புஷ்பமாலையால் அலங்கரிப்பது, தலை வாறுவது, படுக்கை போடுவது, ஸ்நானஞ் செய்து வைப்பது பழம் முதலியவைககளை கொடுப்பது முதலியவைகளை செய்து ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஸுஷ்ருஷை செய்தார்கள்.



## அத்யாயம் — 60

### கிருஷ்ணன் ருக்மிணியுடன் பரிஹாஸமாய்ப் பேசியது

1—9 ஒருஸமயம் ஜகத்திற்குக் குருவாகிய ஸ்ரீ கிருஷ்ணன் கட்டிலில் ஸுகமாக உட்கார்ந்து கொண்டிருக்கும்பொழுது, ருக்மிணி தேவி விசிறியால் விசிறி பகவானை உபசரித்துக் கொண்டிருந்தாள். எந்த பகவான் இந்த ஜகத்தை விளையாட்டாகப் படைக்கிறாரோ, காப்பாற்றுகிறாரோ, ஸம்ஹரிக்கி றாரோ அந்தப் பகவான் தம்மால் ஏற்படுத்தப்பட்ட தர்ம ஸேதுக்களைக் காப்பாற்றுவதற்காக யதுகுலத்தில் அவதரித்திருக்கிறார். இப்படிப் பகவான், ருக்மணி இவர்களிருக்கும் அரண்மனையில் முத்துமாலைகளும், கொடுங்கைகளும் ரத்தின தீபங்களும், ப்ரகாசித்தன. மேலும் அந்த கிருஹம் வாஸனையுள்ள தூபங் களாலும், மல்லிகை புஷ்பத்தின் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

வண்டுகள் புஷ்பத்தின் தேனைக்குடித்து சப்தித்துக் கொண்டிருந்தன. சந்திரனுடைய கிரணங்கள் ஜன்னலின் வழியாகப் பிரவேசித்திருந்தன. பாரிஜாத வனத்தின் வாஸனையுடன் காற்று வீசியது. அப்படிப்பட்ட கிருஹத்தில் பாலின் நுரை போன்றதும் மிருதுவும் சுத்தமுமான ஹம்ஸ தூளிகா மஞ்சத்தில் ஸுகமாக உட்கார்ந்திருக்கும் ஜகதீசனாகிய கிருஷ்ணனுடைய ஸமீபத்தில் ருக்மிணி தேவி ரத்ன மயமான பிடியுள்ள சாமரத்தைத் தன் தோழியின் கையிலிருந்து வாங்கி அதனால் பகவானை





விசிறி உபசரித்தாள். அவளுடைய ரத்தின மயமான பாதஸரங்கள் மிருதுவாகச் சப்தித்தன. மேலும் அவள் கையில் அணிந்திருந்த மோதிரம், வளை இவை களாலும் ஸாமரத்தாலும் பிரகாசித்தாள். பின்னும் அவளுடைய வஸ்திரத்தின் நுனியால் மறைக்கப் பட்டிருக்கும் ஸ்தனங்களில் இருக்கும் குங்குமங்களுடைய காந்தியால் சிவந்த ஹாரங்களுள்ளவளாகவும், இடுப்பில் அணிந்திருக்கும் மேலான ஒட்டியாண முள்ளவளாகவும் கிருஷ்ணனுடைய ஸமீபத்தில் நின்றாள். இப்படி மானிட உருவங் கொண்ட லக்ஷ்மீ தேவி போன்றவளும், கிருஷ்ணனையே கதியாகக் கொண்டவளும், பகவானுடைய அவதாரத்திற்குத் தகுதியான ஸ்வரூபமுள்ளவளும், தலைமயிர், குண்டலம், ஹாரம், கழுத்து, முகம் இவைகளால் பிரகாசிப்பவளும், சிரிப்பாகிய அமிருதத்தை பரவச் செய்பவளுமான ருக்மிணியைப் பார்த்துக் கிருஷ்ணன் சிரித்துக் கொண்டு பின்வருமாறு சொல்லலானார்.

10—21. "ஓ ராஜகுமாரியே! லோகபாலர்களுக்குச் சமமான ஐச்வர்யமுள்ளவர்களும், மிக்க மஹிமையுள் ளவர்களும், அழகுள்ளவர்களும், ரூபம், உதாரகுணம், தேஹ பலம் இவைகள் உள்ளவர்களுமான சிசுபாலன் முதலிய அநேக அரசர்கள் உன்னைக் கலியாணஞ் செய்து கொள்ள விரும்பி, குண்டின நகரம் வந்திருந் தார்கள். அவர்களுக்கு உன்னை விவாஹஞ் செய்து கொடாமல் உன்னுடைய ஸஹோதரரும் பிதாவாகிய பீஷ்மகரும் எனக்குக் கொடுத்தார்கள். ஆனாலும் உனக்குச் சமமான சிசுபாலன் முதலியவர்களை விட்டு உனக்குத் தகுதியில்லாத என்னை நீ ஏன் விவாஹஞ் செய்து கொண்டாய்? நான் ஜராஸந்தன் முதலிய

அரசர்களிடம் பயந்து ஸமுத்திரத்தைச் சரண மடைந்திருக்கிறேன். பெரும்பாலும் எனக்கு ராஜ்யமில்லை. எவர்களுடைய நடை இப்படிப்பட்ட தென்று அறியமுடியாததோ, எவர்கள் ஜனங் களுடைய மார்க்கத்தை அடையாதவர்களோ, அவர்களை விவாஹஞ்செய்து கொண்ட ஸ்திரீகள் பெரும்பாலும் துக்கப்படுவார்கள்.

ஓ அழகான இடுப்புள்ளவளே; நான் தரித்திரன்; ஏழைகளான ஜனங்கள் என்னிடத்தில் பிரியப் படுவார்கள்; ஆனதால் பணக்காரர்கள் பெரும்பாலும் என்னை ஸேவிக்க மாட்டார்கள். மேலும், எந்த ஸ்திரீபுருஷர்கள் இருவர்களுக்கும் குலம், ஐச்வரியம், ஸ்வரூபம் ஆகிய இவைகள் ஸமமாக இருக்குமோ, அவ்விருவர்களுக்கும் விவாஹமும், ஸ்நேஹமும் உசித மென்று சொல்லப்படுகிறது. இவர்களில் ஒருவர் மேலானவரும், மற்றொருவர் தாழ்ந்தவருமானால் அவ்விருவர்களுக்கும் நேரும் விவாஹமானது மேலானதல்ல. ஓ விதர்ப்ப தேசத்து அரசனுடைய புத்திரியே நான் பிக்ஷுகளால் ஸந்தோஷமாகச் ஸ்லாகிக்கப் பெற்றவன்; குணமற்றவன்; இதனை நீ அறியாமல் நீடித்த ஆலோசனையில்லாமல் என்னை விவாஹஞ் செய்து கொண்டாய். ஆனதால் எந்தப் புருஷனை விவாஹஞ் செய்து கொண்டால் இவ்வுலகத்திலும், பரலோகத்திலும் ஸகல காமனை களும் கிடைக்குமோ, அப்புருஷனை இப்பொழுது கல்யாணஞ் செய்துகொள்; அப்படியானால் முன்னமேயே சொல்லக் கூடாதாவென்றால், சிசுபாலன், ஸால்வன், ஜராஸந்தன், தந்தவக்த்ரன், உன்னுடைய தமையனாகிய ருக்மி ஆகிய இவர்கள் வீர்யமதங் கொண்ட என்னை





விரோதித்துக் கொண்டிருந்தமையால் அவர்களுடைய கர்வத்தை அடக்குவதற்காக அவர்களை ஜயித்து உன்னைக் கொண்டுவந்தேன். நான் அஸத்துக்களுடைய தேஜஸ்ஸை அபஹரிப்பவன்; ஸ்திரீ, புத்திரன், பணம், தேஹம், வீடு ஆகிய இவைகளில் எனக்கு ஆசையில்லை. அவைகளில் உதாஸீனனாக இருக்கிறேன். ஆத்ம லாபத்தால் பூர்ணனாக இருக்கிறேன். தீபம் எப்படி ஸாக்ஷியாக இருக்கிதோ, அப்படி ஸாக்ஷியாக இருக்கிறேனே யொழிய நான் கர்மங்களைச் செய்கிறதில்லை (கர்த்தாவல்ல) என்று சொன்னார். "ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அநேகம் ஸ்திரீகளிலிருந்தாலும் என்னிடத்திலேயே மிக்க ப்ரியம்" என்று ருக்மிணி கர்வமடைந் திருந்ததனால், அவளுடைய கர்வத்தை அடக்குவதற்காகப் பகவான் இப்படிச் சொன்னார்.

22–24. இதற்குமுன் பகவான் இப்படி ஒருபொழுதும் சொன்னதில்லை. அப்படிப்பட்ட பகவானுடைய அப்ரியமான வார்த்தையைக் கேட்டு ருக்மிணி தேவி பயந்து, மனத்தில் நடுக்கமடைந்து கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு மிக்கக் கவலையை அடைந்தாள். நக காந்தியால் சிறந்ததும், மிருதுவுமான பாதத்தால் பூமியைக் கீறிக் கொண்டிருந்தாள். கண்ணீர் மையை கரைத்துக் கொண்டு ஸ்தனங்களில் விழுந்து, அவ்விடத்திலிருக்கும் குங்குமத்தை நனைத்தது. மேலும், தலை குனிந்தவளாகிக் கண்ணீரால் கண்டமடைத்துப் பேசமுடியாதவளாக இருந்தாள். இப்படி ருக்மிணி அப்ரியமான வார்த்தையைக் கேட்டு பயந்தாள். தன்னை பகவான் விட்டு விடுவாரோ என்று துக்கத்தை (தாபத்தை) அடைந்தாள்.

அதனால் ப்ரக்ஞை தவறிற்று. கையிலணிந்த கங்கணம் நழுவியது; ஸாமரமும் கீழே விழுந்தது. பின்னும் அவள் நான்கு பக்கங்களிலும் பரவிய தலைமயிர் உள்ளவளாகிக் காற்றினால் தள்ளப்பட்ட ரஸ்தாளி வாழைபோல பூமியில் விழுந்தாள்.

25–31. பகவான் பரிஹாஸமாகச் சொல்கிறார் என்பதை அறியாமல் மிக்க விச்வாஸத்தால் மூர்ச்சை யடைந்து பூமியில் விழுந்த ருக்மிணி தேவியைப் பார்த்து ஸ்ரீகிருஷ்ணன் அவளிடத்தில் தயைசெய்து சீக்கிரம் கட்டிலை விட்டிறங்கி, நான்கு கைகளால் அவளைத் தூக்கி அவளுடைய தலைமயிர்களை முடிந்து தாமரை மலர் போன்ற கையால் அவளுடைய முகத்தைத் துடைத்தார். (ருக்மிணிக்குத் தடவிக்கொடுப்பது முதலியவைகளை ஓரே காலத்தில் செய்வதற்காக நான்கு கைகளுள்ளவரானாரென்று கருத்து) கண்ணீர் நிறைந்த கண்களையும் ஸ்தனங் களையும் துடைத்தார். பின்னும் ஸாதுக்களைக் காப்பாற்றுபவரான ஸ்ரீகிருஷ்ணன் தம்மையே கதியென்று நினைத்தவளும், பதிவ்ரதையும் பரிஹாஸ வார்த்தையை அறியாமல் மோஹித்தவளும், அதனால் தீன ஸ்வபாவமுள்ளவளும், துக்கித்தவளுமான ருக்மிணியை ஆலிங்கனஞ் செய்து கொண்டு பின் வருமாறு ஸமாதானஞ் செய்தார். "ஓ விதர்ப்ப தேசத்து ராஜகுமாரியே! நீ என்னிடத்தில் மிகுந்த ப்ரியமுள்ளவளென்பது எனக்குத் தெரியும். உன்னுடைய வார்த்தையைக் கேட்க விரும்பிப் பரிஹாஸஞ் செய்தேன். மிக்க ப்ரியத்தால் துடிக்கும் உதடுகளுள்ளதும், சிவந்த கடைக்கண்களுள்ளதும் அழகான புருவங்களுள்ளதுமான உன்னுடைய முகத்தைப் பார்ப்பதற்காகவே இப்படிச் சொன்னேன். ஸ்திரீ யுடன் பரிஹாஸமாகப் பேசிக்கொண்டு யாமத்தைக் கழிப்பதே கிருஹஸ்தர்களுக்கு மேலான லாபம். ஆனதால் என்னிடத்தில் கோபிக்கவேண்டாம்" என்றார்.

32–33. இப்படிக் கிருஷ்ணனால் ஸமாதானஞ் செய்யப்பட்ட ருக்மிணிக்கு "பகவான் நம்மைத் தள்ளி விடுவாரோ" என்ற பயம் நீங்கியபின்பு அழகான ஸகல அவயவங்களுள்ளவளும், ஒருபோதும் பகவானை விட்டுப் பிரியாத லக்ஷ்மீதேவியுமான ருக்மிணி வெட்கம், சிரிப்பு இவைகளால் அழகான கடா க்ஷத்தால் புருஷோத்தமராகிய ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்துக்கொண்டு பின்வருமாறு சொல்லத் தொடங்கினாள். எப்படியென்றால்

34. ஸ்ரீ கிருஷ்ணனால் சொல்லப்பட்ட வார்த்தையை அங்கீகரித்து, அதற்கு வேறு அர்த்த மென்று பதில் சொல்லுகிறாள்.) "ஓ தாமரை மலர் போன்ற கண்களுள்ளவரே! நீர் சொன்னது உண்மையே. உமக்கு நான் சமமானவளல்ல. நீர் தம்முடைய மஹிமையிலிருப்பவர். ப்ரஹ்மா முதலிய வர்களுக்கும் அதிபதி; நான் ஸத்வம் முதலிய ப்ராகிருத குண ஸ்வபாவமுள்ளவள்; இந்த உண்மையை அறியாதவர்கள் என்னை நமஸ்கரிப்பார்கள். அப்படிப்பட்ட எனக்கும் உமக்கும் எவ்வளவு தாரதம்யம். (11வது ச்லோகத்தில் உனக்குச் ஸமானமில்லாத என்னை ஏன் விவாஹஞ் செய்து கொண்டாய் என்று பகவான் சொன்ன வார்த்தையிலுள்ள அஸமானன் என்ற பதத்திற்கு நான் உமக்கு ஸமமானவல்லவென்று அர்த்தம்.) இது

உண்மையே என்று சொன்னாள். மேலும் தாமரைக் கண்ணன் என்பதால் மற்ற வகையில் உமக்கும் எனக்கும் ஸாம்யத்தைப் பற்றி யோஜிக்க வேண்டாம். (கண்ணைப்பார்த்தாலேயே உமக்கு நான் தகுதியில்லாதவளென்று தெரியவருகிறது என்று தாத்பர்யம்.)

35. "மேலும், அரசர்களிடம் பயந்து ஸமுத்திரத்தில் வசிப்பதாகச் சொன்னீரல்லவா? அது உண்மையே! ஓ ஸகல லோகங்களைக் காலால் அளந்தவரே! சைதன்யகனராகிய நீர் சப்தம் முதலிய குணங்களிடம் பயந்தவர் போல் விஷயங்களுக்கு எட்டாத ஹ்ருதய குஹையில் ஸ்திரமாக வஸிக்கிறீர். 'பலசாலிகளை விரோதித்துக் கொண்டிருக்கிறேன்' என்று சொன்னதும் உண்மைதான்! எப்பொழுதும் விஷயங்களிலேயே ப்ரவர்த்தித்துக் கொண்டிருக்கும் இந்திரியங்களுடன் நீர் விரோதமுள்ளவர்; 'எனக்குச் சிங்காஸனம் இல்லை' என்று சொன்னதும் ஸரியானதே. அரசர்களுடைய சிங்காஸனம் அவிவேகிகளால் அடையக் கூடியதானதால் உம்முடைய பக்தர்களே அதை விரும்புகிறதில்லை. நீர் விரும்பமாட்டீர் என்பதில் என்ன ஸந்தேஹம்?"

36. "எவனுடைய நடை பிறரால் அறிய முடியாததோ, எவர்கள் லோக மார்க்கத்தை அடையாதவர்களோ, அவர்களைக் கல்யாணஞ் செய்து கொண்ட ஸ்திரீகள் பெரும்பாலும் துக்கப்படுவார்கள்" என்று சொன்னதும் உண்மையே! உம்முடைய பாதாரவிந்தத்தின் மதுவைப் பானஞ் செய்த முனிகளுடைய மார்க்கமே அஜ்ஞான ஜனங்களால் அறியமுடியாதது.





உம்முடைய மார்க்கம் எப்படி அறியமுடியுமென்று கருத்து) மேலும், அவர்கள் லௌகிக விஷயங்களை இச்சிக்கிறதில்லை. அலௌகிய விஷயங்களையே இச்சிக்கிறார்கள். அப்படியிருக்க, உமக்கு லௌகிக விஷயங்களில் ஆசையிருக்குமா?"

37. 'நான் தரித்திரன். என்னிடத்தில் தரித்திரர்களே ப்ரியப்படுவார்கள். ஆனதால், பணக்காரர்கள் என்னை ஸேவிக்கமாட்டார்கள்' என்று சொன்னீரல்லவா? அதுவும் உண்மையானதேயாம். உம்மைப் ப்ரஹ்மா முதலிய தேவர்களும் பூஜிப்பதால் உம்மைவிட மேலானதொன்றுமில்லை (நிஷ்கிஞ்சன என்ற பதத்திற்கு தரித்திரன் என்று அர்த்தங் கொள்ள கூடாது. எவனைக் காட்டிலும் மேலான வஸ்து இல்லையோ, அவர் என்று அர்த்தங்கொள்ள வேண்டுமென்று கருத்து). தன கர்வங்கொண்டு, அதனால் விவேகமற்றிருப்பவர்கள். (உம்மைச் சிக்ஷகர் என்று அறியார்கள்.) ஆனதால் அவர்கள் தங்கள் பிராணனையே திருப்தி செய்பவர்கள் (உம்மை ஸேவிக்கமாட்டார்களென்று தாத்பரியம்). ப்ரஹ்மா முதலிய லோகபாலர்களிடத்தில் உமக்கு மிக்க ப்ரியம். அவர்களும் உம்மிடத்தில் ப்ரியப்படுவார்கள்."

38. 'உனக்கும் எனக்கும் ஸாம்யம் இல்லாததால் நம் இருவர்களுக்கும் நேர்ந்த விவாஹம் ஸரியல்ல' என்று சொன்னீரல்லவா? அதுவும் உண்மையே உம்முடைய மஹிமைக்கும் எனக்கும் எவ்வளவு பேதமிருக்கிறது? நீர் ஸகல புருஷார்த்த ஸ்வரூபியாக இருப்பவர்; பரமானந்த ஸ்வரூபி; உம்முடைய ஸ்வரூபத்தை அடைவதற்காக புத்திசாலிகள் உம்மைச்

ஸேவித்து, ஸேவிய ஸேவக பாவத்தை அடைந்திருப்பார்கள். விஷயஸுகங்களை ஆச்ரயித்துக் கொண்டு, துக்கப்படுகிற ஸ்திரீ புருஷர்களுடைய ஸமாஜம் அவர்களுக்கு உசிதமாக இராது.'

39. 'பிக்ஷுக்கள் என்னைச் ச்லாகிப்பார்கள்' என்று சொன்னதும் உண்மையே! ஸகல ஆசைகளையும் ஒழித்தவர்களான முனிவர்கள் உம்முடைய மாஹாத்மியத்தைச் சொல்லுகிறார்கள் (பிக்ஷுக்களென்றால் மஹரிஷிகளென்று அர்த்தமென்று சொல்லப்பட்டது). எல்லா ஜகத்திற்கும் ஆத்மாவாக இருக்கிறீர் (உம்மை கல்யாணஞ் செய்து கொண்டது வீணல்ல. எதற்காக எல்லாவற்றையும் ஸம்பாதிக்கிறோமோ, அந்த ஆத்மாவாக இருப்பதால் உம்மை அடைந்தேன் என்று கருத்து) மேலும், ஆத்மஞானத்தைக் கொடுப்பவர் என்பதைத் தெரிந்து கொண்டுதான் உம்மைக் கல்யாணஞ் செய்து கொண்டேன். (எவர் ஆத்மாவைக் கொடுப்பவரோ, பலத்தைக் கொடுப்பவரோ என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.) ப்ரஹ்மதேவர், மஹேந்திரன் முதலியவர்களுடைய ஐச்வரியம் (அதிகாரம்) உம்முடைய புருவத்தால் தூண்டப்பட்ட கால வேகத்தால் நாசஞ் செய்யப்படுகிறது. மற்றவர்கள் விஷயத்தில் கேட்க வேண்டுமா? அதனால் தான் அவர்களை விட்டு உம்மை விவாஹஞ் செய்து கொண்டேன்'.

40. 'சிங்கமானது அல்ப மிருகங்களைக் கொன்று தன்னுடைய பாகத்தை அபஹரித்தாற் போல, நீர் சார்ங்கமென்ற வில்லின் சப்தத்தால் சிசுபாலன் முதலிய அரசர்களைத் துரத்திவிட்டு என்னை





அபஹரித்தீரல்லவா? அப்படிப்பட்ட உமக்குப் பயமேது? அரசர்களிடம் பயந்து ஸமுத்திரத்தில் வஸிக்கிறீர் என்பது பொருந்துமா?'

41. உம்முடைய பாதாரவிந்தத்தைச் ஸேவிப்பதற்காக அங்கன், ப்ரது சக்கரவர்த்தி, பரதன், யயாதி, கயன் முதலிய சிறந்த அரசர்கள் உம்மையே த்யானஞ் செய்து ராஜ்யத்தை விட்டுக் காட்டிற்குச் சென்றார்கள். ஓ தாமரைக் கண்ணனே; உம்மை அடைந்தவர்கள்; துக்கத்தை அடைவார்களா? (துக்கப்படமாட்டார்களென்று கருத்து.)

42. 'ஸமானனாகிய அரசனைத் தேடிக் கல்யாணஞ் செய்துகொள்' என்று சொன்னீரல்லவா? நீர் ஸகல குணங்கள் பொருந்தியவர்; உம்முடைய பாத பத்மம் ஸகல ஜனங்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியது; லக்ஷ்மிக்கு இருப்பிடமானது; அப்படிப்பட்ட பாதத்தின் மஹிமையை ஸாதுக்களுடைய முகமாகச் ச்ரவணஞ் செய்யும் விவேகியான எவள் உம்மைவிட்டு எப்பொழுதும் பயமுள்ளவனும், மரண தர்மமுள்ளவனுமான மனிதனை அடைவாள்?'

43. 'நீர் ஸகல ஜகத்திற்கும் அதிபதி; எல்லாருக்கும் ஆத்மாவாக இருப்பவர்; இவ்வுலகத்திலும், பரலோகத்திலும் ஸகல இஷ்டத்தையும் கொடுப்பவர்; உம்முடைய பாதத்தை ஸேவிப்பவர்களுக்கு ஸம்ஸாரம் நாசமாகிவிடும் ஆனதால் உம்முடைய பாதம் எனக்குச் சரணமாகட்டும்.'

44. 'மேலும், சத்துருக்களைச் ஸம்ஹரிப்பவரே!

பரமசிவன், ப்ரஹ்மதேவர் ஆகிய இவர்களுடைய ஸபையில் கானஞ் செய்யப்படுகின்ற உம்முடைய கதையை எவள் கேட்கவில்லையோ, அதிருஷ்டமில்லாத அந்தப் பெண்ணுக்குக் கழுதைப் போல சுமை சுமப்பவர்களும், எருதுகள் போல எப்பொழுதும் வேலை செய்து கஷ்டப்படுகிறவர்களும், நாய்கள் போல பிறரால் அவமதிக்கப் பெற்றவர்களும், பூனைகள் போலக் கடோரர்களும், வேலைக்காரர்கள் போலச் ஸ்வாதந்திரியமில்லாதவர்களுமான அரசர்கள் புருஷர்களாக ஆகட்டும்.

45. எவள் உம்முடைய பாதமாகிய தாமரை மலரின் மதுவைப் பானஞ் செய்யவில்லையோ, அவள் தோல், மீசை மயிர், நகம், தலைமயிர் ஆகிய இவைகளால் மூடப்பட்டும், உள்ளே மாமிஸம், எலும்பு, ரத்தம், பூச்சி, அமேத்யம், கபம், பித்தம், வாதம் இவைகளுள்ளதும், பிழைத்திருந்தும் பிணத்துக்கு ஒப்பானதுமான சரீரத்தைத் தன்னுடைய பர்த்தாவென்று நினைப்பாள், அவளே மூடபுத்தி யுள்ளவள்.

46. ஓ தாமரை மலர் போன்ற கண்களுள்ளவரே! தம்முடைய ஆத்மாவினிடத்திலேயே ரமிப்பவரே! உம்முடைய பாதங்களில் எனக்கு பக்தியானது இருக்கட்டும். என்னிடத்திலும் (ப்ரகிருதியினிடத்திலும்) மிகுந்த ஆசை உமக்கு இல்லை. அப்படி ஒன்றையும் விரும்பாதவரானாலும் உம்முடைய பாதஸேவையே எனக்குப் பெரிய லாபம். மேலும், நீர் இந்த ஜகத்தை விருத்தி செய்வதற்காக ரஜோ குணத்தை ஆச்ரயித்து என்னைக் கடாக்ஷிக்கிறீர். அதுவே எனக்கு மிகுந்த அனுக்கிரஹம்.

47—48. ஓ மதுவைக் கொன்றவரே! உனக்குச் சமமான புருஷனைக் கலியாணம் பண்ணிக்கொள் என்று உம்மால் சொல்லப்பட்டது பொய்யல்ல. காசி தேசத்தரனுடைய கன்னிகைகளான அம்பா, அம்பாலிகா, அம்பிகா என்ற மூவர்களுக்குள் அம்பா என்பவள் கன்னிகையாக இருக்கும்பொழுதே ஸால்வனிடத்தில் எப்படி ஆசைப்பட்டாளோ, அதுபோலக் கலியாணமான பிறகும் வியபசாரிகளான சில ஸ்திரீகளுடைய மனமானது வெவ்வேறு புருஷனை இச்சிக்கிற வழக்கமுண்டு. அப்படி வியபசாரியான ஸ்திரீயை வித்துவானாக இருப்பவன் வைத்துக் கொள்ளக் கூடாது. அப்படிப் போஷிப்பானானால் இவ்வுலகம், பரலோகம் இவ்விரண்டிலும் ஸுகத்தையடைய மாட்டான்" என்று சொன்னாள் (ஆனதால் என்னுடைய மனத்தை பரீக்ஷிப்பதற்காகவே இம்மாதிரி சொன்னாரென்று கருத்து).

49—57. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் ருக்மிணியை நோக்கி, "ஓ பதிவ்ரதையே! இம்மாதிரியான உன்னுடைய வார்த்தையைக் கேட்கவேண்டுமென்ற ஆசையால் இம்மாதிரி சொன்னேன். உன்னால் சொல்லப்பட்டது எல்லாம் உண்மையே. என்னிடத்தில் மிகவும் பக்திகொண்டவளான நீ எந்தெந்தக் காமங்களை விரும்புகிறாயோ, மோக்ஷம் வரையிலுள்ள அவைகளெல்லாம் உனக்கு இருக்கின்றன. ஓ தோஷமற்றவளே! பரிஹாஸ வார்த்தைகளால் உன்னுடைய புத்தியை நான் கலக்கியும் உன்னுடைய மனமானது என்னிடத்திலேயே ஸ்திரமாக இருந்தபடியால்

பதிவ்ரதா தர்மத்தையும் அதிகமான விஸ்வாசத்தையும் அடைந்தவளாகிறாய். எவர்கள் தபஸ், வ்ரதம் இவை களை அனுஷ்டித்தும், விஷயத்தில் ஆசை கொண்டவர்களாகி, மோக்ஷத்திற்கு அதிபதியாகிய என்னை என்னுடைய மாயையால் மோஹித்து, தம்பதிகளுடைய விஷய ஸுகத்திற்காக ஆராதிக் கிறார்களோ, பின்னும் அவர்கள் மோக்ஷம் வரையிலுள்ள ஸகல ஸம்பத்துக்களையும் கொடுக்கக் கூடியவராக என்னை ஆராதித்தும், மோக்ஷத்தை விரும்பாமல் ஸம்பத்துக்களையே விரும்புகிறார்களோ, அவர்கள் அதிருஷ்டமில்லாதவர்கள். விஷயஸுகம் தாழ்ந்த ஜன்மத்திலும் கிடைக்கும். ஆனதால் அவர்கள் தாழ்ந்த ஜன்மத்தை அடைவார்கள்.

ஓ க்ருஹத்திற்கு அதிபதியாக இருப்பவளே ஒருவித பலத்தையும் விரும்பாமல் என்னிடத்தில் நீ பக்தி செய்தாய். இம்மாதிரியான பக்தியானது ஸம்ஸாரத்தை நிவர்த்திக்கக் கூடியது; இது உனக்கேற் பட்டது தைவச் செயலேயாம். துஷ்டர்களுக்கு இம்மாதிரியான பக்தி ஏற்படுகிறதில்லை. விஷயங்களிலே ஆசையுள்ளவளும், தன்னுடைய ப்ராணனைத் திருப்தி செய்து கொள்வதிலேயே நோக்கமுள்ளவளும் வஞ்சிக்கும் ஸ்வபாவமுள்ளவளுமான பெண்ணுக்கு இம்மாதிரியான பக்தி ஏற்படுவதற்கு நியாயமே இல்லை. மேலும் உன்னைப்போல பர்த்தாவினிடத்தில் பிரீதியுள்ளவளான பத்தினியை ஒரு வீட்டிலும் நான் பார்த்ததில்லை. உன்னுடைய விவாஹ காலத்தில் உன்னைக் கல்யாணஞ் செய்து கொள்வதற்காக வந்திருந்த எல்லா அரசர்களையும் விட்டு (அவர்களிடம் ஆசைப்படாமல்) என்னுடைய





சரித்திரங்களைக் கேள்விப்பட்டு ரஹஸ்யமாக ஒரு ப்ராஹ்மணனை அனுப்பினாயல்லவா? மேலும் விவாஹ காலத்தில் யுத்தத்தில் உன்னுடைய ஸஹோதரனை நான் ஜயித்து, மீசை முதலியவைகளை க்ஷௌரஞ் செய்து அவமானப்படுத்தினேன்.

பின்னர் சொக்கட்டான் விளையாடும் பொழுது அவனைப் பலராமன் கொன்றார். இவைகளைப் பார்த்தும் நீ ஒன்றையும் சொல்லாமலிருந்ததுமின்றி அதனை அடிக்கடி ஸ்மரிப்பதால் நேரும் துக்கத்தையும் ஸஹித்திருந்தாய். (பகவான் நம்மை விட்டுவிடுவாரோ என்ற பயத்தால்) அதனால் நீ என்னை ஜயித்தவளாகிறாய். இன்னும் உன்னுடைய விவாஹ ஸமயத்தில் "நாளைய தினமெனக்கு விவாஹ ஸமயமென்று நிச்சயிக்கப் பெற்றிருப்பதால் அந்த ஸமயம் நீர் வராமல் தாமதித்தால் நான் உயிரை விடுவேன்' என்று ப்ராஹ்மண முகமாக தெரிவித் தாயல்லவா? அப்பொழுது ப்ராஹ்மணன் திரும்பி உன்னிடம் வருவதற்கு முன் "கிருஷ்ணரிடஞ் சென்ற ப்ராஹ்மணன் இன்னும் வரவில்லையே' என்று ப்ராணனை விட்டுவிடுகிறதென்று நிச்சயஞ் செய்து கொண்டாயல்லவா? அதற்கு நம்மால் பதில் சொல்ல முடியாது. அதைப் பற்றி ஸந்தோஷிக்கிறோம்" என்று சொன்னார்.

58–59. இப்படிப் பகவான் விளையாட்டான வார்த்தைகளைச் சொல்லி லக்ஷ்மீதேவியின் அம்ஸமான ருக்மிணி தேவியுடன் மனுஷ்ய பாவனையை அந்தப் ப்ரபு மற்ற ஸ்திரீகளுடைய வீடுகளிலும் அனுஸரித்து

ரமித்தார். இப்படியே லோக குருவாகிய கிருஹஸ்தராக இருந்து கிருஹஸ்த தர்மத்தையனுஷ்டித்தார்.



## அத்தியாயம் – 61

### கிருஷ்ணனுடைய புத்திர பௌத்திர ஸந்ததி

அந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய ஒவ்வொரு ஸ்திரீகளிடத்திலும் பத்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களெல்லோரும் ஸகல விதத்திலும் கிருஷ்ணனை அனுஸரித்தார்கள்; ஒவ்வொரு ஸ்திரீகளும் தங்கள் வீட்டிலியே ஸ்ரீகிருஷ்ணன் வஸிப்பதைப் பார்த்து அவருடைய உண்மையை அறியாதவர்களானதால் தங்களிடத்திலேயே பகவானுக்குப் ப்ரியமென்று நினைத்திருந்தார்கள். மேலும் அந்த ஸ்திரீகள் அந்த கிருஷ்ணனுடைய தாமரை மலர் போன்ற முகம், நீண்ட கைகள், கண்கள், அன்பு பொருந்திய சிரிப்பு, பார்வை மனோஹரமான வார்த்தை இவைகளால் வஸீகித்தார்களேயொழிய தங்களுடைய விளையாட்டுகளால் ஸ்ரீகிருஷ்ணனுடைய மனத்தை அபஹரிக்க முடியாதவர்களாக இருந்தார்கள். அவர் மிக்க





மஹிமை பொருந்தியவர்; பகவானுடைய பத்தினிகளான பதினாறாயிரம் ஸ்திரீகளும் புன்சிரிப்புள்ள ஸ்வல்ப பார்வையால் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறார்கள். அதனால் மனோஹரமான புருவத்தில் அசைவுண்டாகிறது. அதனால் விலாஸங்கள் உண்டாகின்றன. இப்படி மன்மதனை வ்ருத்திச் செய்யக்கூடிய செய்கைகளை அந்த ஸ்திரீகள் செய்து பகவானுடைய மனத்தைக் கலக்குவதற்கு (ஆசைப்படும்படி செய்வதற்கு) முடியவில்லை. ப்ரஹ்மா முதலிய தேவர்களும் எவருடைய மார்க்கத்தை அறியாமல் தேடுகிறார்களோ, அந்த லக்ஷ்மீபதியான பகவானைப் பர்த்தாவாக அடைந்து, அன்பு பொருந்திய சிரிப்புள்ள பார்வை, புதிதாகிய ஸங்கமத்தில் ஆசை ஆகிய இவைகளால் மிக்க ஸந்தோஷத்தை அடைந்தார்கள்.

மேலும் அந்த ஸ்திரீகள் தங்களுக்கு அநேக வேலைக்காரிகளிருந்தாலும் எதிர் கொண்டழைப்பது, ஆஸனங் கொடுப்பது, பூஜிப்பது, காலை அலம்புவது, தாம்பூலம், கொடுப்பது, விசிறுவது, ச்ரமத்தை நிவர்த்திப்பது பூசுவது, புஷ்பத்தால் அலங்கரிப்பது, தலை வாருவது, படுக்கை போடுவது, ஸ்நானஞ் செய்விப்பது, பழம் முதலியவைகளைச் ஸமர்ப்பிப்பது முதலியவைகளால் ஸ்ரீ கிருஷ்ணனை உபசரித்தார்கள். அந்த ஸ்திரீகளில் ஒவ்வொருவருக்கும் பத்துப் புத்திரர்கள் ஜனித்தார்கள் என்று முன்பு சொன்னோமல்லவா ? கிருஷ்ணனுடைய எட்டு பட்டமஹஷிகளுடைய புத்திரர்களான ப்ரத்ம்யுனன் முதலியவர்களைச் சொல்லுகிறேன். ப்ரத்யும்னன், சாருதேஷ்ணன், சுதேஷ்ணன், சாருதேவன். ஸுசாரு, சாருகுப்தன், பத்ரசாரு, சருபத்திரன், விசா, சாரு

ரமித்தார். இப்படியே லோக குருவாகிய கிருஹஸ்தராக இருந்து கிருஹஸ்த தர்மத்தையனுஷ்டித்தார்.

♣♣♣♣

## அத்தியாயம் – 61

### கிருஷ்ணனுடைய புத்திர பௌத்திர ஸந்ததி

அந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய ஒவ்வொரு ஸ்திரீகளிடத்திலும் பத்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களெல்லோரும் ஸகல விதத்திலும் கிருஷ்ணனை அனுஸரித்தார்கள்; ஒவ்வொரு ஸ்திரீகளும் தங்கள் வீட்டிலியே ஸ்ரீகிருஷ்ணன் வஸிப்பதைப் பார்த்து அவருடைய உண்மையை அறியாதவர்களானதால் தங்களிடத்திலேயே பகவானுக்குப் ப்ரியமென்று நினைத்திருந்தார்கள். மேலும் அந்த ஸ்திரீகள் அந்த கிருஷ்ணனுடைய தாமரை மலர் போன்ற முகம், நீண்ட கைகள், கண்கள், அன்பு பொருந்திய சிரிப்பு, பார்வை மனோஹரமான வார்த்தை இவைகளால் ஸிகித்தார்களேயொழிய தங்களுடைய விளையாட்டுகளால் ஸ்ரீகிருஷ்ணனுடைய மனத்தை அபஹரிக்க முடியாதவர்களாக இருந்தார்கள். அவர் மிக்க





மஹிமை பொருந்தியவர்; பகவானுடைய பத்தினிகளான பதினாறாயிரம் ஸ்திரீகளும் புன்சிரிப்புள்ள ஸ்வல்ப பார்வையால் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறார்கள். அதனால் மனோஹரமான புருவத்தில் அசைவுண்டாகிறது. அதனால் விலாஸங்கள் உண்டாகின்றன. இப்படி மன்மதனை வ்ருத்திச் செய்யக்கூடிய செய்கைகளை அந்த ஸ்திரீகள் செய்து பகவானுடைய மனத்தைக் கலக்குவதற்கு (ஆசைப்படும்படி செய்வதற்கு) முடியவில்லை. ப்ரஹ்மா முதலிய தேவர்களும் எவருடைய மார்க்கத்தை அறியாமல் தேடுகிறார்களோ, அந்த லக்ஷ்மீபதியான பகவானைப் பர்த்தாவாக அடைந்து, அன்பு பொருந்திய சிரிப்புள்ள பார்வை, புதிதாகிய ஸங்கமத்தில் ஆசை ஆகிய இவைகளால் மிக்க ஸந்தோஷத்தை அடைந்தார்கள்.

மேலும் அந்த ஸ்திரீகள் தங்களுக்கு அநேக வேலைக்காரிகளிருந்தாலும் எதிர் கொண்டழைப்பது, ஆஸனங் கொடுப்பது, பூஜிப்பது, காலை அலம்புவது, தாம்பூலம், கொடுப்பது, விசிறுவது, ச்ரமத்தை நிவர்த்திப்பது பூசுவது, புஷ்பத்தால் அலங்கரிப்பது, தலை வாருவது, படுக்கை போடுவது, ஸ்நானஞ் செய்விப்பது, பழம் முதலியவைகளைச் ஸமர்ப்பிப்பது முதலியவைகளால் ஸ்ரீ கிருஷ்ணனை உபசரித்தார்கள். அந்த ஸ்திரீகளில் ஒவ்வொருவருக்கும் பத்துப் புத்திரர்கள் ஜனித்தார்கள் என்று முன்பு சொன்னோமல்லவா ? கிருஷ்ணனுடைய எட்டு பட்டமஹஷிகளுடைய புத்திரர்களான ப்ரத்ம்யுனன் முதலியவர்களைச் சொல்லுகிறேன். ப்ரத்யும்னன், சாருதேஷ்ணன், சுதேஷ்ணன், சாருதேவன். ஸுசாரு, சாருகுப்தன், பத்ரசாரு, சருபத்திரன், விசா, சாரு

என்று ருக்மிணியிடத்தில் பத்துப் புத்திரர்கள் ஜனித்தார்கள். அவர்களெல்லாரும் கிருஷ்ணனுக்குச் சமமானவர்கள், பானு, ஸுபானு, ஸ்வர்ப்பானு, ப்ரபானு, பானுமான், சந்திரபானு, பிர்ஹத்பானு, ரவிபானு, ஸ்ரீபானு, ப்ரதிபானு என்றவர்கள் ஸத்ய பாமையின் புத்திரர்கள். ஸாம்பன், ஸுமித்திரன், புருஜித், சதஜித், ஸஹஸ்ரஜித், விஜயன், சித்திரகேது, கீர்த்திமான், த்ரவணன், க்ரது இவர்கள் ஜாம்ப வதியின் புத்திரர்கள். ஸாம்பன் முதலிய புத்திரர்கள் பிதாவிற்கு சமமானவர்கள். பானு, சந்திரன், அச்வ ஸேனன், சித்திரகு, வேகவான், விருஷன், ஆமன், சங்கு, வஸு, ஸ்ரீ மானாகிய கிருதி ஆகிய இவர்கள் நாக்னஜித்தின் புத்திரர்கள். ச்ருதன்கவி, விருஷன், வீரனாகிய ஸுபாஹு புத்திரன், ஏகலன், சாந்தி தர்சம், பூர்ணமாஸம், ஸோமகன் ஆகிய இவர்கள் காளிந்தியின் புத்திரர்கள்.

ப்ரகோஷன், காத்திரவான், ஸிம்ஹன், பலன், ப்ரபலன், ஊர்த்வகன், மஹா சக்தி, ஸஹன், தேஜஸ், அபராஜிதன் என்பவர்கள் மாத்திரியின் (லக்ஷ்மணா யென்பவள்) புத்திரர்கள். விருகன், அர்கன், அனிலன், கிருத்திரன், பஹ்வன்ன்ன், நாதன், மஹாசன், பாவனன், வஹ்நியென்பவர்கள் மித்ர விந்தையின் புத்திரர்கள். ஸங்கிராமஜித், ப்ரஹத்ஸேனன், சூரன், ப்ரஹாணன், அரிஜித், யஜ்ஞன், ஸுபத்திரன், வாமன், ஆயு, ஸத்யகன் ஆகிய இவர்கள் பத்ரையின் புத்திரர்கள். தீப்திமான், தாம்ரபத்திரன் முதலியவர்கள் விஷ்ணுவின் அம்சமாகிய பலராமனுக்கு ரோஹிணீ யிடம் ஜனித்த புத்திரர்கள். ருக்மியின் புத்ரியாகிய ருக்மவதி என்பவளிடத்தில் ப்ரத்யும்னருக்கு





போஜகடமென்ற பட்டணத்தில் அனிருத்தனென்ற புத்திரன் பிறந்தான். இவர்களுடைய புத்திரர்களும், பௌத்திரர்களும் கோடிக் கணக்காக இருந்தார்கள். கிருஷ்ணனுடைய புத்திரர்களுக்குத் தாய்கள் பதினாறா யிரத்திற்கு அதிகமானவர்கள்" என்று சுகர் சொன்னார்.

23–25. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி "ருக்மியென்பவன் ஸ்ரீகிருஷ்ணனால் அவமதிக்கப் பெற்றவனானதால் ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்வதற்கு ஸமயம் பார்த்துக் கொண்டிருப்பவனல்லவா? அப்படிப் பட்ட ருக்மி என்பவன் சத்ருவின் புத்திரனாகிய ப்ரத்யும்னனுக்குத் தன்னுடைய பெண்ணை எப்படி விவாஹஞ் செய்வித்தான்? நடந்தவை, நடப்பவை, வருங்கார்யம், இந்திரியங்களுக்குப் புலப்படாதவை, வெகுதூரத்திலிருப்பவை, சுவர் முதலியவைகளால் மறைக்கப்பட்டவை ஆகிய இவைகள் எல்லாவற்றயும் யோகிகள் நேரில் பார்ப்பதுபோலத் தெரிந்து கொள்ளுகிறார்கள் ஆனதால் விரோதிகளான ருக்மி, ஸ்ரீகிருஷ்ணன் இருவர்களுக்கும் ஸம்பந்தம் எப்படி ஏற்பட்டது? அதனைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

26–27. அதனைக்கேட்ட சுகர் அரசனை நோக்கி, ருக்மி என்பவன் ஸ்ரீ கிருஷ்ணனால் அவமதிக்கப் பெற்றதால் கிருஷ்ணனிடத்தில் விரோத புத்தியுள்ள வனானாலும் ஸஹோதரியான ருக்மிணியின் ப்ரியத் திற்காக அவருடைய புத்திரனாகிய ப்ரத்யும்னனுக்குத் தன்னுடைய பெண்ணை மணஞ் செய்வித்தான். மேலும் ப்ரத்யும்னன் மன்மதனுடைய அவதாரமான தால் அவனைச் ஸ்வயம்வரத்தில் ருக்மவதி பார்த்து

ஆசைப்பட்டதனால் அவ்விடம் ஸ்வயம் வரத்திற்காக வந்திருந்த அரசர்களை ஜயித்து ப்ரத்யும்னன் ருக்மவதியை அபஹரித்தான் (ருக்மியும் ஸம்மதித்தானென்று தாத்பர்யம்).

28. ருக்மிணியின் புத்திரியான சாருமதீயென்பவளை கிருதவர்மாவின் புத்திரன் மணஞ் செய்து கொண்டான். (எல்லா ஸ்திரீகளுக்கும் ஒவ்வொரு பெண்ணுண்டு. அந்தப் பெண்களின் கல்யாணத்தைச் சொல்வதற்காகவே மூத்தகுமாரியின் விவாஹஞ் சொல்லப்பட்டது).

29–44. பின்பு ருக்மி யென்பவன் பெண்ணின் புத்திரனாகிய அநிருத்தனுக்குப் புத்திரனுடைய புத்திரியான ரோசனை யென்பவளை மணஞ் செய்வித்தான். அந்த ஸம்பந்தம் தர்மத்திற்கு ஒத்த தல்லவென்று ருக்மிக்குத் தெரியும். ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலும் அவனுக்கு விரோதமுண்டு. ஆனாலும் ஸஹோதரியான ருக்மிணியின் ப்ரீதிக்காக அந்த விவாஹத்தை நடத்தினான். அந்த கல்யாணத்திற்காக ருக்மிணி, பலராமன் கிருஷ்ணன், ஸாம்பன், ப்ரத்யும்னன் முதலியவர்கள் போஜகடமென்ற பட்டணத்திற்குச் சென்றார்கள். பின்பு கல்யாணம் நடந்தது. அதன்பின் காளிங்கன் முதலிய கர்வமுள்ள அரசர்கள் ருக்மியை நோக்கி, "பலராமன் சொக்கட்டான் விளையாடத் தெரியாதவர். ஆனாலும் அந்த விளையாட்டில் மிக்க பிரியமுள்ளவர். ஆனதால் அவருடன் சொக்கட்டான் விளையாடி அவரை ஜயித்து விடலாம்" என்றார்கள். அதனைக் கேட்ட ருக்மியானவன் பலராமனை அழைத்து, அவருடன்





சொக்கட்டான் விளையாடினான். அப்பொழுது பலராமன் நூறு, ஆயிரம், பதினாயிரமென்று பந்தயங் கட்டினார். அதனை ருக்மி ஜயித்தான். அதனைக் கண்ணுற்ற காளிங்கன் பற்கள் வெளியில் தெரியும்படி சிரித்தான். அது பலராமனுக்குக் கோபத்தை உண்டு பண்ணியது. பின்பு ருக்மியென்பவன் லக்ஷத்தைப் பந்தயமாக வைத்தான். அதனை பலராமன் ஜயித்தார். அப்பொழுது ருக்மி கபடமாக 'நான் ஜயித்தேன்' என்று பொய் சொன்னான். பின்பு, பலராமன் இயற்கையில் சிவந்த கண்களுள்ளவராகையால், பர்வகாலத்தில் ஸமுத்திரம் போல பொங்கிய கோபமுள்ளவராகி பத்து கோடியை பந்தயமாக வைத்தார். அதனையும் பலராமன் ஜயித்தார். அப்பொழுது ருக்மி "நான் தான் ஜயித்தேன்; இந்த மத்தியஸ்தர்கள் சொல்லட்டும்" என்றான்.

அப்பொழுது ஆகாசவாணி, "பலராமன் தான் ந்யாயமாக ஜயித்தார்; ருக்மி சொல்வது பொய்" என்றது. அதனையும் லக்ஷ்யஞ் செய்யாமல் ருக்மியானவன் காலம் குறுகிவிட்டதனால் துஷ்டர்களான அரசர்களால் தூண்டப்பட்டு, பலராமனை நோக்கி, "நீங்கள் வனத்தில் ஸஞ்சரிக்கும் இடையர்கள்; உங்களுக்கு சொக்கட்டான் விளையாட்டுத் தெரியாது அரசர்கள் சொக்கட்டான் ஆடுவார்கள்; பாணங்களால் யுத்தஞ் செய்வார்கள். உங்களைப் போன்றவர்களுக்கு அவை எப்படி தெரியும்" என்று பரிஹாஸஞ் செய்தான். அப்பொழுது மற்ற அரசர்களும் பரிஹாஸஞ் செய்தார்கள். அப்பொழுது பலராமன் மிக்க கோபங்கொண்டு பரிகமென்ற ஆயுதத்தால் அந்த ருக்மியைக் கொன்றார். பின்னுமவர் களிங்கதேசத்து

அரசனாகிய காளிங்கனைப் பத்தாவது அடியில் பிடித்து அவனுடைய பற்களையுடைத்தார். அவன் பற்கள் வெளியில் தெரியும்படி சிரித்தானல்லவா? மற்ற அரசர்களும் பரிகத்தால் பலராமனால் அடிக்கப் பட்டு கைகள், துடைகள், சிரஸ் ஆகிய இவைகள் வெட்டுண்டு, ரத்தப் ப்ரவாகமுள்ளவர்களாகி பயந்து ஓடினார்கள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் தம்முடைய மைத்துனரை பலராமன் கொன்றதைப் பார்த்தும் ருக்மிணி பலராமன் இவர்களுக்கு ஸ்நேஹம் குறையுமோவென்று பயந்து ஒன்றையும் சொல்லாமல் மௌனமாக இருந்தார். பின்பு பலராமன் முதலிய தாசார்ஹர்கள் கல்யாணம், சத்ருவதம் முதலியவைகளைக் கிருஷ்ணனுடைய மஹிமையால் முடித்துக்கொண்டு தம்பதிகளை ரதத்தில் வைத்துக்கொண்டு போஜகட மென்ற பட்டணத்திலுருந்து த்வாரகாநகரஞ் சென்றார்கள்.

[இந்த அத்யாயத்தில் கிரந்தாக்ஷரத்தில் அச்சிட்டி ருக்கும் புஸ்தகத்தில் 7, 8—வது ச்லோகங்கள் வ்யாக்கியானக் காரர்களால் அங்கீகரிக்கப்படவில்லை. ஆதலால் அவைகளின் அர்த்தம் எழுதப்படவில்லை.]





# அத்தியாயம்–62

## *அனிருத்தனுடைய சரிதம்*

1. அரசன் சுகரை நோக்கி "யதுக்களில் உத்தம னாகிய அனிருத்தன் பாணனுடைய பெண்ணாகிய உஷையை எப்படிக் கல்யாணஞ்செய்துகொண்டார். அதன்நிமித்தம் விஷ்ணுவிற்கும் பரமசிவனுக்கும் பெருத்த யுத்தம் எப்படி நேர்ந்தது; அதெல்லாவற்றை யும் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

2–9. மஹாவிஷ்ணுவிற்குப் பூமியைத்தானஞ் செய்த பலிசக்ரவர்த்தியின் நூறு புத்திரர்களுக்குள் பாணனென்பவன் ஜ்யேஷ்டன். (மூத்தவன்) அவனுக்கு ஆயிரங் கைகளுண்டு; அவன் பரமசிவன் நர்த்தனஞ் செய்யும்பொழுது பக்கவாத்தியத்தை முழக்கினான்; அவன் சோணிதமென்ற பட்டினத்தில் வஸித்தான். அவன் ஸத்திய பிரதிஞன். த்ருடமானவ்ரதமுள்ளவன். அவனுக்குப் பரமசிவனுடைய அனுக்கிரஹத்தால் எல்லா தேவர்களும் வேலைக்காரர்களாக விருந்தார்கள். அதனால் ஸகல ப்ராணிகளுக்கும் அதிபதியும் எல்லாவற்றையும் காப்பாற்றுபவரும், பகதர்களிடத்தில் ப்ரீதியுள்ள வருமான பகவான், ஸந்தோஷித்து பாணனை நோக்கி "உனக்கிஷ்டமான வரத்தைக்கொடுக்கிறேன்" என்றார். அதனைக் கேட்ட பாணன் "தன்னுடைய பட்டணத்தைக் காப்பாற்றவேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். பின்னுமொருக்கால் மதமுள்ளவனாகிய அந்த பாணன் தன் பக்கத்திலிருக்கும் பரமசிவனுடைய பாதங்களில் ஸூரியன் போல ப்ரகாசிக்கும் கிரீடம் படும்படி

நமஸ்கரித்து ஓ மஹாதேவ! ஸகல லோகங்களுக்கும் குருவும், ஈச்வரனும், ஆசையுள்ள புருஷர்களுடைய இஷ்டத்தை கல்பக விருக்ஷம் போல பூர்த்தி செய்ப வருமான உமக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். எனக்கு ஆயிரம் கைகளைக் கொடுத்திருக்கிறீர். அவைகள் சுமையாகவிருக்கின்றனவேயொழிய வேறில்லை. இந்த மூவ்வுலகங்களிலும் உம்மைவிட என்னுடன் யுத்தஞ் செய்யத்தகுதியான புருஷன் வேறொருவருமில்லை. கைகளில் மிகவும் தினவு உண்டாகிறது; ஓ எல்லாவற்றிற்கும் முந்தியவரே! அந்தக் கைகளால் மலைகளைபொடியாக்கிக் கொண்டு திக்கஜங்களிடம் யுத்தத்திற்குச் சென்றேன். அவைகளும் பயந்து ஓடின" என்றான்.

10–11. அதனைக்கேட்ட பரமசிவன் மிக்க கோபத்துடன் "ஓ மூட! எனக்குச் சமமான எந்தப் புருஷனால் உன்னுடைய கொடியானது எப்பொழுது வெட்டப் படுமோ, அவன்தான் உன்னுடைய கர்வத்தை அடக்குவான்" என்றார். அதனைக் கேட்ட மூடனாகிய பாணன் ஸந்தோஷமடைந்து தனது அரண்மனை சென்று பரமசிவனுடைய ஆக்ஞையின்படி தன்னுடைய மதத்தை அடக்கும் புருஷன் எப்பொழுது வருவான் என்று எதிர்பார்த்திருந்தான்.

12–15. பாணனுக்கு உஷா என்று ஒரு பெண்ணுண்டு. அவள் ஸ்வப்பனத்தில் அனிருத்தனைப் பார்த்து அவனிடம் ஆசைகொண்டு பின்னும் அவனைக் காணாமல், ஓ நாயக, எவ்விடத்திலிருக்கிறீர் என்று சொல்லிக் கொண்டு (அனிருத்தனை முன் பார்த்தவளுமல்ல;) விழித்துக் கொண்டாள். ஆனால்





அவள் அவனைப் பற்றி கேட்டவளுமல்ல. இப்படி தூங்கி விழித்துக் கொள்ளும் ஸமயத்தில் "ஓ நாத! எவ்விடத்திலிருக்கிறீர்" என்று தோழிகளுடைய மத்தியில் எழுந்திருந்து மிகவும் வெட்கத்தை அடைந்தாள். பாணனுடைய மந்திரி கும்பாண்டனென்பவன், அவனுடைய பெண்ணாகிய சித்திரலேகா என்பவள் உஷைக்குத் தோழியானதால், அவள் உஷையை நோக்கி "ராஜகுமாரியே! பர்த்தாவைக் காணாமல் தேடுகிறாயே உனக்கு இன்னும் விவாஹம் ஆகவில்லையே இதென்ன" என்று கேட்டாள்.

16–17. அதனைக்கேட்ட உஷை சித்திரலேகையை நோக்கி "ஸ்வப்னத்தில் ஒரு மனிதனைக்கண்டேன், அவர் கருத்த திருமேனியுள்ளவராயும், தாமரைமலர் போன்ற கண்களுள்ளவராகவும், பீதாம்பரத்தை தரித்தவராகவும், பருத்த கைகளுள்ளவராகவும், ஸ்திரீ களுடைய மனத்தை அபஹரிப்பவராகவுமிருந்தார். அப்படிப்பட்டவர் எனக்கு அதராமிருதத்தைக் கொடுத்து என்னை துக்கிக்கச் செய்துவிட்டு எங்கேயோ போய்விட்டார். அவரைத் தேடுகிறேன்" என்றாள்.

18–35. அதனைக்கேட்ட சித்திரலேகை உஷையை நோக்கி "உன்னுடைய துக்கத்தை நிவர்த்திக்கிறேன். எந்தப் புருஷன் உன்னுடைய மனத்தை அபஹரித் தவனோ; அவனை வரவழைக்கிறேன் எனக்கு உத்திரவு கொடு" என்று சொல்லித் தேவர்கள், கந்தர்வர்கள், ஸித்தர்கள், சாரணர்கள், பன்னகர்கள், தைத்யர்கள், வித்யாதரர்கள், யக்ஷர்கள், மனிதர்கள் ஆகிய இவர்களை சித்திரபடத்தில் எழுதினதுமின்றி மனிதர்களில் விருஷ்ணிகளையும், சூரனையும்,

வஸுதேவரையும் பலராமனையும் ஸ்ரீகிருஷ்ணனையும், ப்ரத்யும்னனையும், அனிருத்தனையும் யெழுதி உஷைக்கு காண்பித்தாள். ப்ரத்யும்னனைப் பார்த்து உஷை வெட்கப்பட்டாள் (மாமனாரென்று). பின்னுமவள் அனிருத்தனைப் பார்த்துத் தலை குனிந்து இவன்தான் அவன் என்று சிரித்துக்கொண்டு சொன்னாள்.

அதனைக்கேட்ட சித்திரலேகை, அவன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பௌத்திரனென்று தெரிந்துக் கொண்டு யோகமஹிமையால் ஆகாசமார்க்கமாக த்வாரகைக்குச் சென்றாள். அவ்விடத்தில் அந்தபுரத்தில் கட்டிலில் படுத்துத்தூங்கிக் கொண்டிருந்த அனிருத்தனை தன்னுடைய யோக மஹிமையால் சோணிதபுரத்திற்குக்கொண்டு வந்து தனது தோழிக்கு அவனைக்காண்பித்தாள் அந்த உஷை மிக்க அழகுள்ள அந்தப் புருஷனைப் பார்த்து முகம் மலர்ந்து புருஷர்களுடைய சஞ்சாரமில்லாத தன்னுடைய வீட்டில் வைத்து அவனுடன் ரமித்து வந்தாள். மேலுமவள் விலையுயர்ந்த வஸ்திரம், மாலை, சந்தனம், தூபம், தீபம், ஆஸனம், பானம், பக்ஷ்யம், நல்வார்த்தை, ஸீச்ருஷை இவைகளால் அனிருத்தனைப் பூஜித்தாள். இப்படி அனிருத்தன் அந்தபுரத்தில் நாளுக்கு நாள் விசேஷ ஸ்நேஹமுள்ள இந்த உஷையுடன் விஷயஸுகத்தையனுபவித்து சென்ற நாட்கள் இவ்வளவென்றறியாமல் வெகுநாட்களைக் கழித்தான். இப்படி சிலநாள் சென்றபிறகு அந்தப்புரத்தின் காவலாட்கள் மறைக்கமுடியாததான சிலகாரணங்களால் உஷை புருஷனுடைய ஸம்பந்தத்தை அடைந்திருக்கிறாள் என்பதைத்தெரிந்துகொண்டு,





பாணாஸுரனிடஞ்சென்று 'ஓ அரசனே தவறுதலில்லாமல் நாங்கள் காத்துக்கொண்டு வரும்பொழுதும் உம்முடைய புத்திரியான உஷைக்கு புருஷனுடைய ஸம்பந்தம் ஏற்பட்டிருக்கிறதாகத் தெரியவருகிறது. புருஷ சஞ்சாரமில்லாத அந்தப்புரத்தில் வஸிப்பவர்களுக்கு இதுமாதிரியான தோஷம் ஏற்படுவதற்கு நியாயமில்லை. அதன்காரணத்தை நாங்கள் அறியோம்" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட பாணாஸுரன் மிக்க வருத்தத்துடன் சீக்கிரமாக அந்தப் புரஞ்சென்றான்.

அவ்விடத்தில் ப்ரத்யும்னனுடைய* புத்திரனாகிய அனிருத்தனையுங்கண்டான். அவன் மூவுலகங்களிலும் அழகியபுருஷனும் கருத்த திருமேனியுள்ளவனும், பீதாம்பரத்தை தரித்தவனும், தாமரை மலர் போன்ற கண்களுள்ளவனும் பருத்த கைகளுள்ளவனும், குண்டலம் தலைமயிர் சிரிப்புள்ள பார்வை இவைகளாலழகிய முகமுள்ளவனும், அழகிய பத்தினியுடன் சொக்கட்டான் விளையாடுபவனுமாகவிருந்தான். மேலுமவனுடைய கழுத்தில் ஒரு மல்லிகா புஷ்ப மாலை போடப்பட்டிருந்தது. அது உஷையால் தரிக்கப்பட்ட மாலையாகையால் அவனைப்பார்த்து பாணார்ஸுரன் மிகவும் ஆச்சர்யமடைந்தான். அப்பொழுது அனிருத்தன் ஆயிரங்கைகளுடனும், ஆயுதங்களைத் தரித்த யோதர்களுடனும் அவ்விடம் வந்த பாணாஸுரனைக்கண்டு அவனைக் கொல்ல விரும்பி, இரும்பினால் செய்யப்பட்ட பரிகமென்ற ஆயுதத்தை எடுத்துக்கொண்டு யமன்போல் நின்றான். பின்னுமவன் சிறந்த பன்றியானது நாய்களைக் கொன்றாற்போலத் தன்னைப் பிடிப்பதற்காக நெருங்கி

வரும் யுத்தவீரர்களையடித்தான். அவர்கள் தலை, கைகள், துடைகள், இவைகள் உடைக்கப்பட்டவர்களாகி அந்த வீட்டிலிருந்து பயந்து ஓடினார்கள். அதனைக் கண்ணுற்ற பலியின் புத்திரனாகிய பாணாஸுரன் நாகபாசங்களால் அனிருத்தனைக் கட்டினான். அதனைக் கண்ட உஷை மிகுந்த துக்கத்தால் பரவசையாகி கண்ணீரைப் பெருக்கிக் கொண்டு அழுதாள்.





# அத்தியாயம் – 63

### பாணாஸுரயுத்தம்

*1–21.* த்வாரகா நகரத்தில் அனிருத்தனைக் காணாமல் அவனுடைய பந்துக்கள் துக்கித்து வர்ஷா காலமாகிய நான்கு மாதங்களைக் கழித்தார்கள். (ஒரு பக்ஷத்தை ஒருமாதமென்று வேதத் தில் சொல்லியிருப்பதால் இரண்டு மாதமென்றுஞ் சிலர் சொல்வதுண்டு) இந்த ஸமயத்தில் நாரதர் விருஷ்ணிகளிடஞ் சென்று அனிருத்தனுடைய ஸமாசாரத்தைத் தெரிவித்தார். அதனைக்கேட்டு ப்ரத்யும்னன், யுயுதானன், கதன், ஸாம்பன், ஸாரணன், நந்தன், உபநந்தன், பதரன், முதலிய ராமகிருஷ்ணர்களைச் சார்ந்தவர்கள் பன்னிரெண்டு அக்ஷௌஹிணி ஸைன்யங்களுடன் சோணிதபுரஞ்சென்று ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸஹாயத்தால் முற்றுகை போட்டார்கள். பட்டணத்து ஸமீபத்திலிருக்கும் தோட்டங்களும், கோபுரங்களும், ப்ராகாரம் முதலியவைகளும் நாசஞ் செய்யப்பட்டன. அதனைக் கண்ணுற்ற பாணன் பனிரெண்டு அக்ஷௌஹிணி ஸைன்யங்களுடன், மிக்க கோபங் கொண்டு பட்டணத்தை விட்டு வெளியில் வந்தான். பகவானாகிய பரமசிவன் தம்முடைய புத்திரர்களுடனும், ப்ரமதகணங்களுடனும் விருஷபத்தின் மீதேறி ராமகிருஷ்ணர்களுடன் யுத்தஞ்செய்தார். ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் பரமசிவனுக்கும் யுத்தம் நேர்ந்தது. ப்ரத்யும்னன் ஸுப்ரஹ்மண்யரை எதிர்த்தான். பலராமன், கும்பாண்டன், கூபகர்ணன் ஆகிய இவர்களை எதிர்த்தார். ஸாம்பன், பாணனுடைய புத்திரனிடம் யுத்தஞ் செய்தான். பாணன் ஸாத்யகியுடன் யுத்தம்

செய்தான். அந்த யுத்த வேடிக்கையை பார்ப்பதற்காக ப்ரஹ்மா முதலிய தேவர்களும், மஹரிஷிகளும், ஸித்தர்களும், சாரணர்களும், விமானங்களில் ஏறிக் கொண்டு ஆகாசத்தில் வந்தார்கள், அப்பொழுது பூதங்கள், ப்ரேதங்கள், குஹ்யகர்கள், டாகினிகள், யாதுதானர்கள், பேதாளங்கள், விநாயகர்கள், பூதமாதாக்கள் பிசாசங்கள், கூச்மாண்டங்கள் ப்ரஹ்ம ராக்ஷஸர்கள் ஆகிய பரமசிவனுடைய கணங்களை ஸ்ரீகிருஷ்ணன் கூர்மையான பாணங்களால் அடித்தார்.

அப்பொழுது பரமசிவன் ஸ்ரீ கிருஷ்ணன் மீது பல வகையான அஸ்திரங்களை ப்ரயோகித்தார். ஸ்ரீ கிருஷ்ணன் ஆச்சரியப்படாமல் பதில் அஸ்திரங்களை ப்ரயோகித்து அந்த அஸ்திரங்களைத்தடுத்தார். எப்படியெனில் ப்ரஹ்மாஸ்திரத்தை ப்ரஹ்மாஸ்திரத்தாலும், வாயுவின் அஸ்திரத்தை பர்வதாஸ்திரத்தாலும், அக்கினி அஸ்திரத்தை வருணாஸ்திரத்தாலும், பாசுபதாஸ்திரத்தை வைஷ்ணவாஸ்திரத்தாலும் அடக்கினார். பின்னும் ஸ்ரீகிருஷ்ணன் ஜ்ரம்பணமென்ற அஸ்திரத்தை ப்ரயோகித்துப் பரமசிவனை மோஹிக்கச் செய்துவிட்டு பாணனுடைய ஸைன்யத்தை கத்தி, கதாயுதம், பாணம் முதலியவைகளால் அடித்தார். ஸுப்ரம்ஹண்யர் ப்ரத்யும்னருடைய பாணங்களால் அடிபட்டு சரீரத்தில் ரத்தம்பெருக மயில் வாஹனத்துடன் பயந்து ஓடினார். பலராமனுடைய முஸலத்தால் அடிக்கப்பட்டு கும்பாண்டனும், கூபகர்ணனும் பூமியில் விழுந்தார்கள். இப்படி ஸேனாதிபதிகள் அடிப்பட்டதனால் ஸைன்யங்கள் பயந்து ஓடின. அதனைக் கண்ணுற்ற பாணன் ஸாத்யகியைவிட்டு ஸ்ரீகிருஷ்ணனை எதிர்த்தான். மேலும் ஒரே காலத்தில் ஐநூறு வில்லுகளை





நாணேற்றி வளைத்து ஒவ்வொன்றிலும் இரண்டு இரண்டு பாணங்களைப் பூட்டினார். அதனைக் கண்ட ஸ்ரீகிருஷ்ணன் அந்த வில்லுகளெல்லாவற்றையும் வெட்டினார். பின்னுமவர் பாணாஸுரனுடைய ஸாரதியையும், ரதத்தில் கட்டிய குதிரைகளையுங் கொன்று, ரதத்தையும் உடைத்து, சங்க வாத்தியத்தை முழக்கினார். அப்பொழுது பாணாஸுரனுடைய மாதாவான கோடராவென்பவள் தலைமயிரை அவிழ்த்துக்கொண்டு வஸ்திரமில்லாமல் புத்திரனை காப்பாற்றவேண்டி ஸ்ரீ கிருஷ்ணனுடைய முன்பாக வந்து நின்றாள். அதனைக் கண்ட பகவான் அவளைப் பாராமல் முகத்தைத் திருப்பிக்கொண்டார். அந்த ஸமயம் பார்த்து பாணாஸுரன் தன்னுடைய பட்டணத்திற்குட் பிரவேசித்தான்.

22–25. பின்பு பரமசிவனுடைய ப்ரமத கணங்கள் பயந்து ஓடியதால் மூன்று தலைகளுள்ளதும், மூன்று கால்களுள்ளதுமான மாஹேச்வர ஜ்வரமானது பரமசிவனால் தூண்டப்பட்டு கிருஷ்ணனுடைய முன்னிலையில் வந்து நின்றது. பின்பு அதனைக் கண்ணுற்ற பகவான் அதன்மீது வைஷ்ணவ ஜ்வரத்தைத் தூண்டினார். இரண்டு ஜ்வரங்களும் யுத்தஞ்செய்தன. வைஷ்ணவ ஜ்வரத்தால் மாஹேச்வரஜ்வரம் அடிக்கப்பட்டு பயந்து ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து அவரைச் சரணமடைந்து பின்வருமாறு ஸ்தோத்திரஞ் செய்யலாயிற்று எப்படியெனில்

26. “அளவற்ற சக்தியுள்ளவராகிய உம்மை நமஸ்கரிக்கிறேன். நீர் ப்ரஹ்மா முதலிய மேலானவர்களுக்கும் அதிபதியாகவிருப்பவர்; எல்லாவற்றையும் சேஷ்டிக்கச்

செய்பவர்; சுத்தராயிருப்பவர்; சைதன்யஸ்வரூபி; இந்த ஜகத்தைப் படைப்பவர்; அதனைக் காப்பாற்றுபவர்; பின்னுமதனை ஸம்ஹரிப்பவர்; மேலும் எது விகாரங்களில்லாததால் ஸாக்ஷாத்தாகச் சொல்ல முடியாததோ, வேதத்தால் அறிந்து கொள்ளக் கூடியதோ. அப்படிப்பட்ட பரப்ரம்ஹம் நீரே.

27. மேலும் காலம், தைவம், கர்மா, ஜீவன், ஸ்வபாவம் த்ரவ்யம், க்ஷேத்திரம், ப்ராணன், அஹங் காரம் இந்திரியங்கள் ஆகிய இவைகளுடைய சேர்க்கையே தேஹம். அதற்கு பீஜமாகவிருப்பதும் கர்மம்; அதிலிருந்து முளைப்பது தேஹம், இப்படிக் கர்மா வினால் தேஹமும், தேஹத்தால் கர்மமென்றும் பரம்பரையாய் வந்துகொண்டிருக்கிறது, இதுவே உம்முடைய மாயை. அப்படிப்பட்ட மாயைக்கு வசப்படாதவரான உம்மை நமஸ்கரிக்கிறேன்.

28. உமக்கு ஸாமான்ய ஜனங்களைப்போல கர்மாதீனமான சரீரமாவது ஜனனமாவது இல்லை. நீர் வீலையாகப் பூமியில் பலவிதமாக அவதரித்து தேவர்களைக் காப்பாற்றுகிறீர். அதற்காக வர்ணாச்ரம தர்மங்களையும், அவைகளை அனுஷ்டிப்பதற்காக ஸாதுக்களையும் ஸம்ரக்ஷிக்கிறீர். அதற்காகவே துஷ்டர்களைச் சிக்ஷிக்கிறீர். இப்பொழுதும் பூமியின் சுமையை நிவர்த்திப்பதற்காகவே அவதரித்திருக்கிறீர்.

29. மிகவும் ஸஹிக்கமுடியாததான உம்முடைய தேஜஸ்ஸான ஜ்வரத்தால் நான் மிகவும் கஷ்டமடைந் தேன். ஜனங்கள் விஷயங்களில் ஆசையால் எது வரையில் உம்முடைய பாதத்தை ஸேவிக்கவில்லையோ,





அதுவரையில் அவர்கள் கஷ்டப்படுவது உசிதம்" என்று சொன்னது (ஆனதால் என்னை காப்பாற்ற வேண்டுமென்று கருத்து).

30. அதனைக்கேட்ட பகவான் மாஹேச்வர ஜ்வரத்தை நோக்கி "ஓ த்ரிசிரஸே! உன்னிடத்தில் நான் சந்தோஷத்தையடைகிறேன். வைஷ்ணவ ஜ்வரத் தினின்று நீ பயப்படவேண்டாம். நம்மிருவர்களுக்கும் நேர்ந்த ஸம்வாதத்தை எவன் நினைக்கிறானோ, அவனை நீ உபத்திரவிக்க வேண்டாம், இதுவே உனக்கு என்னால் செய்யப்படும் ஆக்ஞை. நீ அதனைக் காப்பாற்றிக் கொண்டு பயமில்லாமல் ஸஞ்சரி" என்று அனுக்ரஹித்தார். அதனைக் கேட்ட அந்த ஜ்வரம் ஸ்ரீ கிருஷ்ணனை நமஸ்கரித்துத் தனதிஷ்டப்படி சென்றது.

31–34. பின்பு பாணாஸுரன் ரதத்திலேறிக் கொண்டு ஸ்ரீகிருஷ்ணனிடம் யுத்தத்திற்காக வந்தான். மேலுமவன் ஆயிரங்கைகளிலும் பலவிதமான ஆயுதங் களை வைத்துக்கொண்டு பாணங்களையும், ஆயுதங் களையும் அஸ்திரங்களையும் அடிக்கடி ப்ரயோகித் தான். அதனைக்கண்ட பகவான் கூர்மையான முனையுள்ள சக்கிரத்தால் பாணாஸுரனுடைய கைகளை வெட்டி னார். அது மரத்தின் கிளைகளை வெட்டினாற் போலிருந்தது. இப்படிப் பகவானால் பாணா ஸுரனுடைய கைகள் வெட்டப்பட்டபொழுது பக்தர்களிடத்தில் ப்ரீதியுள்ளவராகிய பரமசிவன் ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து அவரைப் பின்வருமாறு துதிக்கலானார். எப்படியெனில் :–

35–37. நீர் பரப்ரம்ஹம்; மேலான தேஜஸ்;

வேதத்தில் மறைந்துகொண்டிருப்பவர்; சுத்தசித்தர் களான யோகிகள் ஆகாசம் போன்ற உம்மை அறிவார்கள். (நீர் எல்லாவற்றிற்கும் அவிஷயராகை யால் மூடனாகிய இந்த பாணாஸுரன் உம்முடைய ஸ்வரூபத்தையறியாமல் யுத்தஞ்செய்தது ஆச்சர்யமல்ல என்பது கருத்து) மேலும் உமக்கு ஆகாயம் தொப்பி ளாகவும். அக்னி முகமாகவும், ஜலம் வீர்யமாகவும், த்யுலோகம் தலையாகவும், திக்குகள் காதுகளாகவும், பூமி பாதமாகவும் சந்திரன் மனமாகவும், ஸூர்யன் கண்ணாகவும், நான் (பரமசிவன்) அஹங்கார மாகவும், ஸமுத்திரம் வயிறாகவும், இந்திரன் முதலிய லோகபாலர்கள் கைகளாகவும், ஓஷதிகள் ரோமங் களாகவும், மேகங்கள் தலைமயிர்களாகவும், ப்ரஹ்ம தேவர் புத்தியாகவும், ப்ரஜாபதியானவர் ஆண் குறியாகவும், தர்மம் ஹிருதயமாகவும், இருக்கின்றன. ஆனதால் நீர் லோகங்களால் கற்பிக்கப்பட்ட புருஷன் (அத்திப் பழத்திற்குள் வஸிக்கும் புழுக்கள் எப்படி அந்தப்பழத்தை அறிய முடியாதவைகளோ, அப்படியே உம்முடைய சரீரத்திற்குள்ளிருப்பவர்களால் உம்மை யறியமுடியாதென்று தாத்பர்யம்)

*38–41.* ஓ தடையற்ற மஹிமையுள்ளவரே நீர் ஜகத்தின் க்ஷேமத்திற்காகவும், தர்மத்தைக் காப்பாற்று வதற்காகவும் பூமியில் அவதரிக்கிறீர், லோகபாலர் களான நாங்களும் உம்மால்காப்பாற்றப்பட்டு (உம்முடைய அனுக்கிரஹத்தால்), ஏழுலோகங்களையும் ஸம்ரக்ஷிக் கிறோம். மேலும் நீர் ஒருவர்; ஸஜாதீய பேதமற்றவர்) புராண புருஷன்; (மூன்று அவஸ்தையுள்ள புருஷர் களுக்கு ப்ரகிருதியாகவிருப்பவரென்று கருத்து) தமக்கு இரண்டில்லாதவர் (விஜாதீய பேதமற்றவர்) சுத்தர்;





தாமாக ப்ரகாசிக்கும் ஞானஸ்வரூபி; எல்லாவற்றிற்கும் காரணராகவிருப்பவர்; உமக்குக் காரணமொன்று மில்லை; எல்லாவற்றிற்கும் ஈசன்; (சுத்த ப்ரம் ஹத்திற்கு உபாதிகளுடைய ஸம்பந்தம் ஏற்பட்டால் அதிலிருந்து ஜீவர்கள் உண்டாகிறார்கள்.) "அக்னியிலி ருந்து அல்பமான நெருப்புப்பொறிகள் உண்டாவது போல் இந்த ஆத்மாவினிடமிருந்து ஸகல ஜீவாத் மாக்களும் உண்டாகிறார்கள்" (ச்ருதி) அப்படி ஒருவரானாலும் ஸகல விஷயங்களையும் ப்ரகாசிக்கச் செய்வதற்காக ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறாகத் தோன்றுகிறீர். ஆனாலும் நீர் ஸம்ஸாரியல்ல. ஏனென்றால் ஓ மஹிமை பொருந்தியவரே! ஸூர்யன் மேகங்களால் மறைக்கப்பட்டாலும், அந்த மேகங்களையும், மற்ற பதார்த்தங்களையும் எப்படி ப்ரகாசிக்கச் செய்கிறாரோ அப்படி தாமாக ப்ரகாசிப் பவரான நீர் அஹங்காரத்தால் மறைக்கப்பட்டிருந் தாலும், ஸத்வம் முதலிய குணங்களையும், ஜீவர்களையும் ப்ரகாசிக்கச் செய்கிறீர்.

மேலும் ஜனங்கள் உம்முடைய மாயையால் மோஹித்து புத்திரன், களத்திரம், வீடுமுதலியவை களில் ஆசைகொண்டு துக்க ஸமுத்திரத்தை அடைந்து அழுந்தி விடுகிறார்கள். (ஸ்தாவர ஜன்மத்தை அடை கிறார்கள்) சிலஸமயம் மேலே கிளம்புகிறார்கள். (தேவாதி ஜன்மத்தை அடைகின்றார்கள். ஸகல ஜனங்களையும் மோஹிக்கச்செய்யும் மாயை உம்மை ஆச்ரயித்திருப்பதால் உமக்கு ஸம்ஸார ஸம்பந்தம் எப்படி ஏற்படுமென்று கருத்து.)

*42–43.* உம்மால் கொடுக்கப்பட்ட மனித சரீரத்தை

யடைந்தும் எவன் இந்திரியங்களை ஜயிக்காமலும் உம்முடைய பாதங்களையும் ஸேவிக்கவில்லையோ, அவன் ஆத்மவஞ்சகன்; அவனைப்பற்றி துக்கிக்க வேண்டும். பின்னும் ஆத்மாவாகவும், ப்ரியரும், ஈச்வரனுமாகிய உம்மை எந்தமனிதன் ஸேவியாமல் புத்திரன் முதலியவர்களையே போஷித்துக்கொண்டு விஷயத்தில் முழ்கியிருக்கிறானோ, அவன் துக்கிக்கத் தக்கவன். மேலுமவன் அமிருதத்தை விஷமென்று நினைத்து அதைப் பூஜியாமலிட்டவனுக்குச் ஸமமாவான். (பகவானை ஸேவியாதவன் துக்கப்படுவான் என்று சொல்லப்பட்டது)

44–46. நான் (பரமசிவன்) ப்ரஹ்மதேவர், தேவர்கள், சுத்த சித்தர்களான மஹர்ஷிகள், ஆகிய நாங்களெல்லாரும் ஆத்மாவும், ஈச்வரனும், இஷ்டரு மாகிய உம்மை மூன்று கரணங்களாலும் சரணமடை கிறோம். ஓ தேவ! நீர் ஸகல ஜகத்தையும் படைப்பவர்; ஸம்ரக்ஷிப்பவர்; நாசஞ்செய்பவர்; ஸம புத்தியுள்ளவர் மிகவும் சாந்தர்; புத்தியை ப்ரவர்த் திக்கச் செய்பவர்; ஆத்மா எல்லாவற்றிற்கும் அதிபதி; (உம்மைக் காட்டிலும் உபாஸிக்கத்தக்க பிரபு வேறில்லையென்று கருத்து) ஸகலஜகத்திற்கும், ஆத்மாக்களுக்கும் இருப்பிடம்; ஸஜாதீய விஜாதீய பேதமற்றவர்; அப்படிப்பட்ட உம்மை மோக்ஷத்திற்காக ஸேவிக்கிறோம். இந்த பாணன் என்னுடைய அந்தரங்க பக்தன்; நான் இவனுக்கு அபயங்கொடுத்திருக்கிறேன். (காப்பாற்றுவதாக ஒப்புக்கொண்டிருக்கின்றேன்) ஆனதால் பலிச்சக்ரவர்த்தியை அனுக்கிரஹித்தது போல் இவனை அனுக்கிரஹிக்க வேண்டும்'' என்று ப்ரார்த்தித்தார்.





47–50. அதனைக் கேட்ட ஸ்ரீகிருஷ்ணன் பரம சிவனை நோக்கி "ஓ பகவன்! நீர் எதனைச் சொன்னீரோ, அதன்படி உம்முடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறேன். உம்முடைய வார்த்தையை நன்றாக அனுமோதித்தேன். இவன் பலியின் புத்திரனானதால் இவனைக்கொல்வது ஸரியல்ல. "உன்னுடைய வம்சத்தில் பிறந்தவனை நான் கொல்லு கிறதில்லை'' என்று ப்ரஹ்லாதருக்கு வரங்கொடுத் திருக்கிறேன். இவனுடைய கர்வத்தை அடக்குவதற் காகவே இவனுடைய கைகளை வெட்டினேன். பூமிக்குச் சுமையாகவிருந்த ஸைன்யத்தையும் கொன்றேன். இவனுக்கு நான்கு கைகள் வெட்டுப் படாமல் மிகுந்திருக்கின்றன, இவன், கிழத்தனம், சாவு இவைகளில்லாமல் உம்முடைய பார்ஷதர்களில் முக்கியனாகி பயமற்று ஸஞ்சரிக்கட்டும் என்று அனுக்கிரஹித்தார்.

51–54. இப்படி ஸ்ரீ கிருஷ்ணனால் அனுக் கிரஹிக்கப் பெற்ற பாணாஸுரன் அனித்திருத்தனையும், உஷையையும் ரதத்திலேற்றி ஸ்ரீ கிருஷ்ணனிடம் ஸமர்பித்தான். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் அக்ஷௌஹிணி கணக்கான ஸைன்யங்களுடன் கூடியவனும், நல்ல வஸ்திரமுள்ளவனும், அலங்கரிக்கப்பெற்றவனும், உஷையுடன் கூடியவனுமான அனிருத்தனை முன்னிட்டு ருத்ரனிடம் விடைபெற்று தம்முடைய நகரஞ்சென்றார். அந்தப்பட்டணமானது த்வஜங்களா லும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பட்டணத்து ஜனங்களும், மித்திரர்களும், பந்துக்களும், ப்ராஹ்மணர்களும், சங்கம், ஆனகம், துந்துபி; ஆகிய வாத்யங்களுடன் எதிர்சென்று அழைத்தார்கள்.

கிருஷ்ணன் பரமசிவனுடன் யுத்தஞ்செய்த கதையையும் பாணனை ஜயித்த கதையையும் எவன் காலையில் எழுந்திருந்து நினைத்துக்கொள்கிறானோ, அவனுக்கு அபஜயமில்லை (எங்கும் ஜயமுள்ளவனாவானென்று கருத்து).

### நோட்டு

ஸூர்யன் மேகங்களால்: ஸூர்யனுடைய சாயையே மேகம். பார்பவர்களுக்கு சூர்யன் மேகத்தால் மறைக்கப் பட்டிருப்பதாகத் தோற்றுகிறதேயொழிய, உண்மை யில் மறைக்கப்படவில்லை. தன்னுடைய சாயையால் தனக்கு மறைவு ஏற்படுமா? எப்படி மேகங்களால் மறைக்கப்பட்டிருக்கும்பொழுது அந்த மேகங்களும் மற்ற உலகிலுள்ள வஸ்த்துக்களும், எதனால் ப்ரா காசிக்கின்றனவென்று யோசித்தால் அந்த ஸூர்யனா லேயே ப்ரகாசிக்கின்றன. இது போலவே அஹங்கார மென்பது பரமாத்வின் கார்யம். மூடர்கள் அதனால் ஆத்மா மறைக்கப்பட்டிருப்பதாக நினைக்கிறார்கள். உண்மையில் அதனால் ஆத்மா மறைக்கப்படவில்லை. அந்த ஆத்ம ப்ரகாசத்தாலேயே உபாதிகளாகிய குணங்களும், உபாதி ஸம்பந்தமுள்ள ஜீவர்களும் ப்ரகாசிக்கிறார்கள். எல்லாம் ஆத்ம ப்ரகாசத்தால் ப்ரகாசிக்கின்றன. ஆத்மா ஸம்சாரியாக ஆவதற்கு நியாயமில்லை. எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியும் ஸம்ஸார ஸம்பந்தமில்லாத சுத்த ஸ்வரூபியுமான ஆத்மாவிற்கு ஸம்ஸாரமில்லையென்று தாத்பர்யம்.

♣ ♣ ♣ ♣



## அத்தியாயம்–64

### நிருகருடைய கதை

ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! ஸாம்பன், ப்ரத்யும் னன், சாருபாநு, கதன் முதலிய யதுகுமாரர்கள் விளையாடுவதற்காக தோட்டத்திற்குச் சென்றார்கள். அவ்விடத்தில் வெகுநேரம் விளையாடிக்களைப் படைந்து தாஹமுள்ளவர்களாகி ஜலம் எங்கே இருக்கிறது என்று தேடினார்கள். அப்பொழுது ஒரு கிணற்றைப்பார்க்க அது ஜலமில்லாததாக இருந்தது மின்றி அதில் அற்புதமான ஓணான் இருக்கக் கண்டார்கள். அதுமலைபோல பருத்த சரீரமுள்ளதாக விருந்ததனால் அதனைப்பார்த்து மிகவும் ஆச்சர்ய மடைந்தார்கள். மேலுமவர்கள் மிக்க தயையுடன் கயிறுகளாலும், தோல்வார்களாலும் அதனைத் தூக்க முயன்றும், அவர்களால் முடியவில்லை. அதனால் அவர்கள் ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் தெரிவித்தார்கள்., தாமரைக்கண்ணனும், ஸகலஜகத்திற்கும் அந்தர் யாமியும், பகவானுமாகிய ஸ்ரீகிருஷ்ணன் அதனைக் கேட்டு அவ்விடம் சென்று அந்த ஓணானைப்பார்த்து இடக்கையால் விளையாட்டாக உயரத் தூக்கினார். உத்தம ஸ்லோகராகிய ஸ்ரீகிருஷ்ணனுடைய திவ்யமான கைபட்ட மாத்திரத்தில் அது, ஓணான் ஸ்வரூபத்தை விட்டு தேவ ஸ்வரூபத்தையடைந்தது. மேலும் அந்த தேவன் ஸ்வர்ணத்தின் நிறம்போன்ற நிறமுள்ளவனும், அத்புதமான வஸ்திரம், மாலை இவைகளால் அலங் கரிக்கப்பட்டவனாகவுமிருந்தான். அவனைக் கண்ணுற்ற ஸ்ரீகிருஷ்ணன் அவனுடைய உண்மையை யறிந்தவரா னாலும் அவனால் செய்யப்பட்ட தானத்தின் மஹிமையை

ஜனங்களுக்குத் தெரிவிப்பதற்காக அவனைநோக்கி “ஓ மிகுந்த அதிருஷ்டமுள்ளவனே! நீ யார்? உத்தமமான ஸ்வரூபமுள்ளவனாயிருக்கிறாய். உன்னை சிறந்த தேவனென்று நினைக்கிறேன் உனக்கு இம்மாதிரியான தாழ்ந்த ஜன்மம் உண்டாவதற்கு நியாயமில்லையே. எந்த பாபத்தால் இந்த ஜன்மத்தையடைந்தாய்? அதனைத் தெரிந்து கொள்ள நான் விரும்புவதால் எனக்கு சொல்லக்கூடுமானால் சொல்லும்,” என்று கேட்டார்.

9–30. ஆனந்தஸ்வரூபியான ஸ்ரீ கிருஷ்ணனால் கேட்கப்பட்டு அந்த தேவன் ஸூர்யன்போலப் பிரகாசிக்கும் கிரீடம் படும்படி பகவானுடைய பாதங்களில் நமஸ்கரித்து கிருஷ்ணனை நோக்கி “ஓ பிரபுவே! நான் இக்ஷ்வாகுவின் புத்திரனாகிய நிருகனென்ற அரசன். கொடையாளிகளுடைய ப்ரஸ்தாவத்தில் என்னை யொருவனாகச் சொல்வார்கள். என்னுடைய பெயரை நீரும் கேட்டிருக்கலாம். ஓ நாத! ஸகல ப்ராணிகளுடைய புத்திக்கு ஸாக்ஷியாக விருக்கும் உமக்கு எதுதான் தெரியாது? ஆனாலும் உம்முடைய ஆக்ஞையால் சொல்லுகிறேன். பூமியில் எவ்வளவு மணல்கள் இருக்கின்றனவோ, ஆகாயத்தில் எவ்வளவு நக்ஷத்திரங்களிருக்கின்றனவோ, மழை தாரைகள் எவ்வளவோ அவ்வளவு பசுக்களை நான் தானம் பண்ணியிருக்கிறேன். அவ்வளவு பசுக்களும் நல்ல ஸ்வபாவமுள்ளவைகள்; அதிக பாலைக் கொடுக்க கூடியவைகள்; அழகுள்ளவைகள்? கபிலைகள்; (காராம்பசுக்கள்) நியாயமாக ஸம்பாதிக்கப்பட்டவைகள்; கன்றுள்ளவைகள்? கொம்புள்ளவைகள்; வெள்ளியாலலங்கரிக்கப்பட்ட குளம்புள்ளவைகள்; வெண்பட்டு,





புஷ்பமாலை, ஆபரணம் இவைகளாலலங்கரிக்கப்பட்டவைகள்; இப்படி அலங்கிருதமான பால் பசுக்களை நற்குணங்கள், ஸ்வபாவம் இவைகள் பொருந்தியவர்களும், தரித்திரர்களும், வ்ரதங்களை அனுஷ்டித்தவர்களும், தபஸ்விகளும், வேதத்தைப் பிறருக்குச் சொல்லிவைப்பவர்களும், யௌவன வயதுள்ளவர்களுமான ப்ராஹ்மணர்களை வஸ்திரம் முதலியவைகளால் பூஜித்து அவர்களுக்கு தானஞ் செய்தேன். மேலும் இப்படி பசு, பூமி, ஹிரண்ணியம், வீடு, குதிரை, யானை, வேலைக்காரிகளுடன் கூடிய கன்னிகைகள், ’எள்ளு, வெள்ளி, படுக்கை, வஸ்திரம், ரத்னம், ரதங்கள் ஆகிய இவைகளை தானஞ் செய்தேன். பின்னும் யாகங்கள் செய்யப்பட்டன; கிணறு, குளம் வெட்டுவிப்பது முதலிய பூர்த்த தர்மங்களையும், செய்தேன்.

இப்படியிருக்கையில் ஒரு ப்ராஹ்மணனுடைய பசுவானது காணாமற்போய் என்னுடைய பசுக் கூட்டத்தில் கலந்தது. அதனை நான் அறியாமல் ப்ராஹ்மணனுக்கு அதனையும் கூட்டத்தோடு தானஞ் செய்து விட்டேன். தானம் பெற்றுக்கொண்ட ப்ராஹ்மணன் அவைகளை ஓட்டிக்கொண்டு போகும்பொழுது அந்தப் பசுவின் யஜமானனாகிய ப்ராஹ்மணன் இது என்னுடைய பசு என்று அதனை கூட்டத்திலிருந்து பிரித்து ஓட்ட யத்தனித்தார். அப்பொழுது தானம் பெற்றவர் “இந்த பசுவை எனக்கு நிருக மஹாராஜன் கொடுத்தார் என்றார். இப்படி அவ்விருவர்களாலும் விவாதப்பட்டு என்னிடம் வந்து தானம் வாங்கியவர் உம்மால் கொடுக்கப்பட்ட இந்தப் பசுவை, இந்த ப்ராஹ்மணன் கொண்டுபோகிறாரென்றும், மற்றொருவர்

என்னுடைய பசுவை இவர் திருடிக்கொண்டார் என்றும் பேசிக்கொண்டார்கள். அதனை கேட்டு நான் உண்மை தெரியாமல் மோஹித்தேன். அப்பொழுது அந்த இரண்டு ப்ராஹ்மணர்களையும், மிகவும் கெஞ்சிக்கேட்டுக் கொண்டேன். நான் இப்பொழுது உண்மையை யறியாதவனாயிருப்பதால் எப்படிச் செய்வது தர்ம மென்பது தெரியவில்லை. ஆனதால் மிகவும் கஷ்டப்படுகிறேன். இந்த ஒரு பசுவிற்குப் பதிலாக லக்ஷம் பசுவை கொடுக்கிறேன். நீங்கள் ஸமாதானத்தையடைந்து என்னை யனுக்கிரஹிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டேன்.

அதனைக் கேட்ட அந்துப்பசுவின் யஜமானனாகிய ப்ராஹ்மணன், இந்துப் பசுவைத் தவிர வேறு எனக்கு ஒன்றும் வேண்டாம் என்று சொல்லிவிட்டுச் சென்றார். மற்றொருவர் பத்து லக்ஷம் பசுக்கொடுத்தாலும் எனக்கு வேண்டாம் என்று சொல்லி விட்டுப் போனார். இந்த ஸமயத்தில் எனக்கு மரணகாலம் ஸமீபித்ததால் யமதூதர்கள் என்னை யமலோகமழைத்து போனார் கள். அவ்விடத்தில் யமன் என்னை நோக்கி "ஓ அரசனே! நீர் புண்யத்தின் பயனை முதலில் அனுபவிக்கிறீரா? அல்லது பாபத்தின் பயனை யனுபவிக்கிறீரா? நீர் செய்த தானத்தின் பயன் முடிவற்றது என்று கேட்டார். அதற்கு நான் அவரை நோக்கி ஓ தேவ! நான் பாபத்தின் பயனை முதலில் அனுபவிக்கிறேன்" என்று சொன்னேன். அதனைக் கேட்டு யமன் விழு என்று சொன்னார். பின்பு ஓணான் சரீரத்துடன் பூமியில் விழுந்தேன். ப்ராஹ்மண பக்தியுள்ளவனும், தாதாவும், உம்முடைய பக்தனும், உம்முடைய தர்சனத்தை எதிர்பார்த்தவனுமாகிய





எனக்கு முந்திய ஞாபகம் இப்பொழுதுமிருக்கிறது. ஆனதால் ஓ ப்ரபுவே! யோகிகள் உபநிஷத்தாகிய கண்ணால் ஹிருதயத்தில் உம்மை த்யானஞ் செய்கிறார்கள். நீர் இந்திரியங்களுக்குப் புலப்படாதவர் நீர் ஓணான் ஜன்மத்தையடைந்து கஷ்டப்படும் எனக்கு தர்சனங் கொடுத்தது ஆச்சரியமேயாம். உம்முடைய தர்சனம் ஸம்ஸாரத்தை நிவர்த்திக்ககூடியது.

ஓ தேவர்களுக்குந்தேவனே! ஜகத்திற்கு அதிபதியே! கோவிந்த! புருஷோத்தம! நாராயண! இந்திரியங்களுக்கு அதிபதியே! புண்யஸ்லோக! (நல்வினையை கொடுப்பவர்) அழிவில்லாதவரே! அண்டினவர்களை காப்பாற்றுகிற வரே! தேவலோகஞ் செல்லுகிற எனக்கு விடை கொடும். நான் எவ்விடத்திலிருந்தாலும் என்னுடைய மனமானது உம்முடைய பாதத்தை த்யானஞ் செய்யட்டும். எல்லாவற்றையும் படைத்தவரும், விகாரமற்றவரும், மாயையென்ற சக்தியுள்ளவரும், எல்லாவற்றிற்கும் ஆச்ரயரும், ஆனந்தரூபியும், யக்ஞம் முதலிய கர்மங்களுக்குப் பயனைக் கொடுப்பவருமான உம்மை நமஸ்கரிக்கிறேன். என்று சொல்லி அவருக்கு ப்ரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து அவரிடம் விடைபெற்று உயர்ந்த விமானத்தின் மேலேறி எல்லா ஜனங்களும் பார்த்திருக்கும்பொழுது தேவலோகஞ் சென்றார்.

*31–44.* அப்பொழுது ப்ராஹ்மணர்களை தைவமாகக் கொண்டவரும், தர்மஸ்வபாவமுள்ளவரும், தேவகியின் புத்திரருமான கிருஷ்ணன் தர்மத்தின் ரஹஸ்யத்தை அரசர்களுக்குத் தெரிவிப்பதற்காக சிரித்துக்கொண்டு தம்முடைய பரிஜனத்தை நோக்கி "அக்னிக்குச் சமமான தேஜஸ்வியானாலும், ப்ராஹ்மணனுடைய

ஸ்வத்தில் அல்ப பாகத்தை அபஹரித்தாலும் அது ஜரிக்காது; அப்படியிருக்க தன்னை ஈச்வரனென்று நினைத்து அஹங்காரமடைந்திருக்கும் அரசர்கள் ப்ராஹ்மண ஸ்வத்தை அபஹரித்தால் அதனை ஜரித்துக்கொள்ளமுடியுமா? நான் ஹாலாஹலத்தை விஷமென்று நினைக்கவில்லை. அதனை, மணி, மந்திரம், ஔஷதம் இவைகளால் அடக்கலாம். ப்ராஹ்மணனுடைய ஸ்வத்தே விஷமென்று சொல்லப் பட்டிருக்கிறது. அதனை யொருவராலும் நிவர்த்திக்க முடியாது. விஷம் புஜித்தவனை மாத்திரம் கொல்லும்; அக்னியை ஜலத்தால் அணைத்துவிடலாம்; ப்ராஹ் மணனுடைய ஸ்வத்தாகிய அரணியிலிருந்து உண்டான அக்னியானது குலம் முழுவதையும் நாசஞ்செய்யும்.

ப்ராஹ்மணனுடைய ஸ்வத்தை அவருடைய அனுமதியில்லாமல் அபஹரித்தால் அது மூன்று தலைமுறையை நாசஞ்செய்யும். பலிஷ்டர்களுடைய ஆச்ரயத்தால் பலாத்காரமாக அபஹரித்து அனுபவித்தால் அவனுக்கு முந்திப்பத்து தலைமுறைகளையும், பிந்தி பத்துத்தலை முறைகளையும் நாசமாக்கிவிடும். எந்த அரசர்கள் பிராஹ்மணனுடைய ஸ்வத்தை விரும்புகிறார்களோ, அவர்கள் கெடுதியை இச்சிப்பவர்களாகிறார்கள். அதனால் அவர்கள் மூடர்கள். தனக்குவரும் கெடுதியை அறியாதவர்கள்; அரசர்களானாலும், அரசர்களுக்குச் ஸமானர்களானாலும், எவர்கள் ப்ராஹ்மணனுடைய ஸ்வத்தை அபஹரிக்கிறார்களோ, அவர்கள் ஸ்வத்தைப் பறி கொடுத்த குடும்பிகளான ப்ராஹ்மணர்கள் அழும் போது, கண்ணீர் ஜலத் துளிகள் எவ்வளவு பூமியில் விழுமோ, அவ்வளவு





காலம் கும்பீபாகமென்ற நரகத்தை அடைவார்கள். பின்னுமந்த ப்ராஹ்மணர்கள் கோபத்தால் மண்ணை வாரியிறைத்தால் அதில் எவ்வளவு தூளிகளிருக்குமோ, அவ்வளவுகாலம் கும்பீபாகத்தில் வஸிப்பார்கள். ப்ராஹ்மணனுக்கு ஒரு ஜீவனத்தைத் தானே கொடுத்து அதனை பிந்தி அபஹரித்தாலும், பிறரால் கொடுக்கப்பட்ட ஜீவனத்தை அபஹரித்தாலும், அவன் அறுபதினாயிரம் வர்ஷங்கள் அமேத்யத்தில் புழுவாக ஜனிப்பான். ஆனதால் ப்ரம்ஹ ஸ்வத்தானது எனக்குவேண்டாம் (இதில் இச்சையுண்டாக வேண்டாமென்று கருத்து)

ப்ராஹ்மண ஸ்வத்தில் ஆசைவைத்தால் அந்த அரசர்களுக்கு ஆயுஸ்குறையும். சத்ருக்களால் ஜயிக்கப் பட்டு ராஜ்யத்தை இழந்து பயத்தை அடைவார்கள். ஓ என்னைச் சார்ந்தவர்களே! ப்ராஹ்மணன் குற்றஞ் செய்தாலும் அவர்களுக்கு நீங்கள் த்ரோஹஞ்செய்யக் கூடாது. ப்ராஹ்மணன் உங்களை அடித்தாலும், பலதரம் வைதாலும் அவனையெப்பொழுதும் நமஸ் கரியுங்கள். நான் ஒவ்வொருகாலத்திலும் மிக்க ஜாக்கிரதையாக ப்ராஹ்மணர்களை நமஸ்கரிப்பது போல் நீங்களும் ப்ராஹ்மணர்களை நமஸ்கரியுங்கள். அப்படியில்லாவிடில் சிக்ஷிக்கப்படுவீர்கள். இந்த நிருக மஹாராஜன் தமது பசுக்களில் சேர்ந்திருந்த ப்ராஹ்மணனுடைய பசுவைத்தெரியாமல் தானஞ் செய்ததால் ஓணான் ஜன்மத்தை அடைந்து கஷ்டப்பட்டது போல ப்ராஹ்மணனுடைய ஸ்வத்தை அபஹரிப்பவன் துக்கப்படுவான்" என்று ஸகல லோகத்தையும் பரிசுத்தப்படுத்துகிறவரான ஸ்ரீ கிருஷ்ணபகவான் த்வாரகாவாஸிகளான ஜனங்களுக்கு

உத்திரவு செய்து தம்முடைய அரண்மனைக்குட் பிரவேசித்தார்.





## அத்தியாயம்–65

### பலராமன் யமுனாநதியை இழுத்தது

1–8. ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! பலராமன் ஒருகால் ரதத்தில் ஏறிக்கொண்டு பந்துக்களைப் பார்ப்பதற்காக நந்தகோகுலஞ் சென்றார். அவ்விடத்தில் சில கோபர்களும் கோபிகைகளும் பலராமனை ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள். பலராமன் தாய் தந்தைகளை நமஸ்கரித்தார். அவர்கள் "ஓ ஜகதீசனாகிய பல! தம்பியான ஸ்ரீ கிருஷ்ணனுடன் வெகுகாலம் எங்களைக்காப்பாற்று என்று சொல்லி ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி அதனால் பலராமனை நனைத்தார்கள். மேலும் பலராமன் பெரியோர்களான கோபர்களை நமஸ்கரித்தார். இப்படி வயதிற்கும், பாந்தவ்யத்திற்கும் தக்கபடி பலராமன் கோபர்களை நமஸ்கரித்தும், கோபர்களால் நமஸ்கரிக்கப்பட்டு மிருந்தார். சிலர் பலராமனை கையைப்பிடித்தும், சிரித்தும், உபசரித்தும் க்ஷேமம் விசாரித்தார்கள் பலராமனும் அவர்களை க்ஷேமம் விசாரித்தார்.

மேலும் நந்நகோபர்கள் தாமரைமலர் போன்ற கண்களுள்ளவராகிய ஸ்ரீ கிருஷ்ணனையே மனத்தில் நினைத்துக்கொண்டு ஸகல ஆசைகளையும் ஒழித்தவர் களாகி பலராமனை நோக்கி "ஓ ராம! நீங்கள் உங்களுடைய புத்திரர்கள், களத்திரம் ஆகிய இவர் களுடன் க்ஷேமமாக இருக்கிறீர்களா ? எங்களுடைய ஞாபகமிருக்கிறதா ? நம்முடைய பந்துகளெல்லோரும் க்ஷேமமாக விருக்கிறார்களா ? பாபியாகிய கம்ஸன் தைவச் செயலாக அடிக்கப்பட்டான். பந்துக்கள்

தைவச்செயலால் க்ஷேமத்தை அடைந்தார்கள். சத்ருக்களை ஜயித்தும், கொன்றும் தைவாதீனமாக த்வாரகா நகரத்தை அடைந்தீர்கள்" என்று ப்ரியத்தால் தழுதழுத்த (கத்கத) கண்டஸ்வரத்துடன் கேட்டார்கள்.

9–15. கோபிகைகள் ராமனைத் தர்சித்து மிக்க பிரியத்துடன் அவருடைய ஸமீபஞ்சென்று "பட்டணத்து ஸ்திரீகளின் மனத்தை அபஹரிப்பவரான ஸ்ரீகிருஷ்ணன் ஸுகமாக வஸிக்கிராறா? நீண்ட கைகளுள்ளவரான பகவான் முந்தி நாங்கள் அவரை ஸேவித்துக் கொண்டிருந்ததை நினைத்துக் கொள்வதுண்டா? மேலும் தாய், தந்தை, ஸஹோதரர்கள், பர்த்தாக்கள், புத்திரர்கள், ஸஹோதரிகள் ஆகிய விடமுடியாத எல்லா பந்துக்களையும் விட்டு எந்த ஸ்ரீகிருஷ்ணனை ஆச்சரயித்திருந்தோமோ, அப்படிப்பட்ட நம்முடைய ஞாபகமிருக்கிறதா? அவ்வளவு ப்ரீதியுள்ளவர்களான எங்களைவிட்டு விஸ்வாஸத்தை மறந்து மதுரா நகரஞ் சென்றார். அப்படிப்பட்ட கிருஷ்ணனுடைய வார்த்தையைப் பட்டணத்து ஸ்திரீகள் எப்படி நம்புகிறார்கள்? கிருஷ்ணன் ஸஞ்சல சித்தமுள்ளவர்; செய்த உபகாரத்தை மறப்பவர்; ஆனாலும் ஸமயத்திற்குத் தக்கபடி அழகாக பேசக் கூடிய கிருஷ்ணனுடைய வார்த்தையை எவர்கள்தான் நம்பமாட்டார்கள்? அதனால்தான் அழகான கிருஷ்ணனுடைய புன்சிரிப்புள்ள பார்வையால் மன்மததாபத்தை அடைந்து மோஹித்து அவருடைய வார்த்தையை பட்டணத்து ஸ்திரீகள் நம்புகிறார்கள். (சில ஸ்திரீகள் சொல்லுகிறார்கள்) ஓ கோபிகைகளே! கிருஷ்ணனுடைய கதையை விட்டு மற்ற கதையை சொல்லுங்கள். நம்மைவிட்டுப் பிரிந்த அவருக்கும்





காலம் போகிறது (ஸுகமாக); அவரைவிட்டுப் பிரிந்த நமக்கும் காலஞ் செல்லுகிறது (துக்கமாக); ஆகையால் அவருடைய கதையைச் சொல்வதால் நமக்கென்ன பயன்? என்று சொல்லி பகவானுடைய சிரிப்பு, வார்த்தை அழகான பார்வை, நடை, அன்புடன் ஆலிங்கனஞ்செய்து கொள்வது ஆகிய இவைகளை நினைத்து அழுதார்கள்.

16–26. அதனைக்கேட்ட பலராமன் பலவகையாக ஸமாதானஞ் சொல்ல ஸமர்த்தரானதால் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லியனுப்பிய வார்த்தைகளைச் சொல்லி அவர்களை ஸமாதானஞ்செய்தார் இப்படி பலராமன் சைத்ரம், வைசாகம் ஆகிய இரண்டு மாஸங்கள் கோகுலத்தில் வஸித்தார். பலராமன் ராத்திரிகளில் யமுனாநதியின் கரையிலுள்ள வனங்களில் ஸ்திரீகளுடன் கோபிகைகளுக்கு ஸந்தோஷத்தையுண்டு பண்ணிக் கொண்டு விளையாடினார் அப்பொழுது பூர்ணசந்திரன் பிரகாசித்தான் குமுதம் முதலிய புஷ்பங்கள் வாஸனையுடன் காற்றுவீசியது. அப்பொழுது வாருணீயானவள் (அமிருதத்துடன் ஸமுத்திரத்திலுண்டான மத்யம்) வருணனால் தூண்டப்பட்டு மரத்தின் பொந்திலிருந்து பெருகி அந்த வனத்தை வாஸிக்கசெய்தது. அந்த மதுவின் வாஸனையை முகர்ந்து பலராமன் ஸ்திரீகளுடன் அவ்விடம் வந்து அதனைப் பானஞ்செய்தார். மேலுமவர் தாம் கானஞ் செய்துகொண்டும், ஸ்திரீகளால் கானஞ் செய்யப்பட்டும் ஸ்திரீகளுடைய நடுவில் பிரகாசித்தார். அது பெண் யானைகளின் நடுவில் ஐராவதம் விளங்கினாற் போலிருந்தது, அப்பொழுது ஆகாயத்தில் துந்துபி வாத்யங்கள் முழக்கப்பட்டன; புஷ்பமாரி பெய்தது;

கந்தர்வர்களும், மஹர்ஷிகளும் பலராமனுடைய சரிதத்தை துதித்தார்கள். இப்படி பலராமன் ஸ்திரீகளால் துதிக்கப்பெற்றும் மதித்தவராகவும், மதத்தால் கலங்கிய கண்களுள்ளவராகவும், புஷ்பமாலையைத் தரித்தவராகவும், வைஜயந்தியென்ற மாலையை தரித்தவராகவுமிருந்தார். அவருடைய சிரிப்புள்ள முகமானது வியர்வைத்துளிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அப்படிப்பட்ட பலராமன் ஜலக்ரீடை செய்வதற்காக யமுனாநதியியை அழைத்தார். அதனைக் கேட்ட யமுனாநதி "இவர் மதங்கொண்டவர்" என்று இவருடைய வார்த்தையை லக்ஷ்யஞ் செய்யாமல் வரவில்லை. அதனைக்கண்ட பலராமன் யமுனையை நோக்கி "அடிபாபியே! என்னால் அழைக்கப்பட்டும் நீ வராததனால், இஷ்டப்படி ஸஞ்சரிப்பவளான உன்னை கலப்பையால் பலவகையாகச் செய்கிறேன் (பேதிக்கிறேன்) என்று சொல்லி கலப்பையின் நுனியால் கோபத்துடன் இழுத்தார்.

27–29. அதனைக்கேட்ட யமுனாநதி பயந்து பலராமனுடைய பாதங்களில் நமஸ்கரித்து "ஓ ராம! ராம! மிகுந்த பராக்கிரமமுள்ளவரே! உம்முடைய பராக்கிரமத்தை நானறியேன். நீர் ஆதிசேஷனாக விருந்து பூமியைத் தாங்குகிறீர், ஓ ஸகல ஜகத் ஸ்வரூபியாகவிருப்பவரே! உம்முடைய உண்மையான ஸ்வரூபத்தையறியாதவளான என்னை விட்டுவிட வேண்டும். நீர் பக்தர்களிடம் ப்ரீதியுள்ளவர்; உம்மை நான் சரணமடைகிறேன்" என்று கேட்டுக் கொண்டாள்.

30–34. அதனைக் கேட்ட பலராமன் யமுனையை







விட்டுவிட்டு ஸ்திரீகளுடன் ஜலத்தில் ப்ரவேசித்தார். அது பெண் யானைகளுடன் யூதபதியான ஆண் யானை ஜலத்தில் இறங்கினாற்போலிருந்தது. பின்பு ஜலக்ரீடை செய்து கரையில் வந்தார். அப்பொழுது லக்ஷ்மீதேவி கருமை நிறமுள்ள வஸ்திரங்களையும், விலையுயர்ந்த ஆபரணங்களையும் எப்பொழுதும் வாடாத மாலையையும் கொடுத்தாள். பலராமன் அவைகளை பெற்றுக்கொண்டு கருத்த நிறமுள்ள வஸ்திரங்களை யுடுத்திக்கொண்டும், சந்தனம் முதலியவைகளைப் பூசிக்கொண்டும் அலங்கிருதராக ஐராவதம் போல் ப்ரகாசித்தார். இப்பொழுது கூட யமுனையில் கலப்பையால் இழுக்கப்பட்டதின் அடையாளமிருக்கிறது. அதனால் பலராமனுடைய பராக்கிமத்தின் ஞாபகமுண்டாகிறது. இப்படி கோபிகைகளுடைய அன்புபொருந்திய விளையாட்டுகளில் நோக்கத்துடன் பலராமன் கிரீடித்து அந்த எல்லா ராத்திரிகளையும் ஒரு ராத்திரி போலக் கழித்து வந்தார்.





# அத்தியாயம் –66

*பகவான் பௌண்ட்ரகனைக் கொன்றது*

பலராமன் கோகுலத்தில் வஸிக்கும் பொழுது கருசதேசத்து அரசனாகிய பௌண்டரகனென்பவன் தன்னையே வாஸுதேவனென்று நினைத்துக் கொண்டான். மேலும் மூடர்கள் அவனை "நீர்தான் வாஸுதேவனாக அவதரித்திருக்கிறீர், நீர் பகவதம்சம்" என்று ஸ்தோத்திரஞ்செய்தார்கள். அதனால் அவன் தன்னை வாஸுதேவன் என்று நினைத்து அஹங்காரத்தை அடைந்தான். இப்படி மூடர்களால் அரசனாகச் செய்யப்பட்ட அந்த பௌண்ட்ரகன் அறியமுடியாத மார்க்கமுள்ள ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஒரு தூதனை அனுப்பினான். அந்த தூதன் த்வாரகைக்கு வந்து ஸபையிலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி "பிராணிகளைக் காப்பாற்றுவதற்காக பூமியில் அவதரித்திருக்கும் வாஸுதேவன் நானொருவன்தான்; வேறொருவருமில்லை. நீ பொய்யான பெயரை விட்டுவிடு; என்னுடைய அடையாளங்களை நீ பயமில்லாமல் வைத்துக் கொண்டிருக்கிறாய்; அவைகளை நீ விட்டு என்னை சரணமடைய வேண்டும். இல்லாவிடில் என்னுடன் யுத்தஞ்செய்யவேண்டும்" என்று பௌண்ட்ரகன் சொன்னதாக சொன்னான்.

7–9. அல்ப புத்தியுள்ளவனாகிய பௌண்ட்ரகனுடைய பேத்தலைக்கேட்டு உக்கிரஸேனர் முதலிய ஸபையிலிருந்தவர்கள் மிகவும் சிரித்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தூதனை நோக்கி "ஓ மூட! எந்த அடையாளங்களை வைத்துக்கொண்டு





பேத்துகிறாயோ, அவைகளை விட்டுவிடும்படி செய்கிறேன். மேலும் நீ எப்பொழுதும் வாயை மூடிக்கொண்டு கழுகு முதலிய பறவைகளால் சூழப்பட்டுப் பூமியில் படுத்துத் தூங்குவாயோ (மரணத்தை அடைவாய்) அப்பொழுது நாய்களுக்கு சரணமாவாய்" என்று சொல்லு, என்றார்.

10–24. அதனைக்கேட்ட தூதன் பௌண்ட்ரகனிடம் வந்து கிருஷ்ணனுடைய வார்த்தையைத் தெரிவித்தான் ஸ்ரீ கிருஷ்ணனும் ரதத்தின் மீதேறி காசிதேசஞ் சென்றார் (காசிராஜன் பௌண்ட்ரகனுக்கு மித்திரனானதால், அவ்விடத்தில் அவனுமிருந்தானென்று கருத்து) ஸ்ரீ கிருஷ்ணனுடைய, முயற்சியைக் கண்ட பௌண்ட்ரகன் இரண்டு அக்ஷௌஹிணி ஸைன்யங்களுடன் வெளியில் வந்தான். அவனுடைய மித்திரனாகிய காசிராஜனும் அவனுடைய பின்புறத்தைக் காப்பாற்றிக்கொண்டு மூன்று அக்ஷௌஹிணி ஸைன்யங்களும் அவன்பின் சென்றார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் பௌண்ட்ரகனைக் கண்டார். அவன் சங்கம், சக்கிரம், கத்தி, கதாயுதம், சார்ங்கம், ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம், வனமாலை, பீதாம்பரம் கருடத்வஜம், விலையற்ற ரத்னா பரணங்கள், மகரகுண்டலங்கள் ஆகிய இவைகளை தரித்திருந்தான். இப்படி நடன் கிரித்திரிமமான வேடந்தரித்தாற் போல், கிரித்திரிம வேடம் பூண்டவனாகிய பௌண்டரகனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் மிகவும் சிரித்தார். அப்பொழுது சூலம், கதாயுதம், பரிகம், ப்ராஸம், சக்தி,யஷ்டி, தோமரம், கத்தி, பட்டஸம், பாணம் ஆகிய இவைகளால் சத்ருக்கள் ஸ்ரீகிருஷ்ணனை அடித்தார்கள். அப்பொழுது ப்ரளய காலத்தில் அக்னி

ப்ரஜைகளை யெரித்தாற்போல் ஸ்ரீ கிருஷ்ணன் கதாயுதம், கத்தி சக்கிரம், பாணம் இவைகளால் ரதம், யானை, குதிரை, காலாட்படை ஆகிய இவைகளுள்ள சத்ரு ஸைன்யத்தை அடித்தார். குதிரைகளும், யானைகளும், ரதங்களும், கோபுர கழுதைகளும், ஒட்டகங்களும் சக்கிரத்தால் வெட்டப்பட்டு விழுந்தன. தைர்யசாலிகள் அந்த யுத்தஸ்தலத்தைப் பார்த்து ஸந்தோஷிக்கக்கூடியதாகவிருந்தது; மேலும் அந்த யுத்த களமானது ப்ரளயகாலத்திய ருத்திரன் விளையாடும் ஸ்தலம் போலிருந்தது.

அப்பொழுது பகவான் பௌண்ட்ரகனை நோக்கி "ஓ பௌண்ட்ரகனே! தூதமுகமாக எதனைச் சொல்லி யனுப்பினாயோ, அந்த அஸ்திரங்களை ப்ரயோகிக்கிறேன்; என்னுடைய அடையாளங்களை நீ தரித்ததனால் அவைகளை விட்டுவிடும்படி செய்கிறேன்; யுத்தஞ்செய்ய எனக்கு விருப்பமில்லா விட்டால் உன்னைச் சரணமடைகிறேன்" என்று சொல்லி கூர்மையான பாணங்களை ப்ரயோகித்து பௌண்ட்ரகனுடைய ரதத்தை உடைத்து மஹேந்திரன் வஜ்ரத்தால் மலையின் சிகரத்தை யுடைத்தாற்போல சக்கிராயுதத்தால் பௌண்ட்ரகனுடைய தலையை வெட்டினார். பின்பு காசிராஜனுடைய தலையை பாணங்களால் வெட்டிப் பூமியில் தள்ளினார். அது தாமரை மொட்டுப்போல் பூமியில் விழுந்தது. இப்படிப் பகவான் பௌண்ட்ரகனையும், காசி ராஜனையும் கொன்று த்வாரகைக்குச் சென்றார். ஸித்தர்கள் அவருடைய கதைகளைக்கானஞ் செய்தார்கள்; மேலும் பௌண்ட்ரகன் எப்பொழுதும் கிருஷ்ணனை போல் வேடந்தரித்து பகவானையே த்யானஞ் செய்துக்





கொண்டிருந்ததனால் ஸகல பந்தங்களும் ஒழித்து பகவத்ஸ்வரூபியாக ஆனான்.

25–30. காசிராஜனுடைய தலையானது வெட்டப் பட்டு அரசனுடைய அரண்மனை வாசலில் விழுந்தது; அதனைக்கண்ட ஜனங்கள் 'இது யாருடைய முகம்' என்று ஸம்சயித்தார்கள், பின்பு அரசனுடைய தலையென்று அறிந்து அந்தப்புர ஸ்திரீகளும், புத்திரர்களும், பந்துகளும், பட்டணத்து ஜனங்களும் "ஓ ராஜன்! நாத! உம்மை விட்டுப் பிரிந்த நாங்கள் அடிக்கப்பட்டோம்" என்று அழுதார்கள். அந்தக் காசி ராஜனுடைய புத்திரனாகிய ஸுதக்ஷிணனென் பவன், பிதாவிற்கு உத்திரக்ரியைகளை செய்து முடித்து 'என்பிதாவை கொன்றவனைக் கொன்று பிதாவை ஆராதிக்கிறேன்" என்று நிச்சயித்துக் கொண்டு தன்னுடைய உபாத்தியாயருடைய அனுமதியின் மீது பரமசிவனை மிக்க ஸாவதானனாகப் பூஜித்தான். அதனால் பகவான் ஸந்தோஷித்து ஸுதக்ஷிணனை நோக்கி "இஷ்டமான வரத்தைக் கேள், கொடுக்கிறேன்" என்று சொன்னார். அதனைக்கேட்ட ஸுதக்ஷிணன் "என்னுடைய பிதாவைக் கொன்றவரைக் கொல்லும் உபாயத்தைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். அதனைக் கேட்டப் பரமசிவன் "ஓ ஸுதக்ஷிண! ரித்விக்குகள் போன்ற அக்னியை அபிசாரவிதியால் பூஜி. அந்த அக்னியை ப்ராஹ்மண பக்தியில்லாதவனிடத்தில் ப்ரயோகித்தால் அக்னி ப்ரமத கணங்களுடன் கார்யத்தை முடிப்பார்; என்று சொன்னார்.

31–36. அதனைக்கேட்டு ஸுதக்ஷிணன் ஸ்ரீ

கிருஷ்ணனைக் கொல்லவிரும்பி அந்த விருதத்தைய னுஷ்டித்தான். பின்பு குண்டத்திலிருந்து மிக்க பயங்கர ஸ்வரூபத்துடன் அக்னி பகவான் கிளம்பி னார். காச்சப்பட்ட தாம்பரம்போல சிவந்த தலைமயிர், மீசை இவைகளுள்ளவராக விருந்தார். மேலும் அவருடைய கண்கள் நெருப்புத்தணல் போலிருந்தன, சிங்கப்பற்களும், புருவமும், முகமும், பயங்கரங்களாக விருந்தன. மேலுமந்த புருஷன் வஸ்திரமில்லாமலும் மூன்று முனையுள்ள சூலத்தைச் சுழற்றிக்கொண்டு, கடைவாய்களை நாக்கினால் நக்கிக்கொண்டுமிருந்தார். அவருடைய கால்கள் பனைமரம் போலிருந்தன; இப்படி பயங்கர ஸ்வரூபத்துடன் பூமியை அசைப்பது போல் த்வாரகையை நோக்கி அந்தப்புருஷன் சென்றான். அதனைக்கண்ட த்வாரகா வாஸிகளான ஜனங்கள் காட்டுத்தீயைக்கண்ட மிருகங்கள் போல் பயந்து ஸபையில் சொக்கட்டான் விளையாடுகின்ற ஸ்ரீ கிருஷ்ணனிடஞ்சென்று, "ஓ முவ்வுலகங்களுக்கும் அதிபதியாகவிருப்பவரே இந்த அக்னி, பட்டணத்தை எரிக்கிறது; காப்பாற்றும்" என்றார்கள்.

37–42. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன், தம்முடைய பந்துக்கள் பயப்படுவதைப் பார்த்து, "பயப்படவேண்டாம் உங்களை நான் ஸம்ரக்ஷிக்கிறேன்" என்று சொன்னார். மேலுமவர் ஸகல ஜனங்களுடைய ஹிருதயத்திற்கும் ஸாக்ஷியாக விருப்பதால் "இது பரம சிவனுடைய ஸம்பந்தமான கணம்" என்று தெரிந்து கொண்டு அதனை ஜயிப்பதற்காகத் தம்முடைய பக்கத்திலிருக்கும் சக்கிரத்தை அனுப்பினார். அந்த சக்கிரமானது கோடிஸூர்யன் உதித்தாற்போல பிரகாசித்தது; மேலும் ப்ரளயகால அக்னி போல





ஜ்வலித்தது; தன்னுடைய தேஜஸ்ஸால் திக்குகளையும் ஆகாயத்தையும், பூமியையும், ப்ரகாசிக்கச் செய்தது; அப்படிப்பட்ட முகுந்தருடைய அஸ்திரமாகிய சக்ரமானது அந்த அக்னியை அணைத்தது. இப்படி சக்கிராயுதத்தால் ஜயிக்கப்பட்ட அந்த அக்னியானது திரும்பி காசிதேசஞ்சென்று ஸுதக்ஷிணனையும், அவனுடைய ரித்விக்குகளையும் தஹித்தது. பின்பு ஸ்ரீ கிருஷ்ணனுடைய சக்கிரம் காசிக்குச் சென்று கோபுரம், ப்ராகாரம், ஸபை, வீடுகள் பசுக்கள் கட்டும் சாலை, குதிரை லாயம், யானை கட்டும் ஸ்தலம், பொக்கிஷம், அன்னசாலை, முதலியவைகளை தஹித்து நாசஞ்செய்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய பக்கஞ்சென்றது.

43. எந்த மனிதன் உத்தமச்லோகராகிய பகவானுடைய இந்த சரிதத்தை பிறருக்குச் சொல்லுகிறானோ, எவன் பக்தியுடன் பிறர் சொல்லக்கேட்கிறானோ, அவனுக்கு ஸகல பாபங்களும் நிவர்த்தியடைகின்றன.



## அத்தியாயம்–67

*பலராமன் த்விவிதனைக் கொன்றது.*

பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி "அத்புதமான சரிதங்களைச் செய்பவரான பலராமன் இன்னும் எதனைச்செய்தார்? அதனைச்சொல்ல வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

*2–11.* அதனைக்கேட்டு சுகர் அரசனை நோக்கி பின்வருமாறு சொல்லத்தொடங்கினார். எப்படியெனில்:– "நரகாஸுரனுக்கு த்விவிதனென்ற ஒரு வானரன் தோழனாகவிருந்தான். அவன் ஸுக்ரீவனுடைய மந்திரி, மைந்தனென்பவனுடைய, ஸஹோதரன்; அவன் தன்னுடைய தோழனாகிய நரகனை கிருஷ்ணன் கொன்றதால் கிருஷ்ணனுடைய தேசமாகிய ஆனர்த்த தேசத்திலுள்ள பட்டணங்களிலும் கிராமங்களிலும் இடைச்சேரிகளிலும் அக்னியை வைத்து தஹித்தான். பின்னுமவன் மலைகளைப்பிடுங்கி தேசத்தில் போட்டு, அதனால் ஜனங்கள் முதலியவர்களை பொடி செய்தான். இப்படி ஆனர்த்ததேசத்தை மிகவும் உபத்திரவித்தான். இன்னும் பத்தாயிரம் யானை பலமுள்ளவனான அந்த த்விவிதன் சில ஸமயம் ஸமுத்திரத்தின் நடுவில் நின்று கைகளால் ஜலத்தை வாரியிரைத்து கரைக்கு ஸமீபத்திலிருக்கும் தேசங்களை முழுகச்செய்தான். மேலும் மஹர்ஷிகளுடைய ஆச்ரமங்களில் இருக்கும் மரங்களை முறித்தான. விஷ்டை, மூத்திரம் இவைகளால் யாகத்தின் அக்னிகளை அணைத்தான். பின்னுமவன் குளவியானது புழுவைக் கூட்டிற்குள் வைத்து மூடுவதுபோல புருஷர்களையும், ஸ்திரீகளையும்





மலையின் குஹையில் வைத்து கற்பாறைகளால் மூடினான். குல ஸ்திரீகளின் கற்பை அழித்தான். இப்படி ஆனர்த்த தேசத்திற்குக் கெடுதிசெய்து வந்தான். ஒருகால் அவன் ரைவதகமென்ற மலையில் காதிற் இனிமையான சப்தத்தைக்கேட்டு அவ்விடஞ்சென்றான். அவ்விடத்தில் தாமரை மாலையுள்ளவரும், அழகிய சரீரமுள்ளவரும், மத்யத்தைக் குடித்து மதித்தவரும், சிவந்த கண்களுள்ளவரும், மதித்த சிறந்த யானை போன்றவருமான பலராமனைக் கண்டான். பின்னும் துஷ்டனாகிய அந்த வானரன் மரத்தின் கிளைகளிலிருந்து மரங்களை அசைத்துக்கொண்டு கர்வத்தால் தன்னைக் காண்பித்துக்கொண்டு "கில கில" என்று சப்தித்தான்.

*12–23.* அதனைக்கேட்ட பலதேவருடைய ஸ்திரீகள் ஸ்வபாவத்தால் சபலர்களானாலும், சிரிப்பில் பிரியமுள்ளவர்களானதாலும், சிரித்தார்கள். அப்பொழுது அந்த வானரன் எதிரில் நிற்பது, புருவத்தை அசைப்பது, ஆகிய இவைகளைச்செய்து பலராமனை லக்ஷ்யஞ்செய்யாமல் தன்னுடைய பின்பக்கத்தை அவர்களுக்குக் காண்பித்தான். அதனைக் கண்ணுற்ற பலசாலியான பலராமன் மிக்ககோபங்கொண்டு அந்த வானரனைக் கல்லால் அடித்தார். அந்த கல் தன் மேல் படாமல் ஒதுக்கங்கொடுத்து அந்த வானரன் மத்யக்குடத்தை யெடுத்துக்கொண்டு அவரைப்பரிஹஸித்தான். அதனால் பலராமன் கோபங்கொண்டார். பின்னும் துஷ்டனாகிய அந்த த்விவிதன் மத்யக் குடத்தை உடைத்ததுமல்லாமல் ஸ்திரீகளுடைய வஸ்திரங்களைக் கிழித்துப் பலவாறாக பலராமனை லக்ஷ்யஞ்செய்யாமல் அடகாரஞ்செய்தான். அப்பொழுது

அவனுடைய கெட்டநடையையும், அவனால் தேசம் உபத்திரவிக்கப்பட்டிருப்பதையும் பார்த்து சத்ருவைக் கொல்வதற்காக மிக்க கோபங்கொண்டு முஸலத்தையும், கலப்பையையும் எடுத்துக்கொண்டார். அதனைக் கண்ட த்விவிதனும் ஸாலமென்ற மரத்தைப் பிடுங்கி வேகமாக பலராமனுடைய தலையில் அடித்தான். பலராமன் மலைபோல் தலையில் விழுகின்ற மரத்தைப் பிடித்துக்கொண்டு முஸலத்தால் அவனை அடித்தார். இப்படி முஸலத்தால் அடிக்கப்பட்டு அவனுடைய தலையுடைந்து ரத்தம் பெருகியது. அதனால், நச்சங்குப் பொடிகளுள்ள மலைபோல அவன் ப்ரகாசித்தான்.

த்விவிதன் அந்த அடியை லக்ஷ்யஞ்செய்யாமல் வேறுமரத்தைப்பிடுங்கி இலைகளையுதிர்த்து அதனால் பலராமனை அடித்தான். அதனைப் பலராமன் நூறு துண்டுகளாக வெட்டினார். இப்படி இவ்விருவர்களும் யுத்தஞ்செய்யும்பொழுது த்விவிதனால் மரங்கள் பிடுங்கப்பட்டதனால், அந்தவனத்தில் மரங்களற்றும் போயின. பின்பு த்விவிதன் காட்டில் மரமில்லாததால் கற்களை எடுத்து வர்ஷித்தான். அதனையும் பலராமன் முஸலாயுதத்தால் பொடியாக்கினார். பின்பு த்விவிதன் பனைமரம்போன்ற கைகளை முஷ்டி செய்துகெண்டு அதனால் பலராமனுடைய மாரில் குத்தினான். பலராமனும் முஸலத்தையும், கலப்பையையும் வைத்துவிட்டு அவனுடைய கழுத்தை இருகக் கட்டினார். அதனால் த்விவிதன் ரத்தத்தைக் கக்கிக் கொண்டு மரணமடைந்து விழுந்தான். அதனால் அந்த வனமும் அவ்விடத்திலிருந்த மரங்களும், ஜலாதாரங் களும் நடுங்கின. அந்த மலையானது பெருங்காற்றிலகப்





பட்ட ஓடம்போல அசைந்தது. ஆகாயத்தில் ஸித்தர் களும், தேவர்களும், மஹர்ஷிகளும், புஷ்பங்களை வர்ஷித்து “ஜய ஜய” யென்றும், “நல்லது நல்லது” என்றும் “நமஸ்காரம்” என்றும் சொன்னார்கள். லோகத்திற்கு உபத்திரவத்தைச் செய்துகொண்டிருந்த த்விவிதனைப் பலராமன் கொன்று, ஜனங்களால் துதிக்கப்பெற்றுத் தமது நகரஞ்சென்றார்.



# அத்தியாயம்–68

*கௌரவர்கள் ஸாம்பனைக் கட்டியது.*

ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! ஜாம்பவதியின் புத்திரனாகிய ஸாம்பனென்பவன் துர்யோதனனுடைய புத்திரியான லக்ஷ்மணாயென்பவளை ஸ்வயம்வரத்தில் அபஹரித்தான். அதனைக்கண்ணுற்ற கௌரவர்கள் மிக்ககோபங்கொண்டு "இந்த சிறுவன் தன்னிடத்தில் ஆசைப்படாமலிருக்கும் இந்தபெண்ணை நம்மை யெல்லோரயும் லக்ஷ்யஞ்செய்யாமல் பலாத்காரமாக அபஹரித்தான். இம்மாதிரிகெட்ட நடையுள்ள இவனைக்கட்டிவிடுங்கள். விருஷ்ணிகளால் என்ன செய்ய முடியும்? அந்த விருஷ்ணிகள் நம்மால் தயவாக விடப்பட்ட பூமியை அனுபவித்துக் கொண்டிருப்பவர்கள்; ஒருகால் ஸாம்பன் கட்டுப்பட்டதைக் கேள்விப்பட்டு விருஷ்ணிகள் யுத்தத்திற்கு வந்தால் ப்ராணாயாமம் முதலியவைகளால் அடக்கப்பட்ட இந்திரியங்கள் போல சாந்தியை அடைவார்கள்" என்று கர்ணன், சலன், பூரி, யஜ்ஞகேது, துர்யோதனன், பீஷ்மர் ஆகிய இவர்கள் யோசித்து ஸாம்பனைப் பின் தொடர்ந்தார்கள். அதனைக்கண்ட ஸாம்பன் ஒருவனானாலும், சிங்கம் போல பயமற்று அழகான, வில்லையெடுத்துக்கொண்டு நின்றான். கர்ணன் முதலிய அந்த கௌரவர்களால் அடிக்கப்பட்டு ஸாம்பன் அல்பமிருகங்களால் ஏற்படும் அவமானத்தைச் சிங்கம்போல் அதனை ஸஹிக்கவில்லை; அவன் எண்ணமுடியாத மஹிமையுள்ள பகவானுடைய புத்திரனல்லவா? பின்னுமவன் தன்னுடைய வில்லில் நாண் கயிற்றைக்கட்டி வளைத்து நாணோசைகொண்டு





கர்ணன் முதலிய ஆறு ரதிகர்களையும் அவ்வளவு பாணங்களால் ஒரே ஸமயத்தில் அடித்தான். எப்படியென்றால்— நான்கு பாணங்களால் அவர்களுடைய ரதத்தில் கட்டிய குதிரைகளையும், ஒவ்வொரு பாணத்தால் ஸாரதிகளையும், சிறந்த வில்லுள்ள அந்த ரதிகர்களை அடித்தான். அதனைக் கண்டு அவர்கள் ச்லாகித்தார்கள். பின்னுமவர்களில் நால்வர்கள் ஸாம்பனுடைய நான்கு குதிரைகளையும், ஒருவன் ஸாரதியையும், அடித்தார்கள். மற்றொருவன் வில்லை வெட்டினான். இப்படி கௌரவர்கள் மிகவும் கஷ்டப்பட்டு அவனை ரதமில்லாத பதாதியாகச்செய்து அவனைக்கட்டி லக்ஷ்மணையுடன் தங்களுடைய பட்டணத்திற்குக் கொண்டுபோனார்கள்.

13–22. அப்பொழுது நாரதர் த்வாரகைக்குச் சென்று விருஷ்ணிகளுக்கு ஸாம்பனுடைய விஷயத்தைத் தெரிவித்தார். அதனைக்கேட்ட விருஷ்ணிகள் உக்கிரஸேனரால் தூண்டப்பட்டு கௌரவர்களுடன் யுத்தஞ்செய்ய முயற்சித்தார்கள். அதனைக் கண்ணுற்ற விருஷ்ணிகளுக்குச் சிறந்தவரான பலராமன் விருஷ்ணிகளுக்கும், கௌரவர்களுக்கும் சண்டை நேரிடக்கூடாதென்று நினைத்து விருஷ்ணிகளை ஸமாதானஞ்செய்து ஸூர்யன்போன்ற தேஜஸ்ஸுள்ள ரதத்திலேறிக்கொண்டு ஹஸ்தினாபுரஞ்சென்றார். ப்ராஹ்மணர்களும், விருஷ்ணிகளில் பெரியோர்களும், அவரைச் சுற்றிக்கொண்டு சென்றார்கள். அது சந்திரன் கிருஹங்களால் சூழப்பட்டாற்போலிருந்தது. அப்படிப்பட்ட பலராமன் ஹஸ்தினாபுரத்தின் வெளியிலிருக்கும் தோட்டத்திலிருந்து கொண்டு திருதராஷ்ட்ரருடைய மனத்தைத் தெரிந்து கொள்வதற்காக

உத்தவரை அனுப்பினார். அந்த உத்தவர் பட்டணத்திற்குள் பிரவேசித்து திருதராஷ்ட்ரர், பீஷ்மர், த்ரோணர், பாஹ்லிகர், துர்யோதனன் ஆகிய இவர்களிடஞ்சென்று பெரியோர்களை நமஸ்கரித்து பலராமன் வந்திருக்கிறாரென்பதைத் தெரிவித்தார். அவர்கள் பலராமன் வந்திருப்பதைக் கேட்டு மிக்க ப்ரியமுள்ளவர்களாகி உத்தவருக்கு மர்யாதை செய்து மங்கள த்ரவியங்களை யெடுத்துக்கொண்டு பட்டணத்திலிருந்து பலராமனிருக்குமிடம் விதிப்படி அர்க்கியங் கொடுத்துப் பூஜித்தார்கள். மேலுமவர்களில் அவருடைய மஹிமையை அறிந்தவர்கள் பலராமனை நமஸ்கரித்தார்கள். பின்னும் ஒருவருக்கொருவர் ஸந்தித்து விசாரித்தார்கள். அப்பொழுது பலராமன் கௌரவர்களை நோக்கி "மஹாராஜனாகிய உக்ரஸேனர் உங்களுக்கு ஆஜ்ஞாபனஞ் செய்கிறார். அதனை ஸாவதானமாகக் கேட்டு தாமதியாமல் செய்யுங்கள், என்னவென்றால் நீங்கள் எல்லாரும் ஒன்றுகூடி ஸாம்பனொருவனை ஜயித்து அதர்ம மார்க்கமாகக் கட்டினீர்களல்லவா? அது ஸரியல்ல. பந்துக்கள் விரோதமில்லாமல் அன்புள்ளவர்களாகவிருக்கவேண்டும்" என்று சொல்லும்படி சொன்னார் என்றார்.

23–29. இப்படி வீர்யம், சௌர்யம், பலம் தன்னுடைய சக்தி ஆகிய இவைகளுக்குச் சமமாக பலராமன் சொல்லிய வார்த்தையைக்கேட்ட கௌரவர்கள் மிக்க கோபங்கொண்டு "இது மிகவும் ஆச்சர்யம்; கிரீடம் வஸிக்கக்கூடிய தலையில் பாதரக்ஷை ஏற விரும்புகிறது; குந்தியைக் கல்யாணஞ்செய்த விஷயத்தில் விருஷ்ணிகளுக்கும், நமக்கும் ஸம்பந்தம் ஆனதால் இவர்களுக்கு அரசனுடைய ஆஸனத்தைக்





கொடுத்து நமக்குச் சமமாகச் செய்துகொண்டோம். சாமரம், சங்கம், வெண்குடை, கிரீடம், ஆஸனம், படுக்கை ஆகிய இவைகளை எங்களுடைய அனுமதியால் இவர்கள் ஆக்ஞாபிக்கிறார்கள்; நம்முடைய தயையால் கொடுக்கப்பட்டதைப் பூஜிக்கும் யாதவர்கள் வெட்கமில்லாமல் நம்மை ஆஞாபிக்கிறார்கள்; நமக்கு விரோதஞ் செய்பவர்களான யாதவர்களிடமிருந்து அரசர்களுக்கு அடையாளமான குடை முதலியவைகளைப் பிடுங்கவேண்டும். பீஷ்மர், த்ரோணர், அர்ஜுனன் முதலிய கௌரவர்களால் சம்மதித்துக் கொடுக்கப்படாதவைகளை மஹேந்திரனானாலும் எப்படி எடுத்துக் கொள்ளமுடியும்? சிங்கத்திற்கு ஸ்வாதீனமான வஸ்து ஆட்டினால் அபஹரிக்க முடியுமா? (இனி உக்கிரஸேனன் அரசனாகவிருக்கத் தகாதவன்) என்று குலத்தாலும் பந்துக்களாலும், ஸம்பந்தத்தாலும், மதித்தவர்களும் அஸத்துக்களுமான கௌரவர்கள் சொல்லி பட்டணத்துக்குள் ப்ரவேசித்தார்கள்.

30–40. பலராமன் கௌரவர்களுடைய துஷ்டநடையைப்பார்த்தும், நிந்தாவார்த்தைகளைக்கேட்டும், மிக்ககோபத்தால் பயங்கரமான முகமுள்ளவராகி பலவகையான மதமுள்ள அஸத்துக்கள் சாந்தியை அடையமாட்டார்கள்; பசுக்களைத் தடியால் அடித்து அடக்குவதுபோல் அஸத்துக்களைச் சிக்ஷித்து நிக்ரஹிக்கவேண்டும்; என்ன ஆச்சரியம்; ஸ்ரீகிருஷ்ணனும் யாதவர்களும் கோபங்கொண்டு யுத்தத்திற்கு முயற்சித்தார்கள்; அவர்களை நான் ஸமாதானஞ் செய்து இவ்விடம் வந்தேன். மூடர்களும் சண்டையில் ப்ரியமுள்ளவர்களும் துஷ்டர்களுமான கௌரவர்கள்

என்னை லக்ஷ்யஞ்செய்யாமல் கெட்ட வார்த்தைகளைச் சொன்னார்கள். போஜர்களுக்கும், விருஷ்ணிகளுக்கும், அந்தகர்களுக்கும், அதிபதியாகிய உக்ரஸேனருடைய உத்திரவை இந்திரன் முதலிய லோகபாலர்களும் சிரஸால் வஹிக்கிறார்கள். ஸுதர்மாயென்ற தேவ ஸபையும், தேவவிருக்ஷமான பாரிஜாதமும் பூமிக்குக் கொண்டுவரப்பட்டு அவரால் அனுபவிக்கப்படுகிறது. அப்படிப்பட்ட உக்ரஸேனர் அரசனாகவிருக்கத் தகுதியில்லாதவரென்று இவர்கள் சொல்லுகிறார்கள். மேலும் எல்லாவற்றிற்கும் அதிபதியான லக்ஷ்மீதேவி எவருடைய பாதங்களை ஸேவிக்கிறாளோ, அந்த லக்ஷ்மீபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அரசனுக்குரிய ஸாமக்ரிகள் (குடைசாமரம் முதலியவை) தகுதியல்ல வென்கிறார்கள்.

எவருடைய பாததூளியை கங்கையைவிட பரிசுத்தமானதென்று ப்ரஹ்மா, பரமசிவன் லக்ஷ்மீதேவி ஆகிய நாங்கள் சிரஸால் தரிக்கிறோமோ, நாங்கள் எவருடைய அம்சமோ, அப்படிப்பட்ட பகவானுக்கு அரசர்களுக்குரிய சிங்காஸனம் உரியதல்ல வென்கிறார் கள். கௌரவர்களால் கொடுக்கப்பட்ட ஸ்வல்ப பூமியை விருஷ்ணிகள் அனுபவிக்கிறார்களாம் நாம் பாதரக்ஷைகளாம், கௌரவர்கள் தலைகளாம். ஐச்வர்ய மதங்கொண்டு அஹங்காரிளாகி மத்யபானஞ் செய்தவன் போல அஸம்பந்தமாக (கோணலாக) பேசுகிற அஸத்துக்களுடைய வார்த்தையைச் சிக்ஷிப்ப வனான யார் ஸஹிப்பான்? ஆனதால் இப்பொழுது பூமியில் கௌரவர்களில்லாமல் நாசஞ்செய்து விடுகிறேன்" என்று முவ்வுலகங்களையும் எரிப்பவர் போல கலப்பையையெடுத்து கொண்டு எழுந்திருந்தார்.





41–47. மேலுமவர் ஹஸ்தினாபுரத்தை கலப்பையால் குத்திப் பிளந்து கங்கையில் தள்ளுவதற்காக தூக்கினார். இப்படி கலப்பையால் குத்திப்புரட்டப்பட்ட நகரமானது ஜலத்தில் கப்பல் போல அசைந்தது. அதனைக்கண்ட கௌரவர்கள் பயந்து உயிர் பிழைக்க விரும்பி குடும்பத்துடன் பலராமனையே சரணமடைந்தார்கள். மேலுமவர்கள் லக்ஷ்மணையுடன் ஸாம்பனை முன்னிட்டு அஞ்ஜலி பந்தஞ்செய்து "ஓ ராம! ராம! எல்லாவற்றிற்கும் ஆதாரமாக விருப்பவரே! உம்முடைய மஹிமையை அறியோம். மூடர்களும் கெட்ட புத்தியுள்ளவர்களு மான எங்களுடைய குற்றத்தை மன்னிக்கவேண்டும்; இந்தஜகத்தைப் படைப்பதற்கும், ஸம்ரக்ஷிப்பதற்கும் நீர் காரணராகவிருப்பவர்; உமக்குவேறு காரணமில்லை.

ப்ரஹ்மா முதலியவர்கள் உமக்கு இந்த ஜகத்தை விளையாட்டு ஸாமான்களென்று சொல்லுகிறார்கள். ஓ ஆயிரந்தலையுள்ளவரே! இந்த பூமண்டலத்தை நீர் தலையால் சுமக்கிறீர். ப்ரளயகாலத்தில் ஸகல ஜகத்தையும் தனக்குள் அடக்கிக்கொண்டு தாமொரு வராக விருக்கிறீர். ஓ பலராம! உமக்கு துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்காக கோபமேயொழிய மாத்ஸர்யத்தாலேற் பட்டதல்ல. நீர் பூமியை பரிபாலிப்பதில் நோக்க முள்ளவர்; ஓ ஸகல பிராணிகளின் ஸ்வரூபியாக விருப்பவரே! ஸகல சக்திகளையும் தரிப்பவரே! அழிவற்றவரே! ஜகத்தின் க்ஷேமகர்மங்களைச் செய்பவரே! உம்மை நமஸ்கரிக்கிறோம். நாங்களெ ல்லோரும் உம்மை சரணமடைகிறோம்" என்றார்கள்.

48–53. இப்படிச் சரணமடைந்தவர்களும், பயந்து நடுங்கியவர்களுமான கௌரவர்களுடைய வார்த்தையை கேட்ட பலராமன் "பயப்படவேண்டாம்", என்று அவர்களுக்கு அபயங்கொடுத்தார். அப்பொழுது துர்யோதனன் அறுபது வயதுள்ள பன்னிரெண்டு ஆயிரம் யானைகளையும், லக்ஷங்குதிரைகளையும், ஆறு ஆயிரம் ரதங்களையும், ஆயிரம் வேலைக்காரிகளையும் கன்யாதானமாகக் கொடுத்தான். பலராமன் அதெல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு புத்திரனுடனும், நாட்டுப்பெண்ணுடனும், பந்துக்களால் ச்லாகிக்கப்பெற்று த்வாரகைக்குச் சென்றார். பின்பு பலராமன் ஹஸ்தினாபுரஞ்சென்று பந்துக்களைக் கண்டு யாதவர்களுடைய ஸபையில் கௌரவர்களுடைய விஷயத்தைத் தெரிவித்தார் இப்பொழுதும் அந்த ஹஸ்தினா நகரம் கங்கையில் தென்பக்கத்தில் உயர்ந்து பலராமனுடைய பராக்கிரமத்தைக் காண்பித்துக் கொண்டிருக்கிறது.





## அத்தியாயம்–69

### நாரதர் கிருஷ்ணனுடைய கிருஹஸ்த தர்மத்தைப்பார்த்து ஆச்சர்யமடைந்தது.

ஒரு ஸமயம் நாரத மஹர்ஷி நரகாஸுரன் அடிபட்டதையும், அநேக ராஜகுமாரிகளை கிருஷ்ணன் ஒருவர் விவாஹஞ்செய்துக் கொண்டதையும் கேள்விப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணனைப்பார்க்க விரும்பி த்வாரகைக்குச் சென்றார். ஒரே புருஷன் ஒரே காலத்தில் பதினாறு ஆயிரம் கிருஹத்திலிருந்து அவ்வளவு ஸ்திரீகளை கல்யாணஞ் செய்துகொள்வது மிகுந்த ஆச்சர்யமானதால், அதனைப் பார்க்க வேண்டுமென்ற விருப்பம் தேவர்ஷியாகிய நாரதருக்கு உண்டாயிற்று. அந்த த்வாரகா நகரத்தில் அநேக உத்தியானங்களும், அதிலுள்ல மரங்கள் புஷ்பித்தும், அந்தப் புஷ்பங்களின் மதுவைப் பானஞ்செய்து வண்டுகள் சப்தித்துக்கொண்டுமிருந்தன.

மேலும் ஓடைகளில் நீலோத்பலங்களும், தாமரைகளும், குமுதங்களும் புஷ்பித்திருந்தன. ஹம்ஸங்களும் ஸாரஸ பக்ஷிகளும் சப்தித்துக் கொண்டிருந்தன. பின்னும் அந்த நகரத்தில் ஸ்படிகங்களாலும். வெள்ளிகளாலும் மரகத ரத்னங்களாலும் செய்யப்பட்டவைகளும், ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான ஒன்பது லக்ஷம் மாடிகளுமிருக்கின்றன. வீதிகளும் கடைத்தெருவுகளும் நாச்சந்தி மண்டபங்களும், ஸபைகளுமிருக்கின்றன. பின்னும் வீதிகள் ஜலந்தெளிக்கப்பட்டும், சுத்துஞ் செய்யப்பட்டும், வீட்டு வாயிற்படிகள் குப்பையில்லாமல்

பெருக்கப்பட்டும், வீதிகளில் த்வஜங்களும், பதாகைகளும் கட்டப்பட்டு வெய்யிலை மறைத்துக்கொண்டிருக்கின்றன. அந்த நகரத்தில் மிக்க அழகு பொருந்திய ஸ்ரீகிருஷ்ணனுடைய அந்தப்புரம் ஒன்று இருக்கிறது. அதனை ஸகல லோக பாலர்களும் பூஜிக்கிறார்கள். விச்வகர்மாவின் ஸாமர்த்தியம் முழுவதும் அதில் காட்டப்பட்டிருக்கிறது. மேலுமதில் கிருஷ்ணனுடைய பதினாறாயிரம் ஸ்திரீகளுக்கும் அரண்மனைகளிருக்கின்றன. அதில் நாரதர் ஒரு கிரஹத்தில் ப்ரவேசித்தார். அந்த அரண்மனை பவழத் தூண்களாலும், இந்திர நீலச்சுவர்களாலும், இந்திர நீலமயமான பூமிகளாலும், வைடூர்யப் பலகைகளாலும், கொடுங்கைகளாலும், முத்துமாலைகளாலும், தந்தங்களால் செய்யப்பட்டு ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான கட்டில் முதலியவைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

மேலும் அந்த கிருஹங்களில் ரத்னஹாரங்களாலும், நல்ல வஸ்திரங்களாலும், அலங்கரிக்கப்பட்ட வேலைக்காரிகளும், சட்டை தலைப்பாகை, ரத்ன குண்டலங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்ட வேலைக்காரர்களும் வஸிக்கிறார்கள். ரத்ன தீபங்களின் ஒளியால் இருளில்லாமல் பிரகாசமாகவிருக்கிறது. கொடுங்கைகளில் வஸிக்கும் மயில்கள் ஜன்னல் வழியாக வெளியில் வரும் அகருதூபத்தின் புகையை மேகமென்று நினைத்து கூத்தாடுகின்றன. அப்படிப்பட்ட அந்த கிருஹத்தில் அதற்குடையவளான ராஜகுமாரி (ருக்மிணி) தங்கப்பிடியுள்ள சாமரத்தை கையிலெடுத்து கிருஷ்ணனை விசிறி உபாஸித்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு சமமான ரூபம், குணம்





வயது, அலங்காரம் இவைகளுள்ள அநேக வேலைக்காரிகள் அவளைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது நாரதரைக்கண்ட ஸ்ரீ கிருஷ்ணன், கட்டிலிலிருந்து சீக்கிரமாக இறங்கி, நாரதருடைய பாதத்தில் தம்முடைய கிரீடம் படும்படி நமஸ்கரித்து அஞ்ஜலிசெய்து கொண்டு தன்னுடைய ஆஸனத்தில் உட்கார்த்தி வைத்தார். மேலுமவர் நாரதருடைய பாதங்களை அலம்பி அந்தத்தீர்த்தத்தைத் தம்தலையில் ப்ரோக்ஷித்துக்கொண்டார். அவர் ஜகத்திற்கு மேலானவரானாலும் ஸாதுக்களுக்கு அதிபதியானாலும் ப்ராஹ்மணர்களையே தைவமாகக் கொண்டவரானதால் இப்படிச் செய்தது உசிதம்; அவருடைய பாதாரவிந்தத்திலிருந்து பெருகிய கங்கா தீர்த்தமானது எல்லாவற்றையும் பரிசுத்தப்படுத்துகிறது. இப்படி தேவர்ஷிகளுக்குட் சிறந்தவராகிய நாரதரை நர நாரயணர்களாக அவதரித்த ஸ்ரீ கிருஷ்ணன் விதிப்படி பூஜித்து அமிருதப் பெருக்குள்ள பிரியமான வார்த்தைகளைச்சொல்லி "உமக்கு என்னால் செய்யக் கூடியதென்ன?" என்று கேட்டார்.

*17–18.* அதனைக்கேட்ட நாரதர் "ஓ ப்ரபுவே! ஸகலஜகத்திற்குமதிபதியே, எல்லா ஜனங்களிடத்தும் நீர் பிரீதி செய்வதும், துஷ்டர்களைச் சிக்ஷிப்பதும் ஆச்சர்யமல்ல. நீர் ஜகத்தைத் தரிப்பதற்காகவும், ரக்ஷிப்பதற்காகவும், அதற்கு மோக்ஷத்தைக் கொடுப்பதற்காகவும், தமதிஷ்டப்படி அவதரிக்கிறீர் என்பதை நான் அறிவேன் (எல்லா ஜனங்களிடத்திலும் பிரீதி செய்வது உமக்கு இயற்கையானதால் என்னைப் பூஜித்திரேயொழிய என்னிடத்திலுள்ள கௌரவத்தால் பூஜிக்கவில்லை என்று கருத்து) உம்முடைய

பாதாரவிந்தத்தைத் தர்சித்தேன். அது ஸகலஜனங்களுக்கும் மோக்ஷத்தைக்கொடுக்கூடியது; மிகுந்த ஞானமுள்ள ப்ரஹ்மா முதலியவர்களாலும் ஹ்ருதயத்தில் த்யானிக்கக்கூடியது; ஸம்ஸாரமாகிய கிணற்றில் விழுந்தவனை வெளியில் தூக்கி விடக்கூடியது; உம்முடைய ஸ்மரணமானது எப்பொழுதும் எனக்கு இருக்கும்படி அனுக்கிரஹிக்க வேண்டும்” என்று சொன்னார்.

19–22. பின்பு நாரதர் அந்த கிருஹத்திலிருந்து வெளியில்வந்து யோகேச்வரராகிய கிருஷ்ணனுடைய யோகமாயையின் மஹிமையை பார்க்கவிரும்பி இன்னொரு கிருஹத்தில் பிரவேசித்தார். அவ்விடத்தில் ஸ்ரீகிருஷ்ணன் பத்னியுடனும், உத்தவருடனும் சொக்கட்டான் விளையாடிக்கொண்டிருந்தார். பின்னுமவர் மிகுந்த பக்தியுடனும் நாரதரைக்கண்டு எழுந்திருந்து விதிப்படிப் பூஜித்து ஒன்றையும் அறியாதவர்போல “எப்பொழுது வந்தீர்? எல்லாவற்றிலும் பூர்ணரான உமக்கு அபூர்ணர்களான எங்களால் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. ஆனாலும் நான் செய்யவேண்டியதைச் சொல்லும். என்னுடைய ஜன்மாவை ஸபலமாக்கிவிடும்” என்று சொன்னார். அதனைக்கேட்ட நாரதர் மிகவும் ஆச்சர்யப்பட்டு பதில்சொல்லாமல் எழுந்திருந்து மௌனமாக மற்றொரு கிருஹஞ்சென்றார்.

23–39. அவ்விடத்தில் ஸ்ரீகிருஷ்ணன் குழந்தைகளை யெடுத்துவைத்துக் கொஞ்சிக்கொண்டிருக்கக் கண்டார். அதனைப் பார்த்து நாரதர், மற்றொரு வீட்டிற்குள் சென்றார். அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன்





ஸ்நானஞ்செய்ய யத்தனித்துக்கொண்டிருந்தார், அவ்விடமிருந்து மற்றொரு கிருஹஞ்சென்று நாரதர், அவ்விடத்தில் அக்னி ஹோத்திரஞ் செய்து கொண்டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை தர்சித்தார்; இப்படி நாரதர் ஒவ்வொரு கிருஹத்திற்கும் சென்றார். ஸ்ரீ கிருஷ்ணன் ஒருவீட்டில் பஞ்சயக்ஞங்களை அநுஷ்டித்துக்கொண்டும், மற்றொருவிடத்தில் ப்ராஹ்மணர்களுக்கு போஜனஞ் செய்வித்து கொண்டும், இன்னுமொரு வீட்டில் அதிதிகளுக்கு உபயோகித்து மிகுதியான அன்னத்தைப் புசித்துக்கொண்டும், இன்னுமொருவீட்டில் மௌனமாக ஜபஞ்செய்து கொண்டும், இன்னுமொரு வீட்டில் கத்தி, கேடகம் இவைகளை தரித்து மார்க்கத்தில் ஸஞ்சரித்து கொண்டும், மற்றொரு வீட்டில் குதிரையின் மீதேறுகிறவரும். பின்னுமொரு வீட்டில் யானை, ரதம் இவைகளில் ஏறுகிறவரும், மற்றுமொரு வீட்டில் கட்டிலில் படுத்து கொண்டவரும், வந்திகளால் ஸ்துதிக்கப்பெற்றவரும், உத்தவர் முதலிய மந்திரிகளுடன் ஆலோசிப்பவரும், மற்றொருவீட்டில் தாஸிகளுடன் ஜலக்ரீடை செய்பவரும், இன்னுமொரு வீட்டில் ப்ராஹ்மணர்களுக்கு அலங்கரிக்கப்பட்ட பசுக்களை தானஞ்செய்து கொண்டும், இதிஹாஸ புராணங்களைக் கேட்டுக்கொண்டும் மற்றொரு வீட்டில் தம் பத்னியுடன், பரிஹாஸவார்த்தை பேசி அவளை சிரிக்கச்செய்து கொண்டும், ஒரு கிருஹத்தில் தர்மத்தை யநுஷ்டித்துக் கொண்டும், மற்றொரு வீட்டில் அர்த்த காமங்களை யனுபவித்துக்கொண்டும், மற்றொருவீட்டில் ப்ரகிருதியை விட மேலான (ப்ரகிருதி ஸம்பந்தமில்லாத) பரம புருஷனை (தம்மை) த்யானஞ் செய்துக்கொண்டும், இன்னுமொருவீட்டில்

ஆசார்யனுக்கு இஷ்டமான வஸ்துக்களைக்கொடுத்துச் சுச்ரூஷை செய்துகொண்டும், சில வீட்டில் சிலருடன் சண்டை செய்து கொண்டும், மற்றொரு கிருஹத்தில் ஸமாதானஞ் செய்துகொண்டும், மற்றொருவீட்டில் பலராமனுடன் ஸாதுக்களின் க்ஷேமத்தை யோசித்துக் கொண்டும், இன்னுமொரு கிருஹத்தில் புத்திரர்களுக்கும், பெண்களுக்கும் உசிதமான காலத்தில் முறையே உபநயனம், விவாஹம் இவைகளைச் செய்து கொண்டும், மற்றொருவிடத்தில் புத்திரனுக்கு தகுதியான பெண்ணை தேடிக்கொண்டும், மற்றொருவிடத்தில் கன்னியர்தானங் கொடுப்பவரும், பெண், மணப் பிள்ளை ஆகிய இவர்களை அனுப்பிக்கொண்டும், அவர்களை அவர்கள் வீட்டிலிருந்து அழைத்துக் கொண்டும், மற்றொருவிடத்தில் ஸகல ஜனங்களும் ஸந்தோஷிக்கும்படி குழந்தைகளுக்கு கல்யாண மஹோத்ஸவத்தைச் செய்துகொண்டும், மற்றொரு வீட்டில் யாகங்களை யனுஷ்டித்து ஸகல தேவர்களைப் பூஜித்துக்கொண்டும், மற்றொருவீட்டில் கிணறு, குளம் வெட்டுவிப்பது தேவாலயம் கட்டுவிப்பது, தோட்டம் போடுவது, முதலிய பூர்த்ததர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டும், மற்றொருவீட்டில் ஸிந்து தேசத்திலுண்டான குதிரையின் மீதேறி வேட்டைக்குச் சென்றுகொண்டும், மற்றொருவீட்டில் சுத்தமான பசுக்களைக் கொண்டு யாகஞ்செய்து கொண்டும், மற்றொரு வீட்டில் அவ்விடத்திலிருக்கும் ஜனங்களை பரீக்ஷிப்பதற்காக வேறு வேஷந்தரித்து ஸஞ்சரிப்பவருமாக விருந்தார். இப்படிப்பட்ட மனிதனாக அவதரிக்கும் பகவானுடைய யோகமாய்யயின் மஹிமையைப்பார்த்து நாரதமஹர்ஷி சிரித்து ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி "ஓ யோகேச்வர! உம்முடைய





யோகமாயை யோகிகளாலும் பார்க்க முடியாதது; உம்முடைய பாதஸேவையால் அது என்னுடைய மனத்தில் தோன்றியது. அதனால் அதனைத் தெரிந்து கொண்டேன். ஆனதால் ஓ கிருஷ்ண! விடை கொடுத்தனுப்பும், லோகங்களை பரிசுத்தப் படுத்துகின்ற உம்முடைய லீலைகளை கானஞ் செய்துகொண்டு உம்முடைய கீர்த்தி பரவிய லோகங்களில் ஸஞ்ரிக்கிறேன். என்றார் (உம்முடைய மனுஷ்யபாவனையால் நான் மோஹிக்கிறேன். ஆனதால் என்னை அனுப்புமென்ற கருத்து)

40–43. அதனைக்கேட்ட ஸ்ரீகிருஷ்ணன் நாரதரை நோக்கி "ஓ ப்ராஹ்மண! நான் தர்மத்தைச் சொன்னவன்; அதனைச்செய்பவன்; அதனை அனுமோதிப்பவன்; ஆனதால் ஜனங்கள் தர்மத்தைச் செய்யும்படி அனுஷ்டித்துக் காண்பித்துக்கொண்டிருக் கிறேன். ஓ புத்திர! நீ இதைப்பார்த்து மோஹிக்க வேண்டாம்" என்று சொன்னார். அதனைக்கேட்ட நாரதர் கிருஹஸ்த தர்மங்களை எல்லாவீட்டிலும் அனுஷ்டித்துக்கொண்டிருக்கும் பகவானை ஒருவராக (பலஸ்வரூபங்களில்லாமல்) தர்சித்தார். அளவற்ற மஹிமையுள்ள ஸ்ரீகிருஷ்ணனுடைய யோகமாயையின் மஹிமையைப் பார்த்து நாரதர் மிக்க ஸந்தோஷத்தை அடைந்து ஆச்சர்யமடைந்தார். இப்படி அர்த்தம் காமம், தர்மம், ஆகிய இவைகளில் ச்ரத்தையுள்ளவரான ஸ்ரீ கிருஷ்ணனால் நாரதர் பூஜிக்கப்பட்டு அந்த ஸ்ரீ கிருஷ்ணனையே நினைத்துக்கொண்டு சென்றார்.

44–45. இப்படி ஸ்ரீமந் நாராயணன் ஸகல ஜனங்களுடைய க்ஷேமத்திற்காக அநேக அவதாரங்களைச்

செய்து பதினாறு ஆயிரம் ஸ்திரீகளுடைய வெட்கம் அன்பு இவைகள் பொருந்திய பார்வை, சிரிப்பு இவைகளை அடைந்து ரமித்தார். மேலும் ஜகத்தைப் படைப்பதற்கும், காப்பாற்றுவதற்கும், ஸம்ஹரிப்பதற்கும் காரணராகிய ஸ்ரீகிருஷ்ணன் எந்த அற்புதமான சரிதங்களைச் செய்தாரோ, அவைகளை எவன் கானஞ்செய்கிறானோ, கேட்கிறானோ, அதனை அனுமோதிக்கிறானோ, அவனுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பவரான பகவானிடத்தில் பக்தியுண்டாகும்.





# அத்தியாயம்–70

## ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஆஹ்னிகம்.

(நாரதர் ஒவ்வொரு கிருஹங்களில் பகவானுடைய கிருஹஸ்த தர்மத்தைத் தர்சித்தாரல்லவா? அதனை க்ரமமாகச்சொல்லுகிறார்) விடியற்காலம் ஸமீபித்த பொழுது கோழிகள் சப்தித்தன. அப்பொழுது ஒவ்வொரு வீடுகளிலும் ஸ்ரீ கிருஷ்ணனால் ஸ்திரீகள் ஆலிங்கனஞ்செய்து கொள்ளப்பட்டிருந்தமையால் அவர்கள் கோழிகளை வைதார்கள் (கோழிகளுடைய சப்தத்தைக் கேட்டுப் பகவான் தங்களைவிட்டு எழுந்திருந்து விடுவாரென்று பயந்து கோழிகளை வைதார்களென்று கருத்து) மந்தாரவனத்திலிருந்து வாஸனையுள்ளகாற்று வீசியது. அதனால் வண்டுகள் சப்தித்தின. பறவைகள் வந்திகள்போல் சப்தித்து கிருஷ்ணனை எழுப்பின. அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணனால் ஆலிங்கனஞ் செய்துகொள்ளப்பட்டு அவருடைய கைகளின் மத்தியை அடைந்து ருக்மிணி ஸ்ரீகிருஷ்ணனைவிட்டுப் பிரியவேண்டுமேயென்ற காரணத்தால் அந்தப்பறவை சப்திப்பது முதலியவைகளை ஸஹிக்கவில்லை. அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் ப்ரஹ்ம முஹூர்த்தத்தில் எழுந்திருந்து கைகால்களை அலம்பி ஆசமனஞ்செய்து தெளிந்திருக்கும் இந்திரியங்களுள்ளவராகி ப்ரகிருதி ஸம்பந்தமற்றதும், அகண்டமும், உபாதி ஸம்பந்தமில்லாததும், நித்யமானதும், தானாக ப்ரகாசிப்பதும், எப்பொழுதும் அவித்யையின் ஸம்பந்தமற்றதும், இந்த ஜகத்தை படைப்பது முதலியவைகளுக்கு காரணமாகிய தமது சக்திகளால் தன்னுடைய, இருப்பையும் ஆனந்தத்தையும்

காண்பிப்பதும் ப்ரஹ்மமென்று சொல்லப்படுவதுமான பரமாத்மாவை த்யானஞ்செய்தார். (குணங்கள் ஒன்றோடொன்று சேருவதற்குமுன் கேவல ஸத்தா மாத்திரனாகவிருந்தாரென்று கருத்து) பின்பு சுத்தமான ஜலத்தில் ஸ்நானஞ்செய்து வஸ்திரங்களை யுடுத்திக் கொண்டு ஸந்தியோபாஸனம் முதலிய கர்மங்களை விதிப்படி செய்தார். பின்னும் ஸாதுக்களுக்குட் சிறந்தவரான ஸ்ரீ கிருஷ்ணன் அக்னி கார்யத்தைச் செய்து காயத்ரியை ஜபித்தார். பின்பு ஸூர்யன் உதயமானார். அதன் பின், காயத்திரியின் உபஸ்தானத்தைச் செய்து தம்முடைய அம்சமான தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பிதிருக்களுக்கும் தர்ப்பணஞ்செய்து பெரியோர்களான ப்ராஹ்மணர் களைப் பூஜித்து பசுக்களை தானஞ்செய்தார்.

அவைகள் தலையீற்றுள்ளவைகள்; தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட கொம்புள்ளவைகள்; நல்ல ஸ்வபாமுள்ளவைகள்; முத்துமாலைகளால் அலங்கரிக்கப் பட்டவைகள்; வஸ்திரத்தால் அலங்கரிக்கப் பெற்றவைகள்; வெள்ளியால் அலங்கரிக்கப்பட்ட குளம்புள்ளவை; ப்ராஹ்மணர்களுக்கும் அலங்காரம் செய்து மேற்சொல்லியபடியுள்ள பசுக்களையும் எள்ளு, பட்டு இவைகளையும் கொடுத்தார். இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வீடுகளிலும் செய்துவந்தார். பின்பு பசுக்கள், ப்ராஹ்மணர்கள், தேவதைகள் பெரியோர்கள், ஆசார்யர்கள், மற்ற ஸகல பூதங்கள் ஆகிய தம்மிடத்திலிருந்து உண்டான வைகளை நமஸ்கரித்து மங்கள த்ரவியங்களை ஸ்பர்சித்தார் (தொட்டார்) அதன் பின் பூலோகத்திற்கே ஆபரணமாகவிருக்கும் தம்முடைய சரீரத்தை மிகவும்





திவ்யமான வஸ்திரம், ஆபரணம், சந்தனம், புஷ்பம் ஆகிய இவைகளால் அலங்கரித்துக்கொண்டார். பின்பு நெய்யில் தம்முடைய ப்ரதிபிம்பத்தை பார்த்தார். அதன்பின் கண்ணாடி, பசு, விருஷபம், ப்ராஹ்மணன், தேவதை ஆகிய இவைகளைத் தர்சித்தார். பிறகு அந்தப்புரத்தில் வஸிக்கும் ஜனங்களுக்கும், பட்டணத்து ஜனங்களுக்கும் இஷ்டமான வஸ்துக்களைக் கொடுத்து ஸந்தோஷப்படுத்தித் தாமும் ஆனந்தத்தை அடைந்தார். சந்தனம், புஷ்பம், தாம்பூலம் முதலியவைகளை ப்ராஹ்மணர்களுக்கும் முன்னதாகக் கொடுத்து, பின்பு மித்திரர்களுக்கும், அதன்பின் ஜனங்களுக்கும், அதன்பின் தம்முடைய பத்தினிகளுக்கும், கொடுத்து எஞ்சியவைகளைத்தாம் உபயோகித்துக் கொண்டார். அதற்குள் ஸுக்ரிவம் முதலிய குதிரைகளைப்பூட்டி அற்புதமான ரதத்தை தாருகன் வாசலில் நிறுத்தி, கிருஷ்ணனை நமஸ்கரித்து நின்றான்.

அதனைக்கண்ட பகவான் ஸாத்யகி, உத்தவர் இவர்களுடன் ஸாரதியின் கையைப்பிடித்துக்கொண்டு ரதத்தின் மீது ஏறினார். அது ஸூர்யன் உதயபர்வதத் தை அடைந்தாற்போலிருந்தது. அந்தப்புர ஸ்திரீகள் வெட்கத்துடனும் அன்புடனும் கிருஷ்ணனை கடாக்ஷித்து, ச்ரமப்பட்டு விடைகொடுத்தார்கள். இப்படி பகவான் அநேக ஸ்திரீகளுடைய வீட்டிலிருந்து, அநேக கிருஷ்ணனாக வெளியில்வந்து, ஒரு கிருஷ்ணனாகி, ஸபைக்குச்சென்றார். இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் எல்லாவிருஷ்ணிகளாலும் சுற்றப்பட்டு ஸுதர்மா என்ற ஸபைக்குச்சென்றார். அந்த ஸபையி லிருப்பவர்களுக்குப் பசி, தாஹம் முதலிய ஆறுவகை

விகாரங்களில்லை. அந்த ஸபையில் உத்தமமான ஆஸனத்தில் கிருஷ்ணன் உட்கார்ந்து தம்முடைய தேஜஸ்ஸால் திக்குகளைப் ப்ரகாசிக்கச் செய்தார். மற்ற யாதவர்கள் அவரைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அது ஆகாயத்தில் நக்ஷத்திரங்களுடைய மத்தியில் சந்திரன் பிரகாசிப்பது போலிருந்தது. அப்பொழுது சிரிக்கும்படி பேசக்கூடியவர்கள் (விகடகவிகள்), பலவகையான ஹாஸ்யங்களால் கிருஷ்ணனுக்குச் சந்தோஷத்தை உண்டு பண்ணினார்கள். நர்த்தனஞ் செய்யும் புருஷர்களும், ஸ்திரீகளும், மிருதங்கம், வீணை, முரஜம், புல்லாங்குழல், தாளம், சங்கம், இவை களை முழக்கிக்கொண்டு நர்த்தனஞ்செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள். ஸூதர்களும், மாகதர் களும், வந்திகளும் ஸ்தோத்திரஞ்செய்தார்கள்.

மேலும் அங்கிருந்த சில ப்ராஹ்மணர்கள் புண்ய ச்லோகர்களான முந்திய அரசர்களுடைய சரிதங் களைச் சொன்னார்கள்; அப்பொழுது ஒரு புருஷன் ஸ்ரீகிருஷ்ணனை பார்ப்பதற்காக வந்தான். காவலாட்கள் பகவானிடத்தில் தெரிவித்து ஸதஸ்ஸில் அவனை அழைத்துச்சென்றார்கள். அந்தப் புருஷன் அஞ்ஜலி பந்தஞ்செய்து பரமேச்வரனாகிய கிருஷ்ணனுக்கு நமஸ்காரஞ்செய்து "ஜராஸந்தன் திக்விஜயஞ் செய்யும் பொழுது எந்த அரசர்கள் அவனைக்கண்டு வணங்கவில்லையோ, அவர்களை பலாத்காரமாகக் கொண்டுவந்து காராகிருஹத்தில் அடைத்து வைத்தி ருக்கிறான். இப்படி கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் இரண்டு லக்ஷம் அரசர்கள் என் முகமாகத் தங்களிடம் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள். எப்படியேனில் "ஓ கிருஷ்ண! அளவற்ற மஹிமையுள்ளவரே! சரணாகதர்





களுடைய பயத்தை நிவர்த்திப்பவரே! பேத புத்தி யுள்ளவர்களான நாங்கள் ஸம்ஸாரத்திலிருந்து பயந்து உம்மைச் சரணமடைகிறோம். இந்த ஜனங்கள் காம்ய கர்மங்களையும் நிஷித்த கர்மங்களையும் விரும்பு கிறார்கள். தனக்கு க்ஷேமத்தைச் கொடுக்கக்கூடியதும், உம்மால்சொல்லப்பட்டதுமான நல்ல கர்மத்தைச் செய்கிறதில்லை. அப்படிப்பட்ட ஜனங்களுக்கு பிழைத்திருக்கவேண்டுமென்கிற ஆசையை ஒரு க்ஷணத்தில் எந்த காலமானது போக்கடிக்கிறதோ, அந்த காலஸ்வரூபியான உமக்கு நமஸ்காரம். ஓ ஈச! நீர் ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும் துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்கும், பூமியில் அவதரித்திரிக்கிறீர். அப்படி யிருக்க உம்முடைய உத்திரவை மீறி நடக்கிறவன் க்ஷேமத்தை அடைகிறதென்றும் உம்முடைய பக்தர்கள் துக்கிப்பதென்றும், இரண்டும் யுக்தமில்லை.

மேலும் உம்மை ஸேவித்து யோகிகளால் அடையக் கூடிய இயற்கையான ஸுகத்தை நாங்கள் அடையாமல் உம்முடைய மாயையால் மோஹித்து ஸ்வப்னம் போன்ற விஷய ஸுகத்தில் ஆசைகொண்டு எப்பொழுதும் பயமுள்ளதும், பிணத்துக்கொப்பானது மான இந்தச் சரீரத்தால் களத்திரம், புத்திரன் இவைகளைப்பற்றி யோஜிப்பதாகிய சுமையைச் சுமக்கிறோம். சிங்கமானது ஆடுகளை ஜயித்தாற்போல எங்களெல்லோரையும் ஜராஸந்தன் காராகிருஹத்தில் அடைத்து வைத்திருக்கிறபடியால் சரணமடைந்தவர் களுடைய துக்கத்தை நிவர்த்திக்கும் பாத முள்ளவராகிய நீர் ஜராஸந்தனென்ற கர்மபாசத்தை நாசஞ்செய்து எங்களைக் காப்பாற்றும். அந்த ஜராஸந்தன் லக்ஷம் யானை பலமுள்ளவனானதால்

அவனை ஜயிக்க எங்களால் முடியவில்லை. ஓ சக்ராயுதத்தையுடையவரே! இவன் பதினேழு தரம் உம்மால் ஜயிக்கப்பட்டும், பதினெட்டாவது தடவை மனிதவடிவங்கொண்டவரும், அளவற்ற பராக்கிரம முள்ளவருமான உம்மை ஜயித்து மிக்க கர்வங் கொண்டு உம்மைச்சார்ந்தவர்களான எங்களை உபத்திரவிக்கிறான். இந்த விஷயத்தில் எதனைச் செய்யவேண்டுமோ அதனைச் செய்யும். ஜராஸந்தனால் அடக்கப்பட்ட அரசர்கள் உம்மைப் பார்க்க விரும்பினவர்களாக உம்முடைய பாதத்தைச் சரணமடைகிறார்கள். தீனர்களான அவர்களுக்கு க்ஷேமத்தைச்செய்யும்" என்று சொன்னான்.

33–37. இப்படி அந்த தூதன் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது ஸூர்யன்போல் மிக்க தேஜஸ்ஸுள்ளவரும், பொன்னிறமான ஜடைகளுள்ள வரும், தேவர்ஷியுமாகிய நாரதர் அவ்விடம் வந்தார். அவரைக்கண்ட கிருஷ்ணன் ஸகல லோகபாலர்களுக்கு அதிபதியானாலும் எழுந்திருந்து தலை வணங்கி நமஸ் கரித்தார். ஸபையிலிருப்பவர்களும் கிருஷ்ணனைச் சார்ந்தவர்களும் ஸந்தோஷமாக நாரதரை நமஸ்கரித் தார்கள். இப்படி நாரதரைப் பூஜித்து ஆஸனத்திலுட் கார்த்தி கிருஷ்ணன் பிரியமான வார்த்தைகளைச் சொல்லலானார். எப்படியென்றால் "முவ்வுலகங்களும் பயமில்லாமல் க்ஷேமமாகவிருக்கின்றனவா ? நீர் ஸகல லோகங்களிலும் ஸஞ்சரிப்பதனால் அந்தந்த லோக விருத்தாந்தம் எங்களுக்குத் தெரியவருகிறது. அதுவே எங்களுக்குப் பெரிய லாபமாகவிருக்கிறது. ஈச்வரனால் ஸிருஷ்டிக்கப்பட்ட லோகங்களில் உமக்குத் தெரியாத தொன்றுமில்லை ஆதலால் பாண்டவர்களுடைய





ஸமாசாரத் தைப்பற்றி உம்மைக் கேட்கிறேன்" என்றார்.

38–45. அதனைக்கேட்ட நாரதர் "ஓ மிக்க மஹிமையுள்ளவரே! ஸகலப் பிராணிகளிடத்திலும் தம்முடைய சக்திகளால் மறைக்கப்பட்டு கட்டையில் அக்னிபோல நீர் வஸிக்கிறீர். மேலும் நீர் ப்ரஹ்ம தேவருக்கும் மோஹத்தை யுண்டுபண்ணக்கூடிய மாயாவியாகவிருக்கிறீர். அப்படிப்பட்ட உம்முடைய பலவித மாயையை நான் பார்த்தேன் (ஆனதால் நீர் அறியாதவர்போல் பாண்டவர்களை பற்றி கேட்பது எனக்கு ஆச்சரியமாகத் தோன்றவில்லை) மேலும் நீர் உண்மையில்லாததான இந்த ஜகத்தை ஸத்தியம் போலத் தம்முடைய மாயையால் தோன்றச்செய்து அதனைப்படைத்தும், ஸம்ஹரித்தும், எல்லாவற்றையும் விட விலக்ஷணமான ஸ்வரூபமுள்ளவராகப் பிரகாசிக்கிறீர். அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரம். உம்முடைய அபிப்பிராயத்தை யாரால் நன்றாகத் தெரிந்துகொள்ள முடியும் ? பின்னும் நீர் அனர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய சரீரத்தையடைந்து ஸம்ஸாரியாக விருப்பவனும் அதிலிருந்து மோக்ஷத்தையடைய உபாயத்தை யறியாதவனுமான ஜீவனுக்காக பூமியில் அவதாரங்களைச்செய்து தம்முடைய கீர்த்தியாகிய தீபத்தைப் பிரகாசிக்கச் செய்திருக்கிறீர். (அக்ஞானமா கிற இருட்டைப் போக்கடிப்பதற்காக) அப்படிப்பட்ட உம்மைச் சரணமடைகிறேன். ஆனாலும் மனுஷ்ய பாவனையுள்ள உமக்கு அத்தையின் புத்திரனாகிய தர்மபுத்திரருடைய எண்ணத்தைத் தெரிவிக்கிறேன். பாண்டுவின் புத்திரராகிய தர்மபுத்திரர் ராஜஸூய மென்ற சிறந்த யாகத்தைச்செய்து உம்மைப் பூஜிக்கப் போகிறார். அதனை நீர் அனுமதிக்க வேண்டும். அந்த

சிறந்த யாகத்தில் உம்மைப் பார்ப்பதற்காக தேவர்களும் கீர்த்தியுள்ள அரசர்களும் வரப்போகிறார்கள். வேதமூர்த்தியான உம்மை த்யானித்தும் உம்முடைய சரிதங்களைக்கேட்டும், உம்முடைய குணங்களை உச்சரித்தும் சண்டாளன் முதலியவர்களும் பரிசுத்தியை அடைகிறார்கள். உம்மைத் தர்சித்தவர்களும், ஸ்பர்சித்தவர்களும் சுத்தியடைவதற்கு என்ன ஆக்ஷேபம்? ஸகல லோகங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியவரே! உம்முடைய கீர்த்தியானது ஸகல லோகங்களுக்கும் அலங்காரமாக விருக்கிறது. பாதாளத்திலும், ஆகாயத்திலும், பூமியிலும் பிரஸித்த மாகவிருக்கிறது. மேலும் உம்முடைய பாதத்திலிருந்து பெருகிய ஜலமானது ஆகாயத்தில் மந்தாகினி யென்றும், பாதாளத்தில் போகவதியென்றும், பூமியில் கங்கையென்றும் பெயரையடைந்து லோகத்தைப் பரிசுத்தப்படுத்துகிறது" என்று சொன்னார்.

46–48. அதனைக்கேட்ட அவ்விடத்திலிருந்த யாதவர்கள் கிருஷ்ணனுடைய அபிப்பிராயத்தை (தர்ம புத்திரருடைய யாகத்திற்குப் போகவேண்டுமென்பதை) ஒப்புக்கொள்ளாமலிருக்கும் பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அழகான வார்த்தைகளால் அவர்களை மயக்கிக் கொண்டு உத்தவரை நோக்கி "ஓ உத்தவ! நீர் நமக்கு மேலான கண்ணாகவும், மித்திரராகவும், மந்திரா லோசனையின் உண்மையை யறிந்தவராகவுமிருக்கிறீர். ஆனதால் இப்பொழுது நாம் எதனை ச்ரத்தையுடன் செய்யவேண்டும் சொல்லும்" என்று கேட்டார். இப்படி எல்லாவற்றையுமறிந்தவரான கிருஷ்ணன் அறியாதவர் போலக்கேட்க அவருடைய உத்திரவினால் உத்தவர் பதில் சொல்ல ஆரம்பித்தார்.





நோட்டு

ஆறுவகை விகாரங்கள் – பசி, தாஹம், சோகம், மோஹம், கிழத்தனம், மரணம், ஆறு ஊர்மிகள். ஸூதர்கள், ப்ராஹ்மண ஸ்திரியினிடத்தில் க்ஷத்திரியனுக்குப் பிறந்தவன். மாகதர்கள் க்ஷத்திரிய ஸ்திரீயினிடத்தில் வைச்யனுக்கு ஜனித்தவன். வந்திகள் அரசர்களை ஸ்துதிப்பவர்கள். காம்யகர்மங்கள் பலனை யுத்தேசித்துச் செய்யும் கர்மங்கள் நிஷித்தம். வேதத்தில் எதைச்செய்யக் கூடாதென்று தடுக்கப் பட்டிருக்கின்றனவோ அவை.

♣♣♣♣

# அத்தியாயம்-71

## *கிருஷ்ணன் ராஜஸூயத்திற்காக இந்திரப் ப்ரஸ்தஞ் சென்றது.*

தேவர்ஷியாகிய நாரதருடைய வார்த்தையைக் கேட்டும், ஸதஸ்யர்களுடைய அபிப்பிராயத்தையும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய அபிப்பிராயத்தையும் அறிந்தும் மிக்க புத்திசாலியான உத்தவர் கிருஷ்ணனை, பார்த்து "ஓ தேவ! உமக்கு அத்தையின் புத்திரராகிய தர்மபுத்திரர் யாகஞ்செய்யப் போகிறதாயும், அதற்கு உம்மை ஒத்தாசை செய்ய வேண்டுமென்றும் தேவர்ஷியாகிய நாரதர் சொன்னாரல்லவா ? அதனையுஞ் செய்ய வேண்டும். சரணமடைந்திருக்கும் அரசர்களையும் காப்பாற்ற வேண்டும். ஆனால் ராஜஸூயஞ் செய்பவன் திக்குகளை ஜயிக்கவேண்டும். அப்பொழுது ஜராஸந்தனை வதஞ்செய்யும்படி நேரும். அதனால் ராஜஸூயம், சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவது என்ற இரண்டு கார்யமும் ஸித்திக்கும். அதனால் நமக்கு அநேக கார்யங்கள் ஸித்திக்கும். ஓ கோவிந்த! அரசர்களைக் காராகிருஹத்திலிருந்து விடுவிப்பதால் உமக்குக் கீர்த்தியுண்டாகும். ஜராஸந்தன் அநேகம் யானை பலமுள்ளவன்; அவனுக்குச் ஸமமான பலமுள்ளவன, பீமஸேனன் ஒருவன்தான். ஆனாலும் ஜராஸந்தனுக்கு அநேக அக்ஷௌஹிணீ சைன்னியங்களிருப்பதால் ஸைன்னியங்களுடன் யுத்தத்திற்கு வந்தால் அவனை பீமஸேனனாலும் ஜயிக்கமுடியாது. ஆனால் த்வந்த யுத்தத்தில் (இரண்டு பேர்களாக மாத்திரம் சண்டை செய்வது) பீமஸேனன் அவனை ஜயிக்கவேண்டும். (பீமஸேனனால் அவனுக்கு





மரணமென்று ஏற்பட்டிருக்கிறது என்று **கருத்து** அந்த ஜராஸந்தன் ப்ராஹ்மணர்களைத் **தைவமாகக்** கொண்டவன். ஆனதால் ப்ராஹ்மணன் **அவனை** யாசித்தால் ஒருபொழுதும் அதனைத் தள்ளமாட்டான். ஆனதால் பீமஸேனன் ப்ராஹ்மண வேஷங்கொண்டு அவனை யாசித்தால் த்வந்த யுத்தஞ் செய்ய ஒப்புக் கொள்வான். அப்பொழுது பீமன் உம்முடைய முன்பாக அவனுடன் யுத்தஞ் செய்தால் அவனைக் கொல்வான்; ஸந்தேஹமில்லை. ரூபமில்லாத கால ஸ்வரூபியாகவிருக்கும். உம்முடைய ஸன்னிதானத்தால் ஹிரண்யகர்ப்பர், ஜகத்தைப் படைக்கிறார். உம்முடைய ஸன்னிதானத்தால் பரமசிவன் ஜகத்தை ஸம்ஹரிக்கிறார். (ஜகத்தை உண்டு பண்ணுவதற்கும் ஸம்ஹரிப்பதற்கும் முறையே ப்ரஹ்மா, பரமசிவன் நிமித்தமேயொழிய உம்முடைய ஸன்னிதானமே முக்கிய காரணம் அதுபோல் ஜராஸந்தன் வதத்தில் பீமஸேனன் நிமித்த காரணமேயொழிய உம்முடைய ஸன்னிதானமே முக்கிய காரணமாகிறது என்று கருத்து.)

மேலும், கோபிகைகள் சங்கசூடனைக் கொன்று தங்களைக் காப்பாற்றியதை எப்படி கானஞ் செய்கிறார்களோ, மஹர்ஷிகளும் நாங்களும் உம்மால் செய்யப்பட்ட கஜேந்திர மோக்ஷத்தையும், ராவண வதத்தையும், கம்ஸனைக் கொன்று வசுதேவர், தேவகி இவர்களைக் காப்பாற்றியதையும் எப்படி கானஞ் செய்கிறோமோ, அப்படி ராஜ பத்தினிகளும் குழந்தைகளை ஸமாதானஞ் செய்வது முதலிய காலங்களில் 'ஓ! குழந்தைகளே! அழவேண்டாம். ஸ்ரீ கிருஷ்ணன் ஜராஸந்தனைக் கொன்று உங்களுடைய

தந்தையை ஸம்ரக்ஷிப்பார்' என்று உம்முடைய சுத்தமான கீர்த்தியைக் கானஞ் செய்கிறார்கள். (ஆனதால் அவர்களிடம் தயை செய்து காப்பாற்றவேண்டுமென்று கருத்து) ஜராஸந்தனைக் கொன்றால் அநேக கார்யங்கள் முடியும். (சிசுபாலன் முதலியவர்கள் கொல்லப்படுவார்கள் என்று தாத்பர்யம்) ஜராஸந்தன் முதலியவர்களுடைய பாபத்தின் பயனாலும், அவனால் நிர்ப்பந்திக்கப்பெற்ற அரசர்களுடைய புண்ணிய பரிபாகத்தாலும், ஜராஸந்தன் கொல்லப்படுவான்; ஸந்தேஹம் இல்லை" என்று சொன்னார். (ஆனதால் இந்த யாகம் உமக்கு இஷ்டமானதேயாம். யாகத்திற்கு நீர் சென்றால் எல்லாக் கார்யமும் ஸித்திக்குமென்று கருத்து.)

*11–17.* இப்படி ஸகல கார்யங்களுக்கும் தகுதியாக உத்தவர் சொல்ல அதனைக்கேட்ட நாரதரும், பெரியோர்களான யாதவர்களும், கிருஷ்ணனும் ஒப்புக் கொண்டார்கள். அப்பொழுது தேவகியின் புத்திரராகிய ஸ்ரீகிருஷ்ணன் தர்மபுத்திரருடைய யாகத்திற்கு போகவேண்டும் என்று தாருகன், ஜைத்ரன் முதலிய வேலைக்காரர்களுக்கும், பெரியோர்களுக்கும் சொன்னார். பின்னுமவர் தம்முடைய பத்தினிகளை அவர் அவர்களுடைய புத்திரர்களுடனும், ஸாமக்ரிகளுடனும், பயணப்படுத்தினார். பலராமனையும் உக்கிரஸேனரையும் புறப்படும்படி சொல்லி விட்டு, தாருகனால் கொண்டு வரப்பட்ட தம்முடைய ரதத்திலேறினார், மேலும் ரதங்கள், யானைகள், குதிரைகள், காலாட்படைகள் அடங்கிய ஸேனைகள் புறப்பட்டன. மிருதங்கம், பேரி ஆனகம், சங்கம், கோமுகம் இவைகள் முழங்கப்பட்டன. அதனால் திக்குகளில் மிக்க சப்தம்





பரவியது. பதிவ்ரதைகளான கிருஷ்ணனுடைய ஸ்திரீகள் உத்தமமான வஸ்திரம். ஆபரணம், சந்தனம், புஷ்பம் இவைகளால் அலங்கரித்துக் கொண்டு குதிரைகள், தங்கப் பல்லக்கு முதலிய வாஹனங்களில் ஏறிக்கொண்டு சென்றார்கள். கத்தி முதலிய ஆயுதங்களைத்தரித்த யாதவர்கள் அவர்களைச் சுற்றிக்கொண்டு சென்றார்கள். வேலைக்காரிகளும், வேலைக்காரர்களுடைய ஸ்திரீகளும், தாஸிகளும், ஒட்டகம், எருது, எருமை, கோவேரிக் கழுதை, அச்வதரி (குதிரைக்குக் கழுதையினிடம் உண்டானது), வண்டிகள், பெண் யானை இவைகளின் மீது ஏறிக்கொண்டு சென்றார்கள். மேலுமவர்கள் விளாமிச்சம் வேர் முதலியவைகளால் செய்யப்பட்ட கூடாரங்கள், கம்பளம், வஸ்திரம் முதலிய மற்ற ஸாமக்ரிகளையும் வண்டி முதலியவைகளில் ஏற்றிக் கொண்டு போனார்கள். மேலும், அந்த ஸைன்னியமானது பருத்த த்வஜபடம், குடை, சாமரம், மேலான ஆயுதங்கள், ஆபரணங்கள், கிரீடம், கவசம் ஆகிய இவைகளுள்ளதும் பயங்கரமான சப்தமுள்ளதுமாக இருந்தது; ஆனதால் திமிங்கிலம், அலை இவைகளால் கலங்கியதும், ஸூரியனுடைய கிரணங்களால் நிறைந்ததுமான ஸமுத்திரம் போலிருந்தது.

*18–20.* பின்பு நாரதமஹர்ஷி கிருஷ்ணனால் பூஜிக்கப்பட்டு அவரைத் தர்சித்ததால் மிக்க ஸுகத்தை அடைந்து அவரையே த்யானஞ் செய்து கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றார். பின்பு பகவான் அரசர்களுடைய தூதனை நோக்கி 'ஓ தூதா! அரசர்களைப்பயப்பட வேண்டாமென்று சொல்லு. ஜராஸந்தனை நாசஞ் செய்கிறேன்' என்று பிரியமான

வார்த்தைச் சொல்லி அனுப்பினார். அதனைக்கேட்ட தூதன் அரசர்களிடஞ்சென்று நடந்த ஸமாசாரத்தைத் தெரிவித்தான். அந்த அரசர்களும் ஸ்ரீகிருஷ்ணனுடைய தர்சனத்தை எதிர் பார்த்திருந்தார்கள்.

21–36. பின்பு பகவான் ஆனர்த்தம், ஸௌவீரம், குருக்ஷேத்திரம், ரைவதகம் முதலிய மலைகள், நதிகள், பட்டணங்கள், கிராமங்கள், இடைச்சேரி முதலியவை களைத் தாண்டி விருஷத்வதீ, ஸரஸ்வதி, பாஞ்சாலதேசம், மத்ஸ்யதேசம் ஆகிய இவைகளைத் தாண்டி இந்திரப் ப்ரஸ்தஞ் சென்றார். மனிதர்களால் தர்சிக்க முடியாதவராகிய ஸ்ரீகிருஷ்ணன் வருவதைக் கேள்விப்பட்ட தர்மபுத்திரர் உபாத்தியாயருடனும், மித்திரர்களுடனும் பட்டணத்திலிருந்து வெளியில் வந்தார். அப்பொழுது வாத்யங்கள் முழங்கப்பட்டன; பாடகர்கள் பாடினார்கள், ப்ராஹ்மணர்கள் வேதத்தை கோஷித்தார்கள். இப்படி தர்மபுத்திரர் ஸ்ரீகிருஷ்ணனை எதிர்கொண்டழைத்தது இந்திரியங்கள் ப்ராணனையழைத்தாற் போலிருந்தது. தர்மபுத்திரர் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து மிக்க ஸ்நேஹத்தால் உருகின ஹ்ருதயமுள்ளவராகி, கிருஷ்ணனைப் பார்த்து வெகுகாலமானதாகையால் அடிக்கடி தழுவினார். இப்படி லக்ஷ்மிதேவிக்கு வாஸஸ்தலமாகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரீரத்தைத் தர்மபுத்திரர் ஆலிங்கனஞ் செய்து கொண்டதனால் பாபமற்றவராகி ஆனந்த கண்ணீரைப் பெருக்கி, மயிர்க்கூச்சலை அடைந்து, இவ்வுலகத்தை மறந்து மேலான ஆனந்தத்தை அடைந்தார். அம்மானுடைய புத்திரரான (அம்மாஞ்சேய்) ஸ்ரீ கிருஷ்ணனைப் பீமஸேனர் ஆலிங்கனஞ் செய்து மிக்க ஆனந்தத்தை





அடைந்தார். பின்னும் அர்ஜுனரும், நகுல, ஸஹதேவர்களும் ஸந்தோஷமாகப் பகவானைக் கட்டிக் கொண்டார்கள். அப்பொழுது பகவான் தர்மபுத்திரருக்கும், பீமசேனருக்கும் நமஸ்காரஞ் செய்தார். நகுல ஸஹதேவர்கள் பகவானை நமஸ்கரித்தார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் ப்ராஹ்மணர்களையும், பெரியோர்களையும் நமஸ்கரித்து, எல்லோராலும் பூஜிக்கப்பட்டு குருக்களையும், ஸ்ருஞ்ஜயர்களையும், கேகயர்களையும் பூஜித்தார். ஸூதர்களும், மாகதர்களும், வந்திகளும், ஸ்தோத்திரஞ் செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள்; விகடகவிகள் விகடஞ் செய்தார்கள்; மிருதங்கம், சங்கம்,படஹம், வீணை, புல்லாங்குழல் ஆகிய வாத்தியங்கள் கோஷிக்கப்பட்டன. ப்ராஹ்மணர்கள் தாமரைக் கண்ணராகிய ஸ்ரீ கிருஷ்ணனைத் துதித்தார்கள்.

நர்த்தனஞ் செய்பவர் நர்த்தனஞ் செய்தார்கள். இம்மாதிரி மித்திரர்களால் உபசரிக்கப்பெற்றுப் புண்யச்லோகர்களுக்குச் சிறந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களால் துதிக்கப்பட்டு, பட்டணத்தில் பிரவேசித்தார். அந்த நகரத்தில் வீதிகள் யானைகளுடைய மத ஜலத்தால் நனைக்கப்பட்டிருந்தன. பலவகையான த்வஜங்களும் கட்டப்பட்டிருந்தன. பூர்ண கும்பங்கள் வைக்கப்பட்டிருந்தன. புருஷர்களும், ஸ்திரீகளும் புதிய பட்டுக்களாலும், ஆபரணம், புஷ்பம், சந்தனம் இவைகளாலும் அலங்கரித்துக் கொண்டிருந்தார். ஒவ்வொரு வீடுகளிலும் தீபங்களும், பலிகளும் வைக்கப்பட்டிருந்தன; ஜன்னல் வழியாக தூபத்தின் புகை வெளிவருவதால் வாஸனையாகவும், அழகான பதாகைகளுள்ளனவாகவுமிருந்தன. ஒவ்வொரு

வீடுகளிலும் தங்கக்கலசங்கள் வைக்கப்பட்டிருந்தன. கலசத்திற்குக் கீழ்ப்பட்ட பாகம் வெள்ளியால் அலங் கரிக்கப்பட்டிருந்தது. அப்பொழுது மனிதர்களுடைய கண்களுக்குமிக்க திருப்தியுண்டுபண்ணுகிற பகவான் வருவதைக் கேள்விப்பட்ட பட்டணத்திய ஸ்திரீகள் பகவானைத் தர்சிக்க வேண்டுமென்ற மிக்க ப்ரியத்தால் வஸ்திரம், தலைமயிர் ஆகிய இவைகள் அவிழ்ந்தவர்களாகி வீட்டு வேலைகளை விட்டு, படுக்கையில் தங்கள் பர்த்தாவையும் விட்டு, ராஜவீதியில் வந்தார்கள். ராஜவீதி யானை, குதிரை, ரதம், காலாட்படை இவைகளால் நெருக்கமாக இருந்ததனால் தங்கள் கிரஹத்தின் மாடியின் மீதேறி ஸ்ரீ கிருஷ்ணனையும் அவருடைய பத்தினிகளையும் தர்சித்து மனத்தால் அவரைத் தழுவி, புஷ்பங்களை வர்ஷித்து அன்பு பொருந்திய பார்வையால் நல்வரவா என்று கேட்டார்கள். மேலும் ஸ்ரீகிருஷ்ணனுடைய பத்தினிகளைப் பார்த்துப் பட்டணத்து ஸ்திரீகள், "இந்தக் கிருஷ்ணனுடைய பத்தினிகள் என்ன புண்ணியஞ் செய்தார்களோ, இவர்கள் புருஷோத்தம ராகிய பகவானுடைய புன்சிரிப்புள்ள முகத்தைத் தர்சித்தும், அவரால் கடாக்ஷிக்கப்பட்டும் நேத்திரா னந்தத்தை அடைந்து சந்திரனுடன் நக்ஷத்திரங்கள் போல வஸிக்கிறார்கள்" என்று சொல்லிக்கொண்டார்கள்.

37–40. ஒவ்வொரு தொழில்களிலும் முக்கியர்களாக இருப்பவர்களும், பட்டணத்து ஜனங் களும் வீதிகளில் ஒவ்வொரு இடத்திலும் கிருஷ்ணனைத் தர்சித்து மங்கள த்ரவியங்களை வைத்துக்கொண்டு பகவானைப் பூஜித்து சுத்தர்களா னார்கள். அந்தப்புர ஜனங்கள் கண்கள் மலர்ந்து





மிக்க ப்ரியத்துடன் எதிரில் வந்து அழைத்தார்கள். இப்படி எல்லோராலும் பூஜிக்கப்பட்டு கிருஷ்ணன் ராஜகிருஹஞ் சென்றார். குந்திதேவி ஸஹோதரனு டைய புத்திரராகிய கிருஷ்ணனைக் கண்டவுடன் ஆஸனத்திலிருந்து எழுந்திருந்தாள். அவருடைய நாட்டுப்பெண்ணும் யெழுந்திருந்தாள். பின்னும் அந்த குந்தி மூவுலங்களுக்கும் அதிபதியான ஸ்ரீகிருஷ்ணனை மிக்க ப்ரியத்துடன கட்டிக்கொண்டாள். தேவர்களுக் கும் தேவராகிய ஸ்ரீ கிருஷ்ணனை வீட்டிற்கு அழைத்து வந்த தர்மபுத்திரர், மிக்க ஆனந்தத்தால் பரவசமாகி அவரைப் பூஜிப்பதற்காக, இன்னது செய்யவேண்டியதென்பதை அறியாமலிருந்தார்.

41–44 அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் பிதாவின் ஸஹோதரியான குந்தியையும், ஆசார்ய பத்தினிகளை யும் நமஸ்கரித்தார். த்ரௌபதியும், ஸஹோதரியான ஸுபத்திரையும் கிருஷ்ணனை நமஸ்கரித்தார்கள். பின்பு குந்தியால் தூண்டப்பட்டு த்ரௌபதி ருக்மிணியையும், ஸத்தியபாமையையும், ஜாம்பவதி யையும், காளிந்தியையும், மித்திரவிந்தையையும், நக்னஜித்தின் புத்திரியான ஸதியையும், மற்றும் கிருஷ்ண பத்னிகளையும், வஸ்திரங்களாலும், புஷ்பங் களாலும், ரத்னங்களாலும், ஆபரணங்களாலும் பூஜித்தார்கள். இப்படிக் கிருஷ்ணன் பத்தினிகளுடனும், மந்திரிகளுடனும், ஸைன்னியத்துடனும் புதிது புதிதாகத் தர்மபுத்திரரால் உபசரிக்கப்பெற்றுச் ஸுகமாக வஸித்தார்.

45–46 ஸ்ரீகிருஷ்ணன் இந்திரப்ரஸ்தத்தில் சிலமாத காலம் வஸித்து, அர்ஜுனனுடன் ரதத்திலேறி

விளையாடிக்கொண்டு தரும்புத்திரருக்குப் ப்ரியத்தைச் செய்தார். அப்பொழுது காண்டிவமென்ற வனத்தை அக்னிக்குக் கொடுத்து, அக்னியை திருப்தி செய்தார். மயனென்ற அஸுரனை ஸம்ரக்ஷித்தார். அந்த மயன் தருமபுத்திரருக்குத் திவ்யமான ஸபையை நிர்மாணித்தான்.





# அத்தியாயம்–72

## பீமஸேனர் ஜராஸந்தனைக் கொன்றது.

ஒருநாள் தர்மபுத்திரர் தம்முடைய ஸஹோதர்களுடன் சிங்காஸனத்தில் உட்கார்ந்திருந்தார். அப்பொழுது மஹர்ஷிகளும், ப்ராஹ்மணர்களும், க்ஷத்திரியர்களும், வைச்யர்களும், ஆசார்யர்களும் குலத்தில் பெரியோர்களும், ஞாதிகளும், ஸம்பந்திகளும், பந்துக்களும் உட்கார்ந்திருந்தார்கள். அந்த ஸமயத்தில் தர்மபுத்திரர் ஸ்ரீகிருஷ்ணனை நோக்கி, "ஓ கோவிந்த! பிரபுவே! ராஜஸூயமென்ற யாகஞ்செய்து சுத்தமான உம்முடைய விபூதிகளைப் பூஜிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அதனை முடித்து வைக்க வேண்டும். ஓ ஈச உம்முடைய பாதுகைகளை எவர்கள் ஸேவிக்கிறார்களோ, பாபத்தைப்போக்கக்கூடிய அந்தப் பாதங்களை எவர்கள் த்யானஞ் செய்கிறார்களோ. எந்தப் புத்திமான்கள் அவைகளைப் பற்றிச் சொல்லுகிறார்களோ, "ஓ தாமரைமலரைத் தொப்பிளிலுடையவரே! அவர்கள் ஸம்ஸாரத்திலிருந்து முக்தியை அடைவார்கள். மற்றவர்களால் அடையமுடியாது. ஓ தேவர்களுக்கும் தேவரே உம்முடைய பாதஸேவையின் மஹிமையை ஜனங்கள் பார்க்கட்டும். எவர்கள் பக்தியின் மஹிமையையறிந்து உம்மைச் ஸேவிக்கிறார்களோ, எவர்கள் கர்மத்தையே ப்ரதானமென்று நினைத்து உம்மைச் ஸேவிக்கவில்லையோ, இந்த இரண்டு இனத்தாராகிய குருக்களுக்கும் ஸிருஞ்ஜயர்களுக்கும் கிடைக்கும் பயனைக் காண்பியும். நீர் ஸகல ப்ராணிகளுக்கும் ஆத்மாவாக இருப்பவரும்

ஸமபுத்தியுள்ளவரும், தம்முடைய ஸுகானுபவம் உள்ளவரும் பரப்ரஹ்மமுமாக இருப்பதால், உமக்குத் தம்மைச்சார்ந்தவர், பிறர் என்ற பேதபுத்தியில்லை. கற்பகவிருக்ஷம்போல உம்மை ஆசிரயிப்பவர்களுக்கு அவர்களுடைய ஸேவைக்குத்தக்கபடி பயனைக்கொடுக்கிறீர். அதில் வித்தியாஸமில்லை" என்று சொன்னார்

7–11. அதனைக்கேட்ட பகவான் தர்மபுத்திரரை நோக்கி, "ஓ ராஜன், சத்ருக்களைக் கொல்பவரே நல்ல நிச்சயமுள்ளவராக இருக்கிறீர்; சுபமான கீர்த்தி லோகத்தில் பரவப்போகிறது. நீர் செய்ய வேண்டுமென்று விரும்பிய இந்தச் சிறந்த யாகமானது, மஹர்ஷிகள், பிதிருக்கள், தேவர்கள், மித்திரர்கள், ஆகிய இவர்களெல்லோருக்கும் இஷ்டமானதேயாம். ஸகல அரசர்களையும் ஜயித்துப் பூமியை வசப்படுத்திக் கொண்டு அதற்கு வேண்டிய ஸாமக்கிரிகளை ஸம்பாதித்து இந்தமஹாயாகத்தைச் செய்யும்; உம்முடைய இந்த ஸஹோதரர்கள் லோகபாலர்களுடைய அம்சமுள்ளவர்கள்; (அவர்களைக்கொண்டு அரசர்களை ஜயித்துவிடலாமென்று கருத்து) இந்திரியங்களுக்கு வசப்பட்டவர்களால் ஜயிக்க முடியாத என்னை இந்திரியங்களை நிக்கிரஹித்தவரான நீர் ஜயித்து விட்டீர், என்னிடத்தில் பக்திசெய்து, என்னையே கதியாகக் கொண்டவர்களை தேஜஸ்ஸாலும், கீர்த்தியாலும், ஐச்வர்யத்தாலும், ஸைன்னியம் முதலியவைகளாலும், தேவர்களாலும், ஜயிக்க முடியாது. அப்படியிருக்க அரசர்களால் உம்மை எப்படி ஜயிக்க முடியும்?" என்றார்.





12–21. அதனைக்கேட்ட தர்மபுத்திரர் **முகம்** மலர்ந்து மிக்க ப்ரியத்துடன் விஷ்ணுவின் **தேஜஸ்** உள்ளவர்களான ஸஹோதரர்களை, திக்குகளை ஜயிக்கும்படி அனுப்பினார். எப்படியெனில்:—தெற்கு திக்கில் ஸ்ருஞ்ஜயர்களையும் ஸஹாதேவனையும், மேற்கில், நகுலனை மத்ஸ்யர்களுடனும், வடக்கில் அர்ஜுனனை, கேகயர்களுடனும், கிழக்கில் பீமஸேனனை, மத்ரதேசத்தார்களுடனும் அனுப்பினார். அவர்கள் அவ்விடஞ் சென்று சூரர்களான அரசர்களை ஜயித்து, ஏராளமான தனத்தைத் தர்மபுத்திரரிடம் ஸமர்ப்பித்தார்கள். ஜராஸந்தன் ஒருவன்மாத்திரம் ஜயிக்கப்படவில்லை; அதனைப்பற்றி அரசன் ஆலோசித்துக்கொண்டிருக்க, ஸ்ரீகிருஷ்ணன் அவனை ஜயிக்கும் விஷயத்தில் உத்தவர் சொன்ன உபாயத்தைச் சொன்னார்.

பின்பு பீமஸேனர், அர்ஜுனன், ஸ்ரீ கிருஷ்ணன் ஆகிய மூவர்களும், ப்ராஹ்மண வேஷங்கொண்டு ஜராஸந்தன் வசிக்கும் கிரிவ்ரஜஞ் சென்றார்கள்; அதிதிகளுக்குப் பூஜை செய்யக்கூடிய ஸமயத்தில் கிருஹஸ்தனாகிய ஜராஸந்தனிடஞ் சென்று, ப்ராஹ்மண வேஷம் பூண்ட அந்த அரசர்கள், "ஓ அரசனே நாங்கள் வெகு தூரத்திலிருந்து உம்மிடத்தில் யாசகர்களாக வந்திருக்கிறோம். ஆனதால் நாங்கள் எதனை விரும்புகிறோமோ, அதனைக்கொடும், உமக்கு க்ஷேமமுண்டாகும். பொறுமையுள்ளவர்கள் எதைத்தான் ஸஹிக்கமாட்டார்கள்? துஷ்டர்கள் எதைத்தான் செய்யமாட்டார்கள்? கொடையாளிகள் எதைத்தான் கொடுக்கமாட்டார்கள்? சத்ரு, மித்திரன் என்ற பேதமில்லாமல் ஸமமாக நினைப்பவர்கள்

யாரை பிறர் என்று நினைப்பார்கள்? (ஆனதால் இதைக் கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியதில்லை என்று கருத்து.) எவன் அநித்யமான சரீரத்தைக் கொண்டு நித்தியமான கீர்த்தியை ஸம்பாதிப்பதில் நோக்கமில்லாமலிருக்கிறானோ, அவனைப் பற்றித் துக்கிக்க வேண்டும். ஹரிச்சந்திரன்,ரந்திதேவன், முத்கலன், சிபி, பலி, வேடன், கபோதம் (புறா) முதலிய அநேகர்கள் நிலையற்ற சரீரத்தைக் கொடுத்து ஸ்திரமான கீர்த்தியை அடைந்தார்கள்" என்று சொன்னார்.

22–27. அதனைக் கேட்ட ஜராஸந்தன் அவர்களுடைய பேச்சுக் குரல், ஆகிருதி, நாண் கயிறால் அடிக்கப்பட்ட மணிக்கட்டு ஆகிய இவைகளால் க்ஷத்திரியர்கள் என்று தெரிந்து கொண்டு, "இவர்களை முந்திப் பார்த்திருக்கிறோம்; இவர்கள் க்ஷத்திரியர்கள். ப்ராஹ்மண வேஷந் தரித்திருக்கிறார்கள். ஆனாலும் இவர்கள் என்னுடைய ஆத்மாவைக் கேட்டாலும் அதனைக் கொடுத்து விடுவேன். முன்னொருகால் மகாவிஷ்ணு இந்திரனுக்கு க்ஷேமத்தைச் செய்ய விரும்பி, ப்ராஹ்மண வேஷங்கொண்டு பலிசக்ரவர்த்தியை யாசித்தார். அவன் அதன் உண்மையை அறிந்திருந்தும், சுக்ராசார்யரால் தடுக்கப்பட்டும் அவருடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்தான். அதனால் அவனுக்கு ஸகல திக்குகளிலும் சுத்தமான கீர்த்தியுண்டாயிற்று. க்ஷத்திரியன் ப்ராஹ்மணர்களுக்கு உபகாரஞ் செய்ய வேண்டும். அப்படிச் செய்யாமல் நிலையற்ற சரீரத்திற்காக் கீர்த்தியை ஸம்பாதிக்காமல் ஜீவித்திருப்பதால் என்ன ப்ரயோஜனம்?" என்று





யோசித்துக் கம்பீர புத்தியுள்ளவனான ஜராஸந்தன் அவர்களை நோக்கி, "இஷ்டத்தைக் கேளுங்கள்; என்னுடைய தலையானாலும் கொடுக்கிறேன்" என்றான்.

28–33. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் ஜராஸந்தனை நோக்கி, "ஓ மஹாராஜரே யுத்தஞ் செய்ய வேண்டுமென்ற விருப்பத்துடன் வந்திருக்கிறோம். நாங்கள் க்ஷத்திரியர்கள்; எங்களுக்கு யுத்தத்தை விட வேறொன்றும் வேண்டியதில்லை. இவர் பீமஸேனர்; இவர் அர்ஜுனர்; நான் இவர்களுடைய அம்மான்சேய் ஆகிய கிருஷ்ணன்; உமக்கு சத்ரு" என்று சொன்னார். அதனைக் கேட்ட ஜராஸந்தன் மிகவும் சிரித்தான். மேலும் அவன் கிருஷ்ணனை நோக்கி, "ஓ மூடர்களே! அப்படியானால் உங்களுக்கு யுத்தங்கொடுக்கிறேன். நீ யுத்தத்தில் பயந்து மதுரையைவிட்டு ஸமுத்திரத்தைச் சரணமடைந்தவன் (த்வாரகைக்குச் சென்றவன்). ஆனதால் உன்னுடன் யுத்தஞ் செய்யமாட்டேன். இந்த அர்ஜுனன் வயதிலும், பலத்திலும் எனக்குச் சமனல்ல. பீமஸேனன் எனக்குச் சமமான பலமுள்ளவனானதால் இவனுடன் யுத்தஞ் செய்கிறேன்" என்று சொல்லிப் பருத்த கதாயுதத்தைப் பீமஸேனனிடங் கொடுத்தான். மற்றொரு கதாயுதத்தைத் தானெடுத்துக் கொண்டு பட்டணத்தை விட்டு வெளியில் வந்தான்.

34–36. பின்பு அவ்விரு வீரர்களும் மேடு பள்ளமில்லாத ஸமமானபூமியில் வஜ்ரம்போன்ற அந்த ஆயுதங்களால் அடித்துக்கொண்டார்கள்.

மேலுமவர்கள் இடமாகவும், வலமாகவும் சுற்றி யுத்தஞ் செய்வது, நடர்கள் நாட்டியசாலையில் சுற்றுவது போலிருந்தது. அப்பொழுது இரண்டு யானைகள் முட்டிக்கொண்டால், அதன் தந்தங்கள் ஒன்றோடொன்று நெருங்கி சப்தித்தாற் போல, அவர்களுடைய கதாயுதங்கள் ஒன்றோடொன்று அடிபட்டதனால், இடிபோல சடசடவென்று சப்தமுண்டாயிற்று. இப்படி அவ்விருவர்களும் தோல், இடுப்பு, கால்கள், கைகள், துடைகள் இவைகளில் கதாயுதத்தால் அடித்துக்கொள்ளும் பொழுது அவ்விரு கதாயுதங்களும் எருக்கங்கழிகள் போல் பொடியாயின. இப்படி மிக்க கோபத்துடன் யானைகள் போல் யுத்தஞ்செய்தார்கள். இப்படி கதைகள் பொடியான பின், இரும்புக்குச்சமமான முஷ்டிகளால் அடித்துக் கொண்டார்கள்.

முஷ்டிகளாலும் உள்ளங்கைகளாலும் அவர்கள் அடித்துக்கொள்ளும் பொழுது இடிபோலும், வஜ்ரம்போலும் கடுமையான சப்தமுண்டாயிற்று. அவ்விருவர்களும் ஸமமான பலம் உள்ளவர்கள்; ஸமமான தேஜசுள்ளவர்கள்; ஆனதால் ஒருவருக் கொருவர் தோல்வியன்னியில் யுத்தஞ்செய்தார்கள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் ஜராஸந்தனுடைய பிறப்பையும் அவன் மரணத்தையும், பின்பு ஜரையால் பிழைக்கச்செய்ததையும் அறிந்தவராகையால், பீமஸேனரைத் தம்முடைய தேஜஸ்ஸால் பலமுள்ளவராகச் செய்து (கடாக்ஷத்தால் அவருக்குப் பலத்தைக் கொடுத்து யோசித்தார்.) மேலுமவர் சத்துருவைக் கொல்லும் உபாயத்தை அறிந்து ஒரு மரத்தின் கிளையைப் பிளந்து, இதுபோல் சத்ருவைப்





பிளக்கவேண்டுமென்று ஜாடை காண்பித்தார். அதனை யறிந்த மிக்க பலசாலியான பீமன் சத்துருவின் காலைப் பிடித்துப் பூமியில் தள்ளி ஒரு காலைத் தன் காலால் மிதித்துக்கொண்டு மற்றொரு காலைப் பிடித்து குதத்திலிருந்து கிழித்தான். இப்படி பீமஸேனனால் ஜராசந்தனுடைய சரீரம் கிழிக்கப் பட்டது. ஒவ்வொரு துண்டிலும் ஒரு கால், ஒரு தொடை, இடுப்பு, ஒரு ஸ்தனம், ஒரு தோள், ஒரு கண், ஒரு கை, ஒரு புருவம், ஒரு காது ஆகிய இவைகள் உள்ளதாக இருந்ததை ஜனங்கள் பார்த்தார்கள். ஜராஸந்தன் கொல்லப்பட்டவுடன் ஹா ஹா என்ற சப்தமுண்டாயிற்று. அர்ஜுனனும், ஸ்ரீ கிருஷ்ணனும், பீமஸேனரைத் தழுவிப் பூஜித்தார் கள். பின்பு ஸ்ரீகிருஷ்ணன் ஜராஸந்தனுடைய புத்திரனாகிய ஸஹதேவனுக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுத்து,அந்த தேசத்தில் அபிஷேகஞ் செய்வித்தார். ஜராஸந்தனால் நிக்கிரஹிக்கப்பட்ட அரசர்களை விடுவித்தார்.



# அத்தியாயம்-73

## கிருஷ்ணன் அரசர்களை விடுவித்தது

ஜராசந்தன் யுத்தத்தில் ஜயித்து இரண்டு லக்ஷத்து எண்ணூறு அரசர்களை மலையின் குஹையில் அடைத்து வைத்திருந்தானல்லவா? அவர்கள் ஸ்ரீகிருஷ்ணனுடைய அனுக்கிரஹத்தால் வெளியில வந்தார்கள். அப்பொழுது எல்லோரும் அழுக்குள்ள வஸ்திரத்தை தரித்தவர்களும் பசியால் இளைத்த சரீரமுள்ளவர்களும், உலர்ந்த முகமுள்ளவர்களும், தடுக்கப்பட்டிருந்ததால் கஷ்டப்பட்டவர்களுமாக இருந்தார்கள். மேலுமவர்கள் வெளியில் வந்து ஸ்ரீ கிருஷ்ணனைத் தர்சித்தார்கள். ஸ்ரீகிருஷ்ணன் மேகம் போன்ற கருத்த திருமேனியுள்ளவரும், பீதாம்பரத்தைத் தரித்தவரும், ஸ்ரீவத்ஸமென்ற அடையாளமுள்ளவரும், நான்கு கைகளுள்ளவரும், தாமரை மலரின் இதழ் போல நீண்ட கண்களுள்ளவரும், அழகு பொருந்திய புன்சிரிப்புள்ள முகம் உள்ளவரும், மகர குண்டலங்களால் ப்ரகாசிப்பவரும் தாமரை மலர், கதாயுதம், சங்கம், சக்கரம் இவைகளைக் கைகளில் தரிப்பவரும், கிரீடம், ஹாரம், வளை அரைநாண், தோள்வளை ஆகிய இவைகளால் அலங்கரிக்கப் பெற்றவரும், கௌஸ்துப ஹாரத்தால் ப்ரகாசிக்கும் கழுத்துள்ளவரும் வனமாலையுள்ளவருமாக இருந்தார். அவரைக்கண்ட அரசர்கள், கண்களால் பானஞ் செய்பவர்கள் போலவும், நாக்கினால் நக்குகிறவர்கள் போலவும், மூக்குகளால் முகருகிறவர்கள் போலவும், கைகளால் கட்டிக்கொள்பவர்கள் போலவும் கிருஷ்ணனுடைய பாதங்களில் நமஸ்கரித்தார்கள்.





அதனால் அவர்கள் பாபம் நீங்கி சுத்தர்களானார்கள். மேலும் அவர்களுக்குக் கிருஷ்ணனைத் தர்சித்தவுடன் இவ்வளவு காலம் அனுபவித்த ச்ரமம் நிவர்த்தியாயிற்று. பின்னும் அவர்கள் அஞ்சலி செய்து, "ஓ தேவர்களுக்கும் தேவராகிய ஈச! சரணமடைந்தவர்களுடைய உபத்திரவத்தை நிவர்த்திப்பவரே! அழிவற்றவரே! கோரமான ஸம்ஸாரத்திலிருந்து நிர்வேதத்தையடைந்த எங்களைக் காப்பாற்றும். ஓ! நாத! இந்த ஜராஸந்தனிடத்தில் நாங்கள் அஸூயையை அடையவில்லை. அரசர்களுக்கு ராஜ்யத்தை விட்டுவிடும்படிச் செய்வது அனுக்கிரஹமேயாம். ஐச்வர்ய மதமுள்ள அரசர்கள் க்ஷேமத்தை அடையமாட்டார்கள். உம்முடைய மாயையால் மோஹித்து ஐச்வர்யத்தையே நித்யமென்று நினைக்கிறார்கள்.

மூடர்கள் கானலை ஜலமென்று நினைப்பது போல மாயா மயமான விகாரங்களை நித்திய வஸ்து என்று நினைக்கிறார்கள். நாங்கள் முந்தி ஐச்வர்ய மதங்கொண்டு புத்தியில்லாமல் பிறரை ஜயிக்க வேண்டுமென்ற விருப்பத்துடன் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு ஸைன்யங்களை நாசஞ் செய்து கொண்டிருந்தோம். மதத்தால், சிக்ஷிப்பவர் நீர் இருக்கிறீர்' என்பதை நினையாமல் இருந்தோம். ஆனதால் மிகுந்த வீர்யமுள்ள காலஸ்வரூபியான நீர் எங்களை ராஜ்ஜியமில்லாமல் கஷ்டப்படும்படி செய்தீர். இப்பொழுது உம்முடைய தயையால் மதமற்று பாதங்களைத் த்யானிக்கிறோம். இந்தச் சரீரமானது ஒவ்வொரு க்ஷணத்திலும் குறைகிறது. ரோகங்கள் உண்டாகுமிடமாக இருக்கிறது; அப்படிப் பட்ட சரீரத்தால் கானல் போன்ற ராஜ்யத்தை

அடையவேண்டுமென்று நாங்கள் இப்பொழுது விரும்பவில்லை. மரணமடைந்த பிறகு ஸ்வர்க்கம் முதலிய போகங்களையும் நாங்கள் விரும்பவில்லை. (அது கேட்பதற்கு மாத்திரம் இனிமையாக இருக்க கூடியது.) ஆனதால் ஸம்ஸாரிகளான எங்களுடைய மனமானது உம்முடைய பாதங்களிலேயே எப்பொழுதும் இருக்கும்படியான உபாயத்தைச் சொல்ல வேண்டும். வாஸுதேவரும் பரமாத்மாவும் ஸகல பாபங்களையும் நிவர்த்திப்பவருமான ஸ்ரீ கிருஷ்ணனுக்கு நமஸ்காரம்" என்றார்கள்.

17—23. இப்படித் தம்மால் விடுவிக்கப்பட்ட அரசர்களால் துதிக்கப்பெற்ற ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களிடத்தில் மிகுந்த தயை அடைந்து "இன்று முதல் நீங்கள் கேட்டுக் கொண்டபடி என்னிடத்தில் உங்களுக்கு ஸ்திரமான பக்தியுண்டாகும். நான் எல்லாவற்றிக்கும் ஆத்மாவாகவும் அதிபதியாகவும் இருக்கிறேன்; நீங்கள் சொன்னது உண்மையே; ஐச்வர்யமதுமானது மனிதர்களுடைய புத்தியை மாற்றித் தனதிஷ்டப்படி ஸஞ்சரிக்கச்செய்கிறது. மேலும் கார்த்தவீர்யன், நஹுஷன், வேனன், முதலிய அரசர்களும், ராவணன், நரகன் முதலியவர்களும் ஐச்வர்ய மதங்கொண்டவர்களாக இருந்ததால் ராஜ்யத்தை இழந்தார்கள். ஆனதால் சரீரம் முதலியவை ஜனன மரணங்களுள்ளவை (ஆத்மாவிற்கு ஜனனமாவது மரணமாவது இல்லை; ஆத்மா நித்யனென்று கருத்து) என்பதை நீங்கள் தெரிந்து கொண்டு என்னிடத்தில் பக்திசெய்து, யாகங்களைச் செய்து கொண்டு ப்ரஜைகளைக் காப்பாற்றுங்கள்; மேலும் நீங்கள் புத்திர பௌத்திர ஸந்ததிகளை உண்டுபண்ணிக்





கொண்டு ஸுகதுக்கங்களையும், க்ஷேமத்தையும், கஷ்டத்தையும் சமமாக நினைத்து அனுபவித்துக் கொண்டு (ஸுகங்கிடைத்தபொழுது ஸந்தோஷிக்க வேண்டாம். துக்கம் வந்த பொழுதும் துக்கிக்க வேண்டாமென்று கருத்து) என்னிடத்திலேயே சித்தத்தைச் செலுத்திக்கொண்டு ஸுகமாக ஸஞ்சரியுங்கள். தேஹம் முதலியவைகளில் உதாஸீனர்களாகி, ஆத்மாவிடத்தில் ஆசை உள்ளவர்களாகி என்னிடத்திலேயே சித்தத்தைச்செலுத்தி முடிவில் ப்ரஹ்மமாகிய என்னை அடைவீர்கள்" என்று அனுக்கிரஹித்தார்.

24—30. ஸகல லோகங்களுக்கும் அதிபதியாகிய ஸ்ரீகிருஷ்ணன் அந்த அரசர்களுக்கு எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்விக்கும்படி சில புருஷர்களுக்கும், ஸ்திரீகளுக்கும் உத்திரவு கொடுத்தார். பின்பு ஸ்ரீகிருஷ்ணனால் தூண்டப்பட்ட ஸஹதேவன் (ஜராஸந்தனுடைய புத்திரன்), அந்த அரசர்களை ராஜாக்களுக்குரிய வஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும், மாலைகளாலும், சந்தனத்தாலும் தாம்பூலம் முதலிய பல வகையான போக்கிய வஸ்துக்களாலும் பூஜித்தார். இப்படி அந்த அரசர்கள் கிருஷ்ணனுடைய அனுக்கிரஹத்தால் ஸ்நானம் செய்து, அலங்காரஞ் செய்துகொண்டு, உத்தமமான அன்னத்தைப் புஜித்துக் குண்டலம் முதலிய ஆபரணங்களைத் தரித்து கஷ்டத்திலிருந்து நிவர்த்தி அடைந்து, மழைக்காலஞ் சென்றபின் நவக்கிரஹங்கள் போலப் ப்ராகாசித்தார்கள். பின்னுமவர்கள் நல்ல குதிரைகள் கட்டிய ரதத்தில் ஏறிக்கொண்டு ஸஹதேவனுடைய பிரிய வார்த்தைகளால் பூஜிக்கப்பட்டு, கிருஷ்ணனுடைய சரிதங்களையே த்யானஞ்செய்து கொண்டு தங்கள்

தங்கள் தேசஞ் சென்றார்கள். மேலும் அவர்கள், தங்கள் தங்கள் பந்துக்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதத்தைச் சொன்னதுமல்லாமல் பகவானுடைய உத்தரவின்படி நடந்து வந்தார்கள்.

31–35. ஸ்ரீ கிருஷ்ணன் பீமஸேனனைக் கொண்டு ஜராஸந்தனைக் கொன்று, ஸஹதேவனால் பூஜிக்கப் பட்டு பீமஸேனன், அர்ஜுனன் இவர்களுடன் இந்திரப்ரஸ்தஞ் சென்றார். அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் முதலிய மூவர்களும் சங்கத்தை ஊதினார்கள். அந்தச் சப்தமானது பந்துக்களுக்குச் ஸுகத்தையும், சத்துருக்களுக்குத் துக்கத்தையும், கொடுக்கக்கூடியதாக இருந்தது. அதனைக்கேட்ட இந்திர ப்ரஸ்தத்தில் வஸிக்கும் ஜனங்களும், தர்ம புத்திரரும், ஜராஸந்தன் அடிபட்டான் என்று தெரிந்துகொண்டார்கள். அதன்பின் பீமன், அர்ஜுனன், கிருஷ்ணன் ஆகிய மூவர்களும் தர்மபுத்திரரை நமஸ்கரித்து, தங்களால் செய்யப்பட்ட கார்யங்களைத் தெரிவித்தார்கள். அதனைக் கேட்ட தர்மபுத்திரர் ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு மிகுந்த பிரியத்தால் ஒன்றையுஞ் சொல்லாமலிருந்தார்.





# அத்தியாயம்–74

## தர்மபுத்திரர் ராஜஸூய யாகஞ் செய்தது.

தர்மபுத்திரர் ஜராஸந்தன் வதம் முதலிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய மஹிமையைக் கேட்டு மிக்க ப்ரியத்துடன், “ஓ! தாமரைமலர் போன்ற கண் களுள்ளவரே! மூவுலகங்களுக்கும் ஆசார்யர்களாக இருப்பவர்களும், ஸகல லோகங்களும்’ லோக பாலகர்களும், உம்முடைய ஆஜ்ஞையைச் சிரஸால் தரிக்கிறார்கள். அப்படிப்பட்ட நீர் அஹங்காரிகளான எங்களுடைய இஷ்டப்படி நடக்கிறீர். இது மிகவும் உசிதமல்ல (மனிதபாவனையை அனுசரிக்கிறீர் என்று கருத்து) ஆனால் நீர் பரிபூர்ணரானதால் உத்தரவு செய்வது, பிறருடைய உத்தரவைத் தரிப்பது இவைகளால் உமக்கு தேஜஸ்ஸின் விருத்தியாவது, குறைவாவது நேருகிறதில்லை. ஏனென்றால் நீர் ஒருவர்; உமக்குச் சமமான வஸ்து வேறொன்றும் இல்லை; நீர் ப்ரஹ்மம்; ஸகல ஜீவர்களுக்கு நியந்தாவாகிய பரமாத்மா; ஆனதால் உமக்கு கர்மங்களால் தேஜஸ் விருத்தி அடைகிறதென்பதில்லை (கர்மத்தால் விருத்தியடைகிறதில்லை, இளைக்கிறதில்லை என்ற ச்ருதியின்படி) ஸூர்யனுடைய தேஜஸ்ஸானது உதயத்தால் விருத்தியடைகிறதுமில்லை. அஸ்தமனத் தால் குறைகிறதுமில்லையல்லவா? (ஆனதால் எல்லோருக்கும் மேற்பட்டவரான நீர் தாழ்ந்தவர்களான எங்களிஷ்டப்படி நடப்பது எங்களிடத்திலுள்ள தயையாலேயே ஒழிய வேறில்லை. அதனால் உமக்குக் குறைவில்லை என்று தாத்பர்யம்.) ஓ! ஒருவராலும் ஜயிக்கப்படாதவரே மூடர்கள், நான், என்னுடையது,

நீ, உன்னுடையது, என்று எப்படி பேதபுத்தியை அடைகிறார்களோ, அப்படி உம்முடைய பக்தர்களுக்கு புத்தி உண்டாகிறதில்லையென்று சொல்லி, யாகம் ஆரம்பிக்க வேண்டிய காலத்தில் (வஸந்தம் முதலிய காலம்) வேதாத்தியயனஞ் செய்தவர்களான ப்ராஹ்மணர்களைக் கிருஷ்ணனுடைய அனுமதியால் ரித்விக்குகளாக வரித்தார். இப்படி தர்மபுத்திரரால் வ்யாஸர், பரத்வாஜர், ஸுமந்து, கௌதமர், அஸிதர், வஸிஷ்டர், ச்யவனர், கண்வர், மைத்ரேயர், கவஷர், திருதர், விச்வாமித்திரர், வாமதேவர், ஸுமதி, ஜைமினி, க்ரது, பைலர், பராசரர், கர்க்கர், வைசம் பாயனர், தூர்வாஸர், கச்யபர், தௌம்யர், பரசுராமர், ஆஸுரி, வீதிஹோத்திரர், மதுச்சந்தஸ், வீரஸேனர், அகிருதவ்ரணர் ஆகிய இவர்கள் ரித்விக்குகளாக வரிக்கப்பட்டார்கள் மேலும் மற்ற ப்ராஹ்மணர்களும், பீஷ்மர், துரோணர்: கிருபர், திருதராஷ்டிரர், அவருடைய பிள்ளைகள், மிக்க புத்திசாலியான விதுரர், மற்ற க்ஷத்திரியர்கள் வைச்யர்கள், சூத்திரர்கள் ஆகிய எல்லோரும் தர்மபுத்திரரால் அழைக்கப்பட்டு யாகத்தைப் பார்ப்பதற்காக இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்தார்கள்.

அப்பொழுது ப்ராஹ்மணர்கள் தங்க கலப்பையால் யாக பூமியை உழுது, விதிப்படி அரசனுக்குத் தீக்ஷை செய்வித்தார்கள். இந்த யாகத்தில் பாத்திரங்களெல்லாம் வருணனுடைய யாகத்தில் போல ஸ்வர்ண மயங்களாக இருந்தன. இந்திரன் முதலிய லோகபாலகர்களும் ப்ரஹ்மதேவரும், பரமசிவனும், அவரவர்களுடைய கணங்களும், ஸித்தர்களும், உரகர்களும், மஹர்ஷிகளும், யக்ஷர்களும், ராக்ஷஸர்களும்,





கருடர்களும், கின்னரர்களும், சாரணர்களும், அரசர்களும், ராஜபத்தினிகளும் தர்மபுத்திரரால் அழைக்கப்பட்டு பாண்டுவின் புத்திரராகிய தர்ம புத்திரருடைய யாகத்தைப் பார்ப்பதற்காக வந்தார்கள். மேலும் அவர்கள் கிருஷ்ண பக்தராகிய தர்மபுத்திரருடைய யாகத்தை நல்லதென்று ஆச்சர்யமில்லாமல் ஒப்புக் கொண்டார்கள்.

17 – 30. தேவர்கள் வருணனுக்கு யாகஞ் செய்வித்தது போல தேவர்கள் போன்ற மிக்க தேஜஸ்ஸுள்ள ப்ராஹ்மணர்கள் தர்மபுத்திரருக்கு ராஜஸூய யாகஞ் செய்வித்தார்கள். ஸோமலதையைப் பிழியும் தினத்தில் (ஸுத்தியாஹஸ்) யாகம் செய்விக்கும் மிக்க யோக்கியர்களான, ரித்விக்குகளையும், ஸதஸ்ஸியர்களையும் தர்மபுத்திரர் மிகவும் பக்தியுடன் பூஜித்தார். அப்பொழுது ஸபையிலிருப்பவர்களில் யாரை முதலில் பூஜிக்கலாம் என்று யோசிக்கும்போது அதற்குரியவர்கள் அநேகர்கள் இருந்தார்கள். இன்னாரைத்தான் முதலில் பூஜிக்கிறதென்ற நிச்சயமில்லாமல் ஸதஸ்ஸியர்கள் ஸம்சயப் பட்டார்கள். அப்பொழுது ஸஹாதேவர் "ஸாத்வதர்களுக்கு அதிபதியான ஸ்ரீ கிருஷ்ணனை முதலில் பூஜிக்கவேண்டும். அவரே அதற்குத் தகுதியானவர். இவர் ஸகல தேவஸ்வரூபி; தேசம், காலம், தனம், யாகம், அக்னி, ஆஹுதி, ஸாங்கியம், யோகம், ஜகத் ஆகிய இவைகளெல்லாம் இந்தக் கிருஷ்ணனேயாம். ஓ ஸதஸ்ஸியர்களே! இவருக்கு சமமானவர்கள் ஒருவருமில்லை. இந்த ஜகத் முழுவதும் இவருடைய ஸ்வரூபமேயொழிய வேறில்லை. இவர் தன்னுடைய மஹிமையில் இருந்துகொண்டு (மற்றொன்றையும்

அபேக்ஷியாமல்) தானே இந்த ஜகத்தைப் படைக்கிறார். காப்பாற்றுகிறார்; ஸம்ஹரிக்கிறார். இவர் நித்தியர்; எல்லா ஜனங்களும் பலவகையான கர்மங்களை செய்து, தர்மம் முதலியன க்ஷேமத்தை அடைவதற்கு இவருடைய அனுக்கிரஹமே காரணமாய் இருக்கிறது. (கர்மங்களும் அவைகளின் பயனும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சுவாதீனங்களென்று கருத்து) அதனால் மிகுந்த மஹிமை பொருந்தியவரும், ஸகல பிராணிகளுக்கும் ஆத்மாவும், பேதபுத்தி இல்லாதவருமான ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அக்கிரபூஜை செய்தால் குறைவற்ற பலன் கிடைக்கும்; ஸகல பிராணிகளையும், ஆத்மாவையும் பூஜித்ததாக ஆகும். ஆனதால் கிருஷ்ணனையே முதலில் பூஜிக்கவேண்டும்" என்று கிருஷ்ணனுடைய மஹிமையை யறிந்தவராகையால் சொன்னார்.

அதனைக் கேட்ட ஸதஸ்யர்கள் எல்லோரும் நல்லது, நல்லது என்று ஒப்புக்கொண்டார்கள். அதனைக் கேட்ட தர்மபுத்திரர் ஸதஸ்யர்களுடைய அபிப்பிராயத்தை அறிந்து மிக்க பிரியத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனைப் பூஜித்தார். மேலும் அவர் பகவானுடைய பாதங்களை அலம்பி, லோகத்தைப் பரிசுத்தப்படுத்தக் கூடிய அந்தத் தீர்த்தத்தைத் தம்முடைய பத்தினிகள், ஸஹோதரர்கள், மந்திரிகள், குடும்பம், இவர்களுடைய தலையில் ப்ரோக்ஷித்துத் கொண்டார். பின்னும் பட்டு முதலிய வஸ்திரங்களாலும் விலையுயர்ந்த ஆபரணங்களாலும் பகவானை அலங்கரித்து, ஆனந்தத்தால் கண்ணீரைப் பெருக்கிக் கொண்டு அவரைத் தர்சிக்க முடியாமல் நின்றார். (மிக்க பிரியத்துடன் தர்சித்தார் என்று கருத்து) இப்படி தர்ம





புத்திரரால் பூஜிக்கப்பெற்ற ஸ்ரீ கிருஷ்ணனைத் தர்சித்த எல்லா அரசர்களும் அஞ்ஜலி செய்து ஜய! ஜய! என்று சொல்லி நமஸ்கரித்தார்கள். புஷ்பங்கள் வர்ஷிக்கப்பட்டன.

31–39. அதனைப் பார்த்த சிசுபாலன் பகவானுடைய குணங்களை சபையில் சொல்லியதால் கோபங்கொண்டு தனது ஆஸனத்தைவிட்டு எழுந்திருந்து பின் வருமாறு கிருஷ்ணனை யுத்தேசித்துக் கடுஞ்சொற்களைச் சொல்லலானன்; எப்படியெனில்:— "காலமானது எல்லாவற்றிற்கும் அதிபதி; அதனை ஜயிக்க ஒருவராலும் முடியாது என்று பெரியோர்கள் சொல்லுவது உண்மையே. இந்த ஸதஸ்ஸிலிருக்கும் பெரியோர்களுடைய புத்திகூட சிறுவனுடைய வார்த்தையில் மாறிவிட்டது. ஸதஸ்யர்களான ஓ பெரியோர்களே! நீங்கள் பாத்திரத்தை (பூஜிக்கத்தக்கவன்) அறிந்தவர்களுக்குட் சிறந்தவர்களானதால் கிருஷ்ணனைப் பூஜிக்க வேண்டுமென்று சிறுவன் சொல்லும் வார்த்தையை நீங்கள் ஒப்புக்கொள்ள வேண்டாம். மிகுந்த தபஸ்விகளும், வித்தையுள்ளவர்களும் வ்ரதங்களை அனுஷ்டித்தவர்களும். ஞானிகளும், பாபமற்றவர்களும், லோகபாலகர்களாலும் பூஜிக்கப்பட்டவர்களும் ப்ரஹ்மஷ்டர்களுமான மஹர்ஷிகள் இதோ இருக்கின்றார்கள். இவர்களைப் பூஜிக்காமல் தாழ்ந்த குலத்தில் பிறந்த இந்த இடையனை எப்படிப் பூஜிக்கலாம்? காக்கைக்குப் புரோடாசத்தைக் (ஹவிஸ்) கொடுக்கலாமா? இந்தக் கிருஷ்ணன் ஜாதி, ஆச்ரமம், குலம் இவைகளில்லாதவன்; ஒரு தர்மத்தையும் அனுஷ்டிக்காதவன்; தனது இஷ்டப்படி நடப்பவன்; குணமற்றவன்; இவனை எப்படிப் பூஜிக்கலாம்?

இவர்களுடைய குலமானது, யயாதி மஹாராஜனால் சபிக்கப்பட்டிருக்கிறது; ஸாதுக்களால் தள்ளப்பட்டது; வீணாக மத்திய பானத்திலேயே ஆசையுள்ளது; அப்படிப்பட்ட குலத்திற் பிறந்த இந்தக் கிருஷ்ணன் பூஜைக்குரியவனா? மேலும் இவர்கள் ப்ரஹ்மரிஷிகள் வஸிக்கக்கூடிய புண்ணியமான தேசங்களைவிட்டு. அமங்களமான ஸமுத்திரத்தின் நடுவிலிருந்து கொண்டு திருடர்களாக ஜனங்களை உபத்திர விக்கிறார்கள்" என்று பலவிதமான கடுஞ்சொற்களைச் சொன்னான். மரணம் ஸமீபித்தவனாகிய சிசுபாலனுடைய இம்மாதிரியான வார்த்தையைக் கேட்டும், பகவான் ஒன்றையுஞ் சொல்லாமல் மௌனமாக இருந்தார். அது நரியினுடைய கத்தலைக்கேட்டுச் சிங்கம் மௌனமாக இருந்தாற் போலிருந்தது.

40–47. இப்படி சிசுபாலனால் சொல்லப்பட்ட நிந்தா வார்த்தைகளைக் கேட்டு, ஸதஸ்ஸியர்கள் அதனைச் ஸஹியாமல் காதுகளை மூடிக்கொண்டு சிசுபாலனை நிந்தித்துக்கொண்டு வெளியில் சென்றார்கள். பகவானையாவது, பக்தர்களையாவது யாராவது நிந்தித்தால் அதனைக் கேளாமல் அந்த இடத்தை விட்டு வெளியில் போகவேண்டும். அப்படியில்லாமல் எவன் அவ்விடத்திலேயே இருந்து அதனைக் கேட்டுக் கொண்டிருக்கின்றானோ, அவன் புண்ணியத்தை இழந்து விடுகிறான். பின்பு பாண்டவர்களும் மத்ஸ்யர்களும், கேகயர்களும், ஸிருஞ்ஜயர்களும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு சிசுபாலனைக் கொல்ல முயற்சித்தார்கள். அதனைக் கண்ட சிசுபாலன் பயப்படாமல் கத்தியையும், கேடகத்தையும் எடுத்துக் கொண்டு கிருஷ்ணனைச்





சார்ந்தவர்களை அதட்டினான். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தாம் எழுந்திருந்து, தன்னைச் சார்ந்தவர்களைத் தடுத்துச் சக்கிரத்தை பிரயோகித்துச் சத்ருவாகிய சிசுபாலனுடைய தலையை வெட்டினார். சிசுபாலன் கொல்லப்பட்ட பொழுது மிகவும் கோலாஹல சப்தம் உண்டாயிற்று. சிசுபாலனைச் சார்ந்த அரசர்கள் உயிர்பிழைக்க விரும்பி பயந்து ஓடினார்கள். அப்பொழுது ஸகல ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்க, ஆகாயத்திலிருந்து குறைக் கொள்ளி விழுந்தாற்போல சிசுபாலனுடைய சரீரத்திலிருந்து கிளம்பிய தேஜஸ்ஸானது கிருஷ்ணனிடம் பிரவேசித்தது. அந்தச் சிசுபாலன் மூன்று ஜன்மமாகப் பகவானிடத்தில் விரோதம் வைத்து, அவரையே எப்பொழுதும் தியானித்திருந்தமையால் பகவத் ஸ்வரூபத்தை அடைந்தான். எண்ணமே (பாவனை) க்ஷேமத்திற்குக் காரணமாகிறது.

48–54. பின்பு தர்மபுத்திரர் ரித்விக்குகளுக்கும், ஸதஸ்ஸியர்களுக்கும் விசேஷமான தக்ஷிணை கொடுத்து யாகத்தை முடித்தார். இப்படி கிருஷ்ணன் தர்மபுத்திரருக்கு யாகத்தை நடத்திவைத்து, பந்துக்களுடைய வேண்டுகோளின்படி சில மாதகாலம் அவ்விடத்தில் வஸித்தார். பின்பும் கிருஷ்ணனைத் துவாரகைக்கு அனுப்ப தர்மபுத்திரர் ஸம்மதியாமலிருக்கும் பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அவரிடம் விடைபெற்று, பத்னிகளுடனும், மந்திரிகளுடனும் தன்னுடைய பட்டணஞ் சென்றார். ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! வைகுண்டத்தில் வஸித்த ஜய, விஜயர்களுக்கு ப்ராஹ்மண சாபம் நேர்ந்த விஷயத்தைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறோம்.

இம்மாதிரி தர்மபுத்திரர் ராஜஸூயத்தைச் செய்து முடித்து ப்ராஹ்மணர்கள் க்ஷத்திரியர்கள் இவர்களுடைய மத்தியில் மஹேந்திரன் போலப் ப்ரகாசித்தார். அந்த யாகத்திற்காக வந்திருந்த தேவர்களும், மனிதர்களும் அரசனால் பூஜிக்கப்பட்டு, கிருஷ்ணனைப் பற்றியும் யாகத்தைப்பற்றியும் ச்லாகித்துக்கொண்டு தங்களிருப்பிடஞ் சென்றார்கள். துரியோதனன் மிக்கப் பாபியானதாலும், குருகுலத்திற்கு வியாதி போன்றவனானதாலும் அவன் ஒருவன் மாத்திரம் தர்மபுத்திரருடைய ஐச்வர்யத்தைப் பார்த்து பொறாமை அடைந்தான்.

55. எவன் ஸ்ரீ கிருஷ்ணனால் செய்யப்பட்ட சிசுபாலவதம், அரசர்களைக் காப்பாற்றியது, தர்மபுத்திரருடைய யாகம் ஆகிய இவைகளைப் படிக்கிறானோ, அவன் ஸகல பாபங்களற்றவனாகிய சுத்தனாவான்.

நோட்டு.

ரித்விக்குகளாக:—ஹோர்தா, போதா, அத்வர்யு, நேஷ்டா, உத்காதா; ப்ரஹ்மா முதலியவர்கள். இந்த அத்தியாயத்தில் 32வது ச்லோகம் முதல் 7—சுலோகங்களால் சிசுபாலன் பகவானை நிந்தித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் அந்த ச்லோகங்களுக்கு பகவானை ஸ்துதித்ததாகவும் அர்த்தமேற்படுகிறது. எப்படியேனில் ஸ்ரீ பகவான் காலஸ்வரூபியாயிருப்பதனால் அந்தக்காலத்தை ஒருவாராலும் ஜயிக்க முடியாது என்ற வார்த்தை உண்மையே. வித்வான்களானாலும் லோகத்தில் சில ஜன்மங்கள்





மூடர்களுடைய வார்த்தையை அங்கீகரிக்கிறார்கள். (அதற்கு பகவானுடைய ஸங்கல்பமே காரணமென்று கருத்து) இவனைப் பூஜிக்கலாம்; இவன் தகுதியானவன், என்று தெரிந்துகொள்ள நீங்கள் சக்தியுள்ளவர்களானதால், சகாதேவன் சொன்ன வார்த்தையைச் சிறுவன் வார்த்தையென்று அலக்ஷியம் செய்யாதீர்கள் (கிருஷ்ணனையே பூஜிக்க வேண்டுமென்று கருத்து) ஸபையிலிருப்பவர்கள் தபஸ்விகளானாலும், வித்வான்களானாலும், வ்ரதத்தை அனுஷ்டிப்பவர்களானாலும், ஞானத்தால் மோஹ மற்றவர்களானாலும், ப்ரஹ்மிஷ்டர்களானாலும், லோக பாலகர்களால் பூஜிக்கப்பட்டவர்களானாலும் அவர்களை விட்டு ஸ்ரீ கிருஷ்ணனை ஏன் பூஜிக்கக்கூடாது? இவர் வேதங்களையும், பூமியையும் காப்பாற்றுபவர்; (கோபம் என்றதின் அர்த்தம்); வேதத்திற்கு விரோதமான பாஷண்ட மதத்தை ஆச்ரயித்தவர்களை ஸம்ஹரிப்பவர்; (குலபாம்ஸன் என்பதின் அர்த்தம்) அகாக என்று பதம்பிரித்தால் சுகதுக்கமற்றவரென்று அர்த்தம்; அப்படிப்பட்ட ஸமபுத்தியுள்ளவன் (ஆப்தகாமன்) எப்படி எல்லாவற்றையும் அடைய தகுந்தவனோ, அப்படி இந்த பகவான் ஏன் அக்ர பூஜையை அடையக்கூடாது? மேலும் இவருக்கு இன்ன ஜாதி, இன்ன ஆச்ரமம் இன்ன குலமென்பதுமில்லை. (எல்லாவற்றையும் கடந்த ப்ரஹ்மம் என்று தாத்பர்யம்) ஸகல தர்மங்களையும் கடந்தவர்; ஸாமான்ய ஜனங்கள் போல தர்மாதர்மத்திற்குக் கட்டுப்பட்டவரல்ல என்று தாத்பர்யம். (அதனால் தமதிஷ்டப்படி ஸஞ்சரிப்பவர்; பரமேச்வரனென்று கருத்து.) குணஸம்பந்தமற்றவர்; யயாதி இவருடைய குலத்தைச் சபித்தும் சாதுக்கள் அதனை

தள்ளிவிட்டார்களா? (அந்தக் குலத்தையே ஆச்ரயிக்கிறார்களென்று கருத்து) நல்ல ஆசாரமுள்ளது. (வேதத்திற்கு விரோதமான அடையாளத்தைத் தரிக்கின்ற பாஷண்டர்களை யாதவர்கள் சிக்ஷிக்கிறார்கள். ஆனதால் யாதவர்களை காட்டிலும் தர்மசிந்தனையுள்ளவர் வேறு யார் இருக்கிறார்கள்? என்று தாத்பரியம்.)





## அத்யாயம்–75.

### தர்மபுத்திரர் அவபிருதஞ் செய்தது

அதனைக்கேட்ட பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி "ஓ ப்ராஹ்மண! ஒருவரிடத்திலும் விரோத புத்தி இல்லாதவராகிய தர்மபுத்திரருடைய ராஜஸூய யாகத்தைப் பார்த்து எல்லா அரசர்களும், மஹர்ஷிகளும், தேவர்களும் ஸந்தோஷித்தார்கள்; ஆனால் துர்யோதனன் மாத்திரம் ஸந்தோஷப்படாமல் பொறாமையை அடைந்தானென்று சொன்னீரல்லவா? அதற்கு என்ன காரணம்? அதனைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

3–30. அதனைக்கேட்ட சுகர் அரசனை நோக்கி "மஹாத்மாவும் உமக்குப் பிதாமஹருமான (பிதாவின் பிதா) தர்மபுத்திரர் ராஜஸூயஞ் செய்தபொழுது பந்துக்கள் அவரிடத்திலுள்ள விஸ்வாஸத்தால் யாகத்தில் வேலைசெய்தார்கள். பீமஸேனன் சமையல் கட்டிற்கு அதிபதியாகவும், துர்யோதனன் பொக்கிஷத்திற்கு அதிபதியாகவுமிருந்தான். ஸஹதேவன் வந்தவர்களைப் பூஜித்து மர்யாதை செய்துவந்தான். நகுலன் ஸாமக்ரிகளை ஸம்பாதித்துக் கொண்டிருந்தான். அர்ஜுனன் ஸாதுக்களுக்குச் சுச்ரூஷை செய்து வந்தார். ஸ்ரீகிருஷ்ணன் ஸாதுக்களுடைய பாதங்களை அலம்புவதான கார்யத்தைச் செய்துகொண்டிருந்தார். த்ருபதருடைய புத்திரனாகிய திருஷ்டத்யும்னன் பரிவேஷணம்(பரிமாறுவது) செய்துவந்தான். மிக்க கம்பீர மனமுள்ளவரான கர்ணன் தானாதிகாரியாகவிருந்தான். யுயுதானன், விகர்ணன், ஹார்திக்யர், விதுரர்,

பாஹ்லீக புத்திரன், பூரி, ஸந்தர்கள் முதலியவர்கள் மற்றும் பலவிதமான கார்யங்களைச் செய்துக் கொண்டிருந்தார்கள், இப்படி தர்மபுத்திரருடைய பந்துக்கள் அவருடைய ப்ரீதிக்காக ஜாக்கிரதையாக வேலையைச் செய்து வந்தார்கள். அப்பொழுது தர்மபுத்திரர் ரித்விக்குகளையும், ஸதஸ்யர்களையும், பெரியோர்களையும், விசேஷ மித்திரர்களையும், ப்ரிய வார்த்தைகளாலும், தக்ஷிணைகளாலும், மர்யாதையாலும் பூஜித்தார். சிசுபாலன் ஸ்ரீகிருஷ்ண னுடைய பாதத்தை அடைந்தான். அதன் பின் கங்கையில் அவபிருதஸ்நானம், நடந்தேறியது. அந்த அவபிருத மஹோத்ஸவத்தில் மிருதங்கம், சங்கம், பணவம், தூரி, ஆனகம், கோமுகம் முதலிய பலவகை யான வாத்யங்கள் முழங்கப்பட்டன.

தாஸிகள் நர்த்தனஞ்செய்தார்கள். பாடகர்கள் கூட்டங்கூட்டமாக பாடினார்கள். மேலும், வீணை புல்லாங்குழல், கரதாளம் இவைகளுடைய சப்தம் ஆகாயத்தில் பரவியது. பலவகையான த்வஜங்கள், பதாகைகள், சிறந்த யானைகள், ரதங்கள், குதிரைகள், காலாட்கள், ஆகிய ஸைன்யங்களுடன் அரசர்கள் அலங்கரித்துக்கொண்டு வெளிக்கிளம்பினார்கள். மேலும் யாதவர்கள், ஸிருஞ்ஜயர்கள், காம்போஜர்கள், குருக்கள், கேகயர்கள், கோஸலர்கள் ஆகிய இவர்கள் ஸைன்யங்களுடன் பூமியை அசைத்துக்கொண்டு யஜமானனை முன்னிட்டுச் சென்றார்கள். ஸதஸ்யர்களும், ரித்விக்குகளும், மற்றும் ப்ராஹ்மண ச்ரேஷ்டர்களும், வேதத்தை கோஷித்தார்கள். தேவர்களும், மஹர்ஷி களும், பிதுருக்களும் கந்தர்வர்களும், புஷ்பங்களை வர்ஷித்து ஸ்தோத்திரஞ் செய்தார்கள். மேலும்





புருஷர்களும், ஸ்திரீகளும், சந்தனத்தாலும், புஷ்ப மாலையாலும், ஆபரணங்களாலும், வஸ்திரங்களாலும், அலங்கரித்துக்கொண்டு எண்ணெய், வெண்ணெய், நெய் முதலிவைகளை ஒவ்வொருவர்களின் மீது இறைத்துக்கொண்டு விளையாடினார்கள். மேலும் மஞ்சள், குங்குமம், சந்தனம் முதலியவைகளை புருஷர்கள் தாஸிகளின் மீது பூசினார்கள். இப்படி அலங்கரிக்கப்பெற்று அவர்கள் விளையாடினார்கள். மேலும் ராஜபத்னிகள், தேவஸ்திரீகள் போல யோதர்களால் காப்பாற்றப்பட்டு கிருஷ்ணனுடைய பத்னிகளால் நெய் முதலியவைகளால் நனைக்கப்பட்டு வெட்கச்சிரிப்புள்ள முகத்துடன் ப்ரகாசித்தார்கள். மேலுமவர்கள் ஸ்தனம் முதலிய அவயவங்களை மூடிக்கொள்ளாமல், தங்கள் பர்தாவின் ஸஹோதரர் களையும் மற்ற ஸ்நேஹிதர்களையும் யந்திரங்களால் (ஜலத்தை பிறர்மீது வாரியிறைக்கும் யந்திரங்கள்) ஜலம் முதலியவைகளையிறைத்தும், அவர்களால் இறைக்கப்பட்டும், ஈரமான வஸ்திரமுள்ளவர்களாக விளங்கினார்கள்.

அதனைக்கண்ட காமிகள் மனங்கலங்கியது; அப்பொழுது ஸாம்ராட்டாகிய தர்மபுத்திரர் உத்தம மான குதிரைகள் கட்டியதும், ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டதுமான ரதத்தில் தம் பத்னிகளுடன் விளங்கினார். அது ராஜஸூயயாகமே அதற்கு அங்கங்களான இஷ்டிகளுடன் ப்ரகாசிப்பது போலிருந் தது. அப்பொழுது ரித்விக்குகள் பத்னீ ஸம்யாஜமென்ற யாகவிசேஷங்களையும், அவபிருத கர்மங்களையுஞ் செய்து அரசனை ஆசமனஞ் செய்யச்சொல்லி கங்கையில் த்ரௌபதியுடன் ஸ்நானஞ் செய்வித்தார்கள்.

தேவர்கள் துந்துபி வாத்யங்களை முழங்கினார்கள். மனிதர்களும் துந்துபிகளை கோஷித்தார்கள். தேவர்களும், மஹர்ஷிகளும், பிதிருக்களும், மனிதர்களும் புஷ்பங்களை வர்ஷித்தார்கள். அப்பொழுது எல்லா ஜாதி ஜனங்களும், எல்லா ஆச்ரமிகளும் ஸ்நானஞ் செய்தார்கள். அவபிருதகாலத்தில் ஸ்நானஞ்செய்தவன் மிக்க பாபியானாலும் உடனே சுத்தனாகிவிடுவான். பின்பு அரசன் புதிய பட்டு வஸ்திரங்களையுடுத்தி அலங்கரித்துக்கொண்டு ரித்விக்குகளையும், ஸதஸ்யர்களையும், ப்ராஹ்மணர்களையும், ஆபரணங்களாலும், வஸ்திரங்களாலும் பூஜித்தார். இப்படி தர்மபுத்திரர் அவபிருதஸ்நானஞ்செய்து ஸ்ரீமந் நாராயணனையே மனத்தில் த்யானஞ்செய்து கொண்டு பந்துக்களுக்கும், மித்திரர்களுக்கும், ஞாதிகளுக்கும் மர்யாதை செய்தார்.

அவ்விடத்திலிருந்த எல்லா ஜனங்களும், ரத்ன குண்டலங்களாலும் புஷ்பமாலைகளாலும், சட்டை, தலைப்பாகை, பட்டு, விலையுயர்ந்த ஹாரங்கள் இவைகளாலும் அலங்கரிக்கப்பெற்று தேவர்கள்போல ப்ரகாசித்தார்கள். ஸ்திரீகள் குண்டலங்கள், தங்க ஒட்டியாணம், முதலியவைகளால் விளங்கினார்கள். பின்பு மஹாத்மாக்களான ரித்விக்குகள், ப்ரஹ்மவித்துக்களான ஸதஸ்யர்கள் யாகத்திற்காக வந்திருந்த ப்ராஹ்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைச்யர்கள், சூத்திரர்கள், தேவர்கள், மஹர்ஷிகள், பிதிருக்கள், பூதங்கள், லோகபாலர்கள், அவர்களைச் சார்ந்தவர்கள்; ஆகிய எல்லாரும் அரசனால் பூஜிக்கப்பட்டு அரசனிடம் விடைபெற்று தங்கள் தங்களிருப்பிடஞ் சென்றார்கள். அமிருதத்தைப் புஜித்த மனிதன் போதுமென்ற திருப்தியை எப்படி அடையமாட்டானோ,





அப்படி அவர்கள் கிருஷ்ண பக்தராகிய தர்மபுத்திரருடைய ராஜஸூய மஹோத்ஸவத்தை அனுபவித்து அதனையே ச்லாகித்துத் திருப்தியடையவில்லை. பின்பு அரசனாகிய தர்மபுத்திரர் மித்திரர்கள், ஸம்பந்திகள் கிருஷ்ணன் முதலிய பந்துக்கள் ஆகிய இவர்களை சிலகாலம் இந்திரப்ரஸ்தத்திலேயே வஸிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவர்கள் தங்களைவிட்டுப்பிரிய மனமில்லாதவரான தர்மபுத்திரர் கேட்டுக்கொண்டபடி அவ்விடம் வஸித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனும் ஸாம்பன் முதலியவர்களை த்வாரகைக்கு அனுப்பிவிட்டுத் தாம் ஒரு வருஷகாலம் அவ்விடத்தில் வஸித்தார். இப்படி தர்மபுத்திரர் மனோரதமாகிய மஹாசமுத்திரத்தை, ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸஹாயத்தால் தாண்டி (ராஜஸூயத்தைச் செய்து) கவலையற்றவராகவிருந்தார்.

31–40. ஒரு ஸமயம் அந்தப்புரத்தில் தர்மபுத்திரருடைய ஸம்பத்தைப்பார்த்து துர்யோதனன் ராஜஸூயத்தின் மஹிமையை நினைத்து பொறாமை கொண்டான். மேலும் மயனால் உண்டு பண்ணப்பட்ட அந்தப்புரத்தில் ஸபையில் சிறந்த அரசர்களால் அடையக்கூடிய ஸம்பத்தும், அஸுரச்ரேஷ்டர்களுக்குக் கிடைக்கக்கூடியவைகளும், மஹேந்திரனுடைய ஸம்பத்துக்களும் பொருந்தியிருந்தன. அப்படிப்பட்ட ஐச்வர்யங்களுடன் த்ரௌபதி தன் பர்த்தாக்களுக்குச் சுச்ரூஷைசெய்து கொண்டிருந்தாள். ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலேயே பக்திசெய்து கொண்டிருக்கும் தர்மபுத்திரருடைய ஐச்வர்யத்தைப்பார்த்து துர்யோதனன் அஸூயைப்பட்டான். (பக்தர்களுடைய ஐசுவர்யத்தில் அஸூயைப்படுகிறவர்கள் க்ஷேமத்தை அடையமாட்டார்

களென்று கருத்து) மேலும், தர்மபுத்திரர் ஒருகால் மயனால் நிர்மிக்கப்பட்ட ஸபையில் ஸ்வர்ண ஸிஹ்மாஸனத்தில் உட்கார்ந்திருந்தார். அவருடைய சகோதரர்கள் அவரைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். தர்மபுத்திரருக்கு கண்ணாகவிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனும் அவ்விடமிருந்தார். அவ்விடத்தில் ஸ்ரீகிருஷ்ணனுடைய அநேக ஸ்திரீகளுமிருந்தார்கள். அவர்கள் இடுப்பிலும் பாதங்களிலும் அணிந்திருக்கும் ஆபரணங்கள் சப்தித்தன. மேலுமவர்கள் அழகிய முகங்களுள்ளவர் களாகவும், அசைகின்ற குண்டலங்களுள்ளவர்களாகவும், ஹாரங்களுள்ளவர்களாகவும் இருந்தார்கள். பார மேஷ்டிய ஸம்பத்துள்ள தர்மபுத்திரரை வந்திகள் ஸ்தோத்திரஞ்செய்தார்கள்.

அப்பொழுது மிக்க அஹங்காரியான துர்யோதனன் தன்னுடைய ஸஹோதரர்களுடன் கத்தியையெடுத்துக் கொண்டு கிரீடம், மாலை இவைகளால் அலங்கரிக்கப் பெற்று, காவலாட்களை அதட்டிக்கொண்டு அந்த ஸபையில் ப்ரவேசித்தான். அவன் தரையை ஜலமென்று ப்ரமித்து வஸ்திரத்தின் நுனியைத் தூக்கிக்கொண் டான். ஜலமுள்ளவிடத்தை தரையென்று நினைத்து விழுந்தான்; இப்படி மயனுடைய மாயையால் மோஹித்த துர்யோதனனைப்பார்த்து பீமஸேனனும், மற்ற ஸ்திரீகளும் மற்ற அரசர்களும் சிரித்தார்கள். அவர்களைச் சிரிக்க வேண்டாமென்று தர்மபுத்திரர் தடுத்தார். அப்படியும் அவர்கள் கிருஷ்ணனால் அனுமதிக்கப்பெற்று பரிஹஸித்தார்கள். ஸபையில் துர்யோதனனைப் பார்த்து ஜனங்கள் சிரிக்கும்பொழுது ஹா ஹா என்ற சப்தமுண்டாயிற்று. தர்மபுத்திரர் வருத்தமடைந்தார். ஸ்ரீ கிருஷ்ணன் பூமியின் சுமையை





நிவர்த்திப்பதற்காக துர்யோதனனை ஸபையில் மோஹிக்கச்செய்து பரிஹாஸஞ் செய்தவர்களையும் தடுக்காமலிருந்தார். அதன்பின்பு துர்யோதனன் வெட்க மடைந்து, தலைகுனிந்து மௌனமாக ஸபையிலிருந்து வெளியில் வந்து ஹஸ்தினாபுரஞ்சென்றான். ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! ராஜஸூய மஹாயாகத்தில் துர்யோதனன் அஸூயை அடைந்த காரணத்தை கேட்டீரல்லவா ? அதனைச்சொன்னேன்" என்றார்.



# அத்தியாயம் 76

## பிரத்யும்னன் ஸால்வனுடன் யுத்தஞ்செய்தது.

ஓ மஹாராஜ! விளையாட்டாக மனித வடிவங் கொண்டவரான ஸ்ரீ கிருஷ்ணன் ஸால்வனைக் கொன்றார். அந்த அத்புதமான சரிதத்தையும் சொல்லுகிறேன், கேளும்; ருக்மிணியின் விவாஹத்திற் காக வந்தவர்களான யாதவர்களால் ஜராஸந்தன் முதலியவர்கள் ஜெயிக்கப்பட்டார்களல்லவா ? அப்பொழுது சிசுபாலனுக்குத் தோழனாகிய ஸால்வன் என்பவன் எல்லா அரசர்களும் கேட்டுக் கொண்டிருக்க, "பூமியில் யாதவர்கள் இல்லாமலிருக்கும்படிச் செய்கிறேன்; என்னுடைய பராக்கிரமத்தைப் பாருங்கள்" என்று ப்ரதிஜ்ஞை செய்தான். மூடனாகிய ஸால்வன் மேற் சொன்னபடி உறுதி செய்து ஒரு பிடி புழுதியைப் புஜித்துக்கொண்டு ஒரு வர்ஷ காலம் பரமசிவனை ஆராதித்தான். இப்படி ஒரு வருஷஞ்சென்ற பின், பரமசிவன் அவனிடத்தில் ஸந்தோஷத்தை அடைந்து, வரங்கொடுக்கிறேனென்று சொல்ல, அவரை நோக்கி ஸால்வன் "தேவர்களாலும், அஸுரர்களாலும் மனிதர் களாலும், கந்தர்வர்களாலும், உரகர்களாலும், ராக்ஷஸர்களாலும் பேதிக்க முடியாததும், இஷ்டப்படிச் செல்லக்கூடியதும், விருஷ்ணிகளுக்குப் பயங்கரமுமான ஒரு விமானம் வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். அதனைக் கேட்ட பரமசிவன் மயனுக்கு உத்தரவு கொடுக்க, அவன் இரும்பினால் ஒரு விமானத்தை நிர்மித்து, ஸௌபமென்ற அந்த விமானத்தை ஸால்வனுக்குக் கொடுத்தான். அம்மாதிரியான விமானம் பிறருக்குத் துர்லபம்; அநேக





மாயைகளுக்கு இருப்பிடம்; இஷ்டப்படி செல்லக் கூடியது. அதனைப் பெற்றுக்கொண்டு ஸால்வன் கிருஷ்ணனால் செய்யப்பட்ட விரோதத்தை நினைத்துக் கொண்டு மிகுந்த ஸைன்யங்களுடன் துவராகா நகரஞ் சென்று அந்த நகரத்தை முற்றுகை போட்டான்; தோட்டங்களை அழித்தான்; கோபுரங்களையும், மாடிகளையும், வாயிற்படிகளையும் இடித்தான். மேலும் அவன் அந்த விமானத்திலிருந்து ஆயுதங்களை வர்ஷித்தான்; மரங்களையும் மணல்களையும் வர்ஷித்தான்; மேலும் அவனுடைய மாயையால் இடிகளும், ஆலங்கட்டிகளும், சுழல் காற்றும் உண்டாயின. தூளியால் திக்குகள் மறைக்கப்பட்டன. இப்படி கிருஷ்ணனுடைய நகரமானது இந்த ஸால்வனால் உபத்திரவிக்கப்பட்டு, திரிபுரத்தால் பூமி கஷ்டப்பட்டது போல ச்ரமத்தையடைந்தது.

இப்படி துவாரகா நகரத்தில் வஸிக்கும் ஜனங்கள் ஸால்வனால் உபத்திரவிக்கப்படுவதைப் பார்த்து ப்ரத்யும்னன் பயப்படவேண்டாமென்று ஜனங்களை ஸமாதானஞ் செய்து ரதத்துடன் வெளியில் வந்தான். ஸாத்யகி, சாருதேஷ்ணன், ஸாம்பன், அக்ரூரர், அவரு டைய ஸஹோதரர்கள், ஹார்த்திக்யர், பானுவிந்தர், கதர், சுகர், ஸாரணர் முதலிய முக்கியமான யுத்த வீரர்களும் அவரவர்களுடைய ஸைன்னியங்களுடன் வெளியில் வந்தார்கள். பின்பு ஸால்வனைச் சார்ந்தவர் களுக்கும், யாதவர்களுக்கும் யுத்தம் நேர்ந்தது. அது மயிர்க்கூச்சல் உண்டுபண்ணக் கூடியதாகவும், தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நேர்ந்த யுத்தம் போலவும், இருந்தது. அப்பொழுது ஸூரியன் இருட்டைப் போக்கடிப்பது போல, ருக்மிணியின்

புத்திரராகிய பிரத்யும்னர் ஸால்வனுடைய மாயைகளைத் திவ்யமான அஸ்திரங்களால் அடக்கினார். தங்கக்கட்டுள்ளதும், இரும்பு முனைகளுள்ளதுமான இருபத்தைந்து பாணங்களால் ஸால்வனுடைய ஸேனாதிபதியை அடித்தார். ஸால்வனையும் மற்றுமுள்ள ஸைன்னியங்களையும் ஒவ்வொரு பாணங்களாலும், ஸாரதியைப் பத்து பாணங்களாலும், குதிரைகளை மும்மூன்று பாணங்களாலும் அடித்தார். அதனைக் கண்ட இரண்டு ஸைன்னியங்களும் ப்ரத்யும்னனுடைய அத்புதமான செய்கைகளை ச்லாகித்தார்கள். அந்தச் ஸால்வனுடைய விமானமானது மாயாமயமானதாலும், மயனால் செய்யப்பட்டதானதாலும், சில ஸமயம் அநேகமாகவும், சில ஸமயம் ஒன்றாகவும், சில ஸமயம் ஆகாயத்தில் இருப்பதாகவும், ஒரு ஸமயம் மலையிலிருப்பதாகவும், மற்றொரு ஸமயம் ஜலத்திலிருப்பதாகவும் தோன்றியது.

ஆனதால் கொள்ளிக்கட்டையைச் சுழற்றினாற்போல நான்கு பக்கங்களிலும் சுழன்று கொண்டிருக்கும் அந்த விமானம் பிறரால் அறிய முடியாததாக இருந்தது. ஸால்வனும் அவனுடைய விமானமும், ஸைன்யங்களும் எந்தெந்தவிடத்தில் காணப்படுகின்றனவோ, அந்தந்தவிடத்தில் யாதவ ஸேனாதிபதிகள் பாணங்களைப் ப்ரயோகித்தார்கள். இப்படி யாதவர்களால் பிரயோகிக்கப்பட்ட பாணங்கள் அக்னி போலவும், ஸூர்யன் போலவும், ஸர்ப்பம் போலவும் இருந்தமையால் ஸால்வன் அவைகளால் அடிக்கப்பட்டு மூர்ச்சை அடைந்தான். ஸால்வனுடைய ஸேனாதிபதிகள் விருஷ்ணிகளை ஆயுதங்களாலும், அஸ்திரங்களாலும் அடித்தார்கள். அப்படியும் அவர்கள் யுத்த ஸ்தலத்தை





விட்டு ஓடவில்லை. இவ்வுலகத்தில் கீர்த்தியையும் பரலோக ஸுகத்தையும் விரும்பினவர்களாக இருந்தார்கள். அப்பொழுது ஸால்வனுடைய மந்திரியாகிய த்யுமாவென்பவன் இரும்பினால் செய்யப்பட்ட கதாயுதத்தால் ப்ரத்யும்னனையடித்து கர்ஜ்ஜித்தான். அதனால் ப்ரத்யும்னனுடைய மார்பானது அடிபட்டு பிரத்யும்னன் மூர்ச்சையையடைந்தான். அப்பொழுது தாருகனுடைய குமாரனான ஸாரதி, யுத்தத்தின் தர்மத்தை அறிந்தவனானதால், பிரத்யும்னரை யுத்த ஸ்தலத்தை விட்டு வேறு இடத்திற்குக் கொண்டு போனான். பின்பு ஒரு முஹூர்த்தத்தில ப்ரத்யும்னன் மூர்ச்சை தெளிந்து ப்ரஜ்ஞையையடைந்து ஸாரதியை "ஓ ஸாரதியே! யுத்தகளத்தைவிட்டு என்னுடைய ரதத்தை இவ்விடம் கொண்டு வந்தது நல்ல கார்யமில்லை. யதுகுலத்திற் பிறந்தவன் யுத்தத்திலிருந்து பயந்து ஓடுகிற வழக்கமில்லை, நான் ஒருவன்தான் உன்னால் அபகீர்த்தியையடைந்தேன். கிருஷ்ணன், பலராமன் இவர்களைக் கண்டு நான் என்ன சொல்வேன் ? என் ஸஹோதரன் பத்னிகள் என்னுடைய அதைர்யத்தைப் பார்த்து, "ஓ வீர! யுத்தத்தில் சத்ருக்கள் என்ன செய்தார்கள் என்று கேட்பார்களே" என்று சொன்னான். அதனைக் கேட்ட ஸாரதி, பிரத்யும்னனை நோக்கி, "ஓ ப்ரபுவே! ரதிகனாகவிருப்பவன் ஸாரதிக்கு ஆபத்து வந்தால் ஸாரதியைக் காப்பாற்ற வேண்டும்; ரதிகனுக்கு ஆபத்து நேர்ந்தால் அவனை ஸாரதி காப்பாற்ற வேண்டும் என்பது யுத்தத்தின் தர்மம். அதனை நான் தெரிந்துகொண்டு உம்மை யுத்த ஸ்தலத்திலிருந்து இவ்விடம் கொண்டு வந்தேன்; நீர் சத்துருவினுடைய கதையால் அடிபட்டு மூர்ச்சை யடைந்திருந்தீர்" என்று சொன்னான்.

## ஸால்வவதம்

அதனைக் கேட்ட ப்ரத்யும்னன் ஜலத்தைத் தொட்டு சுத்தனாகி வில்லையெடுத்து முயற்சியுடன் ஸாரதியைப் நோக்கி, "த்யுமானுடைய ஸமீபத்திற்கு என்னுடைய ரதத்தை நடத்து" என்றார். பின்னுமவர் யுத்த ஸ்தலம் வந்து, தன்னுடைய ஸைன்னியத்தை அடிக்கும் த்யுமானை எட்டு நாராச பாணங்களாலும் அடித்தார். அவனுடைய குதிரைகளை நான்கு பாணங்களாலும், ஒரு பாணத்தால் ஸாரதியையும், இரண்டு பாணங்களால் வில்லையும், த்வஜத்தையும் அடித்ததுமின்றி, மற்றொரு பாணத்தால் த்யுமானுடைய தலையையும் வெட்டினார். பின்பு கதன்,. ஸாத்யகி, ஸாம்பன் முதலியவர்கள் ,ஸால்வனுடைய ஸைன்யத்தை அடித்தார்கள். யாதவர்களால் அடிக்கப் பட்ட ஸால்வனுடைய ஸைன்னியங்கள் தலை வெட்டுண்டு ஸமுத்திரத்தில் விழுந்தன. இப்படி ஸால்வனுக்கும் யாதவர்களுக்கும் இருபத்தேழு நாட்கள் பயங்கரமான யுத்தம் நடந்தது. அந்த ஸமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் த்வாரகையிலில்லை. தர்மபுத்திரருடைய ராஜஸூயத்திற்காக இந்திரப்ரஸ்தஞ் சென்றவர், அவ்விடத்திலேயே வஸித்தார். அப்பொழுது பகவான் இந்திரப்ரஸ்தத்தில் சில கடுமையான அபசகுனங்களைப் பார்த்துப் பந்துக்களை நோக்கி, "பலராமன், மற்ற மித்திரர்கள் ஆகிய இவர்களுடன் நான் இவ்விடம் வந்துவிட்டேன். இந்த ஸமயத்தில் சிசுபாலனைச் சார்ந்தவர்கள் என்னுடைய பட்டணத்தை உபத்திரவிப்பார்கள். ராஜஸூயம் முடிந்தது.





சிசுபாலனைக் கொன்றேன். (வந்த காரியம் முடிந்த தென்று தாத்பர்யம்) அபசகுனங்கள் காணப்படுகின்றன. நான் த்வாரகைக்குப் போகவேண்டும்" என்று பாண்டவர்கள், குந்தி, மஹர்ஷிகள், மற்ற பெரியோர்கள் ஆகிய எல்லோருக்கும் சொல்லிக் கொண்டு த்வாரகைக்கு வந்தார்.

9–18. ஸ்ரீகிருஷ்ணன் த்வாரகை சென்று அவ்விடம் யுத்தம் நடப்பதைப் பார்த்து, பலராமனைப் பட்டணத்தைத் காப்பாற்றும்படி சொல்லி, தாருகனை நோக்கி, "ஓ ஸாரதியே! என்னுடைய ரதத்தை ஸால்வனிடம் நடத்து. அவன் மாயாவியானதால் அவனைக் கண்டு பயப்படவேண்டாம்" என்றார். அதனைக் கேட்ட தாருகன் ரதத்தை நடத்தி யுத்தஸ்தலங் கொண்டுவந்தான். இப்படிப் பகவான் யுத்தகளம் வந்ததைச் சத்துருக்களும், யாதவர்களும் பார்த்தார்கள். அப்பொழுது ஸால்வனுடைய ஸைன்யங்கள் வெகுவாகக் கொல்லப்பட்டிருந்தன. ஸால்வன் கிருஷ்ணனைப் பார்த்து சக்தியென்ற ஆயுதத்தைப் ப்ரயோகித்தான். அந்தச் சக்தி பயங்கரமான சப்தத்துடன் குரைக்கொள்ளிபோல் ஜ்வலித்துக் கொண்டு வருவதைப் பார்த்து ஸ்ரீகிருஷ்ணன் சில பாணங்களை ப்ரயோகித்து நூறு துண்டாக வெட்டினார். ஸால்வனையும் பதினாறு பாணங்களால் அடித்து, ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ஸௌபமென்ற விமானத்தையும் அநேக பாணங்களால் அடித்தார். ஸூர்யனுடைய கிரணங்கள் ஆகாயத்தில் பரவினாற் போல் பாணங்கள் அந்த விமானத்தின் மீது விழுந்தன. அதனைக்கண்ட ஸால்வன் சார்ங்கமென்ற வில்லைப் பிடித்திருக்கும் பகவானுடைய இடது கைப்

பாணத்தால் அடித்தான். அதனால் அடிக்கப்பட்டு அந்தச் சார்ங்கமென்ற வில் கீழே விழுந்தது. அது மிகவும் ஆச்சரியப்படக் கூடியதாக இருந்தது. அதனைக்கண்ட ஸகல ப்ராணிகளும் ஹா, ஹா என்று கதறினார்கள். ஸால்வன் அட்டஹாஸஞ் செய்து ஸ்ரீகிருஷ்ணனை நோக்கி, "நீ என்னுடைய தோழனாகிய சிசுபாலனுடைய பத்னியாகிய ருக்மிணியை அபஹரித்தாயல்லவா ? மேலும், சிசுபாலனைச் ஸபையில் வதஞ்செய்தாயல்லவா ? பின்னும் ஒருவராலும் ஜயிக்கப்படாதவன் என்று அஹங்காரமடைந்திருக்கிறாய். ஓ மூட! ஆனதால் என் முன்பாக நில். உன்னை யமலோகத்திற்கு அனுப்புகிறேன்" என்றான்.

19–21. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன், "ஓ மூட! வீணாக பிதற்றுகிறாய். ஸமீபத்தில் நேர்ந்திருக்கும் மரணத்தை நீ தெரிந்துகொள்ளவில்லை. சூரர்கள் தங்கள் பராக்கிரமத்தைக் காண்பிப்பார்களேயொழிய அதிகமாகப் பேசமாட்டார்கள்" என்று சொல்லிக் கதாயுதத்தை யெடுத்து மிக்க வேகமாகச் சுழற்றி ஸால்வனை அடித்தார். கதாயுதம் அவனை அடித்துத் திரும்பியவுடன் ஸால்வன் மாயையில் மறைந்து கொண்டான்.

22–28. பின்பு ஒரு முஹூர்த்தத்தில் தேவகியால் அனுப்பப்பட்டு வந்த புருஷன் ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து, தேவகியினால் அனுப்பப்பட்டு வந்த புருஷன் என்று சொல்லி, "ஓ கிருஷ்ண! கிருஷ்ண! மிக்க பராக்ரமமுள்ளவரே! பிதாவிடத்தில் பிரியமுள்ளவரே! ஸௌனிகன் (கசாப்புக்காரன்) பசுவைக் கொண்டு போனாற்போல் உம்முடைய பிதாவாகிய வஸுதேவரை ஸால்வன் கட்டிக்கொண்டு போனான்" என்று அழுது கொண்டு சொன்னான். அந்த அப்ரியமான வார்த்தையைக் கேட்டுப் பகவான் மனுஷ்ய பாவனையை அனுசரித்து மிக்க வருத்தத்துடன் ஸாமான்ய ஜனங்கள் போல, "தேவர்களாலும், அசுரர்களாலும் ஜயிக்க முடியாதவரும், ஜாக்கிரதையுள்ளவருமான பலராமனை ஜயித்து, அல்பனாகிய ஸால்வன் என்னுடைய பிதாவை அபகரித்துச் சென்றான். தைவச் செயலே மேலானது" என்று சொல்லி துக்கித்தார். இந்தச் ஸமயத்தில் ஸால்வன் வஸுதேவரைப் போல மாயையால் ஒரு ப்ரகிருதியை செய்து, அதை கிருஷ்ணனுக்குக் காண்பித்து, "இதோ உன்னுடைய பிதாவாகிய வஸுதேவர் இருக்கிறார். எவர் நிமித்தம் நீ ஜீவித்திருக்கிறாயோ அவரைக் கொல்லுகிறேன். உனக்குப் பலமிருக்குமானால் வஸுதேவனைக் காப்பாற்று" என்று சொல்லிக் கத்தியால் அந்த மாயா வஸுதேவருடைய தலையை வெட்டி. அந்தத் தலையை யெடுத்துக் கொண்டு ஆகாயத்திலிருக்கும் விமானத்திலேறினான்.

29–30. பின்பு பகவான் இயற்கையில் எல்லாவற்றையும் அறிந்தவரானாலும் மனித பாவனையால் பந்துக்களைப்போல் தாமும் ஸ்வல்பகாலம் துக்கித்தார். அதன்பின் ஸால்வனால் செய்யப்பட்ட மயனுடைய மாயையென்று தெரிந்துகொண்டார். அப்பொழுது அவ்விடத்தில் தேவகியால் அனுப்பப் பட்ட தூதனும் வசுதேவருடைய உடலும் காணப்படவில்லை. அதனால் இது ஸ்வப்னத்தில் பார்க்கப்படும் வஸ்து போன்றது; ஸால்வனுடைய மாயை உண்மை

யல்ல என்று பகவான் நன்றாகத் தெரிந்துகொண்டு விமானத்திலிருக்கும் ஸால்வனைக் கண்டு அவனைக் கொல்ல முயற்சித்தார்.

31–38. இப்படிச் சில மஹர்ஷிகள் முன்பின் ஆலோசனையில்லாமல் சொல்லுகிறார்கள். தாங்கள் முன் சொல்லியதற்கு விரோதமாகச் சொல்லுகிறோமேயென்று நினைக்கிறதில்லை. சோகமாவது, மோகமாவது ஸ்நேஹமாவது, அஜ்ஞானத்தால் உண்டாகும் பயமாவது பகவானுக்கு உண்டாகக்கூடுமா? அவருடைய ஜ்ஞானமும் (ஸ்வரூப ஜ்ஞானமும்) விஜ்ஞானமும் (பாஹ்யமான விஷய ஜ்ஞானம்) ஆகிய இவைகள் ஒருவிடத்திலும் தடைப்படாதது; அவர், தேவர்களால் துதிக்கப்பெற்றவர்; மேலும், அக்ஞர்கள் அவருடைய பாதங்களைச் ஸேவித்து ஆத்மஜ்ஞானத்தை அடைகிறார்கள். அனாதியான வித்தியாஸமான எண்ணத்தை (நான் இளைத்திருக்கிறேன்; துக்கப்படுகிறேன் என்ற எண்ணம்) நிவர்த்தித்துக்கொள்கிறார்கள். அதனால் இயற்கையான, ஆனந்தமான பதத்தை அடைகிறார்கள். ஸாதுக்களுக்குக் கதியாகிய பரம புருஷனுக்கு மோஹமேது? (6–வது ச்லோகம் முதல் இதுவரையில் சொல்லியது பிறர் சொல்வதென்று தாத்பர்யம். தம்முடைய அபிப்ராயமென்னவெனில்) அமோகமான பராக்ரமமுள்ளவரான பகவான் அநேக ஆயுதங்களைப் ப்ரயோகித்துத் தம்மை அடிப்பவனாகிய ஸால்வனை அடித்ததுமின்றி, கதாயுதத்தால் அவனுடைய கவசத்தையும் விமானத்தையும் உடைத்தார். கிருஷ்ணனுடைய கதாயுதத்தால் ஆயிரம் துண்டாக உடைக்கப்பட்டு கவசமும், விமானமும் ஜலத்தில் விழுந்தன. அதன்பின் ஸால்வன் அந்த விமானத்தை விட்டுப் பூமியில் வந்து கதாயுதத்தையெடுத்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனை நோக்கி எதிர்த்து ஓடிவந்தான். அவனைக் கண்ணுற்ற பகவான் கதாயுதத்துடன் அவனுடைய கையைப் பல்லமென்ற பாணத்தால் வெட்டி, ப்ரளயகால ஸூரியன்போல் ஜ்வலிக்கும் அற்புதமான சக்கரத்தை ஸால்வனைக் கொல்வதற்காக எடுத்துக்கொண்டார். அதனால் அவர் ஸூர்யனுடன் கூடிய உதய பர்வதம் போல ப்ரகாசித்தார்.





மேலுமவர் அந்தச் சக்கரத்தைப் ப்ரயோகித்து மிக்க மாயாவியான ஸால்வனுடைய கிரீடம், குண்டலம் இவைகளுள்ள தலையை வெட்டினார் அது மஹேந்திரன் வஜ்ரத்தால் விருத்திராசுரனுடைய தலையை வெட்டினாற்போலிருந்தது. அப்பொழுது மனிதர்கள் ஹா ஹா என்றார்கள். அந்த மிக்க பாபியான ஸால்வனையடித்தவுடன் ஆகாயத்தில் தேவர்கள் துந்துபி வாத்தியங்களை முழங்கினார்கள். பின்பு தந்தவக்கிரன் தன்னுடைய தோழர்களுக்கு பிரியத்தைச் செய்யவிரும்பி, கோபத்துடன் ஸ்ரீகிருஷ்ணனை எதிர்த்தான். இந்த அத்தியாயத்தில் 6–வது ச்லோகம் முதல் 30–வது ச்லோகம் வரையில் ஸால்வன் த்வாரகையில் யுத்தஞ் செய்த ஸமயத்தில் கிருஷ்ணன் இந்திரப் ப்ரஸ்தத்திலிருந்ததாகவும், அபசகுனங்களைப் பார்த்து பயந்து துவாரகைக்கு வந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இது பொருந்தாது. தர்மபுத்திரர் துர்யோதனனுடன் சொக்கட்டான் விளையாடும் ஸமயத்தில் ஸால்வனுடைய யுத்தமென்று சொல்வதுதான் பொருந்தும்; ஏனென்றால், தர்ம புத்திரர் முதலியவர்கள் காம்யவனத்தில் வஸிக்கும்

பொழுது ஸ்ரீகிருஷ்ணன் அவர்களைச் ஸமாதானஞ் செய்யும் ஸமயத்தில் தருமபுத்திரரை நோக்கி, "ஸால்வனுடைய யுத்தத்தில் நான் கவலை கொண்டிருந்தமையால் உங்களுடைய சொக்கட்டான் விளையாட்டை மறந்துவிட்டேன்" என்று சொன்னதாக வ்யாசர் சொல்லியிருக்கிறார். மேலும், முன் அத்தியாயத்தில் பலராமனைப் பகவான் த்வாரகைக்கு அனுப்பியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க அபசகுனங்களைக் கண்டு, "பலராமனுடன் நான் இவ்விடம் வந்து விட்டபடியால் சிசுபாலனைச் சார்ந்தவர்கள் என்னுடைய பட்டணத்தை உபத்ரவிப்பார்கள்" என்று சொல்வது பொருந்துமா? ஆனதால் பகவான் இந்திர ப்ரஸ்தத்தில் வஸிக்கும் பொழுது ஸால்வன் த்வாரகைக்கு வந்தானென்பது உண்மையல்லவென்பது தாத்பர்யம். இந்த விஷயமே 31–வது ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.)

♣ ♣ ♣ ♣



# அத்தியாயம்–78

## தந்தவக்திரவதம்

தந்தவக்திரன் என்பவன் தன்னுடைய தோழனாகிய சிசுபாலன், ஸால்வன், தூர்ப்புத்தியுள்ளவனான பௌண்ட்ரகன் ஆகிய இவர்கள், பரலோகஞ் சென்றிருந்தாலும் அவர்களுக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி தான் ஒண்டியாக, பதாதியாகப் பூமியை அசைத்துக்கொண்டு கதாயுதத்தைக் கையில் தாங்கி ஸ்ரீகிருஷ்ணனிடம் ஓடிவந்தான். அவனைக் கண்ணுற்ற பகவான் கதாயுதத்தைக் கையிலெடுத்து ரதத்தை விட்டிறங்கிக் கரை ஸமுத்திரத்தைத் தடுப்பது போல அவனை மறித்தார். கரூச தேசத்திற் கதிபதியான தந்தவக்திரனும் கதாயுதத்தையெடுத்துக்கொண்டு கிருஷ்ணனை நோக்கி, "தைவச்செயலால் உன்னைக் கண்டேன். ஓ கிருஷ்ண! எனக்கு பந்துவானாலும் எங்களுடைய மித்திரர்களை நாசஞ் செய்ததுமின்றி எங்களையும் கொல்ல விரும்புகிறாய்.

அதனால் உன்னை வஜ்ரம் போன்ற கதாயுதத்தால் கொல்லுகிறேன். சரீரத்தில் உண்டான வியாதியை நிவர்த்தித்துக் கொண்டாற் போல பந்துஸ்வரூபியும் உண்மையில் சத்ருவுமான உன்னைக் கொன்று மித்திரர்களுக்குப் ப்ரியத்தைச் செய்கிறேன்" என்று அங்குசத்தால் யானையை அடித்தாற்போல் கடுஞ்சொற்களால் கிருஷ்ணன் மனத்திற்கு வருத்தத்தையுண்டுபண்ணி கதாயுதத்தால் ஸ்ரீ கிருஷ்ணனுடைய தலையில் அடித்து அட்டஹாஸஞ் செய்தான். அதனால் அடிக்கப்பட்டும் கிருஷ்ணன் அசையாமல் பருத்த

கௌமோதிகியென்ற கதையால், தந்தவக்திரனுடைய மார்பில் அடித்தார். இப்படி அடிக்கப்பட்ட தந்தவக்திரன் முகத்திலிருந்து ரத்தத்தைக் கக்கிக்கொண்டு கை, கால், தலைமயிர்களைப் பரப்பிக்கொண்டு மரணமடைந்து பூமியில் விழுந்தான். முன் சிசுபாலனுடைய சரீரத்திலிருந்து தேஜஸ் கிருஷ்ணனை அடைந்தது போல தந்தவக்திரனுடைய சரீரத்திலிருந்து கிளம்பிய மிகவும் ஸூக்ஷ்மமான தேஜஸ்ஸானது எல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது கிருஷ்ணனை அடைந்தது.

11–16. அதன்பின்பு அவனுடைய ஸஹோதரனாகிய விடூரதன் என்பவன் பிராத்ரு சோகமுள்ளவனாகிக் கத்தி, கேடகம் இவைகளை எடுத்துக்கொண்டு சத்ருவைக் கொல்ல வேண்டுமென்ற விருப்பத்துடன் ஓடி வந்தான். ஓ அரசர்களுக்குச் சிறந்தவரே! கிருஷ்ணன் சக்கரத்தைப் ப்ரயோகித்து ஓடிவருகிற விடூரதனுடைய குண்டலம், கிரீடம், இவைகளுள்ள தலையை வெட்டினார். இம்மாதிரி பகவான் ஸௌபமென்ற விமானத்தையும், ஸால்வனையும், தந்தவக்திரனையும், விடூரதனையும், மற்ற பராக்கிரம சாலிகளையும் கொன்று, தேவர்களாலும், மனிதர்களாலும் துதிக்கப் பெற்றுத் துவாரகைக்குள் ப்ரவேசித்தார். முனிவர்களும், ஸித்தர்களும், கந்தர்வர்களும், வித்யாதரர்களும், மஹோரகர்களும், அப்ஸரஸ்ஸுகளும், பிதிருக்களும், யக்ஷர்களும், கின்னரர்களும், புஷ்பங்களை வர்ஷித்து ஸ்ரீகிருஷ்ண னுடைய விஜயத்தைத் துதித்தார்கள். விருஷ்ணிகளுக் குச் சிறந்தவரும் கிருஷ்ணனைச் சுற்றிக்கொண்டு சென்றார்கள். த்வாரகா நகரம் அலங்கரிக்கப்பட்டிருந்தது.





ஜகதீசரும் யோகேசுவரருமான ஸ்ரீ கிருஷ்ணன் இம்மாதிரி ஜயித்தாரென்றும் ஜயிக்கப்பட்டாரென்றும் மூடர்கள் நினைக்கிறார்கள்.

17–35. பின்பு கௌரவர்களும் பாண்டவர்களும் யுத்தஞ்செய்வதற்காக முயலுகிறார்கள் என்பதைக் கேள்விப்பட்டுப் பலராமன் தீர்த்தயாத்திரைக்குப் போகிறேனென்ற வ்யாஜத்தால் ஒருவருடைய பக்ஷத்திலும் சேராமல் யாத்திரைக்குக் கிளம்பினார். பிரபாஸ தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து தேவதர்ப்பணம், ரிஷி தர்ப்பணம், பிதிரு தர்ப்பணம், மனித தர்ப்பணம் ஆகிய இவைகளைச் செய்து, அநேக ப்ராஹ்மணர்களுடன் மேற்கே போகின்ற ஸரஸ்வதி நதிக்குச் சென்றார். பின்பு மதூதகம், பிந்துஸரஸ், திருணகூபம், ஸுதர்சனம், விமலமான ப்ரஹ்ம தீர்த்தம், சக்கிர தீர்த்தம், கிழக்கு முகமாகச் செல்லுகிற ஸரஸ்வதி, யமுனையின் கரையிலுள்ள தீர்த்தங்கள், கங்கையின் கரையிலுள்ள தீர்த்தங்கள் ஆகிய இவைகளையடைந்து நைமிசமென்ற அரண்யத்திற்குச் சென்றார். அவ்விடத்தில் எல்லா மஹர்ஷிகளும் ஸத்திரத்தைச் செய்து கொண்டிருக் கிறார்கள். வெகு நாளாக ஸத்திரத்தை அனுஷ்டித் தவர்களான மஹர்ஷிகள் பலராமனை நமஸ்கரித்து, விதிப்படி பூஜித்து அவருடன் வந்தவர்களையும் பூஜித்தார்கள். இப்படி நைமிசாரண்யவாஸிகளான மஹர்ஷிகளால் பூஜிக்கப்பட்டு பலராமன் ஆஸனத்தில் உட்கார்ந்தார். ஆனால் வ்யாஸருடைய சிஷ்யரான ரோமஹர்ஷணர் மாத்திரம் பலராமனைக் கண்டு எழுந்திருக்கவில்லை; வணங்கவுமில்லை; அஞ்சலி செய்யவுமில்லை. மற்ற மஹர்ஷிகளை விட மேலான

ஆஸனத்தில் உட்கார்ந்திருந்தார். அவரைப் பார்த்துப் பலராமன் கோபங்கொண்டார். மேலுமவர், "தாழ்ந்த குலத்தில் பிறந்த இந்த ரோமஹர்ஷணன் எல்லா மஹர்ஷிகளுக்கும் மேலாக உட்கார்ந்திருக்கிறான். தர்மத்தைக் காப்பாற்றுபவர்களான நம்மையும் லக்ஷ்யஞ் செய்யவில்லை. ஆனதால் இவனைக்கொல்வது யுக்தம். இவன் பகவானாகிய வ்யாஸமஹர்ஷிக்குச் சிஷ்யனாக விருந்து இதிஹாஸங்களையும், புராணங்களையும், தர்ம சாஸ்திரங்களையும் அவரிடம் அத்தியயனஞ் செய்தும் வணக்கமில்லாதவனாகவும் வீணாகத் தன்னைப் பண்டிதனென்று நினைத்தவனாகவு மிருக்கிறான். வேஷதாரிபோல் வித்வானென்ற வேஷத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறானேயொழிய வித்தையால் நற்குணங்களையடையவில்லை.

தர்மிஷ்டர்கள் போல வேஷந்தரித்தவர்கள் மிக்க பாபிகள்; ஆனதால் இவனைக் கொல்லுகிறேன். இதற்காகவே (துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்காக) நான் பூமியில் அவதரித்திருக்கிறேன்" என்று சொல்லி பலராமன் துஷ்டர்களைக் கொல்வதை நிறுத்திக் கொண்டவரானாலும் தமது கையிலிருந்து தர்ப்பத்தின் நுனியால் ரோமஹர்ஷணரை அடித்தார். அதனைக் கண்ணுற்ற மஹர்ஷிகள் மனதில் துக்கத்தை அடைந்து ஹா ஹா என்று சொல்லி பலராமனை நோக்கி, "இந்த ரோமஹர்ஷணரைப் புராணஞ் சொல்லும்படி ஏற்படுத்தி இவருக்கு ப்ரஹ்மாஸனத்தையும், தீர்க்கமான ஆயுஸ்ஸையும் கொடுத்துப் புராணஞ் சொல்வதால் இவருக்குச் ச்ரமமில்லாமலிருக்கும்படியும் அனுக்கிரஹஞ் செய்திருந்தோம். இதை யறியாதவர்போல நீர் இவரைக் கொன்றீரே. இது அதர்மமேயாம். நீர் ப்ராஹ்மணனைக் கொன்றதால் ப்ராயச்சித்தஞ் செய்து கொள்ளவேண்டும். நீர் யோகேச்வரரானதால் வேதத்திற்கும் நீர் கட்டுப்பட்டவரல்ல. ஆனாலும் நீர் அனுஷ்டியாதவரையில் மற்ற ஜனங்களும் தர்மத்தை அனுஷ்டிக்க மாட்டார்கள். ஆனதால் லோகத்தை காப்பாற்றுவதற்காகவாவது நீர் ப்ராயச்சித்தஞ் செய்துகொள்ள வேண்டும்" என்றார்கள். அதனைக் கேட்ட பலராமன், "இந்த ப்ரஹ்மஹத்யா தோஷ நிவர்த்திக்காக என்ன ப்ராயச்சித்தஞ் செய்ய வேண்டும்? முக்கிய பக்ஷமான ப்ராயச்சித்தத்தை விதியுங்கள்; அதனை லோகத்தை யனுக்கிரகிப்பதற்காக அனுஷ்டிக்கிறேன். தீர்க்கமான, ஆயுஸ், தேஹ பலம், இந்திரிய பலம் முதலியவைகள் இவருக்கு உண்டாக வேண்டுமென்று நீங்கள் எப்படி விரும்புகிறீர்களோ அப்படி யோகமாயையின் மஹிமையால் செய்கிறேன். அதனைச் சொல்லுங்கள்" என்றார். அதனைக் கேட்ட மஹர்ஷிகள் பலராமனை நோக்கி, "அஸ்திரம், உம்முடைய வீர்யம், மிருத்யு, எங்களுடைய வார்த்தை ஆகிய இவைகள் வ்யர்த்தமாகாமலிருக்கும்படி செய்யும்" என்றார்கள்.

36–40. அதனைக்கேட்ட பலராமன் மஹர்ஷிகளை நோக்கி, "இவருடைய புத்திரரான உக்ரச்ரவஸ் என்பவர் உங்களுக்குப் புராணஞ் சொல்வார். அவருக்கு நீங்கள் விரும்பியபடி தீர்க்கமான ஆயுஸ்ஸும் தேஹ பலம் முதலியவைகளும் உண்டாகும். பிதாவே புத்திரனாக ஜனிக்கிறான் என்று வேதத்தில் சொல்லியிருப்பதால் ரோமஹர்ஷணருக்கும் உக்கிரச்ரவஸ்ஸுக்கும் பேதமில்லை. இன்னும் என்னால் செய்யப்பட வேண்டியதென்ன? உங்களுடைய

இஷ்டத்தை தெரிவியுங்கள். அறியாமல் செய்த ப்ரஹ்மஹத்யா தோஷத்திற்கு ப்ராயசித்தத்தையும் யோசித்து சொல்லுங்கள். நீங்கள் வித்வான்களல்லவா ?" என்று கேட்டார். அதனைக் கேட்ட மஹர்ஷிகள் பலராமனை நோக்கி, "இல்வலனுடைய புத்திரன் பல்வல்ன் என்று ஒரு அஸுரன் இருக்கிறான். அவன் பர்வகாலத்தில் இவ்விடம் வந்து ரக்தம், அமேத்யம், மூத்திரம், மத்யம் மாம்ஸம், வப்புஜலம் ஆகிய இவைகளை வர்ஷித்து எங்களுடைய யாகத்திற்கு விக்கினஞ் செய்கிறேன். அந்தப் பாபியான அஸுரனைக் கொல்லும். அதுவே எங்களை ஆராதித்ததாகும். பின்பு நீர் இந்த பாரதவர்ஷம் முழுவதும் ஒரு வர்ஷகாலம் ப்ரதக்ஷிணமாகச் ஸஞ்சரித்து அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தால் இந்த ப்ரஹ்ம ஹத்யா தோஷம் நிவர்த்தியாகும்" என்றார்கள்.

❧❧❧❧❧



# அத்தியாயம்-79

## பலராமன் தீர்த்தயாத்திரை செய்தது.

பின்பு பர்வகாலம் வந்தது. அப்பொழுது பயங்கரமான பெருங்காற்று வீசியது. அதனால் மணல்கள் வர்ஷிக்கப்பட்டன. நான்கு பக்கங்களிலும் துர்வாஸனை வீசியது; பல்வலன் என்ற ராக்ஷஸன் அமேத்யத்தை யாகசாலையில் வர்ஷித்தான். அவனும் சூலாயுதத்துடன் காணப்பட்டான். அவனுடைய சரீரமானது பருத்தும் உடைந்த மை மலைபோலு மிருந்தது (மிக்க கருமை நிறமுள்ளது) அவனுடைய தலைமயிர்களும், மீசையும் காய்ச்சப்பட்ட தாம்ர ஊசிகள் போலிருந்தன அவனுடைய முகமானது சிங்கப்பற்களால் பயங்கரமாகவிருந்தது. அவனைக் கண்ணுற்ற பலராமன் சத்ரு ஸைன்யத்தைக் கொல்லக் கூடிய முஸலத்தையும், அஸுரர்களை வதஞ்செய்யக் கூடிய கலப்பையையும் நினைத்தார். நினைத்தவுடன் அவைகள் பலராமனுடைய ஸமீபம் வந்தன.

அப்பொழுது பலராமன் மிக்க கோபங்கொண்டு ப்ராஹ்மணர்களுக்கு த்ரோஹஞ்செய்பவனும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவனுமான பல்வலனை கலப்பையின் நுனியால் இழுத்து முஸலத்தால் அவனுடைய தலையில் அடித்தார். அதனால் அடிக்கப்பட்டு நெற்றி உடைந்தது; ரத்தம் பெருகியது; அவன் தீனமாகக் கத்திக்கொண்டு பூமியில் விழுந்தான். அது வஜ்ரத்தால் அடிக்கப்பட்டு மலைவிழுந்தது போலிருந்தது, அப்பொழுது விருத்திராஸுரனைக்கொன்ற மஹேந்திரனைத் தேவர்கள் உபசரித்ததுபோல் மஹர்ஷிகள்

புலராமனை ஸ்தோத்திரஞ்செய்து ஆசிர்வதித்து அபிஷேகஞ்செய்தார்கள். மேலுமவர்கள் வாடாத தாமரை மலர்களுள்ளதும், அழகு பொருந்தியதுமான வைஜயந்தியென்ற மாலையையும், திவ்யமான வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் கொடுத்தார்கள்.

8–25. பின்பு பலராமன் மஹர்ஷிகளிடம் விடை பெற்று ப்ராஹ்மணர்களுடன் கௌசிகீ நதிக்குச்சென்று அதில் ஸ்நானஞ்செய்து ஓர் சிறந்த ஸரஸ்ஸுக்குச் சென்றார். அதிலிருந்து பெருகிவரும் நதிதான் ஸரயூவென்று சொல்லப்படுகிறது. அந்த ஸரயூ வழியாக ப்ராயாகஞ்சென்றார். அவ்விடத்தில் ஸ்நானஞ்செய்து தேவதர்ப்பணம் முதலியவைகளை ச்செய்து புலஹாச்ரமம் (ஹரிக்ஷேத்திரம்) சென்றார். பின்பு கோமதி, கண்டகி, விபாசா, சோணா என்ற நதிகளில் ஸ்நானஞ்செய்தார். பிறகு கயாக்ஷேத்திரஞ் சென்று ச்ராத்தஞ்செய்து கங்கை ஸமுத்திரம் இரண்டுஞ்சேரும் ஸ்தலம் சேர்ந்தார். அதில் ஸ்நானஞ் செய்து மஹேந்திர மலைக்குச்சென்று அவ்விடத்தில் பரசுராமரை தர்சித்து நமஸ்கரித்து ஸப்தகோதாவரி, வேணி, பம்பா, பீமரதி ஆகிய நதிகளையடைந்து அவ்விடத்தில் ஸுப்பிரமண்யரைப் பூஜித்து அங்கிருந்து பரமசிவனுக்கு இருப்பிடமான ஸ்ரீ பர்வதஞ் சென்றார். அதன்பின் த்ராவிடதேசத்தில் மிக்க புண்யகரமான வெங்கிடாசலத்தையும் அதில் வஸிக்கும் ஸ்ரீ மஹா விஷ்ணுவையும் தர்சித்து காமகோடி என்ற காஞ்சி பட்டணம் சென்றார். அவ்விடத்திலிருந்து ஸ்ரீரங்கம் சென்றார். அது மிகவும் புண்யஸ்தலம்; அவ்விடத்திலி ருந்து ஸ்ரீ மஹாவிஷ்ணு எப்பொழுதும் ஸான்னித்தியஞ் செய்துகொண்டிருக்கிறார். அவ்விடத்தில் காவேரி





நதியும் ஓடுகிறது. அவ்விடத்திலிருந்து ரிஷபாத்ரி, ஹரிக்ஷேத்திரம், தென்மதுரை இவைகள் சென்று ராமேச்வரம் சென்றார். அவ்விடத்தில் ஸமுத்திரத்தில் ஸ்ரீ ராமனால் கட்டப்பட்டிருக்கும் அணையைத் தர்சித்தார். அது மஹாபாபங்களையும் போக்கடிக்க கூடியது. அவ்விடத்தில் பலராமன் ப்ராஹ்மணர்களுக்கு லக்ஷம் பசுக்களைத்தானம் செய்தார். பின்பு கிருதமாலா, தாம்ரபர்ணீ இந்த நதிகளையடைந்து மலயம் என்ற குலபர்வதம் சென்றார். அவ்விடத்தில் வஸிக்கும் அகஸ்திய மஹர்ஷியைத் தர்சித்து, நமஸ்கரித்து, அவரால் ஆசீர்வதிக்கப்பெற்று, அவரிடம் உத்திரவு பெற்று, தெற்கு ஸமுத்திரம் சென்றார்.

அவ்விடத்திலிருக்கும் கன்னியா என்ற துர்க்கா தேவியைதர்சித்தார். அவ்விடமிருந்து அனந்தபுரம் சென்று பஞ்சாப் ஸரஸம் என்ற தீர்த்தஞ்சென்றார். அதில் விஷ்ணுவின் ஸான்னித்தியம் எப்பொழுதும் இருக்கிறது. அதில் ஸ்நானஞ்செய்து லக்ஷம் பசுக்களைத் தானஞ்செய்தார். பின்பு அவ்விடமிருந்து கேரளம், ஸோமகர்த்தகம் என்ற தேசங்களையடைந்து கோகர்ணமென்ற சிவக்ஷேத்திரம் சென்றார். அவ்விடத் தில் பார்வதியை தர்சனஞ்செய்து சூர்ப்பாரகமென்ற க்ஷேத்திரஞ்சென்றார். அவ்விடமிருந்து தாபி, பயோஷ்ணி, நிர்விந்தியா என்ற நதிகளில் ஸ்நானஞ் செய்து தண்டகைக்குச் சென்று ரேவா நதியை அடைந்தார். அதன் கரையில் மாஹிஷ்மதி என்ற பட்டணமிருக்கிறது. அவ்விடமிருந்து மனுதீர்த்தஞ் சென்று திரும்பவும் ப்ரபாஸக்ஷேத்திரம் வந்தார். அவ்விடத்திலுள்ள ப்ராஹ்மணர்கள் "கௌரவர்களும் பாண்டவர்களும் யுத்தம் செய்ததால் எல்லா அரசர்களும்

மரணமடைந்தார்கள்" என்று சொல்லிக்கொண்டார்கள் அதனைக்கேட்ட பலராமன் பூமியின் சுமை நிவர்த்தி யாயிற்று என்று நினைத்தார். மேலுமவர் பீமன், துர்யோதனன், ஆகிய இருவர்களும் கதாயுத்தஞ் செய்து கொண்டிருப்பதைத் தடுக்க வேண்டுமென்ற விருப்பத்துடன் குருக்ஷேத்திரஞ் சென்றார். தர்ம புத்திரர், அர்ஜுனன், நகுலஸஹ தேவர்கள் ஆகிய இவர்கள் பலராமனைக்கண்டு நமஸ்கரித்து எதைச் சொல்வதற்கு வந்திருக்கிறாரோ என்று நினைத்து மௌனமாக விருந்தார்கள்.

26–29. அந்த ஸமயத்தில் துர்யோதனனும் பீமஸேனனும் கதாயுதத்தை யெடுத்துக்கொண்டு மிக்க கோபத்துடன் ஒருவரையொருவர் ஜயிக்கவேண்டு மென்ற விருப்பத்துடன் மண்டலம் முதலிய கதி விசேஷங்களைக்காட்டி யுத்தஞ்செய்து கொண்டிருந் தார்கள். பலராமன் அவர்களைப்பார்த்து "ஓ துர்யோதன! ஓ பீமசேன! உங்களில் ஒருவர் மிக்க பலமுள்ளவர்; மற்றொருவர் கதா யுத்தத்தை நன்றாய் அப்பியஸித்தவர்; ஆனதால் நீங்களிருவர்களும் ஸமமான பராக்கிர முள்ளவர்கள். அதனால் ஜயமாவது அபஜயமாவது உண்டாகவில்லை. வீணில் சண்டை செய்வதில் என்ன ப்ரயோஜனம்? யுத்தத்தை நிறுத்திவிடுங்கள்" என்று சொன்னார். அதனைக்கேட்டும் அவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் முன்னடந்த கெட்ட நடையையும், துஷ்ட வார்த்தையையும் நினைத்துக்கொண்டு, பலராமனுடைய வார்த்தையை அங்கீகரிக்கவில்லை. அப்பொழுது பலராமன் "இவர்களுடைய முன்ஜன்மத்திய கர்மவசத்தால் நம்முடைய வார்த்தையை இவர்கள் கேட்கவில்லை" என்று நினைத்து த்வாரகா நகரஞ் சென்று உக்கிரஸேனர் முதலிய பந்துக்களுடன் சேர்ந்தார்.





30–34. பின்பு பலராமன் நைமிசாரண்யத்திற்கு திரும்பவும் வந்தார். அவ்விடத்திலுள்ள மஹர்ஷிகள் யஜ்ஞஸ்வரூபியும் ஒருவரிடத்திலும் விரோதபுத்தி இல்லாதவருமான அவருக்கு யாகஞ்செய்வித்தார்கள். அந்த மஹர்ஷிகளுக்கு பலராமன் சுத்தமான ஆத்மஞானத்தைக்கொடுத்தார். (உபதேசித்தார்) அந்த ஞானத்தால் ஸகல ஜகத்தையும் ஆத்மாவிடத்திலும், ஆத்மாவை ஸகல ஜகத்திலும் இருப்பதாகப்பெரியோர் கள் பார்க்கிறார்கள். இப்படி பலராமன் தமது பத்னியுடனும், பந்துக்களுடனும், ஸ்நேஹிதர்களுடனும், அவபிருத ஸ்நானஞ்செய்து வஸ்திரம் முதலியவை களால் அலங்கரிக்கப்பெற்று, சந்திரிகையுடன், சந்திரன் விளங்குவதுபோல் ப்ரகாசித்தார். மிக்க பலிஷ்டரும், நாசமற்றவரும் அளவற்ற மஹிமையுள்ளவரும், மாயை யால் மனிதவடிவங்கொண்டவருமான பலராமனுடைய சரிதங்கள் இம்மாதிரி அளவற்றவையாகவிருக்கின்றன. அப்படிப்பட்ட பலராமனுடைய சரிதங்களை காலை யிலும் மாலையிலும் எவன் த்யானஞ்செய்கிறானோ, அவனிடத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு ப்ரியப்படுவார்.



# அத்தியாயம்–80

## குசேல சரித்திரம்

பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி, "ஓ பகவன்! மகாத்மாவாயும் அளவற்ற வீரியமுள்ள வருமான ஸ்ரீ கிருஷ்ணன் இன்னும் எவைகளைச் செய்தாரோ, அந்த அத்புதமான சரிதங்களைக் கேட்க விரும்புகிறேன். ஓ ப்ராஹ்மண! ஆசையாகிய பாணத்தால் அடிக்கப்பட்டு துக்கத்தையடைந்தவனும், பாகவத கதையின் ஸாரத்தை அறிந்தவனுமான எவன் உத்தம ச்லோகராகிய பகவானுடைய அத்புதமான சரிதங்களைக் கேட்டு போதுமென்ற திருப்தியை அடைவான்? எது பகவானுடைய குணங்களைச் சொல்லுகிறதோ அதுவே வாக்காகும். எவைகள் பகவானைப் பூஜிக்கின்றனவோ, அவைகளே கைகள். ஸ்தாவரங்களிலும், ஜங்கமங்களிலும் வஸிக்கும் பகவானை எது த்யானஞ் செய்கிறதோ அதுவே மனம். அவருடைய புண்யமான கதைகளை எது கேட்கிறதோ, அதுவே காது. ஸ்தாவரமாகவும் ஜங்கமமாகவுமிருக்கிற பகவானுடைய பிம்பத்தை எது நமஸ்கரிக்கிறதோ, அதுவே தலை. அந்தந்த பகவத் ஸ்வரூபத்தை எது தர்சிக்கிறதோ, அதுவே கண், பகவானுடையவும் பக்தர்களுடையவும் பாத தீர்த்தத்தை எவை அடைகின்றனவோ, அவைகளே அவயங்கள். ஆனதால் கிருஷ்ணனுடைய சரிதத்தைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

5–11. அதனைக்கேட்ட சுகர், ஸ்ரீ கிருஷ்ணனை மனத்தில் த்யானஞ் செய்து பின்வருமாறு





சொல்லலானார். எப்படியெனில்– "ஸ்ரீகிருஷ்ணனுக்கு குசேலரென்று ஒரு ப்ராஹ்மணன் தோழராக இருந்தார். அவர் ப்ரஹ்மத்தை அறிந்தவர்களுக்குட் சிறந்தவர்; இந்திரியங்களின் விஷயங்களான ரூபம் முதலியவைகளில் ஆசையற்றவர், இந்திரியங்களை ஜயித்தவர்; மனதையடக்கியவர்; தைவச் செயலால் கிடைத்ததைக் கொண்டு ஜீவிப்பவர்; அவருடைய பத்னியாகிய குசேலா என்பவளும் தைவச் செயலால் கிடைத்த அன்னத்தைப் பர்த்தாவாகிய குசேலருக்குத் கொடுத்துத் தான் போஜனம் செய்யாமல், பசியால் வருத்தப்பட்டவளாகவே இருந்தாள். அந்தப் பதிவ்ரதையான குசேலா என்பவள் ஒருநாள் பர்த்தாவை நோக்கி பயத்தால் நடுக்கமடைந்து துக்கித்து, "ஓ ப்ராஹ்மண! உமக்கு லக்ஷ்மீபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணன் தோழரல்லவா? அவர் ப்ராஹ்மண பக்தியுள்ளவர்; சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுகிறவர்; ஓ மிகுந்த அதிஷ்டமுள்ளவரே! ஸாதுக்களுக்குக் கதியாயுள்ள அந்தப் பகவானிடம் சென்றால் குடும்பியும், ஏழையுமான உமக்கு ஏராளமான பணத்தைக் கொடுப்பார். அந்தப் பகவான் இப்பொழுது போஜர்களுக்கும் விருஷ்ணிகளுக்கும், அதிபதியாகத் த்வாரகா நகரத்தில் வஸிக்கிறார். அவர் தம்முடைய பாதாரவிந்தத்தைத் த்யானிப்பவர்களுக்குத் தமது ஆத்மாவையும் கொடுக்கிறார். அப்படியிருக்க ஜகத்திற்கு அதிபதியாகிய அந்த பகவான் விஷய ஸுகத்தைக் கொடுப்பார் என்பதில் என்ன ஸந்தேஹம்?" என்று சொன்னாள்.

12–26. இப்படி பத்னியால் பலவாறாகப் பிரார்த்திக்கப்பட்டுக் குசேலர், "உத்தம ச்லோகராகிய

பகவானைத் தர்சிப்பதே மேலான லாபம்'' என்று நினைத்து, த்வாரகைக்குப் போக நிச்சயித்தார். பின்னுமவர் பத்தினியை நோக்கி, "ஓ நல்ல ஸ்வபாவ முள்ளவளே! நம்முடைய கிருஹத்தில் பகவானுக்குக் கொடுக்கக் கூடிய வஸ்து ஏதாவது இருக்கிறதா?'' என்று கேட்டார். அதனைக் கேட்ட அவள் நாலு பிடி அவலரிசியை பிறரை யாசித்து வாங்கி, அதனைக் கந்தத் துணியில் முடிந்து பர்த்தாவிடம் கொடுத்தாள். அந்தப் ப்ராஹ்மண ச்ரேஷ்டர் அதனை வாங்கிக்கொண்டு, "ஸ்ரீகிருஷ்ணனுடைய தர்சனம் எனக்கு எப்படிக் கிடைக்கும்?" என்று யோசித்துக் கொண்டு த்வாரகா நகரஞ் சென்றார். அந்த நகரத்தில் மூன்று குல்மங்களையும் (ஸைன்யங்களிருக்குமிடம்) மூன்று வீதிகளையும் தாண்டிச் சென்றார்.

அவ்விடத்தில் கிருஷ்ண பக்தர்களான அந்தகர்கள், விருஷ்ணிகள் இவர்களுடைய கிருஹங்கள் இருக்கின் றன. அவ்விடத்தில் ஸாமான்ய ஜன்மங்கள் போக முடியாது. அதற்கப்புறம் ஸ்ரீகிருஷ்ணனுடைய பதினாறு ஆயிரம் ஸ்திரீகளுடைய அந்தப்புரங்களிருக்கின்றன. அதற்குள் மிக்க அழகு பொருந்திய ஒரு கிருஹத்தில் குசேலர் ப்ரவேசித்தார். அப்பொழுது ப்ரஹ்மானந்தத் தை அடைந்தவர்போல இருந்தார். அவ்விடத்தில் ருக்மிணியினுடைய கட்டிலில் உட்கார்ந்திருந்த ஸ்ரீ கிருஷ்ணன் வெகு தூரத்திலேயே குசேலரைக் கண்டு சீக்கிரமாய் எழுந்திருந்து எதிரில் வந்து இரு கைகளாலும் கட்டி, கொண்டார். இம்மாதிரி தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் தோழராகிய ப்ராஹ்மணனை ஆலிங்கனஞ் செய்து அவருடைய சரீர ஸ்பரிசத்தால் அதிக ஆனந்தத்தை யடைந்து





ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கினார். பின்பு குசேலரை தம்முடைய கட்டிலில் உட்கார வைத்து, பூஜாத் திரவியங்களைக் கொண்டு வந்து குசேலருடைய பாதங்களை அலம்பி, அந்த ஜலத்தைத் தம்முடைய சிரஸில் புரோக்ஷித்துக் கொண்டார். [ஸகல லோகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறவரானாலும்] பின்னும் ஸ்ரீகிருஷ்ணன் திவ்யமான வாஸனையுள்ள குங்குமப்பூ சேர்ந்த சந்தனத்தைத் தமது கையால் பூசி, வாஸனையுள்ள தூபங்களாலும், தீபத்தாலும் தோழராகிய குசேலரைப் பூஜித்தார். அதன்பின் தாம்பூலங்கொடுத்து, நல்வரவாவென்று கேட்டார். அப்பொழுது ருக்மிணிதேவி சாமரத்தையெடுத்து அழுக்கடைந்த வஸ்திரமுள்ளவரும், சரீரம் இளைத்திருப்பதால் வெளியில் தெரிகின்ற நரம்புகள் உள்ளவருமான குசேலரை விசிறினாள்.

இப்படி சுத்தமான கீர்த்தியுள்ள ஸ்ரீகிருஷ்ணனால் பூஜிக்கப்பட்ட குசேலரைக் கண்டு அந்தப்புர ஜனங்கள் மிகவும் ஆச்சரியமடைந்து, பிக்ஷுகனும், பணமில்லாதவனும், அழகில்லாதவனுமான இந்தப் ப்ராஹ்மணனால் என்ன புண்ணியம் செய்யப்பட்ட தோ? மூன்று லோகத்திற்கும் அதிபதியாகிய லக்ஷ்மீ பதியான கிருஷ்ணன் கட்டிலிலிருக்கும் ருக்மிணி தேவியை விட்டுவிட்டு பலராமனைப்போல் இந்தப் பிராம்மணரை கட்டிக்கொண்டார்' என்று சொல்லிக் கொண்டார்கள்.

27–43. பின்பு ஸ்ரீ கிருஷ்ணனும், குசேலரும், ஒருவருக்கொருவர் கையைப் பிடித்துக்கொண்டு தாங்கள் குருகுல வாஸம் செய்யும்பொழுது நடந்த

கதைகளைப் பற்றிப் பேசிக்கொண்டார்கள். அப்பொழுது கிருஷ்ணன் குசேலரை நோக்கி, "ஓ ப்ராஹ்மண! ஆசார்யருடைய கிருஹத்தில் வஸித்து, அவரிடம் விடைபெற்றபின் ஸமாவர்த்தனஞ் செய்துகொண்டு உமக்குத் தகுதியான பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொண்டீரா ? இல்லையா ? பெரும்பாலும் உம்முடைய மனது விஷயங்களை விரும்புகிறதில்லை. ஓ வித்வானாகிய தோழனே! பணத்திலும் உமக்கு ஆசையில்லை என்பது எனக்குத் தெரியும். நான் எப்படி லோகங்களைக் காப்பாற்றுவதற்காக ஒன்றையும் விரும்பாமல் ஸகல கர்மங்களையும் செய்கிறேனோ, அப்படி சிலர் கர்மங்களை யனுஷ்டிப்பார்கள்: ஓ ப்ராஹ்மண! நாமிருவரும் ஆசாரியருடைய கிருஹத்தில் வஸித்து வித்தியாப்பியாஸம் செய்தோமல்லவா ? அந்த ஞாபகம் உமக்கு இருக்கிறதோ ? ப்ராஹ்மணன் தெரிந்துகொள்ள வேண்டியதை [ஆத்ம தத்வத்தை] அறிந்து, ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறான்.

எவன் இந்தச் சரீரத்தை உண்டுபண்ணுகிறானோ, அந்த பிதா முதலாவது குருவெனப்படுகிறார். எவர் உபநயனஞ் செய்வித்துக் கர்மங்களை யனுஷ்டிக்கும் படி செய்கிறாரோ, அவர் இரண்டாவது குருவாகிறார். அவ்விருவர்களையும் என்னைப்போல் பூஜிக்க வேண்டியதுதான். எல்லோருக்கும் ஞானத்தைக் கொடுப்பவர் மூன்றாவது குரு. [நானே அந்த குரு ஸ்வரூபியாக இருக்கிறேன் என்று கருத்து] இந்த மனுஷ்ய ஜன்மத்தில் வர்ணம் (ஜாதி) ஆச்ரமம் இவைகளுள்ள மனிதர்களுக்குள் எவர்கள் உண்மையை அறிந்தவர்களோ, அவர்கள் ஆசார்ய ஸ்வரூபியான என்னால் உபதேசிக்கப்பெற்று ஸம்ஸார ஸமுத்திரத்தை







தாண்டுகிறார்கள். [ஞானோபதேசஞ் செய்யும் குருவை விட மேலானவர்களில்லையென்று தாத்பர்யம்]. ஆசாரியனுக்குச் சுச்ரூஷை செய்கிறவனிடத்தில் ஸகல ப்ராணிகளின் ஸ்வரூபியாகவிருக்கும் நான் எப்படி ஸந்தோஷத்தை அடைகிறேனோ, அப்படி யாகஞ் செய்தவனிடத்தில், நல்ல குலத்தில் பிறந்தவனிடத்திலும், தபஸ்வியினிடத்திலும், மனத்தை அடக்கியவனிடத்தி லும் ஸந்தோஷப்படுகிறதில்லை. ஓ ப்ராஹ்மண! ஆசார்யனுடைய கிருஹத்தில் நாமிருவர்களும் வஸித்த பொழுது நடந்த விஷயங்கள் ஞாபகமிருக்கிறதா ? ஆசார்யருடைய பத்னி ஒரு நாள் விறகுவெட்டி வரும்படி நம்மிருவர்களையும் ஆக்ஞாபித்தாள்.

நாமிருவர்களும் விறகு கொண்டு வருவதற்காகக் காட்டிற்குச் சென்றோம். அப்பொழுது மழைக்கால மில்லாதிருந்தும் திடிரென்று மிக்க மழை பெய்தது; காற்றும் வீசியது; மேகங்கள் கடுமையாக சப்தித்தன; கடுமையான இடிகள் விழுந்தன; அப்பொழுது ஸூர்யன் அஸ்தமயத்தை அடைந்தான். இருள் திக்குகளில் பரவியது; எங்கும் ஒரே ஜலமயமாக இருந்ததால் பள்ளம் மேடு இவைகள் தெரியவில்லை. அந்தச் ஸமயத்தில் நாமிருவர்களும் காற்று மழையால் உபத்திரவிக்கப்பட்டு ஒருவருக்கொருவர் கைகளைப் பிடித்துக் கொண்டு கிழக்கு முதலிய திக்குகளை யறியாமல் வனத்தில் சுற்றிக்கொண்டிருந்தோம். அதனை யறிந்து ஸாந்தீபினி என்ற நம்முடைய ஆசாரியர் காலையில் ஸூர்யன் உதயமானவுடன் வனம் வந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் நம்மை பார்த்து, "ஓ குழந்தைகளே! எல்லாப் பிராணிகளுக்கும் தங்கள் ஸரீரத்தில் மிக்க ப்ரியமிருக்கும். அதையும் லக்ஷ்யஞ்

செய்யாமல் நீங்கள் என் விஷயத்தில் மிகவும் துக்கத்தை அடைந்திருக்கிறீர்கள். சுத்தமான எண்ணத்துடன் ஸகல ப்ரயோஜனத்தையுமுண்டு பண்ணக்கூடிய ஆத்மாவை சமர்பிப்பதே ஆசாரியர் களுக்குச் சிஷ்யர்களால் செய்யக்கூடிய உபகாரம். ஓ ப்ராஹ்மண ச்ரேஷ்டர்களே! உங்களிடத்தில் நான் சந்தோஷம் அடைந்தேன். உங்களுடைய எண்ணங்கள் எல்லாம் பலிக்கட்டும். அயாதயாமமென்ற வேதங்கள் (என்னிடம் அத்யயனஞ் செய்யப்பட்ட சுக்ல யஜுர்வேதம்) இவ்வுலகத்திற்கும் பரலோகத்திற்கும் உபயோகப்படட்டும்" என்று அனுக்ரஹித்தார். இம்மாதிரி அநேக கார்யங்கள் நாம் ஆசார்யருடைய க்ருஹத்தில் வஸிக்கும்பொழுது நடந்தன. ஆசார்யருடைய அனுக்கிரஹத்தால்தான் புருஷன் பூர்ணனாகிறான்" என்றார்.

44–45. அதனைக்கேட்ட குசேலர், "ஓ தேவர் களுக்கும் தேவ! ஜகத்திற்குக் குருவே! உம்முடன் சேர்ந்து நான் குருகுலவாஸஞ் செய்ததனால் எதுதான் என்னால் அடையப்படவில்லை? (க்ருதார்த்தனாக இருக்கிறேன் என்று கருத்து) ஓ ப்ரபுவே! உம்முடைய சரீரமானது வேத ஸ்வரூபமானது; ஸகல க்ஷேமங்களை யும் கொடுக்கக்கூடியது. அப்படிப்பட்ட நீர் குருகுல வாஸஞ் செய்து வேதாத்யயனஞ் செய்தது மிகவும் மனுஷ்ய பாவனையை அனுஸரித்ததேயாம்" என்று சொன்னார்.





# அத்யாயம்–81.

## குசேலருக்குப் பகவான் ஐச்வர்யத்தைக் கொடுத்தது.

இப்படி குசேலருடன் ஸ்ரீ கிருஷ்ணன் பேசிக் கொண்டு ஸகல ப்ராணிகளுடைய எண்ணத்தையும் அறிந்தவரானதால் (இவர் கொண்டுவந்திருக்கும் அவலைக் கொடுப்பதற்கு வெட்கப்படுகிறார் என்பதை யறிந்து) சிரித்தார். மேலும் ப்ராஹ்மண பக்தியுள்ள வரும், ஸாதுக்களுக்குக் கதியுமான அந்தப் பகவான் தோழராகிய குசேலரை அன்புடன் கடாக்ஷித்து "ஓ ப்ராஹ்மண உம்முடைய க்ருஹத்திலிருந்து எனக்குக் கொடுப்பதற்காக எதனைக் கொண்டு வந்தீர்? பக்தர்கள் ஸ்வல்பத்தைக் கொடுத்தாலும் அது எனக்கு அதிகமாகவேயாகும். பக்தியில்லாதவர்கள் ஏராளமாக எனக்குக் கொடுத்தாலும் அதனால் எனக்கு ஸந்தோஷ மில்லை. இலையையாவது, புஷ்பத்தையாவது, பழத்தை யாவது, ஜலத்தையாவது, சுத்த ஸ்வபாவமுள்ள எவன் பக்தியுடன் எனக்கு ஸமர்ப்பிக்கிறானோ, அதனை நான் புஜிப்பேன்" என்றார்.

6–12. அதனைக்கேட்டு குசேலர் மிகவும் வெட்கம டைந்து லக்ஷ்மீபதியாகிய பகவானிடத்தில் அந்த அவலைக் கொடுக்காமலேயே தலைகுனிந்திருந்தார். அப்பொழுது ஸகல ப்ராணிகளின் அந்தக்கரணத்திற்கு ஸாக்ஷியாகவிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் குசேலர் தம்மிடம் வந்திருக்கும் கார்யத்தைத் தெரிந்துகொண்டு இவர் ஸம்பத்து வேண்டுமென்ற விருப்பத்துடன் என்னை ஆராதிக்கவில்லை. ஆனாலும் பதிவ்ரதையான பத்தினியால் ப்ரார்த்திக்கப்பட்டு அவளுக்கு ப்ரியத்தைச்

செய்ய விரும்பி என்னிடம் வந்திருக்கிறார். அதனால் மனிதர்களுக்கு கிடைக்காத ஸம்பத்துக்களை இவருக்குக் கொடுக்கிறேன்" என்று யோசித்து கந்தைத் துணியில் முடிந்துவைத்துக் கொண்டிருக்கும் அவலை இதென்ன என்று தாமாகப் பிடுங்கிக்கொண்டார். பின்னுமவர் அதை எடுத்து "ஓ தோழ! அவலில் எனக்கு மிகவும் பிரியமன்றோ. ஸகல ஜகத்ஸ்வரூபி யான எனக்கு இந்த அவலால் விசேஷ திருப்தி யுண்டாகும்" என்று சொல்லி ஒரு பிடி அவலை எடுத்துப் புஜித்து இரண்டாவது பிடியெடுத்து புஜிக்க யத்தனித்தார். அதனைக் கண்ணுற்ற ருக்மிணி தேவி சீக்கிரமாக கிருஷ்ணனுடைய கையைப் பிடித்துக் கொண்டாள். மேலுமவள் "ஓ ஸகல ஜகத்ஸ்வரூபியாக விருப்பவரே! இந்த லோகத்திலும், பரலோகத்திலும், ஸகல ஸம்பத்தையும் கொடுப்பதற்கு இதுவே போது மானது. இதுவே உம்மை ஸந்தோஷப் படுத்தக்கூடியது" என்று சொன்னாள். (இரண்டாவது பிடி அவலையும் நீர் புஜித்தால் லக்ஷ்மியாகிய நானும் ப்ராஹ்மணனுக்கு ஸ்வாதீனப்படவேண்டும். முதலில் புஜித்த அவலாலேயே என்னுடைய கடாக்ஷத்தாலுண்டாகும் ஸம்பத்துக்கள் யாவும் உண்டாயினவென்று கருத்து).

13–39. குசேலர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய கிருஹத்தில் அன்றைய ராத்திரி வஸித்து உத்தமமான அன்னத்தைப் புஜித்து விசேஷஸுகத்தையடைந்து தம்மை ஸ்வர்க்கத் திலிருப்பவராக நினைத்துக்கொண்டார். மறுநாள் காலையில் ஸகல ஜகத்தையும் காப்பாற்றுகிறவரும், தமது ஆனந்தத்தால் பரிபூர்ணருமான பகவான் குசேலரை நமஸ்கரித்து கொஞ்சதூரம் கூடச்சென்று விடை கொடுத்தனுப்பினார். இப்படி பணங்கொடாமல்





குசேலரை ஊருக்கு அனுப்பியும் அவர் தோழராகிய கிருஷ்ணனை யாசிக்கவில்லை. மஹானாகிய ஸ்ரீ கிருஷ்ணனைத் தர்சித்தால் மிக்க ஸுகத்தை அடைந்து வெட்கத்துடன் (தன்னுடைய மனதிற்குண்டான கார்ப்பண்யத்தால்) தம்முடைய வீட்டை நோக்கிப் புறப்பட்டு பின்வருமாறு தனக்குள் யோசிக்கலானார். எப்படியெனில்– "ப்ராஹ்மணர்களைத் தைவமாகக் கொண்ட ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ப்ராஹ்மணர்களிடத் திலிருக்கும் பக்தியைப் பார்த்தேன். லக்ஷ்மீதேவியை மாரில் வைத்துக்கொண்டிருக்கும் பகவான் என்னை ஆலிங்கனஞ்செய்துகொண்டார். தரித்ரனும் பாபியு மான எனக்கும், லக்ஷ்மிக்கு வாஸஸ்தலமாகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் எவ்வளவு தாரதம்யமிருக்கிறது? ப்ராஹ்மணனென்ற காரணத்தால் என்னை பகவான் இருகைகளாலும் ஆலிங்கனஞ் செய்துகொண்டார்.

மேலுமவர் தம்முடைய ஸஹோதரர்களைப்போல பத்னியின் கட்டிலில் உட்கார்த்திவைத்தார். ருக்மிணி தேவி சாமரத்தையெடுத்து விசிறி களைப்பை நிவர்த் தித்தாள். பின்னும் ஸ்ரீ கிருஷ்ணன் தேவர்களுக்கு அதிபதியானாலும், என் பாதங்களைப் பிடித்துவிடுவது முதலிய உபசாரங்களைத்தாமேசெய்து தேவர்களைப் போல என்னைப் பூஜித்தார். (தேவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனைப் பூஜிப்பது போல என்னை ஸ்ரீ கிருஷ்ணன் பூஜித்தாரென்றும் தாத்பர்யமுண்டு) அந்தப் பகவானுடைய பாதத்தைப் பூஜித்தால், ஸ்வர்க்கம், மோக்ஷம், பாதாளத்திலுள்ள ஸம்பத்து, பூமியிலுள்ள ஐச்வர்யம், மற்ற எல்லா ஸித்திகள் ஆகிய இவைகள் ஸித்திக்கும். ஆனால் பணத்தை பகவான் நமக்குக் கொடுக்கவில்லை அதன் காரணமென்னவென்றால்

"தரித்ரனாகவிருக்கும் இந்த ப்ராஹ்மணனுக்கு தனத்தைக்கொடுத்தால் அதனால் இவர் மதத்தை அடைந்து என்னை நினைக்க மாட்டார்" என்று என்னிடத்தில் தயையால் ஸ்வல்பமான தனத்தையும் கொடுக்கவில்லை" என்று யோசித்துக்கொண்டே தம்முடைய கிருஹத்தின் ஸமீபம் வந்தார். அந்த வீடானது ஸூர்யன் போலவும், அக்னிபோலவும், சந்திரன் போலவும் ப்ரகாசிக்கும் விமானங்களுள்ள தாகவிருந்தது. பலவகையான உத்யானங்களும் விளையாடும் தோட்டங்களும், அவைகளில் பல வகையான பறவைகள் சப்தித்துக் கொண்டுமிருந்தன குமுதம், தாமரை, செங்கழனீர் முதலிய புஷ்பங்களின் வாஸனையுள்ள ஜலத்தால் பூர்ணமான குளங்களுமிருந்தன.

புருஷர்களும், ஸ்திரீகளும் மேலான வஸ்திரம் ஆபரணம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பெற்றிருந் தார்கள். அந்த கிருஹத்தைக் கண்ணுற்ற குசேலர் "இது யாருடைய கிருஹம்? நம்முடைய கிருஹம் எப்படி இம்மாதிரியாயிற்று" என்று ஸந்தேஹித்த அந்த ப்ராஹ்மணனை தேவர்கள் போன்ற புருஷர் களும், ஸ்திரீகளும், வாத்யங்களை முழக்கிக்கொண்டும் பாடிக்கொண்டும் எதிரில் சென்று அழைத்தார்கள். அப்பொழுது குசேலருடைய பத்னியானவள் பர்த்தா வருகிறார் என்பதைக் கேள்விப்பட்டு பக்தி விசேஷத் தால் பரபரப்புக்குள்ளவுளாகி மனித வடிவங்கொண்ட லஷ்மீதேவிபோல் கிருஹத்திலிருந்து வெளியில் வந்தாள். பதிவ்ரதையான அந்த ஸ்திரீயானவள் பர்த்தாவைப்பார்த்து மிக்கப்பிரியத்தால் பெருகிய ஆனந்த கண்ணீருள்ளவளாகி கண்களை மூடிக்கொண்டு நமஸ்கரித்தாள். மனத்தால் ஆலிங்கனஞ்செய்து





கொண்டாள். ஸுவர்ண மாலைகளைத்தரித்த வேலைக் காரிகள் அவளைச் சுற்றிக்' கொண்டிருந்தார்கள். அவர்களுடைய நடுவில் தேவஸ்திரீ போல ப்ரகாசிக் கும் பத்தினியைப்பார்த்துக் குசேலர் ஆச்சர்யத்தை அடைந்து பத்னியுடன் தமது கிருஹத்திற்குட் சென்றார் அந்த கிருஹம் அநேக ரத்தின ஸ்தம்பங்களால் மஹேந்திரனுடைய கிருஹம் போல விளங்கிற்று. மேலும் அவ்விடத்தில் பாலின் நுரைப்போன்ற படுக்கைகளுக்கும், ஸுவர்ணமயமான ஸாமக்ரிகளுள்ள தந்தக்கட்டில், தங்கப்பிடியுள்ள சாமரங்களும், ஸுவர்ணமயமான ஆஸனங்களும், மிருதுவான விரிப்புகளும், முத்து மாலைகளால் ப்ரகாசிக்கும் கொடுங்கைகளும் இருந்தன. சுவருகள் சுத்தமான ஸ்படிக மயங்களாகவும், மரகத ரத்னமயங்களாகவும் இருந்ததனால் ரத்தின தீபங்களும், ஸ்திரீகளும் அவைகளில் ப்ரதிபலித்தார்கள்.

இம்மாதிரி ஸகல ஸம்பத்துகளும் பூர்ணமாக விருப்பதைக்கண்டு குசேலர் 'தனக்குண்டான ஸம்பத் திற்குக் காரணமின்னது' என்று அறியாமல் ஸ்திரசித்த முள்ளவராக பின்வருமாறு யோசிக்கலானார். எப்படியெனில் அதிருஷ்டமில்லாதவனும், எப்பொழுதும் தரித்ரனுமாகிய எனக்கு ஸம்பத்துண்டாவதற்கு மிகுந்த ஐச்வர்யமுள்ள ஸ்ரீ கிருஷ்ணனுடைய தர்சனமே காரணமாகிவிருக்கவேண்டும். அதை விட வேறொன்றும் காரணமாகவிருக்க ந்யாயமில்லை. தாசார்ஹர்களுக்குட் சிறந்தவரும் என்னுடைய தோழருமான ஸ்ரீ கிருஷ்ணன் மிக்க ஐச்வர்யமுள்ளவர் (ஆப்தகாமன், லக்ஷ்மீபதி) நேரில் சொல்லாமலேயே மேகம்போல் பக்தர்களுக்கு (நேரில் யாசியாமலிருப்பவர்

களுக்கு) ஸம்பத்தைக் கொடுக்கிறார். (ஸமுத்திரத்தை பூர்த்திசெய்யும்படி வர்ஷிக்கும் ஸ்வபாவமுள்ள மேகமானது தான் மிக்க மழையைப் பெய்தாலும் அதனை ஸ்வல்பமென்று நினைத்து வெட்கத்தால் பகலில் வர்ஷியாமல ஜனங்கள் தூங்கும்பொழுது வர்ஷித்து எப்படி வயலை நனைக்கிறதோ, அப்படி பகவான் ஸகல காமங்களையும் அடைந்தவரானதால் தம்முடைய ஐச்வர்யத்தைவிட பக்தர்களுக்குக் கொடுக்கும் ஐச்வர்யம் குறைந்ததென்றும், அவர்களுடைய பக்தி மேலானதென்றும் நினைத்து நேரில் சொல்லாமலேயே கொடுக்கிறார் என்று கருத்து) ஸ்ரீ கிருஷ்ணன் தாம் மிக்க ஐச்வர்யத்தை பக்தர்களுக்குக் கொடுத்தாலும் அதனை ஸ்வல்பமென்று நினைக்கிறார். பக்தர்கள் அல்பமாக பூஜித்தாலும் அதனை அதிகமாக நினைக்கிறார்.

மிக்க மஹிமைபொருந்தியவரான பகவான் மிக்க ப்ரீதியுடன் நான் கொண்டுபோன அவலைப் பெற்றுக் கொண்டார். ஆனதால் ஒவ்வொரு ஜன்மத்திலும் அந்தப் பகவானிடத்தில் எனக்கு ப்ரேமையும் அனுகூலத்தைச் செய்ய வேண்டுமென்ற விருப்பமும், உபகாரஞ் செய்யவேண்டுமென்ற எண்ணமும் உண்டாகட்டும். மேலும் நான் அவரையே ஸேவித்துக் கொண்டுமிருக்கவேண்டும். மிக்க மஹிமையுள்ளவரும், குணங்களுக்கு இருப்பிடமுமாகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸங்கத்தால் பக்தர்களுடைய சேர்க்கையுண்டாகும். மேலும் பகவான் பணக்காரர்கள் தனகர்வத்தை அடைத்து கெட்டுப்போவார்கள் என்று நினைத்து நல்ல ஞானமில்லாத பக்தனுக்கு ராஜ்யம் முதலிய பலவகையான ஸம்பத்துக்களைக் கொடுக்கிறதில்லை.





(எனக்கு ஸ்திரமான பக்தியில்லாததால் இவ்வளவு ஸம்பத்துக்களுண்டாயின. ஆனதால் ஸ்திரமான பக்தி உண்டாக வேண்டுமென்று தாத்பர்யம்) இம்மாதிரியான நிச்சியத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவராகி விஷய ஆசையை விட்டு விடுவதற்கு உபாயத்தைச் செய்து ஸம்பத்தில் அதிக ஆசை வைக்காமலேயே பத்தினியுடன் போகங்களை அனுபவித்து வந்தார்.

40–42. தேவர்களுக்கும் தேவராகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ப்ராஹ்மணர்களைவிட மேலான தைவம் வேறொன்றுமில்லை. இப்படிப் பகவானுடைய சிறந்த தோழராகிய அந்த ப்ராஹ்மணன் ஒருவராலும் ஜயிக்கப்படாத பகவான் பக்தர்களுக்கு வசப்பட்டிருப்பதைப்பார்த்து அவரையே த்யானஞ்செய்து அதனால் அஹங்காரத்தை நிவர்த்தித்துக்கொண்டு பகவானிடத்தில் நிரந்தரமாக பக்திசெய்து ஸாதுக்கள் அடையக்கூடிய மேலான பதத்தை அடைந்தார். ப்ராஹ்மணர்களையே தைவமாகக்கொண்ட பகவான் ப்ராஹ்மணரிடத்தில் பக்தியுடன் அவலை புஜித்த இந்த உபாக்யானத்தை எவன் கேட்கிறானோ, அவனுக்கு பகவானிடத்தில் பக்தியுண்டாகும். அவன் கர்மபந்தத்திலிருந்து நிவர்த்தியடைவான்.



## அத்தியாயம்–82

### ஸ்ரீ கிருஷ்ணன் முதலியவர்கள் ஸூர்யகிரஹணத்திற்காக குருக்ஷேத்திரஞ் சென்றது

1–21. ராமகிருஷ்ணர்கள் துவாரகையில் வஸிக்கும் பொழுது ஸூர்யகிரஹணம் நேர்ந்து, ப்ரளய காலத்தில் ஸூர்யனுடைய பிம்பம் முழுவதும் மறைக்கப்படுவதுபோல அந்த கிரஹணம் ஸர்வக்ராஸ மாக இருந்தது இம்மாதிரி கிரஹணம் வரப்போகிற தென்று ஜ்யோதிஷ சாஸ்திரத்தை அறிந்தவர்கள் மூலமாகத் தெரிந்து கொண்டு தங்களுக்கு க்ஷேமத்தைச் செய்துகொள்ள விரும்பி எல்லோரும் ஸ்யமந்த பஞ்சகமென்ற ஸ்தலஞ்சென்றார்கள். ஆயுதத்தைத் தரித்தவர்களுக்குட் சிறந்தவரான பரசுராமன் முன்னொருகால் பூமியில் க்ஷத்திரிய வம்சமில்லாமல் செய்யவேண்டி, ஸகல அரசர்களையும் கொன்று, அந்தவிடத்தில் அவர்களுடைய ரத்தத்தால் ஐந்து மடுக்களையுண்டுபண்ணினார். மேலும், அந்தப் பரசுராமன் வீரர்களைக் கொன்றதாலுண்டான பாபத்தை நிவர்த்திப்பதற்காக அவிவேகிகள்போல் யாகஞ்செய்தார். உண்மையில் அவருக்குக் கர்மபந்த மில்லை. ஆனாலும், தாம் ப்ராயச்சித்தஞ் செய்து கொள்ளாவிட்டால் மற்றவர்களும் அனுஷ்டியார்க ளென்று எண்ணி, வீரர்களைக் கொன்றவர்கள் இம்மாதிரி ப்ரயாசித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்று ஜனங்களுக்குத் தெரிவித்துக் கொண்டு, யாகத்தைச் செய்தார். அந்த மிகுந்த புண்ய காலத்தில், மிக்க புண்ய ஸ்தலமான அந்த க்ஷேத்திரத்திற்கு பாரதவர்ஷத்திலுள்ள பிரஜைகள் எல்லாரும்





வந்தார்கள். விருஷ்ணிகளும், அக்ரூரர், வஸுதேவர், ஆஹுகர் முதலியவர்களும் தங்கள் தங்கள் பாபத்தை நிவர்த்தித்துக் கொள்வதற்காக அவ்விடஞ் சென்றார்கள். ஆனால் கதன், ப்ரத்யும்னர், ஸாம்பன், ஸுசந்திரன், சுகன், ஸாரணன், ஸேனாதிபதியான கிருதவர்மா இவர்களுடன் அனிருத்தர் த்வாரகா நகரத்தைக் காப்பாற்றிக்கொண்டு இருந்தார். (அவர்கள் போக வில்லையென்று கருத்து) மற்ற யாதவர்கள் தேவவிமானம் போன்ற ரதங்களுடன், ப்லவகதி முதலியவைகளைக் காட்டிக்கொண்டு செல்லுகின்ற குதிரைகளுடனும், மேகம் போன்றனவும், கர்ஜிப்பவை யுமான யானைகளுடனும், வித்யாதரர்கள் போலப் பிரகாசிக்கும் காலாட் படையுடனும், அவர்களுடைய மனைவிகளுடனும் திவ்யமாலை, வஸ்திரம் முதலிய ஸாமக்ரிகளுடனும் குருக்ஷேத்திரஞ் சென்று தேவர்கள் போலப் ப்ரகாசித்தார்கள்.

மிக்க அதிருஷ்டமுள்ளவர்களான அவர்கள் அந்தப் புண்ய காலத்தில் உபவாஸமிருந்து, ஸ்நானஞ் செய்து, வஸ்திரங்களாலும், புஷ்பமாலைகளாலும், ஸுவர்ண மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட பசுக் களை பிராஹ்மணர்களுக்குக் கொடுத்தார்கள். பின்னும் அவர்கள் கிரஹணம் விட்டபின்பும் பரசுராமனுடைய மடுக்களில் ஸ்நானஞ்செய்து, "ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் எங்களுக்குப் பக்தியுண்டாகட்டும்" என்று ப்ரார்த் தித்துக்கொண்டு சிறந்த ப்ராஹ்மணர்களுக்கு ஸுவர்னத்தைக் கொடுத்தார்கள். இப்படி கிருஷ்ண னையே தைவமாக கொண்ட விருஷ்ணிகள், ஸ்ரீ கிருஷ்ணனுடைய உத்தரவின்மீது போஜனஞ்செய்து, அடர்ந்த நிழலுள்ள மரங்களுடைய அடியில்

உட்கார்ந்தார்கள். அப்பொழுது அந்த யாத்திரைக்காக மத்ஸ்யர்கள், உசீனரர்கள், கோஸல தேசத்தார்கள், விதர்ப்பர்கள், கௌரவர்கள், ஸ்ருஞ்ஜயர்கள், காம்போஜர்கள், மத்திரர்கள், கேகயர்கள், குந்திகள், ஆரட்டர்கள், கேரளர்கள், முதலியவர்கள் வந்திருந்தார்கள், அவர்கள் விருஷ்ணிகளுக்கு மித்திரர்களும், ஸம்பந்திகளும், பந்துக்களுமாக இருந்ததினால் அவர்களைச் சந்தித்தார்கள். மேலும், நந்தன் முதலிய மித்திரர்களையுங் கண்டார்கள். யசோதை முதலிய கோபிகைகளையும் கண்டார்கள். இம்மாதிரி ஒருவருக்கொருவர் பார்த்து கொண்டதனால் விசேஷ ஸந்தோஷத்தை அடைந்து, முகம் மலர்ந்தவர்களாகி, மயிர்கூச்சல் அடைந்து, ஆனந்த கண்ணீரைப் பெருக்கிக் கண்களால் ஆலிங்கனஞ் செய்துகொண்டு ஆனந்தத்தை அடைந்தார்கள்.

ஸ்திரீகள் ஸ்திரீகளைக்கண்டு அன்புள்ள கடைக்கண் பார்வையால் கடாக்ஷித்து, ஸ்தனங்கள் ஸ்தனங்களில் படும்படி ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள். அவர்களில் பெரியோர்களை சிறியவர்கள் நமஸ்கரித்தார்கள். நல்வரவா ? க்ஷேமமா ? என்று விசாரித்து ஒருவருக்கொருவர் ஸ்ரீகிருஷ்ணனுடைய கதையைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். குந்தி தேவியானவள் ஸஹோதரர்களையும், ஸஹோதரிகளையும், அவர்களுடைய பெண் பிள்ளைகளையும், தாய் தந்தைகளையும், ஸஹோதர பத்தினிகளையும் ஸ்ரீ கிருஷ்ணனையும் தர்சித்துத் துக்கத்தை விட்டாள். அப்பொழுது குந்தி வஸுதேவரை நோக்கி, "அண்ணா என்னுடைய ஆபத்துக் காலங்களில் என்னை நினைக்காமலும், என் வார்த்தையைப் பேசாமலும் நீங்களிருப்பதால்





நான் அதிருஷ்டமில்லாதவளென்று நினைக்கிறேன், எவனுக்குத் தைவம் அனுகூலமாக இருக்கவில்லையோ, அவனை மித்திரர்களும், பந்துக்களும், புத்திரர்களும், தாய் தந்தைகளும் நினைக்க மாட்டார்கள்" என்றாள்.

22–23. அதனைக்கேட்ட வஸுதேவர் குந்தியை நோக்கி, "ஓ அம்ம எங்களிடத்தில் நீ கோபிக்க வேண்டாம். ஸகல ஜனங்களும் ஈசுவரனுக்கு வசப்பட்டு, எல்லா கார்யங்களையும் செய்கிறார்கள். சாமானிய ஜனங்களுக்கு பொம்மை முதலியவை எப்படி விளையாட்டு சாமானாக இருக்கின்றனவோ, அப்படி ஜனங்கள் பகவானுக்கு விளையாட்டுக் கருவிகளாக இருக்கிறார்கள். நாங்களெல்லாரும் கம்ஸனால் உபத்திரவிக்கப்பட்டு, ஒவ்வொரு திக்குகளிலும் பயந்து சென்றிருந்தோம். இப்பொழுதுதான் தைவச் செயலாக இருப்பிடம் வந்தோம்" என்றார்.

24–32. இம்மாதிரி வஸுதேவர், உக்ரஸேனர் முதலிய யாதவர்களால் கௌரவர்கள் பூஜிக்கப்பெற்று ஸ்ரீ கிருஷ்ணனைத் தர்சித்து மிக்க ஆனந்தத்தை அடைந்தார்கள். பீஷ்மர், துரோணர், திருதராஷ்ட்ரர், காந்தாரி, அவளுடைய புத்திரர்கள், பாண்டவர்கள், அவர்களுடைய ஸ்திரீகள், குந்திதேவி, ஸஞ்ஜயர், விதுரர், கிருபர், குந்திபோஜர், விராடர், பீஷ்மகர், மஹானாகிய நக்னஜித், புருஜித், துருபதர், சைப்யர், திருஷ்டகேது, காசிராஜன், அகலமான கண்களுள்ள தமகோஷன், மைதிலன், மத்ரன், கேகயன், யுதாமன்யு, ஸுசர்மா, பாஹ்லிகன் முதலியவர்களும், அவர்களுடைய புத்திரர்களும், தர்மபுத்திரரைச் சார்ந்த மற்ற அரசர்களும், லக்ஷ்மிக்கு வாசஸ்தலமான ஸ்ரீ

கிருஷ்ணனுடைய திவ்ய சரீரத்தைத் தர்சித்து ஆச்சர்யமடைந்தார்கள். மேலும் அவர்கள் ராமகிருஷ்ணர்களால் பூஜிக்கப்பெற்று, கிருஷ்ணனுடைய அனுக்கிரஹம் பெற்ற விருஷ்ணிகளைப் பின் வருமாறு சிலாகித்தார் எப்படியெனில், "ஓ போஜ தேசத்தரசனே எல்லா மனிதர்களுக்குள் உங்களுடைய ஜன்மமே பயனுள்ளது. யோகிகளாலும் பார்க்க முடியாதவரான ஸ்ரீகிருஷ்ணனை நேரில் எப்பொழுதும் தர்சித்துக் கொண்டிருக்கிறீர்கள். வேதங்களால் துதிக்கப்பெற்ற எந்தப் பகவானுடைய கீர்த்தியானது ஸகல லோகத்தையும் பரிசுத்தப்படுத்துகிறதோ, எவருடைய பாதத்திலிருந்து உண்டான ஜலமானது (கங்கை), ஜகத்தைச் சுத்தப்படுத்துகிறதோ, எவருடைய வார்த்தையானது (வேதம்) எல்லா லோகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறதோ, காலத்தால் பூமியின் சக்தி கெடுக்கப்பட்டிருந்தாலும் எவருடைய பாதஸ்பர்சத்தால் மிக்க சக்தியுள்ளவளாகி பூமி எங்களுக்கு எல்லா வஸ்துக்களையும் உண்டுபண்ணுகிறாளோ, அப்படிப்பட்ட ஸ்ரீமந் நாராயணன், விஷயங்களில் ஆசை கொண்டு ஸம்ஸாரிகளாக இருக்கும் உங்களுடைய கிரஹத்தில் தாமாக அவதரித்திருக்கிறார். அதனால் அவருடைய தரிசனம் எப்பொழுதும் உங்களுக்குக் கிடைக்கிறது. அவரை ஆலிங்கனஞ் செய்துகொள்கிறீர்கள்; அவர்பின் செல்லுகிறீர்கள்; அவருடன் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்; அவருடன் படுக்கிறீர்கள்; அவருடன் சேர்ந்து உட்காருகிறீர்கள்; அவருக்கு ஞாதிகளாகவும் (ஸபிண்டர்கள்), மைத்துனன், மணப்பிள்ளை முதலிய ஸம்பந்தமுள்ளவர்களாகவுமிருக்கிறீர்கள்; அப்படிப்பட்ட உங்களுக்குப் பகவான் ஸுவர்க்க ஸுகம், மோக்ஷ ஸுகம் இவைகளுக்கும் அதிகமான ஆனந்தத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார். அதனால் உங்களுடைய பிறப்பே மேலானது" என்று சொன்னார்கள்.





33–40. கிருஷ்ணன் முதலிய யாதவர்கள் வந்திருப்பதை நந்தர் கேள்விப்பட்டு வண்டிகளில் ஸாமக்ரிகளை ஏற்றி வைத்துக்கொண்டிருக்கும் கோபர்களுடன் அவர்களைப் பார்ப்பதற்காக யாதவர்களிருக்குமிடம் வந்தார். அவரைக்கண்டு விருஷ்ணிகள் மிக்க ஸந்தோஷத்துடன் எழுந்திருந்தார்கள். அது ப்ராணனைக் கண்டவுடன் இந்திரியங்கள் ஸந்தோஷத்தை அடைந்தாற்போலிருந்தது, பின்னுமவர்கள் நந்தரைப் பார்த்து வெகு நாளாகிவிட்டதனால் மிக்க ஆவலுடன் ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள். அப்பொழுது வஸுதேவர் நந்தரைத்தழுவி, கம்ஸன் செய்த உபத்திரவங்களையும், அதனால் கிருஷ்ணனை கோகுலத்தில் வைத்திருந்ததையும் நினைத்து அப்படிப்பட்ட ஆபத்துக் காலத்தில் தமக்கு நந்தர் மிக்க உபகாரஞ் செய்தாரென்ற பிரியத்தால் ஒன்றுஞ் சொல்லமுடியாதவராக இருந்தார். ராமகிருஷ்ணர்களும் நந்தருக்கும், யசோதைக்கும் நமஸ்காரஞ்செய்து, ப்ரியத்துடன் அவர்களைத் தழுவி, ஆனந்தத்தால் கண்டமடைத்து மௌனமாக இருந்தார்கள் நந்தரும் யசோதையும் அந்த குழந்தைகளை மடியில்வைத்துக் கட்டிக்கொண்டு வெகுநாளாகப் பார்க்காமலிருந்ததாலுண்டான துக்கத்தை நிவர்த்தித்துக் கொண்டார்கள். ரோஹிணியும், தேவகியும் யசோதையை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, அவளால் செய்யப்பட்ட உபகாரத்தை நினைத்து, "ஓ கோகுலத்திற்கு அதிபதியாக இருப்பவளே எங்களிடத்தில் நீ வைத்திருந்த ப்ரியத்தை எவள்

மறந்துவிடுவாள்? மஹேந்திரனுடைய ஐச்வர்யத்தைக் கொடுத்தாலும் அதற்குப் பதிலாகாது. தாய் தந்தைகள் இன்னாரென்று தெரிந்துகொள்ளக்கூடாத வயதிலே யே இந்த ராமகிருஷ்ணர்களை உன்னிடத்தில் அனுப்பினோம். அப்படிப்பட்ட குழந்தைகளை ப்ரிய மாகக் கண்களை இமைபோலக் காப்பாற்றினாயல்ல வா? ஸாதுக்களுக்குத் தங்களைச் சார்ந்தவர்கள், பிறர் என்ற பேத புத்தி இல்லை. ஆனதால் இந்தக் குழந்தைகள் உன்னுடைய கிருஹத்தில் ஸுகமாக வஸித்தார்கள். இப்படிப்பட்ட உபகாரத்திற்குப் பதில் செய்யமுடியாது" என்று சொன்னார்கள்.

41–48. கோபிகைகள் ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டு வெகு நாளாகிவிட்டதனால் மிக்க ப்ரியத்துடன் தர்சித்துக் கண்கொட்டலை நிந்தித்தார்கள். மேலும் அவர்கள் மனத்தில் பகவானை த்யானஞ் செய்து தன்மயமானார்கள். அது யோகிகளுக்கும் கிடைக்காதது. கிருஷ்ணனும் அப்படிப்பட்ட கோபிகைகளிடம், மற்றவர்கள் இல்லாதவிடத்தில் சென்று, அவர்களைத் தழுவி க்ஷேமம் விசாரித்து, சிரித்துக்கொண்டு "ஓ தோழிகளே நாம் சத்துருக்களைக் கொன்று பந்துக் களுக்கு க்ஷேமத்தைச் செய்வதற்காகக் கோகுலத்தை விட்டு சென்றோம். அவ்விடத்தில் தாமதித்தோம். அப்படிப்பட்ட எங்களுடைய ஞாபகம் உங்களுக்கு இருக்கிறதா? எங்களை நன்றி மறந்தவர்களென்று அலக்ஷியஞ் செய்யாமலிருக்கிறீர்களா? காற்று மேகங் களை எப்படி சிலகாலம் சேர்க்கிறதோ, சிலகாலம் பிரித்துவிடுகிறதோ, திருணங்களையும், பஞ்சுகளையும், தூளிகளையும் எப்படி காற்று சேர்த்துக்கொண்டும் பிரித்துக்கொண்டும் இருக்கிறதோ அப்படி பகவான்





பிராணிகளைச் சில காலம் சேர்த்து வைக்கிறார்; சில காலம் பிரித்து விடுகிறார்; திரும்பவும் சேர்த்து வைக்கிறார். பிராணிகள் என்னிடத்தில் பக்திசெய்தால் அது மோக்ஷத்தைக் கொடுக்கும். நீங்கள் என்னிடத் தில் செய்த பக்தியானது என்னையே உங்களுக்குக் கொடுத்தது, (மோக்ஷத்தைக் காட்டிலும் மேலான தென்று தாத்பர்யம்) இது தைவச் செயலேயாம். ஆகாயம், ஜலம், வாயு, தேஜஸ், பூமி இவைகள் எப்படி பூதங்களாலுண்டாகும் வஸ்துக்களுக்கு ஆதியாகவும், அந்தமாகவும், உள்ளாகவும், வெளியாக வும் இருக்கின்றனவோ, அப்படி எல்லாப் பிராணிகளுக்கும் நான் ஆதியாகவும், அந்தமாகவும், உள்ளாகவும். வெளியாகவும் இருக்கிறேன். இப்படி நான்கு வகையான பிராணிகள் தங்களுக்குக் காரணங் களான ஆகாயம் முதலிய பூதங்களில் இருக்கின்றன. ஆத்மாவானது அந்த பூதங்களில் போக்தாவாக (அனுபவிப்பவனாக) இருக்கிறதோ அவைகள் இரண்டும் அக்ஷரனாகிய என்னிடத்தில் தோன்றுகிறதைப் பாருங்கள்" என்று சொன்னார்.

49–50. இம்மாதிரி கிருஷ்ணன் ஆத்ம வித்யையைக் கோபிகைகளுக்கு உபதேசிக்க, அதனைத் த்யானஞ் செய்து அதனால் லிங்க சரீரத்தை நிவர்த்தித்துக் கொண்டு பகவத் ஸ்வரூபத்தை அடைந்தார்கள். மேலுமவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "ஜகத்திற்கு காரணமான தாமரை மலரைத் தொப்புளில் உடையவரே உம்முடைய பாதாரவிந்தமானது மிக்க ஞானிகளான யோகிகளால் த்யானஞ் செய்யக்கூடியது; ஸம்ஸாரமாகிய பாழுங்கிணற்றில் விழுந்தவர்களை மேலே தூக்கிவிடக்கூடியது; அப்படிப்பட்ட பாதமானது

ஸம்ஸாரிகளான எங்களுடைய மனத்தில் எப்பொழுதும் இருக்கும்படி அனுக்கிரஹிக்க வேண்டும்" என்று கேட்டுகொண்டார்கள்.





# அத்தியாயம்–83

## திரௌபதியும் ருக்மிணி முதலியவர்களும் பேசிக்கொண்டது

1–4. கோபிகைகளுக்கு குருவும், கதியுமான பகவான் அவர்களுக்கு அனுக்கிரஹஞ் செய்துவிட்டு தர்மபுத்திரர் முதலிய எல்லா பந்துக்களையும் க்ஷேமம் விசாரித்தார். இப்படி லோகநாதனாகிய ஸ்ரீ கிருஷ்ணனால் கேட்கப்பட்டும், பூஜிக்கப்பட்டவர்களுமான அவர்கள் பகவானுடைய பாதங்களைத் தர்சித்து, சுத்தர்களாகி மிக்க ஸந்தோஷத்துடன் "ஓ ப்ரபுவே! பெரியோர்கள் மனத்திலிருந்து அவர்கள் முகமாகப் பெருகிவரும் உம்முடைய பாதமாகிய தாமரை மலரின் மதுவை எவர்கள் பானஞ் செய்கிறார்களோ, (உம்முடைய சரித்திரத்தைப் பெரியோர்கள் முகமாகக் கேட்பவர்களென்று கருத்து) அவர்களுக்கு க்ஷேமக் குறைவு உண்டாகுமா? தேஹத்தை கொடுக்கக்கூடியதும், உம்மை மறக்க செய்யக்கூடியதுமான அவித்யையை அது (உம்முடைய சரிதத்தை கேட்பது) நாசஞ்செய்கிறது; புத்தியின் குணத்தால் ஏற்படும் மூன்று அவஸ்தைகளை நீர் கடந்தவர்; (ஜாக்ரத், ஸ்வப்பனம், ஸுஷுப்தி என்பது உமக்கில்லை என்று தாத்பர்யம்.) ஆனந்த ஸ்வரூபி; காலத்தாலும், தேசத்தாலும் அளவிடக்கூடாதவர்; தடையற்ற ஞானமுள்ளவர்; ஆனால் காலமஹிமையால் வேதங்களுக்குக் கெடுதி நேரும்பொழுது தம்முடைய மாயையால் பூமியில் சரீரத்துடன் அவதரிக்கிறீர். பரமஹம்ஸர்களுக்கு நீரேகதி. அப்படிப்பட்ட உம்மை நாங்கள் சரணமடைகிறோம். சரீரம், வீடு இவைகளில்

ஆசையை விட்டுவிட்டோம்'' என்றார்கள்.

5–14. ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! உத்தம சுலோகர்களுக்குட் சிறந்தவரான ஸ்ரீ கிருஷ்ணனை ஜனங்கள் இம்மாதிரி ஸ்தோத்திரஞ் செய்யும்பொழுது கௌரவர்களுடைய ஸ்திரீகள் ஒருவருக்கொருவர் சேர்ந்து ஸ்ரீகிருஷ்ணனுடைய கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அது மூவுலகத்திய ஜனங்களாலும் கானஞ் செய்யப்பெற்றது. அதனைச் சொல்லுகிறேன், கேளும்; எப்படியெனில், அப்பொழுது திரௌபதி கிருஷ்ணனுடைய பத்னிகளை நோக்கி, "ஓ ருக்மிணியே! ஓ பத்ரையே" ஓ ஜாம்பவதியே! ஓ கௌஸலையே! ஓ ஸத்தியபாமையே! ஓ காளிந்தீ! ஓ மித்ரவிந்தையே! ஓ லக்ஷ்மணையே! ஓ ரோஹிணி! (ரோஹிணி என்பவள் பட்டமஹிஷி போன்றவள்) உங்களை ஸ்ரீகிருஷ்ணன் எப்படி விவாகஞ் செய்துக் கொண்டார்? அதனைச் சொல்லுங்கள்'' என்று கேட்டாள்.

அதனைக் கேட்ட ருக்மிணி, "என்னைச் சிசுபாலனுக்குக் கல்யாணஞ் செய்விப்பதற்காக அநேக அரசர்கள் வில்லைக் கையில் வைத்துக்கொண்டு தயாராக இருக்கும்பொழுது, ஸ்ரீகிருஷ்ணன் அவர்களுடைய தலையில் காலை வைத்து (அவர்களை ஜயித்து) யுத்த ஸ்தலத்திலிருந்து என்னைக்கொண்டு போனார். அது சிங்கம் தன்னுடைய பாகத்தை எடுத்துக்கொண்டாற் போலிருந்தது. லக்ஷ்மிக்கு வாஸஸ்தலமாகிய அந்தப் பகவானுடைய பாதத்தையே நான் பூஜிக்க வேண்டும்'' என்றாள். பின்பு ஸத்யபாமை, "என்னுடைய பிதாவான ஸத்ராஜித் என்பவர்,





தம்முடைய ஸஹோதரனாகிய பிரஸேனஜித்தை ஸ்ரீ கிருஷ்ணன் கொன்றாரென்று சொன்னார். அந்த அபவாதத்தை நிவர்த்தித்துக் கொள்வதற்காக ஸ்ரீ கிருஷ்ணன் வனஞ்சென்று, ஜாம்பவானுடைய குஹையில் ஜாம்பவானை ஜயித்து ஸ்யமந்தகமென்ற ரத்தினத்தை என்னுடைய பிதாவிடங் கொடுத்தார். அப்பொழுது என்னுடைய பிதா ஸ்ரீகிருஷ்ணன் மீது வீணாக அபவாதத்தைச் சொன்னோமே, அதனை எப்படி நிவர்த்தித்துக் கொள்ளுகிறது என்று யோசித்து, அக்ரூரர் முதலியவர்களுக்குக் கொடுப்பதாக நிச்சயஞ் செய்யப்பட்டவளானாலும் என்னை ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்தார்'' என்றாள். அதன்பின் ஜாம்பவதி என்பவள், "என்னுடைய பிதாவாகிய ஜாம்பவான் 'இந்த கிருஷ்ணன் ஸீதையின் பர்த்தாவாகிய ஸ்ரீராமன், தமக்கு யஜமானன்' என்பதை அறியாமல் இவருடன் இருபத்தேழு நாட்கள் யுத்தஞ்செய்தார் பின்பு இவருடைய பலத்தைப் பரீக்ஷித்து, பாதங்களில் நமஸ்கரித்து, ரத்தினத்தையும் என்னையும் இவருக்குக் கொடுத்தார்.

அதனால் நான் இவருக்குத் தாஸியாக இருக்கிறேன்'' என்றாள். அதன் பிறகு காளிந்தியென்பவள், "ஸ்ரீ கிருஷ்ணனை பர்த்தாவாக அடைய வேண்டுமென்று நான் தபஸ் செய்து கொண்டிருந்தமையால் இவர் தோழனாகிய அர்ஜுனனுடன் அவ்விடம் வந்து என்னைக் கல்யாணஞ் செய்து கொண்டார். அதனால் நான் அவருடைய வீட்டைப் பெருக்கிச் சுத்தஞ் செய்யும் வேலைக்காரியாக இருக்கிறேன்'' என்றாள் அதன்பின் பத்திரா யென்பவள். "சிங்கமானது நாய் கூட்டங்களை ஜயித்து தன்னுடைய பலியையெடுத்துக்

கொண்டாற் போல் ஸ்ரீகிருஷ்ணன் என்னுடைய ஸ்வயம்வரத்தில் வந்து, அரசர்களையும் என் ஸஹோதரர்களையும் ஜயித்து என்னைக் கல்யாணஞ் செய்து கொண்டார். லக்ஷ்மீதேவிக்கு வாசஸ்தலமாகிய அந்தப் பகவானுடைய காலை அலம்புவதாகிய காரியமே எனக்கு ஒவ்வொரு ஜன்மத்திலும் கிடைக்க வேண்டும்" என்றாள். அதன் பிறகு ஸத்தியா என்பவள், "என்னுடைய பிதாவின் கிருஹத்தில் ஏழு எருதுகள் இருந்தன. அவைகள் மிக்க பலமுள்ளவை. சூரர்களுடைய மதத்தை அடக்குகிறவைகள்; கூர்மையான கொம்புள்ளவை.

அவைகளை எவன் ஜயிக்கிறானோ, அவனுக்கு என்னைக் கல்யாணஞ் செய்விக்கிறதென்று அரசர்களுடைய பலத்தைப் பரீக்ஷிப்பதற்காக என் பிதா நிச்சயம் செய்துகொண்டிருந்தார். அந்த எருதுகளை இந்த ஸ்ரீ கிருஷ்ணன் பிடித்து ஆட்டுக்குட்டிகளைப்போல் கட்டியிழுத்து நிக்கிரஹித்தார். அதனால் ஸந்தோஷித்து என் பிதா,என்னை ஸ்ரீ கிருஷ்ணனுக்கு கொடுத்ததுமின்றி ரதம், யானை, குதிரை, காலாட்படை இவைகளடங்கிய ஸைன்யத்தையும், வேலைக்காரிகளையும் கொடுத்தார். இப்படி என்னை அழைத்துப் பகவான் துவாரகைக்குச் செல்லும்பொழுது வழியில் அநேக அரசர்கள் யுத்தத்திற்கு வந்தார்கள். அவர்களை ஜயித்து என்னைத் துவாரகா நகரத்துக்குக் கொண்டு வந்தார். அப்படிப்பட்ட பகவானுக்கு நான் எப்பொழுதும் கைங்கரியஞ் செய்துகொண்டிருக்க வேண்டும்" என்றாள்.

*15 – 16.* மித்திரவிந்தா என்பவள், "நான்





கிருஷ்ணனிடத்திலேயே மனமுள்ளவளாக இருந்தமையால், அம்மானுடைய புத்திரனாகிய ஸ்ரீகிருஷ்ணனை வரவழைத்து என்னுடைய பிதா அக்ஷௌஹிணிக்கணக்கான ஸைன்யத்தையும், தோழிகளையும், என்னையும் கொடுத்தார். அந்த பகவானுடைய பாதத்தைத் தொடுவது ஒவ்வொரு ஜன்மத்திலும் எனக்குக் கிடைக்கவேண்டும். கர்மத்தால் ஸம்ஸாரத்தில் சுழன்று கொண்டிருப்பவர்களுக்கு அந்த பாதஸ்பர்ஸத்தால் (தொடுவது) க்ஷேமமுண்டாகிறது." என்றாள்.

*17 – 27.* லக்ஷ்மணா என்பவள், "ஓ திரௌபதி! ஸ்ரீ கிருஷ்ணனுடைய அவதாரம், சரிதம் ஆகிய இவைகளை நாரத முகமாக அடிக்கடி நான் கேட்டதனால் என்னுடைய மனமும் அவரிடத்திலேயே சென்றது. (அவரையே கல்யாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டேன் என்று தாத்பர்யம்) மேலும், லக்ஷ்மீதேவி கூட அவரையே பார்த்தாவாக அடைந்திருப்பதால் மற்ற லோகபாலகர்களைவிட இவரே மேலானவர் என்று நினைத்து, மற்றவர்களிடத்தில் ஆசைப்படாமல் கிருஷ்ணனையே விவாஹஞ் செய்து கொள்வதென்ற நிச்சயமுள்ளவளாக இருந்தேன். ஓ பதிவ்ரதையே! பிருஹத்ஸேனரென்று என்னுடைய பிதா என்னுடைய அபிப்ராயத்தை தெரிந்துகொண்டு அதற்காக ஸ்வயம்வரம் ஏற்படுத்தினார். உன்னுடைய விவாஹத்தில் அர்ஜுனனை வெளிப்படுத்துவதற்காக மத்ஸ்ய யந்திரமேற்படுத்தப்பட்டது போல என்னுடைய ஸ்வயம்வரத்திலும் மத்ஸ்ய யந்திரம் ஏற்படுத்தப்பட்டது; ஆனால் உன்னுடைய ஸ்வயம்வரத்தில் ஏற்படுத்திய மத்ஸ்ய யந்திரம் வெளியில் மாத்திரம் மறைக்கப்பட்டிருந்தது. (ஸ்தம்பத்தை ஒட்டி உயரப்

பார்த்தால் அந்த மத்ஸ்யம் தெரியுமென்று கருத்து) என்னுடைய ஸ்வயம்வரத்தில் ஏற்படுத்தியதோ அப்படியல்ல; ஜலத்தில் , மாத்திரந்தான் தெரியும் (ஸ்தம்பத்தையொட்டி மேலே பார்த்தாலும் தெரியாது. ஸ்தம்பத்தின் அடியில் வைக்கப்பட்டிருக்கும் ஜலத்தில் அதன் பிரதிபிம்பம் மாத்திரம் தெரியும் அதனைப் பார்த்துக்கொண்டு மேலிருக்கும் மத்ஸ்யத்தைப் பேதிக்க வேண்டுமென்று கருத்து) அதனைக் கேட்டு ஸகல அஸ்திர சாஸ்திரங்களில் தேர்ந்த அரசர்கள் தங்கள் தங்கள் உபாத்தியாயர்களுடன் என்னுடைய பிதாவின் நகரம் வந்து சேர்ந்தார்கள். என்னுடைய தந்தை, வந்தவர்களான அரசர்களுக்கு அவரவர் களுடைய வயதிற்கும், பராக்கிமத்திற்கும் தக்கவாறு மர்யாதை செய்தார்.

பின்பு அவர்கள் என்னையே மனத்தில் நினைத்துக்கொண்டு அந்தச் ஸபையில் வைத்திருக்கும் வில்லையும், பாணத்தையும் எடுத்து லக்ஷ்யத்தை (குறி) அடிக்க முயன்றார்கள். சிலர் வில்லைத் தூக்கிப் பூமியில் வைத்தார்கள். சிலர் நாணேற்ற முடியாமல் சென்றார்கள். சிலர் நாணேற்றி இழுத்து, அதனால் அடிக்கப்பட்டுப் பூமியில் விழுந்தார்கள். மகததேசத்து அரசர்களும், சேதிதேசத்து அரசர்களுமான சில வீரர்களும், பீமன், துர்யோதனன், கர்ணன் ஆகிய இவர்களும் வில்லையெடுத்து நாணேற்றியும் மேலிருக்கும் லக்ஷ்யமிருக்கும் இடத்தை நன்றாகத் தெரிந்துகொள்ள முடியாதவர்கள் ஆனார்கள்; அர்ஜுனர் மத்ஸியத்தின் பிரதிபிம்பத்தை ஜலத்தில் பார்த்து, உயர லக்ஷ்யத்தின் ஸ்திதியை நன்றாகத் தெரிந்துகொண்டு மிக்க முயற்சியுடன் பாணத்தைப்





ப்ரயோகித்தார். அந்தப் பாணமானது லக்ஷ்யத்தைத் தொட்டதேயொழிய அதனை பேதிக்கவில்லை. இப்படி ராஜகுமாரர்கள் அதனை பேதிக்க முடியாமல் திரும்பிச் சென்றார்கள். 'நான் மிக்க வீரன்' என்ற அஹங்காரமுள்ளவர்களுடைய அஹங்காரம் அடங்கியது. அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் விளையாட்டாக வில்லையெடுத்து நாணேற்றி, பாணத்தைப் பூட்டி ஒரு தடவை ஜலத்தில் மத்ஸ்யத்தின் பிரிதிபிம்பத்தைப் பார்த்து, பாணத்தைப் ப்ரயோகித்து லக்ஷ்யத்தைப் பேதித்துக் கீழே தள்ளினார். அப்பொழுது அபிஜித் என்ற முஹூர்த்தம். ஆகாயத்தில் தேவதுந்துபிகள் முழக்கப்பட்டன. பூமியில் 'ஜய' என்ற சப்தம் உண்டாயிற்று. தேவர்கள் மிக்க ஸந்தோஷமுள்ளவர் களாகி புஷ்பங்களை வர்ஷித்தார்கள்.

28–39. அப்பொழுது நான் புதிதாகிய பட்டு வஸ்திரம் உடுத்திக்கொண்டும், தலையில் உயர்ந்த புஷ்பங்களை அலங்கரித்துக் கொண்டும் வெட்கச் சிரிப்பினால் அழகிய முகமுள்ளவளாகி, பாதத்தில் அணிந்திருக்கும் ஆபரணங்கள் சப்திக்க, ஸுவர்ணத் தால் அலங்கரிக்கப்பெற்ற ரத்தின மாலையைக் கையில் எடுத்துக்கொண்டு அந்தச் ஸபைக்கு வந்தேன். மேலும் நான் தலை மயிர்களாலும், குண்டலங்களா லும், அழகிய கன்னங்களுள்ளதும், சிரிப்பு, கடைக்கண் பார்வை இவைகளுள்ளதுமான முகத்தை கொஞ்சம் தூக்கி அரசர்களைப் பார்த்து ஸ்ரீகிருஷ்ண னிடத்தில் ஆசை உள்ளவளாகி அவருடைய கழுத்தில் அந்த ரத்தினமாலையைப் போட்டேன். அப்பொழுது மிருதங்கம், படஹம், சங்கம், பேரி, ஆனகம் முதலிய வாத்யங்கள் முழக்கப்பட்டன. நடர்களும், தாஸிகளும்,

நர்த்தனஞ் செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள் ஓ த்ரௌபதி! பகவானை நான் வரித்ததைக் கண்ணுற்ற மற்ற அரசர்கள் பொறாமை கொண்டார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் உத்தமமான நான்கு குதிரைகள் கட்டிய ரதத்தில் என்னை ஏற்றி வைத்து யுத்தத்திற்கு தயாராக இருந்தார். அப்பொழுது சிங்கம் மற்ற மிருகங்களை அலக்ஷ்யஞ் செய்தாற்போலத் தாருகன் எல்லா அரசர்களையும் லக்ஷ்யஞ் செய்யாமல் ரதத்தை நடத்தினான். அதில் சில அரசர்கள், நாய்கள் சிங்கத்தை எதிர்த்தாற்போல, பாணம், வில் இவைகளை எடுத்துக்கொண்டும் ஸ்ரீ கிருஷ்ணனைத் தடுத்தார்கள் அதனைக்கண்ணுற்ற ஸ்ரீகிருஷ்ணன் சார்ங்கம் என்ற வில்லையெடுத்துப் பாணங்களைப் பூட்டி அடித்தார்.

அதனால் சிலர் தலை வெட்டுண்டும் சிலர் கால்கள் வெட்டுப்பட்டும், சிலர் தலை வெட்டுண்டும் கீழே விழுந்தார்கள். சிலர் ஆயுதங்களைக் கீழே கிடத்தி பயந்து ஓடினார்கள். இப்படிப் பகவான் அரசர்களை ஜயித்து என்னை அபஹரித்து, த்வாரகா நகரத்தில் ப்ரவேசித்தார். அப்பொழுது அந்த நகரம் த்வஜங்களாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டு வெயிலில்லாமல் நிழலுள்ளதாக இருந்தது; ஆகாயத்திலுள்ளவர்களாலும், பூமியிலுள்ளவர்களாலும் துதிக்கப்பெற்றிருந்தது. அப்படிப்பட்ட நகரத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் ப்ரவேசித்தது, ஸூர்யன் தமது கிருஹத்தில் ப்ரவேசித்தாற்போல் இருந்தது. என்னுடைய பிதாவாகிய பிருஹத்ஸேனர் மித்திரர்களையும், கிருஷ்ணனுடைய பந்துக்களையும் வஸ்திரங்களாலும், ஆபரணங்களாலும், சந்தனம் முதலியவைகளாலும்,





படுக்கைகளாலும் உபசரித்து யானை, குதிரை, ரதம்,காலாட்கள், வேலைக்காரிகள் மற்றும் ஸகல சம்பத்துக்கள் ஆகிய இவைகளையும் ஸ்திரீதனமாகக் கொடுத்தார். மேலுமவர் எல்லா விதத்திலும் பரிபூர்ணராகிய பகவானுக்கு மேலான ஆயுதங்களை யுங் கொடுத்தார். இப்படி நாங்கள் மிக்க தபஸ்செய்து எல்லா ஆசைகளையும் ஒழித்து, ஆத்மாராமராகிய [தம்முடைய ஆத்ம லாபத்தால் ஸந்தோஷிப்பவர்] ஸ்ரீ கிருஷ்ணனுடைய வீட்டு வேலைக்காரிகளாக ஆனோம்" என்றாள்.

40–43. அதனைக்கேட்ட பதினாறாயிரம் ராஜ குமாரிகளும், "நரகாஸுரன் திக்விஜயஞ் செய்யும் பொழுது அரசர்களை ஜயித்து எங்களைப் பலாத்காரமாக அபஹரித்து வைத்திருந்தான். நாங்கள் சம்சாரத்தை நிவர்த்திக்கூடிய ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தை தியானஞ் செய்து கொண்டிருந் தமையால் ஸ்ரீ கிருஷ்ணன் எல்லாக் காமங்களையும் அடைந்தவரானாலும், நரகாஸுரனைக் கொன்று எங்களைக்கல்யாணஞ் செய்துக்கொண்டார். ஓ பதிவ்ரதையான த்ரௌபதி! எல்லா பூமிக்கும் அதிபதியாக இருப்பதாகிய ஸாம்ராஜ்யத்தையும் நாங்கள் விரும்பவில்லை. இந்திரபதம் எங்களுக்கு வேண்டாம். மேற்சொல்லிய இருவகையிலுமுள்ள ஸுகத்தை அனுபவிக்க நாங்கள் இஷ்டப்படவில்லை. அணிமா முதலிய ஸித்திகளில் எங்களுக்கு ஆசையில் லை, ப்ரஹ்மபதத்தை விரும்பவில்லை. மோக்ஷத்திலும் எங்களுக்கு ஆசையில்லை. ஸாலோக்யம் முதலியவை களிலும் விருப்பம் இல்லை. ஆனால் லக்ஷ்மிதேவியின் ஸ்தனங்களிலுள்ள குங்குமத்தின் பாததூளியைத் தரிக்க

வேண்டுமென்று விரும்புகிறோம். கோபிகைகளும், வேடஸ்திரீகளும், திருணங்களும், கொடிகளும், கோபர்களும் அந்தப் பகவானுடைய பாதஸ்பரிசத்தை [அவருடைய பாதம் தங்கள் மீது படவேண்டுமென்று] விரும்பவில்லையா? அதுபோல் நாங்களும் பாததூளியை விரும்புகிறோம்" என்றார்கள். (அது மற்றவர்களுக்குக் கிடைக்காததாயினும் அவருடைய பக்தர்களுக்குக் ஸுலபமென்று கருத்து.)





# அத்தியாயம்–84.

## வஸுதேவர் யாகஞ்செய்தது.

அதனைக்கேட்டு குந்தி, காந்தாரி, த்ரௌபதி, ஸுபத்ரை மற்ற ராஜபத்னிகள் கிருஷ்ணனிடத்தில் பக்தியுள்ள கோபிகைகள் ஆகிய எல்லாரும் ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி ஆச்சர்யமடைந்தார்கள். இப்படி ஸ்திரீகள் ஸ்திரீகளுடனும், புருஷர்கள் புருஷர்களுடனும் பேசிக்கொண்டிருக்கும்பொழுது ராமகிருஷ்ணர்களை தர்சிப்பதற்காக மஹர்ஷிகள் வந்தார்கள். எவர்களெனில்— வ்யாஸர், நாரதர், ச்யவனர், தேவலர், அஸிதர், விச்வாமித்திரர், சதானந்தர், பரத்வாஜர், கௌதமர், பரசுராமன் அவருடைய சிஷ்யர்கள், பகவானாகிய வஸிஷ்டர், காலவர், ப்ரகு, புலஸ்தியர், புலஹர், அத்திரி, மார்க்கண்டேயர், பிருஹஸ்பதி, த்விதர், திரிதர், ஏகதர், ப்ரஹ்மதேவருடைய புத்திரராகிய அங்கிரஸ், அகஸ்தியர், யாஜ்ஞவல்கியர், வாமதேவர், முதலிய மற்ற மஹர்ஷிகளும் வந்தார்கள். அவர்களைக்கண்டு அவ்விடம் உட்கார்ந்திருந்த அரசர்களும், பாண்டுபுத்திரர்களும், ராமகிருஷ்ணர்களும் ஆஸனத்திலிருந்து எழுந்திருந்து எல்லோராலும் நமஸ்கரிக்கப்பெற்றவர்களான மஹர்ஷிகளுக்கு நமஸ்காரஞ் செய்தார்கள். விதிப்படி அவர்களைப் பூஜித்தார்கள். மேலும் ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடன் நல்வரவா என்று கேட்பது, ஆஸனங்கொடுப்பது, பாத்தியம், அர்க்கியம், புஷ்பமாலை, தூபம், சந்தனம் முதலியவைகளால் அந்த மஹர்ஷிகளையுபசரித்தார். இம்மாதிரி பூஜிக்கப்பெற்று மஹர்ஷிகள் ஆஸனத்தில் ஸுகமாக உட்கார்ந்தார்கள். பின்னுமவர்கள்

பகவானுடைய வார்த்தையைக் கேட்பதில் ஆவலுள்ள வர்களாகி மௌனமாகவிருந்தார்கள். அப்பொழுது தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக பூமியில் அவதரித்தி ருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் அந்த ஸபையை நோக்கி "யோகிகளுக்குட் சிறந்தவர்களான உங்களுடைய தர்சனம் தேவர்களுக்கு அரிது. அப்படிப்பட்ட தர்சனம் எங்களுக்குக் கிடைத்தது. இதுவே ஜன்மத்தின் பயன். ஆனதால் எங்களுடைய ஜன்மம் பயனுள்ளதாயிற்று. நாங்கள் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்வது முதலியவைகளையே தபஸ் என்று நினைத்தவர்கள்; ப்ரதிமையையே தைவமென்று நினைத்தவர்கள்; அப்படிப்பட்ட அல்பர்களான எங்களுக்கு யோகேசர் களான உங்களைத்தொடுவது, கேட்பது, வணங்குவது, பாதங்களில் பூஜிப்பது ஆகிய இவைகள் கிடைப்பதற்கு ந்யாயமில்லை.

ஜலங்களாகிய புண்ணிய தீர்த்தங்களையும், மண், கல் இவைகளால் செய்யப்பட்ட தேவதைகளையும் ஸேவித்தால், அவைகள் வெகுகாலஞ் சென்றபின் ஸேவித்தவனுடைய பாபத்தைப் போக்கி பரிசுத்துப் படுத்துகின்றன. ஸாதுக்களைத் தர்சித்தவுடன் அவர் கள் பரிசுத்தப்படுகிறார்கள். மேலும் அக்னி ஸூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், பூமி, ஜலம், ஆகாயம், வாயு, வாக்கு, மனம் ஆகிய இவைகள் பேதபுத்தியை யுண்டுபண்ணுகிறவைகள். ஆனதால் அவைகளை உபாஸித்தால் பேதபுத்தியாலுண்டான பாபம் நிவர்த் தியாகிறதில்லை. (அக்னி முதலியவைகளை ப்ரஹ்மம் என்று உபாஸிக்க வேண்டுமென்ற ச்ருதியின்படி உபாஸித்தாலும் பேதபுத்தி நிவர்த்தியாகிறதில்லை யென்று தாத்பர்யம்) ஸாதுக்கள் பேதபுத்தியற்றவர்களான





தால் அவர்களை ஸேவித்தால் அந்த முஹூர்த்தத்தி லேயே அவர்கள் அண்டினவர்களுடைய பேதபுத்தியை நிவர்த்திக்கிறார்கள். வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்று ஸ்வபாவமுள்ள சரீரத்தை நான் என்று எவன் நினைக்கிறானோ, களத்திரம், புத்திரன் முதலியவர் களை, தன்னைச் சார்ந்தவர்களென்று எவன் நினைக்கிறானோ, எவன் மண்ணினாலும், மரத்தாலும் செய்யப்பட்டவைகளையே தேவதையென்று நினைக் கிறானோ, எவன் ஜலத்தை தீர்த்தமென்று (சுத்தப்படுத்தக்கூடியது) நினைக்கிறானோ, ஸாதுக்களை ஆத்மாவென்றும், தன்னைச்சார்ந்தவர்களென்றும், தேவதைகளென்றும், தீர்த்தமென்றும், ஒருபொழுதும் நினைக்கவில்லையோ, அவன் கோடிரகழுதைக்குச் (கழுதையென்றும் சொல்வதுண்டு) சமமானவன் என்று சொன்னார்.

*14–27.* அதனைக்கேட்ட மஹர்ஷிகள் "இதென்ன தடையற்ற ஞானமுள்ளவராகிய பகவான் இப்படி நம்மை ஸ்தோத்திரஞ் செய்கிறார்" என்று புத்திமயக்க மடைந்து மௌனமாகவிருந்தார்கள். மேலுமவர்கள் பகவான் கர்மத்திற்கு வசப்பட்டவர்போலிருப்பதைப் பற்றி வெகுநேரம் யோஜித்து, கிருஷ்ணன் இப்படி கர்மத்திற்கு வசப்பட்டவர்போல நடப்பது மூடர்களை யும் கர்மத்தை அனுஷ்டிக்கும்படி செய்வதற்காகவே யொழிய வேறில்லை என்று ஜகத்குருவாகிய ஸ்ரீ கிருஷ்ணனைப்பற்றிச் சொல்லிக்கொண்டார்கள். பின்னுமவர்கள் "நாங்கள் ஆத்மாவின் உண்மையை அறிந்தவர்களுக்குட் சிறந்தவர்களானாலும், ப்ரஜாபதி களுக்கும் அதிபதிகளானாலும் எவருடைய மாயையால் மோஹித்திருக்கிறோமோ, எவர் தம்முடைய

ஸங்கல்பத்தால் மனிதவேடங்கொண்டு கர்மத்திற்கு வசப்பட்டவன் போல கர்மங்களை அனுஷ்டிக்கிறாரோ, அப்படிப்பட்ட பகவானாகிய உம்முடைய நடை வியக்கத்தக்கது; பூமியானது குடம், மடக்கு என்ற பலவகையான பெயரையும் ஸ்வரூபத்தையும் அடைந்தாலும் ஸ்வரூபங்களும், பெயரும் எப்படி அநித்யங்களோ, அவைகளுடைய ஸம்பந்தம் எப்படி பூமிக்கு உண்மையில்லையோ, அப்படியே உண்மையில் நீர் கர்மஸம்பந்தமில்லாதவரானாலும் தாமாக தம்மை பலவகையாக படைக்கிறீர்; காப்பாற்றுகிறீர்; ஸம்ஹரிக்கிறீர்; ஆனாலும் உமக்குக்கர்மத்தின் ஸம்பந்தமில்லை. பரிபூர்ணராகிய நீர் அவதரித்து கர்மங்களை அனுஷ்டிப்பது என்பது லோகத்தை அனுஸரிப்பதேயாம் (உண்மையல்லவென்று கருத்து) ஆனாலும் பரம புருஷனாகிய நீர் பக்தர்களைக் காப்பாற்றுவதற்காகவும், துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்காகவும், சுத்த ஸத்ஸ்வரூபத்தை தரிக்கிறீர் (அவதரிக்கிறீர்) மேலும் ஜாதி, ஆச்ரமம் இவைகளை அடைந்து தாம் அனுஷ்டித்து ஸநாதனமான வேதமார்க்கத்தையும் ஸம்ரக்ஷிக்கிறீர்.

தபஸ், வேதாத்தியயனம் ஆகிய இவைகளைச் செய்து கார்யம், காரணம், இவைகளுக்கு மேற்பட்ட ஸத்தாமாத்திர ப்ரஹ்மம் ஆகிய இவைகளை, வேதத்தைக்கொண்டு ஜனங்கள் அடைகிறார்கள். அப்படிப்பட்ட வேதம் உமக்கு சுத்தமான ஹ்ருதயமாகவிருக்கிறது. ஓ பரப்ரஹ்மமே. சாஸ்திரத்தால் அறியக்கூடியவரும், ஸகலசாஸ்திரங்களை யுண்டு பண்ணினவருமான உம்மை ப்ராஹ்மணர்கள் தெரிந்துக் கொள்ளுகிறார்கள் (வேதம் உமக்கு ஹ்ருதயமாக





விருப்பதால் வேதத்தைப் பரவச்செய்பவர்களான ப்ராஹ்மணர்களே உம்மை தெரிந்துகொள்ளுகிறார்கள்) அதனால் அப்படிப்பட்ட ப்ராஹ்மணர்களை நீர் பூஜிக்கிறீர். ப்ராஹ்மணர்களை தைவமாகக் கொண்டவர்களில் நீர் சிறந்தவர். ஸகல க்ஷேமங்களையும் கொடுப்பவரும், ஸாதுக்களுக்குக் கதியுமான உம்முடைய ஸங்கம் கிடைத்ததால் இன்றையதினம் எங்களுடைய ஜன்மம் ஸபலமாயிற்று. எங்களுடைய வித்தையும், தபஸும், கண்களும் பயனுள்ளவையாயின. அப்படிப்பட்ட பகவானும், தடையற்ற ஞானமுள்ளவரும், க்ருஷ்ணனுமாகிய உமக்கு நமஸ்காரம். மேலும் உம்முடைய மஹிமையை தம்முடைய யோக மாயையால் மறைத்துக்கொண்டிருக்கிறீர்.

அப்படிப்பட்ட பரமாத்வாவுமான உம்மை நமஸ்கரிக்கிறோம். யோகமாயையான திரையால் ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டவரான உம்மை ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய இவைகளுக்கு காரணமாகிய ஈச்வரனென்று இந்த அரசர்களும் வ்ருஷ்ணிகளும் அறியார்கள். படுத்துத்தூங்கும் புருஷன் ஸ்வப்னத்தை உண்மையென்று நினைத்து மனத்தால் தோன்றிய சிங்கம் முதலியவைகளாகத் தம்மை எப்படி நினைத்துக்கொள்ளுகிறானோ, அவைகளுக்கு மேலானதாக அறியவில்லையோ, அப்படி உம்முடைய மாயையால் புத்திமயக்கத்தை அடைந்து ஸ்வப்னம் போன்ற விஷயங்களில் ஆசைப்பட்டு விவேகமற்று உம்முடைய ஸ்வரூபத்தை அறியவில்லை. உம்முடைய இந்தப் பாதமானது ஸகல பாபங்களை போக்கக்கூடிய கங்காதீர்த்தத்தை யுண்டுபண்ணியது; வெகுகாலம் யோகப்யாஸஞ்செய்தாலும் ஹ்ருதயத்தில்

அது த்யானிக்கப்படுகிறதேயொழிய நேரில் பார்க்கப் படவில்லை. அப்படிப்பட்ட பாதத்தை நேரில் தர்சித்தோம். எங்களுக்கு உம்முடைய பாதங்களில் பக்தியுண்டாகும்படி அனுக்கிரஹிக்கவேண்டும்; முன்னோர்களான பெரியோர்கள் உம்மிடத்தில் அதிக பக்திசெய்து அதனால் ஜீவகோசத்தை யொழித்து (ஆசைகளை) உம்மை அடைந்தார்கள்." என்று ஸ்ரீ கிருஷ்ணனை ச்லாகித்து திருதராஷ்ட்ரர், தருமபுத்திரர் இவர்களிடமும் விடைபெற்று அந்த மஹர்ஷிகள் தங்கள் ஆச்சரமத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்.

28–33. அதனைக் கண்ணுற்ற மிக்க கீர்த்தியுள்ள வஸுதேவர் அவர்கள் பின்சென்று நமஸ்கரித்து மிக்க வணக்கமாக, அவர்களை நோக்கி "ஒ மஹர்ஷிகளே! ஸகல தேவஸ்வரூபிகளாகிய உங்களுக்கு நமஸ்காரம். எந்தகர்மத்தை எப்படி அனுஷ்டித்தால் கர்மபந்தம் நிவர்த்தியாகும்? அதனைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். அதனைக்கேட்டு மஹர்ஷிகள் 'ஸமீபத்திலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனைவிட்டு நம்மை வஸுதேவர் கேட்கிறாரே'யென்று ஆச்சர்யப்படுவதைப்பார்த்து நாரதர் "ஒ மஹர்ஷிகளே! வஸுதேவர் ஸ்ரீ கிருஷ்ணனை சிறுவனென்று நினைத்து நம்மைப்பார்த்து க்ஷேமத்தை அடையும் மார்க்கத்தைக் கேட்பது ஆச்சர்யமல்ல. கங்கையின் கரையிலே வஸிப்பவர்கள் தங்களுடைய பாபத்தை போக்கடித்துக் கொள்வதற்காக வேறுநதிக்குச் செல்லுகிறார்களல்லவா? ஸமீபத்திலிருப்பதே அலக்ஷ்யத்தை யுண்டுபண்ணும். ஆனதால் ஸ்ரீ கிருஷ்ணன் வஸுதேவருக்குப் புத்திரனாக எப்பொழுதும் ஸமீபத்திலிருப்பதால் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் லக்ஷ்யபுத்தியில்லை. வெள்ளெரிப் பழம் முதலியவைகள் காலத்தால் எப்படி நசிக்கின்றனவோ, அப்படி எவருடைய ஞானம் காலத்தாலும் ஜகத்தைப்படைப்பது முதலியவையாலும் தடுக்கப்படுகிறதில்லையோ, குடம் முதலியவைகள் உலக்கை முதலியவைகளால் அடிக்கப்பட்டு நாசமடைகிறது போல, எவருடைய ஞானம் வேறு வஸ்துவால் கெடுக்கப்படுகிறதில்லையோ, பதார்த்தங்களில் முன்னிருந்த நிறம் முதலிய குணங்கள் மாறி வேறு குணங்கள் உண்டாவதால், பதார்த்தம் எப்படி வேறாக ஆகிறதோ அப்படி குணங்களாலும் எவருடைய ஞானம் தடைப்படுகிறதில்லையோ, அப்படிப்பட்ட தடையற்ற ஞானமுள்ளவரும், அத்விதீயருமான (தமக்குச் சமமான இரண்டாவது வஸ்து இல்லாதவர்) ஸ்ரீ கிருஷ்ணனை மூடர்கள் ஆசை முதலியவைகளாலும் கர்மங்களாலும், ஸுகதுக்கங்களாலும், ஸத்வம் முதலிய குணங்களுடைய தொடர்ச்சியாலும் மறைக்கப்பட்டவரென்று நினைக்கிறார்கள். மேற்காட்டிய ஆசை முதலியவை பகவானுடைய விபூதிகளேயொழிய வேறில்லை. தம்முடைய விபூதிகளால் தமக்கு மறைவு நேரிடுமா? இப்படி நினைப்பது மேகத்தாலும், பனியாலும், ராஹுவாலும், ஸூர்யன் மறைக்கப்பட்டிருப்பதாக ஜனங்கள் நினைப்பதுபோலிருக்கிறது" என்று சொன்னார்.

34–42. அதனைக்கேட்ட மற்ற மஹர்ஷிகள் வஸுதேவரை அழைத்து ராமகிருஷ்ணர்களும் மற்ற அரசர்களும் கேட்டுக்கொண்டிருக்க "எந்த கர்மத்தை அனுஷ்டித்தால் கர்மபந்தம் விலகுமென்று கேட்டீரல்லவா? ஸகல யாகங்களுக்குமதிபதியான ஸ்ரீமஹாவிஷ்ணுவைச்ரத்தையுடன் பூஜித்தால் கர்மபந்தம்

நிவர்த்தியாகும். இது சித்தத்திற்கு சாந்தியை யுண்டு பண்ணக்கூடிய லகுவான உபாயமென்று பெரியோர்கள் சாஸ்திரங்களைக்கொண்டு கண்டுபிடித்திருக்கிறார்கள். இந்த தர்மமானது மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய தாகவுமிருக்கிறது. மேலுமிந்த தர்மம் தனக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது. (கர்மத்தாலும், பிரஜையாலும், தனத்தாலும் மோக்ஷம் கிடைக்கிற தில்லை. ஸகல கர்மங்களையும் விடுவதால் அநேகர் கள் மோக்ஷத்தையடைந்தார்கள் என்று ச்ருதியின்படி கர்மத்தை விடுவது மோக்ஷத்திற்கு உபாயமே யொழிய கர்மத்தைச் செய்வதால் மோக்ஷம் கிடைக்குமாவென்றால் முதலிலேயே கர்மத்தை விடுவது முடியாத கார்யம் என்று அடுத்த ச்லோகங்களால் காண்பிக்கப்படுகிறது) நல்லமார்க்கமாக ஸம்பாதிக்கப்பட்ட சுத்தமான பணத்தைக் கொண்டு யாகஞ்செய்து ச்ரத்தையுடன் பரம புருஷனைப் பூஜிப்பதே க்ரஹஸ்தர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய மார்க்கம்.

இப்படி வித்வானாக விருப்பவன் யாகங்களைச் செய்து, தானங்களையனுஷ்டித்து அதனால் பணத்தைச் செலவிட்டு பணத்தாசையை விலக்கிக் கொள்ளவும் க்ரஹத்திலுள்ள போகங்களையனுபவித்து அதனால் களத்திரம், புத்திரன் இவர்களிடத்திலுள்ள ஆசையை நிவர்த்தித்துக்கொள்ளவேண்டும். ஸ்வர்க்கம் முதலிய லோகங்களுடைய ஸுகமானது ஸ்திரமில்லாதது என்று யோஜித்து அவைகளில் ஆசையை விலக்கிக் கொள்ளவேண்டும். முன்னோர்களான பெரியோர்கள் கிராமவாஸத்தில் ஆசையையொழித்து மிக்க தைரிய முள்ளவர்களாக தபஸ்செய்வதற்காகக் காட்டிற்குச் சென்றார்கள். ஒவ்வொரு மனிதனும் தேவர்களுக்கும்,





ரிஷிகளுக்கும், பிதிருக்களுக்கும் கடன் கொடுக்க வேண்டியவனாக இருக்கிறான். யாகஞ் செய்வதால் தேவர்களுடைய கடன் நிவர்த்தியாகும். வேதத்தை அத்தியயனம் செய்வதால் ரிஷிகளுடைய கடன் நிவர்த்தியாகும். அவைகளைச்செய்து முவ்வகையான கடன்களை நிவர்த்தித்துக்கொள்ளாமல் கர்மத்தை விட்டு மோக்ஷத்தை விரும்புகிறவன் நரகத்தையடை வான். ஆனதால் மிக்க புத்திசாலியான ஓ வஸுதேவ! உமக்கு இரண்டு கடன்கள் தீர்ந்து விட்டன. யாகங்களைச் செய்து தேவர்களுடைய கடனை நிவர்த்தித்துக்கொண்டு, வீட்டைவிட்டு காட்டிற்குப் போகலாம். ஆனால் சித்த சுத்தியில்லாதவர்கள் இப்பொழுது சொல்லப்பட்ட கர்மத்தையனுபவிக்க வேண்டும். நீர் மிகவும் மேலானவர். ஏனென்றால் நீர் மிக்க பக்தியுடன் ஜகத்திற்கு அதிபதியான ஸ்ரீமந் நாராயணனை முன் ஜன்மத்தில் பூஜித்தீர். அதனால் உங்களுக்கு அவர் புத்திரனாக அவதரித்திருக்கிறார்” என்று சொன்னார்கள்.

43–60. அதனைக்கேட்ட கம்பீரமனமுள்ள வஸுதேவர் அந்த மஹர்ஷிகளை நமஸ்கரித்து ஸந்தோஷப் படுத்தித் தமக்கு ரித்விக்குகளாகவிருந்து யாகஞ் செய்விக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இப்படி வஸுதேவரால் வரிக்கப்பட்ட மஹர்ஷிகள் தர்மத்தில் ஆசையுள்ளவரான வஸுதேவருக்கு விதிப் படி அந்த க்ஷேத்திரத்தில் யாகம் செய்வித்தார்கள். இப்படி வஸுதேவர் யாகத்திற்காகத் தீக்ஷைசெய்யும் பொழுது விருஷ்ணிகளும் மற்ற அரசர்களும் ஸ்நானஞ் செய்து நல்ல வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு அலங்கரித்துக்கொண்டார்கள். அந்த வஸுதேவருடைய

பத்தினிகளும் நல்ல ஆபரணம் வஸ்திரம் இவைகளை யணிந்து குங்குமஞ்சேர்ந்த சந்தனம் பூசிக்கொண்டு உத்தம வஸ்துக்களை யெடுத்துக்கொண்டு தீக்ஷா சாலைக்கு வந்தார்கள். அப்பொழுது மிருதங்கம், படஹம், சங்கம், பேரி, ஆனகம் முதலிய வாத்யங்கள் கோஷிக்கப்பட்டன. நடர்களும் தாஸிகளும் நர்த்தனம் செய்தார்கள். ஸூதர்களும், மாகதர்களும் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். இனிமையான குரலுள்ள கந்தர்வ ஸ்திரீகளும் கந்தர்வர்களும்பாடினார்கள். அப்பொழுது ரித்விக்குகள் கண்களில் மையிடப்பட்டவரும் வெண்ணையால் பூசப்பட்டவருமான வஸுதேவருக்கு பதினெட்டு பத்னிகளுடன் தீக்ஷாபிஷேகம் செய்வித்தார்கள். அது நக்ஷத்திரங்களுடன் கூடிய ஸோமராஜனுக்கு அபிஷேகஞ் செய்தாற்போலிருந்தது.

இப்படி யாகதீக்ஷை பெற்றவரான வஸுதேவர் வளை, ஹாரம், பாதஸரம், குண்டலம், பட்டு இவை களாலலங்கரிக்கப்பெற்ற பத்னிகளால் சூழப்பட்டு மற்ற ஜனங்களுடன் பிரகாசித்தார். அவருடைய ரித் விக்குகளும், ஸதஸ்ஸியர்களும், மஹேந்திரனுடைய யாகத்திற்போல பட்டு முதலியவைகளை அலங்கரித்துக் கொண்டு விளங்கினார்கள். ஸகல ஜீவர்களுக்கு மதிபதியான ராமகிருஷ்ணர்களும் தங்களுடைய புத்திர, மித்திர, களத்திரம் முதலிய பந்துக்களாகிய தம்முடைய விபூதிகளுடன் பிரகாசித்தார்கள். இப்படி வஸுதேவர் ப்ரகிருதியாகம், விகிருதியாகம் இவைகளைச் செய்து ஒவ்வொரு யாகத்திலும் விதிப்படி த்ரவ்யம் (புரோடாசம் முதலியவை) மந்திரம், க்ரியை ஆகிய இவைகளுக்கு அதிபதியாகிய ஸ்ரீமந் நாராயணனைப் பூஜித்தார். மேலுமவர் சாஸ்திரத்தில் சொல்லியபடி





உசிதமான காலத்தில் ரித்விக்குகளை அலங்காரஞ் செய்து அவர்களுக்கு பசுக்கள், பூமி, கன்னிகை முதலிய உத்தமவஸ்துக்களைத் தக்ஷிணையாகக் கொடுத்தார். பின்பு ரித்விக்குகள் பத்னிஸம்யாஜம். அவபிருதம் இவைகளையனுஷ்டித்து யஜமானனை முன்னிட்டு பரசுராமனுடைய மடுவில் ஸ்நானஞ் செய்வித்தார்கள். இப்படி வஸுதேவர் அவபிருத ஸ்நானஞ்செய்து வந்திருக்கும் ஸ்திரீகளுக்கும் ஆபரணம் வஸ்திரம் இவைகளைக்கொடுத்து நாய் வரையிலுள்ள ஸகலப் பிராணிகளுக்கும் அன்னமளித்தார். பின்னுமவர் தம்முடைய பந்துக்களையும் அவர்களுடைய ஸ்திரீ களையும், புத்திரர்களையும் விதர்ப்பம், கோஸலம், குரு, காசி, கேகயம் இந்த தேசத்திலிருந்து வந்தவர்களையும் ஸதஸ்ஸியர்களையும், ரித்விக்குகளையும், தேவ கணங்களையும், பூதகணங்களையும், பிதிருக்களையும், சாரணர்களையும் அவரவர்களுக்கு இஷ்டமான வஸ்துக்களைக் கொடுத்து பூஜித்தார்.

அவர்களெல்லோரும் ஸ்ரீ கிருஷ்ணனிடம் விடை பெற்று யாகத்தைப்பற்றி ச்லாகித்துக்கொண்டு தங்கள் தங்கள் இருப்பிடஞ்சென்றார்கள். திருதராஷ்டிரர், விதுரர், தர்மபுத்திரர், பீமன், அர்ஜுனன், நகுல ஸஹதேவர்கள், பீஷ்மர், துரோணர், குந்தி, நாரதர், வ்யாஸர் ஆகிய இவர்கள் பந்துக்களைத்தழுவி அவர்களிடத்திலுள்ள பிரீதி விசேஷத்தால் அவர்களை விட்டுப் பிரிய மனமில்லாமல் ச்ரமப்பட்டுச் சென்றார் கள். கிருஷ்ணன், ராமன், வஸுதேவர், உக்கிரஸேனர் முதலியவர்கள் நந்தரையும், மற்ற கோபர்களையும் மிக்க அன்புடன் பூஜித்ததால் அவர்களுடைய வேண்டு கோளின்படி அவர்கள் சிலகாலம் வஸித்தார்கள்.

61–69. இப்படி வஸுதேவர் மனோரதமாகிய ஸமுத்திரத்தை எளிதில் தாண்டி, மித்திரர்களால் சூழப்பட்டு, மிக்க ஸந்தோஷத்துடன் நந்தருடைய கையைப்பிடித்துக்கொண்டு "ஓ ஸஹோதர! ஸ்நேஹ மென்ற பாசமானது ஒருவராலும் தள்ளமுடியாதது. வீரர்களாலும் பலத்தால் அதனைப் பேதிக்கமுடியாது. யோகிகளானாலும் ஞானத்தால் அதனை நிவர்த்திக்க முடியாது. ஏனென்றால் மூடர்களான எங்களுக்கு விவேகிகளான நீங்கள் ஒப்பற்ற உபகாரத்தைச் செய்தீர்கள். அதற்கு பதிலுபகாரம் செய்ய முடியா விடினும் ஸ்நேஹபாசம் அதிகமாக விருக்கிறது; முந்தி நீங்கள் செய்த உபகாரத்திற்குப் பதிலுபகாரம் செய்ய நாங்கள் அசக்தர்களாகவிருந்ததனால் அதனைச் செய்யாமலிருந்தோம்; இப்பொழுது தன கர்வத்தால் குருடர்களாகவிருப்பதால் எதிரில் நிற்பவர்களைக்கூட தெரிந்துக்கொள்ளாமலிருக்கிறோம். க்ஷேமத்தை அடைய வேண்டுமென்ற விருப்பமுள்ளவனுக்கு ஐச்வர்யம் வேண்டாம்.

ஐச்வர்யத்தால் குருடனாகி ஸாதுக்களையும் பந்துக்களையும் லக்ஷியம் செய்கிறதில்லை" என்று சொல்லி நந்தர்செய்த உபகாரத்தை நினைத்து பிரீதியால் தழுதழுத்த மனமுள்ளவராகி கண்ணீரைப் பெருக்கி அழுதார். இப்படி நந்தர் யதுக்களால் பூஜிக்கப்பட்டு ராமகிருஷ்ணர்களுக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி இன்றையதினம் பிரயாணம், நாளைய தினம் பிரயாணம் என்று சொல்லிக்கொண்டு மூன்று மாஸங்கள் அவ்விடத்திலேயே வஸித்தார். பின்பு வஸுதேவர், உக்கிரஸேனர், கிருஷ்ணன், உத்தவர், பலராமன் முதலியவர்கள் விலையுயர்ந்த ஆபரணம்,





பட்டு இவைகளைக் கொடுத்து நந்தரை பிரயாணப் படுத்தினார்கள். நந்தரும் மற்ற கோபர்களும், கோபிகை களும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களில் அழுந்திய தங்கள் மனத்தை யெடுத்துக்கொள்ள முடியாதவர் களாகவே (பகவானுடைய பாதத்தைத் தியானஞ் செய்துகொண்டு) மதுரா நகரம் சென்றார்கள். பின்பு மிக்க மஹிமை பொருந்திய பாண்டு புத்திரர்களும், குந்திதேவியும் ஸ்ரீ கிருஷ்ணனிடம் விடைபெற்று கண்ணீரால் கண்டமடைத்து தழுதழுத்த பேச்சுள்ளவர்களாகி தங்கள் பரிவாரங்களுடன் இந்திர ப்ரஸ்தஞ் சென்றார்கள். இப்படி பந்துக்கள் மற்றவரவர்களுடைய இருப்பிடஞ் சென்ற பிறகு கிருஷ்ணனையே தைவமாகக்கொண்ட விருஷ்ணிகள் மழைக்காலம் வந்துவிட்டதால் த்வாரகா நகரஞ் சென்றார்கள். மேலுமவர்கள் தீர்த்தயாத்திரையில் பந்துக்களைப் பார்த்ததையும், வஸுதேவருடைய யாகத் தையும் பட்டினத்து ஜனங்களுக்குச் சொன்னார்கள்.

## நோட்டு.

மேலும் அக்கினி– "எவன் வாக்கை ப்ரஹ்மமென்று உபாஸிக்கிறானோ, எவன் மனத்தை ப்ரஹ்மமென்று உபாஸிக்கிறானோ" ச்ருதி, பேதபுத்தியை– பேதகிருத: யென்ற பதத்தை ஆறாம் வேற்றுமையாக வைத்துக் கொண்டால் பேதபுத்தியுள்ள புருஷனுடைய பாபத்தை போக்கடிக்கிறதில்லையென்று அர்த்தம். கோபுரகழுதை– ஸாதுக்களை ஆத்மாவாகவும், பந்துக்களாகவும், தைவமாகவும், பரிசுத்தப்படுத்துகிறவர்களாகவும், நினைக்கவேண்டும். எவன் ஆத்மாவின் உண்மையை அறிந்த ஸாதுக்களை மேற்காட்டியவண்ணம் நினைக்க

வில்லையோ, அவன் கோபுரகழுதைபோல் சுமை சுமப்பவனாகிறான். பசுக்களுக்காக புல் முதலியவை களைச் சுமக்கும் கழுதையென்றும் சொல்லலாம். எருதுபோலும் கழுதைபோலும் என்றும் அர்த்தஞ் சொல்வதுமுண்டு. புத்திமயக்கமடைந்து— பகவானை ஸேவித்து மேலானவர்களாகியிருக்கும் நம்மை பகவான் தும்மைக்காட்டிலும் உயர்ந்தவர்களென்று சொல்லுகிறாரே இதன் அபிப்பிராயமென்னவென்று ப்ரமித்தார்கள். மூடர்களையும்— நாம் ஸாதுக்களைப் பூஜித்தால் மற்ற அஜ்ஞ ஜனங்களும், கிருஷ்ணனே ஸாதுக்களை யுபாஸிக்கிறார். ஆனதால் நாமும் ஸாதுக்களைப் பூஜிக்கவேண்டுமென்று நினைத்து ஸாதுக்களைப் பூஜிப்பார்களென்ற அபிப்பிராயத்தால் இப்படி சொல்லுகிறார் என்று கருத்து. ப்ரஜாபதி களுக்கு— ப்ரஹ்மதேவர் முதலியவர்களுக்கும் அதிபதி யான பகவான் நம்மைப்பார்த்து மூடர்களும் ஸத்கர்மங்களை அனுஷ்டிக்கட்டும் என்ற எண்ணத் தால் கர்மங்களைச் செய்கிறீர் என்றதை அறியாமல் மோஹிக்கிறோம். ஆத்மாவின் உண்மையை அறிந்தவர் களுக்குட் சிறந்தவர்களானாலும் நாங்கள் மோஹத்தை அடைவதும், நீர் எல்லாவற்றிற்கும் ஈச்வரனானாலும் கர்மத்தைச் செய்வதும் ஆச்சர்யமென்று கருத்து. வீரராகவீயம். பூமியானது— "மண் ணென்பதே ஸத்தியம். அதன் விகாரமும், பெயரும் உண்மையல்ல" என்ற ச்ருதியின்படி மண்ணால் குடம், மடக்கு முதலிய பலவஸ்துக்கள் செய்யப்பட்டாலும் குடம், மடக்கு யென்ற பெயர்களும், அதன் உருவங்களும் அவையுண் டாவதற்கு முந்தியுமில்லை; குடம் முதலியவைகளை உடைத்துவிட்டால் பிந்தியும் அந்த நாமரூபங்களில்லை. எப்பொழுதும் தொடர்ச்சியாகவிருப்பது மண்ணென்ற





காரணமொன்றேயாம். அப்படிப் போல் காரணமாகிய ஈச்வரன் ஒருவரே ஸத்யவஸ்து. அதன் கார்யமாகிய நாமரூபங்கள் அஸத்யங்கள் என்று கருத்து. கர்ம ஸம்பந்த—ஜனங்களுடைய நடை எப்படி கர்மாதீனமோ அப்படி பகவான் கர்மத்திற்கு வசப்பட்டு சேஷ்டிப்ப தில்லை. அவருடைய சேஷ்டைக்கு அவருடைய இச்சையே காரணம். காரணமாகவிருக்கும்பொழுது ஒருவராகவும், கார்யமாகவிருக்கும்பொழுது அநேகராகவுமிருக்கிறார். அநேகரென்றால் பல பெயருள்ளவரென்றும், பல உருவங்களுள்ளவரென்றும் அர்த்தம். ஒருவரென்பதால் உபாதானகாரணமென்றும், படைக்கிறாரென்பதால் நிமித்த காரணமென்றும் காட்டப்பட்டது; ஆனாலும் கார்யத்திலுள்ள தோஷங்கள் பகவானிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை வீரராகவீயம்.



# அத்யாயம்–85

## கிருஷ்ணன் தாய்தந்தைகளுக்கு ஞானத்தையுபதேசித்தது.

ஒருகால் ராமகிருஷ்ணர்களிருவர்களும் வஸுதேவரிடஞ் சென்று அவரை நமஸ்கரித்தார்கள். அப்பொழுது வஸுதேவர் ராமகிருஷ்ணர்களுடைய மஹிமையைப்பற்றி மஹர்ஷிகள் சொன்ன வார்த்தையை நினைத்து, அதில் மிக்க ச்ரத்தையால் ராமகிருஷ்ணர்களை ச்லாகித்து அவர்களை நோக்கி "ஓ கிருஷ்ண! கிருஷ்ண! மஹாயோகியே! ஓ ஸங்கர்ஷண! இந்த லோகத்திற்குக் காரணர்களாகிய ப்ராதானம், புருஷன் இவர்களைவிட நீங்களிருவர்களும் மேலானவர்கள் என்பது எனக்குத் தெரியும். (அநேகஸாதனங்களாலுண்டாகும் ஜகத்திற்கு ப்ரதான புருஷர்கள் எப்படிக் காரணமாவார்கள். நாங்கள் அவர்களுக்கு எப்படி காரணர்களாக விருக்கக்கூடும் என்றால் அடுத்த ச்லோகத்தால் ஸமாதானஞ் சொல்லப்பட்டிருக்கிறது) எந்த விடத்தில் எதனால், எதனிடமிருந்து, ஏதற்கு, எதன் பொருட்டு, எது எப்படி உண்டாகிறதோ, அப்படிப்பட்ட இந்த ப்ரபஞ்சமானது உம்முடைய ஸ்வரூபம்; நீர் ப்ரதானம்; (போக்கியம்) புருஷன்; (போக்தா) இவர்களுக்கும் அதிபதியாகவிருக்கிறீர் (ஜகத்திற்கு பகவான் காரணரென்று காட்டப்பட்டது) ஓ ஸகல ப்ராணிகளுக்கும் ஆத்மாவாக விருப்பவரே! தம்மால் ஸிருஷ்டிக்கப்பட்டப் பலவகையான ஜகத்தில் தாமே ப்ரவேசித்து கிரியா சக்தியாகவும், ஜ்ஞானசக்தியாகவுமிருந்து காப்பாற்றுகிறீர். ஜகத்திற்குக் காரணங்களான





ஸூத்ராத்மா முதலியவைகளுடைய சக்திகளெல்லாம் பரமபுருஷராகிய உம்முடையதேயாம். பாணத்திற்குப் பிறரை அடிக்கக் கூடிய சக்தி இயற்கையல்ல. அது புருஷனுடையதேயாம். அதுபோல் பரமபுருஷனுடைய சக்தியால் ஸூத்ராத்மா முதலியவைகள் ஜகத்திற்குக் காரணங்களாகின்றனவேயொழிய அவைகளுக்கு ஸ்வயமாக சக்தியில்லை. ஏனென்றால் அவைகள் அசேதனங்கள். ஆத்மாவோ சேதனன். இவர்களுக்கு ஸாம்யமில்லை. ஆனதால் பரமபுருஷனுடைய சேஷ்டையால் அவை சேஷ்டிக்கின்றன. அதுவே அவைகளுக்கு சேஷ்டையென்று சொல்லப்படுகிறது. (ப்ராணன் முதலியவை ஸ்வயமான சக்தியுள்ளவைகளல்லவென்று அடுத்த மூன்று ச்லோகங்களால் காட்டப்படுகிறது)

மேலும் சந்திரனுடைய காந்தியும், அக்னியின் தேஜஸ்ஸும், ஸூர்யனுடைய ப்ரபையும், நக்ஷத்திரங்கள், மின்னல் இவைகள் ப்ரகாசிப்பதும், மலைகள் அசையாமலிருப்பதும், பூமியின் வாஸனையும் உண்மையில் பகவானாகிய உம்முடைய ஸ்வரூபமேயாம். (அந்த ப்ரகாசத்தால் ஸூர்யன் ப்ரகாசிப்பதில்லை. சந்திரனும், நக்ஷத்திரங்களும், மின்னல்களும் ப்ரகாசிக்கிறதில்லை. அப்படியிருக்க அக்னி எப்படி ப்ரகாசிக்கும்? அவர் ப்ரகாசத்தை அனுஸரித்தே எல்லாம் ப்ரகாசிக்கின்றன. அவருடைய காந்தியால் எல்லாம் ப்ரகாசிக்கிறது. என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது; ஸூர்யனிடத்திலிருக்கும் தேஜஸ்ஸானது எப்படி ஸகல ஜகத்தையும் ப்ரகாசிக்கச்செய்கிறதோ, அந்த தேஜஸ்ஸும், சந்திரனிடத்திலும் அக்னியிடத்திலும் இருக்கும் தேஜஸ்ஸும் என்னுடையதென்று

தெரிந்துக்கொள்ளும், பகவத்கீதா.) ஓ தேவ! ஜலமும் அவைகளின் ரஸமும், பிறரைத் திருப்திசெய்யும் குணமும், ஜீவிக்கச்செய்யும் குணமும் உம்முடைய ஸ்வரூபம். பின்னும் வாயுவின் வேகம், பலம், சேஷ்டை, நடை ஆகிய இவைகளும் உம்முடையதே யாம்; மேலும் நீர் கிழக்கு முதலிய திக்குகளாகவும், அதன் அவகாசங்களாகவும் (வெளிகள்), ஆகாயமாகவும், அதனை ஆச்ரயித்த சப்தமாகவும், நாதமாகவும், ஓங்காரமாகவும், உருவங்களைத் தனித்தனியாகக் காண்பிக்கும் நாமதேயங்களாகவும் இருக்கிறீர். இந்திரியங்கள் தங்கள் தங்கள் விஷயங்களை ப்ரகாசிக்கச்செய்யும் சக்தியும் நீரே. அவைகளுக்கு அதிஷ்டான தேவதைகளும் நீரே; பின்னும் புத்தியின் வ்யவஸாய சக்தியும் (நிச்சயிப்பது) முந்தி நடந்த விஷயங்களை நினைக்கும் சக்தியும் நீரே; பூதங்களுக்குக்காரணமாகிய தாமஸ அஹங்காரமும், நீரே; இந்திரியங்களுக்குக் காரணமாகிய ராஜஸமான அஹங்காரமும் நீரே; அதிதைவம், அத்யாத்மம் என்று பலவகையாக கல்பிக்கப்படும் தேவர்களுக்குக் காரண மான ஸாத்விக அஹங்காரமும் நீரே; ஸம்ஸாரிகளான ஜீவர்களுக்கு ஸம்ஸாரத்தை யுண்டுபண்ணும் ப்ரதானமும் நீரே; மண்ணால் செய்யப்பட்ட குடம் முதலியவைகளும், ஸுவர்ணத்தால் செய்யப்பட்ட வளைமுதலிய ஆபரணங்களும் நசித்தாலும் அவை களுக்குக் காரணமாகிய மண், தங்கம் இவைகள் எப்படி நாசமடையாமல் இருக்கின்றனவோ, அப்படி அழியக்கூடிய ஜகத்திலுள்ள பதார்த்தங்களில் நாச மற்றவராகிய பரமபுருஷன் சேர்ந்திருந்தாலும் அந்த வஸ்துக்கள் அழியும்பொழுது தாம் நாசமடையாமல் அவைகளுக்குக் காரணமாகவும், ஸத்தியராகவும்





இருக்கிறீர். மேலும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களும் அதன் விருத்திகளான, மஹத்தத்வம் முதலியவைகளும், பரப்ரஹ்மமாகிய உம்மிடத்தில் யோகமாயையால் கல்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆனதால் ஜகத்தில் காணப்படும் வஸ்துக்கள் யாவும் அநித்யங்களேயாம். அவைகள் உம்மிடத்திலிருப்பதாக எப்பொழுது கற்பிக்கப்படுகின்றனவோ அப்பொழுது அவைகள் உண்மை போல் தோன்றுகின்றன. நீரும் அவைகளில் ப்ரவேசித்தவர் போல் தோன்றுகிறீர். மற்றக்காலங்களில் ஒருவராகவும் விகல்பமில்லாதவரா கவும் இருக்கிறீர். இப்படிப்பட்ட ஸகல ஜகத் ஸ்வரூபியான உம்முடைய உண்மையை அறியாமல் (பரமாத்மா ப்ரபஞ்சத்தின் ஸம்பந்தம் இல்லை என்பதை) தேஹம் முதலியவைகளில் அபிமானத்தை யடைந்து அதனால் கர்மங்களை தாங்கள் செய்வதாக அபிமானித்து ஜீவர்கள் ஸம்ஸாரத்தை அடைகிறார்கள்.

ஸகல ஜகத்திற்கும் அதிபதியான ஓ பகவான்! இப்படி அஞானத்தால் சுற்றிக்கொண்டிருக்கும் ஜீவர்களுக்கு மனிதஜன்மம் கிடைப்பதரிது. அதிலும் குருடு ஊமை இவையில்லாமல் எல்லா இந்திரியங்களுடன் நல்ல சரீரத்தை அடைவது அரிதிலும் அரிது. அப்படிப்பட்ட ஜன்மத்தை அடைந்தும், நான் உம்முடைய மாயையால் மோஹித்து உம்மை த்யானிக்காமல் காலத்தை வீணில் கழித்தேன். க்ஷேமத்தைக்கொடுக்கும் உபாயத்தைச் செய்யத்தவறினேன். மேலும் நீர் தேஹத்தை நான் என்றும், புத்திரன், களத்திரம் முதலியவைகளை தன்னைச் சார்ந்தவர்களென்றும் நினைப்பதாகிய ஸ்நேஹபாசத்தால் இந்த ஜகத்தைக் கட்டுகிறீர். (நான் உம்மை ஸேவியாமல் ஸம்ஸாரியாக

விருப்பதற்கும் உம்முடைய மாயையே காரணமென்று தாத்பர்யம்) ராமகிருஷ்ணர்களான நீங்களிருவர்களும் எங்களுடைய புத்திரர்களில்லை. பூமிக்குச் சுமையாக விருக்கும் அரசர்களைக் கொல்வதற்காக அவதரித்த ப்ரதான புருஷர்கள். இந்த விஷயம் உம்மாலேயே சொல்லப்பட்டிருக்கிறது; துக்கமடைந்தவர்களைக் காப்பாற்றுபவரான ஓ கிருஷ்ண! இந்திரிய விஷயங்களில் ஆசை கொண்டு சரீரத்தை ஆத்மாவென்று நினைத்துப் பரம புருஷராகிய உம்மை புத்திரன் என்று நினைத்துத்தவறிப்போனது போதும், உம்முடைய பாதத்தைச் சரணமடைகிறேன், அது பக்த்ர்களுடைய ஸம்ஸாரத்தை நிவர்த்திக்கக்கூடியது. பெரியோர்களால் கானஞ்செய்யக்கூடியவரே! "நான் ஒவ்வொரு யுகத்திலும் தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக அவதாரங்களைச் செய்கிறேன். இப்பொழுது உங்களுக்கு புத்திரனாக அவதரித்திருக்கிறேன்" என்று ப்ரஸவகிருஹத்தில் சொன்னீரல்லவா? அப்படிப்பட்ட நீர் ஆகாயம்போல் ஒன்றில் ஸம்பந்திக்காதவரானாலும், உத்பத்தியற்றவரானாலும் அவதரிக்கிறீர். ஆனதால் உம்முடைய மஹிமையை யாரால் அறியமுடியும்?" என்றார்.

21–25. அதனைக்கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் மிக்க வணக்கத்துடன் "ஓ அண்ண! உம்முடைய புத்திரனாகிய என்னை யுத்தேசித்து இப்படிச் சொல்லுவது பொருந்துமா? ஆனாலும் என்னை நிமித்தமாக வைத்துக்கொண்டு ஆத்மாவின் உண்மையை ஜகத்திற்குத் தெரியும்படி சொன்னீர். மேலும் நான் நீங்கள், இந்த பலராமன், இந்த த்வாரகா வாஸிகளான ஜனங்கள் ஆகிய சராசரங்களடங்கிய ஜகத்முழுவதும்





பரப்ரஹ்மஸ்வரூபமென்று நீர் நினைக்க வேண்டும். ஆகாயம் முதலிய பூதங்கள் அதன் கார்யமான குடம் முதலியவைகளில் எப்படித் தோன்றுகின்றனவோ, மறைகின்றனவோ, அப்படி இந்த ஆத்மாவும் தம்மால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஜகத்தில் பலவகையாகத் தோன்றுகிறார். ஆனாலும் ஆத்மா ஒருவர் ப்ரபஞ்சம் பலவகையானது. ஆத்மா தாமாக ப்ரகாசிப்பவர்; ஜகத் மற்ற ப்ரகாசத்தால் ப்ரகாசிக்கக்கூடியது? ஆத்மா நித்யவஸ்து, ஜகத் அனித்யமானது. ஆத்மா குண ஸம்பந்தமில்லாதவர் ப்ரபஞ்சம் குணமுள்ளது" என்று சொன்னார். அதனைக்கேட்ட வஸுதேவர் பேதபுத்தி யற்றவராகி மிக்க ப்ரியமடைந்து மௌனமாகவிருந்தார்.

26–32. அப்பொழுது ஸகல தேவதாஸ்வரூபியாகிய தேவகியானவள் "கிருஷ்ணன் ஆசார்யருடைய புத்திரனை யமலோகத்திலிருந்து திருப்பிக்கொண்டு வந்தார்" என்பதைக் கேள்விப்பட்டு அவ்விடம் வந்து மிக்க ஆச்சர்யமடைந்து கம்ஸனால் கொல்லப்பட்டத் தமது குழந்தைகளை நினைத்து கண்ணீரைப்பெருக்கி ராமகிருஷ்ணர்களை அழைத்து "ஓ பலராம! ராம! அளவற்ற மஹிமையுள்ளவரே! யோகேசர்களுக்கு மதிபதியாகிய ஸ்ரீ கிருஷ்ண! உங்களை ப்ரஜாபதிகளுக்கும் அதிபதிகளென்றும், ஆதி புருஷர்களென்றும் அறிவேன். நீங்கள் காலத்தின் மஹிமையால் சாஸ்திர விரோதமாக நடக்கும் அரசர்களைக்கொன்று பூமியின் சுமையை நிவர்த்திப்பதற்காக அவதரித்தவர்கள். ஓ ஜகத்ஸ்வரூபியே! உம்முடைய அம்சமாகிய புருஷனுடைய அம்சம் மாயை அதன் ஸ்வல்ப பாகத்தால் ஜகத் படைக்கப்படுகிறது; காப்பாற்றப்படுகிறது; ஸம்ஹரிக்கப்

படுகிறது; அப்படிப்பட்ட உம்மைச் சரணமடைகிறேன். வெகுகாலத்திற்கு முன் மரணமடைந்து யமலோகத்திலிருந்த குருவின் குழந்தையை ஆசார்யனுக்கு தக்ஷிணையாக கொடுத்தீர்களல்லவா? அதுபோல கம்ஸனால் கொல்லப்பட்ட என்னுடைய குழந்தைகளை திருப்பிக் கொண்டு வரவேண்டும்" என்று கேட்டாள்.

33–46. இப்படி மாதாவினால் தூண்டப்பட்ட ராமகிருஷ்ணர்கள் யோகமாயையின் மஹிமையால் ஸுதலலோகஞ்சென்றார்கள். அவ்விடத்திலிருந்த பலி சக்கிரவர்த்தி ஸகல ஜகத்திற்கும் தைவமும், தனக்கு முக்கிய தைவமுமான ஸ்ரீ கிருஷ்ணனைக்கண்டவுடன், ஆஸனத்திலிருந்து எழுந்திருந்து அதிக ஆனந்தத்தால் பூர்ணமான ஹிருதயமுள்ளவனாகிய தன்னுடைய பந்துக்களுடன் பகவானை நமஸ்கரித்தான்.

மேலுமவன் உத்தமமான ஆஸனங்கொடுத்து அவர்களை உட்காரச்செய்தான். பின்னுமவன் அவர்களுடைய பாதங்களை அலம்பி அந்த ஜலத்தை தன்னுடைய தலையில் புரோக்ஷித்துக் கொண்டது மன்றி தன்னுடைய பரிவாரங்களுக்கும் புரோக்ஷித்தான். அந்த பாததீர்த்தமானது ப்ரஹ்மதேவர் வரையிலுள்ள ஸகல ஜகத்தைப் பரிசுத்தப்படுத்தப்படுத்தக்கூடியது. இன்னுமந்த பலி சக்கிரவர்த்தி உத்தமமான வஸ்திரம், ஆபரணம், சந்தனம், புஷ்பமாலை, தூபம், தீபம், பக்ஷணங்கள் ஆகிய இவைகளையும், தன்னுடைய பணம், பந்துக்கள், சரீரம், முதலியவைகளையும் ஸமர்ப்பித்தும் பகவானைப் பூஜித்தார். அதன்பின்பு பலிசக்கிரவர்த்தி மிக்கப்ரீதியுடன் பகவானுடைய பாதங்களை த்யானஞ்செய்து மயிர்கூச்சலுள்ளவராகி





ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி தழுதழுத்த வார்த்தையுடன் "அனந்தரும்(ஆதிசேஷன்) எல்லாவற்றிலும் பருத்தவரும் (தம்முடைய படத்தின் ஒரு பக்கத்தில் ஸகல பூமியைத் தாங்குவதால்) எப்பொழுதும் ஆனந்த ஸ்வரூபியும், ஜகத்தைப்படைப்பவரும், ஸாங்கியம், யோகம், யாகம் இவைகளின் ஸ்வரூபியும், பரமாத்மாவும், பரப்ரஹ்மமுமான உம்மை நமஸ்கரிக்கிறேன். உங்களுடைய தர்சனம் பிராணிகளுக்குக் கிடைப்பது அரிதானாலும் ரஜஸ், தமஸ் இந்த ஸ்வபாவமுள்ளவர்களான எங்களுக்கு உம்முடைய அனுக்ரஹத்தால் கிடைத்தது. நீர் சுத்த ஸத்யஸ்வரூபி; சாஸ்திரத்தால் அறியக்கூடியவர்; அப்படிப்பட்ட உம்மிடத்தில் சில தைத்யர்களும், தானவர்களும், கந்தர்வர்களும், ஸித்தர்களும், வித்யாதர்களும் உரகர்களும் யக்ஷர்களும், ராக்ஷஸர்களும், பிசாசர்களும், பூதங்களும், ப்ரமதகணங்களும், நாங்களும், மற்றுஞ்சிலர்களும் விரோதபுத்தியைவைத்து ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யமென்ற உத்தமகதியை அடைந்தார்கள். (பகவானிடத்தில் விரோதத்தால் எப்பொழுதும் அவரையே த்யானஞ்செய்துகொண்டிருந்தமையால் பக்தர்களை விட மேலானகதியை அடைந்தார்களென்று கருத்து)

ஓ தாமரைமலர் போன்ற கண்களுள்ளவரே! எண்ணமே அவரவர்களுடைய க்ஷேமத்திற்குக் காரணமாகிறது. சிலர் (சிசுபாலன் முதலிய விரோதபுத்தியாலுண்டான பக்தியால் உம்முடைய ஸ்வரூபத்தை அடைந்தார்கள். சிலர் (கோபிகை முதலியவர்கள்) பகவானை பர்த்தாவென்று நினைத்து பக்திசெய்து உத்தமகதியை அடைந்தார்கள். ஸத்வ குணமுள்ள தேவர்களும் அவர்கள்போல் அந்தரங்க

பக்தர்களாக விருக்கவில்லை. ஓ யோகேசர்களுக்கு அதிபதியே யோகிகளாலும் உம்முடை யோகமாயை யின் ஸ்வரூபம் இது இம்மாதிரியென்று கண்டுபிடிக்க முடியவில்லை. அப்படியிருக்க எங்களால் எப்படி தெரிந்துகொள்ள முடியும்? ஒன்றிலும் ஆசைப்படாத வர்களான உம்முடைய பாதாரவிந்தத்தைத்தேடுகிறார் கள். அதனைவிட்டு கிருஹமாகிய பாழுங்கிணற்றில் நான் விழுந்திருக்கின்றேன். அப்படிப்பட்ட நான் அதிலிருந்து வெளியில்வந்து மரங்களுடைய விழுந்திருக்கும் பழங்களைப்புஜித்து சாந்தமனமுள்ள வனாகி ஒருவனாக ஸஞ்சரிக்கும்படியாவது, பெரியோர்களுடன் சேர்ந்து ஸஞ்சரிக்கும்படியாவது அநுக்ரஹிக்க வேண்டும். ஓ ஸகல ஜீவர்களுக்கும் அதிபதியாக விருப்பவரே! எதனை ச்ரத்தையுடன் அனுஷ்டித்தால் விதி நிஷேதங்களுக்குக் கட்டுப்படாம லிருப்பேனோ, அதனைச்சொல்லவேண்டும். என்னை பாபமற்றவனாகச் செய்யவேண்டும்" என்று ப்ரார்த்தித்தான்.

47–52. அதனைக்கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் பலியைநோக்கி "ஸ்வாயம்புவமன்வந்தரத்தில் மரீசி யென்ற ப்ரஜாபதிக்கு ஊர்ணா யென்பவளிடத்தில் ஆறு புத்திரர்கள் பிறந்தார்கள். பின்பு ஒரு ஸமயம் ப்ரஹ்மதேவர் தம்முடைய புத்திரியினிடம் ஆசை கொண்டு அவளைப் புணருவதற்கு முயற்சித்தார். அதனைக் கண்ணுற்ற மரீசியின் புத்திரர்கள் பரிஹாசஞ்செய்தார்கள். அந்தப் பாபத்தால் அவர்கள் அஸுரஜன்மத்தை அடைந்து ஹிரண்யகசிபுவிற்கு புத்திரர்களாக ஜனித்தார்கள். அவர்களே யோக மாயையால் தேவகியின் கர்ப்பத்தில் ஜனித்து கம்ஸனால்





கொல்லப்பட்டார்கள் இப்பொழுது தேவகி அந்தக் குழந்தைகளை நினைத்து துக்கப்படுகிறாள். அவர்கள் உன்னுடைய ஸமீபத்திலிருக்கிறார்கள். மாதாவான தேவகியின் துக்கத்தை நிவர்த்திப்பதற்காக இந்தக் குழந்தைகளை அழைத்துப்போகவேண்டும். ஸ்மரன் உத்கீதன், பரிஷ்வங்கன், பதங்கன், க்ஷுத்திரபூ, கிருணி யென்ற ஆறு புத்திரர்களும் என்னுடைய அனுக்ரஹத் தால் சாபமோக்ஷத்தை அடைந்து கவலையற்றவர்களாகி தங்களுடைய லோகத்தை அடைந்து திரும்பவும் உத்தமகதியை அடைவார்கள்" என்று சொன்னார். அதனைக்கேட்ட பலிசக்கிரவர்த்தி அவ்விருவர்களையும் பூஜித்தான். அதன்பின் ராமகிருஷ்ணர்கள் அந்தக் குழந்தைகளை அழைத்துக்கொண்டு திரும்பவும் த்வாரகா நகரம் வந்து மாதாவினிடம் ஸமர்ப்பித்தார்கள்.

53–56. தேவகி அந்தக்குழந்தைகளைக் கண்டு மிகவும் ஸந்தோஷத்தை அடைந்து அடிக்கடி உச்சியில் முகர்ந்தாள். அவளுடைய ஸ்தனங்களில் பால் பெருகியது. மேலும் அவள் குழந்தைகளைத் தழுவி மடியில் வைத்து ஸ்தன்யபானஞ் செய்வித்தாள். எதனால் லோகம்ஸிருஷ்டிக்கப்படுகிறதோ, அப்படிப் பட்ட பகவானுடைய மாயையால் மோஹித்து தேவகி புத்திரர்களிடம் விசேஷ ப்ரியம் வைத்திருந்தாள். அந்தக் குழந்தைகள் தேவகியின் ஸ்தன்யத்தைப் பானஞ் செய்தன. கிருஷ்ணன் புஜித்து எஞ்சியதானதால் அமிருதமல்லவா; அதனை புஜித்ததாலும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய திவ்ய சரீர ஸ்பர்சத்தாலும் "நாம் தேவர்கள். சாபத்தால் பூமியில் ஜனித்தோம்" என்ற ஞானத்தை அடைந்து ஸ்ரீ கிருஷ்ணன் பலராமன் தேவகி ஆகிய இவர்களை நமஸ்கரித்து ஸகல

ப்ராணிகளும் பார்த்திருக்கும்பொழுது ஆகாயமார்க்கமாக தங்களுலகஞ் சென்றனர். இம்மாதிரியாக மரணமடைந்த புத்திரர்கள் திரும்பிவந்து ஆகாயஞ் சென்றது இவைகளைக் கண்ணுற்ற தேவகி 'இது ஸ்ரீகிருஷ்ணனால் செய்யப்பட்ட மாயையென்று நினைத்து ஆச்சர்யமடைந்தாள். ஓ பரதவம்சத்திய மஹாராஜா! அனந்தராகிய பகவான் இம்மாதிரி அத்புதமான செய்கைகளைச் செய்திருக்கிறார். அவைகள் கணக்கிட முடியாதவைகள்" என்று சுகர் சொன்னார்.

57–59. வ்யாஸ மஹர்ஷியின் புத்திரராகிய சுகரால் பரீக்ஷித்துக்கு உபதேசிக்கப்பட்ட இந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதம் ஸகல ஜனங்களுடைய பாபத்தைப் போக்கக்கூடியது; பக்தர்களால் ப்ரீதியுடன் கேட்கக்கூடியது. அப்படிப்பட்ட அமிருதகீர்த்தியான பகவானுடைய சரித்திரத்தை எவன் படிக்கிறானோ எவன் பிறருக்குச் சொல்லுகிறானோ, அவன் பகவானிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தி க்ஷேமத்திற்கு இருப்பிடமான (பயமற்ற) பதத்தை அடைவான்.





# அத்தியாம்–86

## அர்ச்சுனன் சுபத்திரையை அபகரித்தது

பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ ப்ராஹ்மண! ராம கிருஷ்ணர்களுக்குச் ஸஹோதரியும், எனக்குப் பிதாமகியுமான சுபத்திரையை அர்ச்சுனர் எப்படி அபகரித்தார்? அதனைச் சொல்ல வேண்டும்" என்றார்.

2–13. அதனைக்கேட்ட சுகர் அரசனை நோக்கி "அர்ஜுனன் தீர்த்த யாத்திரை செய்துவரும்பொழுது பூமியில் ஸஞ்சரித்துப் ப்ரபாஸ தீர்த்தஞ் சென்றான். அவ்விடத்தில் தமக்கு அம்மானுடைய புத்திரியாகிய ஸுபத்திரை என்பவளைப் பலராமன் துர்யோதனனுக்கு விவாஹஞ் செய்விக்க முயற்சிப்பதாகவும், மற்ற பந்துக்கள் அதற்கு சம்மதிக்கவில்லை என்றும் கேள்விப்பட்டு அவளைத் தாம் கல்யாணம் செய்து கொள்ள விரும்பி, ஸன்னியாசி வேஷம்பூண்டு, திருதண்டத்தை (மூன்று கழிகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டிவைத்துக் கொள்ளும் தண்டம்) தரித்து, த்வாரகா நகரஞ்சென்றான். அவ்விடத்தில் பட்டணத்து ஜனங்களும் பலராமனும் உண்மையான ஸன்னியாசியென்று நினைத்துப் பூஜித்தார்கள். இப்படி ஜனங்களால் பூஜிக்கப்பட்டுத் தமது கார்யத்திற்காக வர்ஷாகாலத்தை அவ்விடத்தில் கழித்து வந்தார். ஒரு நாள் பலராமன் ஸன்னியாஸியை தம்முடைய கிருஹத்திற்கு அழைத்து வந்து, சிரத்தையுடன் பிக்ஷை செய்து வைத்தார். அதனை அர்ஜுனன் ஒப்புக்கொண்டு அவருடைய கிருஹத்தில்

போஜனஞ் செய்தான். அப்பொழுது அந்த ஸன்னியாசி, அந்த பலராமனுடைய கிருஹத்தில் ஸுபத்ராயென்ற அழகிய பெண்ணைக்கண்டார். அவளைப் பார்த்தவுடன் அவளிடத்திலுள்ள ப்ரீதியால் கண்கள் மலர்ந்து, மனங்கலங்கி அவளிடம் ஆசைப்பட்டார். அந்தப் பெண்ணும் ஸ்திரீகளுடைய மனத்தை அபஹரிக்கக்கூடிய அந்த ஸன்னியாஸியின் சரீரத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு வெட்கத்துடன் கடாக்ஷித்து அவரையே மனதில் த்யானஞ் செய்து, அவரையே பார்த்துக் கொண்டு அவர் மீது காதல் கொண்டாள். அர்ஜுனன் மிகவும் காமவெறி கொண்டு மனங்கலங்கி, அவளையே நினைத்துத் துக்கப்பட்டுக்கொண்டிருந்ததுமின்றி, அவளை அபஹரிப்பதற்கும் ஸமயத்தை எதிர்பார்த்திருந்தார்.

இப்படியிருக்கும் ஸமயத்தில் ஒரு நாள் தேவதா தரிசனஞ் செய்வதற்காக எல்லோரும் வாஹனத்தின் மீதேறி வெளியில் வந்தார்கள். அந்தச் ஸமயத்தில் வஸுதேவர், தேவகி, கிருஷ்ணன் இவர்களுடைய அனுமதியால் அர்ஜுனன் ரதத்தின் மீதேறி ஸுபத்ரையை அபஹரித்து, அதற்குத் தடை செய்தவர்களை பாணங்களால் அடித்துத் துரத்தித் தமது நகரஞ் சென்றார். அது சிங்கம் மற்ற மிருகங்களை ஜயித்துத் தன்னுடைய பாகத்தை எடுத்துக் கொண்டாற் போலிருந்தது. பின்பு அதனைக் கேட்ட பலராமன் பர்வகாலத்தில் ஸமுத்திரங் கலங்குவது போல மிக்க கோபங்கொண்டார். அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடைய பாதங்களைப் பிடித்துக் கொண்டு ஸமாதானஞ் செய்தார். மற்ற பந்துக்களும் பலராமனுக்கு நல்ல வார்த்தை சொன்னார்கள்.





அதனால் பலராமனுடைய கோபம் தணிந்தது. பின்பு பலராமன் ஸந்தோஷத்துடன் யானை, குதிரை, ரதம், வேலைக்காரிகள் மிகுந்த பணம் முதலியவைகளை ஸ்திரீதனமாக அனுப்பினார். அதனால் யாதவர்களும் பாண்டவர்களும் விசேஷப் பிரீதியுள்ளவர்கள் ஆனார்கள்.

14—38. ஸ்ரீகிருஷ்ணன் பக்தர்களிடத்தில் மிகவும் பிரியத்தைக் காண்பித்த மற்றொரு சரிதத்தைச் சொல்லுகிறேன், கேளும்; கிருஷ்ணனுக்கு ச்ருததேவரென்ற ஒரு ஸ்நேஹிதர் உண்டு. அவர் கிருஷ்ணனிடத்தில் எப்பொழுதும் பக்திசெய்து, அதனால் விஷயங்களில் ஆசையில்லாமல் சாந்தியை அடைந்தவர்; மிக்க விவேகமுள்ளவர். தைவச் செயலாகக் கிடைத்த அன்னத்தைக்கொண்டு தம்முடைய கார்யத்தை முடித்துக்கொண்டு, சரீரம் நசிக்காமலிருப்பதற்கு எவ்வளவு அன்னம் வேண்டுமோ அவ்வளவைப் புஜித்துக்கொண்டும், அதிகமாக ஆசைப்படாமல் வேதத்திற் சொல்லிய கர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டும், மிதிலா நகரத்தில் க்ருஹஸ்தராக வஸித்து வந்தார். அப்படியே அந்த தேசத்து அரசனாகிய 'பஹுளாச்வர்' என்பவரும் அஹங்காரமற்றவராகி கிருஷ்ண பக்தராக இருந்தார். அவ்விருவர்களையும் அனுக்கிரஹிப்பதற்காக பகவான் தாருகனால் கொண்டு வரப்பட்ட ரதத்திலேறி மிதிலா நகரஞ் சென்றார். அப்பொழுது நாரதர், வாமதேவர், அத்ரி, வ்யாஸர், பரசுராமன், அஸிதர், அருணர், சுகராகிய நான், பிரஹஸ்பதி, கண்வர், மைத்ரேயர், ச்யவனர் முதலிய மஹர்ஷிகளும் கிருஷ்ணன் பின் சென்றார்கள். ஸூர்யன் உதயமாகும் பொழுது

ஜனங்கள் அர்க்கியத்தைக் கையிலெடுத்துக் கொண்டு எழுந்திருந்து பூஜிப்பது போல தேசத்து ஜனங்களும் பூஜாத்ரவியங்களை கையில் வைத்துக்கொண்டு பூஜித்தார்கள். மேலும் ஆனர்த்தம், குரு, ஜாங்கலம், வங்கம், மத்ஸ்யம், பாஞ்சாலம், குந்தி, மது, கேகயம், கோஸலம், அர்ணம் ஆகிய தேசத்துப் புருஷர்களும், ஸ்திரீகளும் மற்றவர்களும் மேலான சிரிப்புள்ளதும், அழகான கண்களுள்ளதுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தை மிக்க ஆவலுடன் பார்த்தார்கள் அப்பொழுது பகவான் தம்மைத் தர்சித்ததால் அஞ்ஞானம் அற்றவர்களான அந்த ஜனங்களுக்கு தத்துவஞானத்தை உண்டு பண்ணிக் கொண்டும், பாபத்தைப்போக்கக் கூடிய தமது கீர்த்தியைத் தேவர்களும் மனிதர்களும் கானஞ்செய்ய அதனைக் கேட்டுக் கொண்டு மெள்ள மெள்ள விதேஹ தேசஞ் சென்றார்.

இப்படிப் பகவான் வருகிறதை கேள்விப்பட்டு மிதிலா நகரத்தில் வஸிக்கும் ஜனங்கள் பூஜைக்குரிய ஸாமக்ரிகளை எடுத்து எதிரில்வந்து அழைத்தார்கள். மேலும் அவர்கள் உத்தமச்லோகராகிய ஸ்ரீகிருஷ்ணனை தர்சித்து. தலையில் கைகளை கூப்பி நமஸ்கரித்தது மின்றி முந்தி கேள்விப்பட்ட அந்த மஹர்ஷிகளுக்கும் நமஸ்காரஞ் செய்தார்கள். அப்பொழுது அந்த தேசத்து அரசனாகிய பஹுளாச்வரரும், ச்ருத தேவரும் தங்களை அனுக்கிரஹிப்பதற்காகவே பகவான் வந்திருக்கிறா ரென்று நினைத்து அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். மேலும் அஞ்ஜலி செய்து ஸ்ரீ கிருஷ்ணனையும் மற்ற மஹர்ஷிகளையும் தங்கள் கிருஹத்திற்கு வந்து ஆதித்தியத்தைப் பெற்றுக்கொள்ள





வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். ஸ்ரீகிருஷ்ணன் அவர்களுடைய அபிப்பிராயத்தை அறிந்து, அவர் களுக்குப் பிரியத்தைச் செய்யவிரும்பி அவ்விருவர்கள் கிருஹத்திலும் இரண்டு ஸ்வரூபத்துடன் ப்ரவேசித்தார். ச்ருத தேவருடைய கிருஹத்திற்குப் பகவான் சென்றது பஹுளாச்வருக்கு தெரியாது. பஹுளாச்வருடைய கிருஹத்திற்கு பகவான் சென்றது ச்ருததேவருக்குத் தெரியாது. அப்பொழுது பஹுளாச்வர் தம்முடைய கிருஹத்திற்கு வந்த மஹர்ஷிகளை உத்தமமான ஆஸனத்தில் உட்கார வைத்தார். அஸத்துக்களால் அந்த மஹர்ஷிகளுடைய பெயர்கள் கூடக் கேட்க முடியாதவை. மேலும் அந்த அரசன் மிக்க பக்தியுடன் மனத்தில் ஸந்தோஷத்தை அடைந்து ஆனந்தக் கண்ணீரைப்பெருக்கி, அவர்களை நமஸ்கரித்து, அவர்களுடைய பாதங்களை அலம்பி, லோகத்தைப் பரிசுத்தப்படுத்தக் கூடிய அந்த ஜலத்தைத் தம் குடும்பத்தினர் மீதும், தம் தலையிலும் புரோக்ஷித்துக் கொண்டார்.

பின்னும் சந்தனம், புஷ்பம், வஸ்திரம், ஆபரணம், தூபம், தீபம், அர்க்கியம், பசுக்கள், விருஷபம் ஆகிய இவைகளால் ஈசுவரனுக்கு ஒப்பான அந்த மஹர்ஷி களைப் பூஜித்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களை மடியில் வைத்துப் பிடித்துக்கொண்டு ஸந்தோஷத் துடன் “ஓ ப்ரபுவே! நீர் ஸகல பிராணிகளுக்கும் ஆத்மாவாகவும், ஸாக்ஷியாகவும், தாமாகப் பிரகாசிப் பவராகவும் இருக்கிறீர். அப்படிப்பட்ட உம்முடைய பாதாரவிந்தத்தை ஸ்மரித்துக்கொண்டிருந்த எங்களுக்குத் தர்சனங்கொடுத்தீர். உமக்கு அனந்தன் பந்துவாயிருந்தும், லக்ஷ்மீதேவி பத்னியாக இருந்தும்,

ப்ரஹ்மதேவர் புத்திரனாக இருந்தும் நீர் உம்முடைய வார்த்தையை மெய்ப்பிக்கச் செய்வதற்காக என் கண்ணுக்குப் புலப்பட்டீர். ஒரு விஷயத்திலும் ஆசை யில்லாமல் சாந்தர்களாக இருக்கும் முனிவர்களுக்கு நீர் ஆத்மானந்தத்தைக் கொடுப்பவர். அப்படிப்பட்ட உம்முடைய உண்மையை அறிந்த எவன் உம்முடைய பாதத்தைச் ஸேவிக்காமல் விடுவான்? (ஒருவனும் விடமாட்டானென்று கருத்து.) நீர் ஸம்ஸாரிகளான ஜனங்களை அதிலிருந்து காப்பாற்றுவதற்காக யதுவம்சத்தில் அவதரித்து, ஸகல ஜனங்களுடைய பாபத்தை நிவர்த்திக்கக் கூடிய அற்புதமான செய்கைகளைச் செய்து கீர்த்தியைப் பரவச் செய்தீர் ஸ்ரீகிருஷ்ணனும், தடையற்ற ஞானமுள்ளவரும், நாராயண மஹர்ஷியாக அவதரித்துத் தபஞ் செய்ப வருமான உமக்கு நமஸ்காரம். ஓ மிக்க மஹிமை பொருந்தியவரே! சில நாள் என்னுடைய கிருஹத்தில் இந்த மஹர்ஷிகளுடன் வஸித்து உம்முடைய பாததூளியால் இந்த நிமி வம்சத்தைப் பரிசுத்தப் படுத்தும்" என்று கேட்ட பஹுளாச்வரால், பிரார்த்திக்கப் பெற்ற பகவான் மிதிலையிலுள்ள மனிதர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுத்து அவ்விடம் வஸித்தார்.

39–50. ச்ருததேவரும் தமது கிருஹத்திற்கு வந்த ஸ்ரீ கிருஷ்ணனையும். மஹர்ஷிகளையும் நமஸ்கரித்து மிக்க ஸந்தோஷத்துடன் வஸ்திரத்தை உயர எறிந்து பிடித்து நர்த்தனஞ் செய்தார். மேலும் அவர் பஹுளாச்வர் போலப் பலகை, தர்ப்பம், திருணம் முதலிய ஆஸனங்களில் அவர்களை உட்காரவைத்து. நல்வரவாவென்று கேட்டு, பத்னியுடன் நமஸ்கரித்து





அவர்களுடைய பாதங்களை அலம்பினார். அந்தத் தீர்த்தத்தால் தம்முடைய பந்துக்களுக்கு ஸ்நானஞ் செய்வித்ததுமின்றி தாமும் ஸ்நானஞ் செய்தார். ஸகல மனோரதங்களையும் அடைந்தவன் போல் மிக்க ஆனந்தங்கொண்டார். பின்னுமவர் பழங்கள், பூஜா திரவியங்கள், விளாமிச்சம்வேர், வாஸனையுள்ள தீர்த்தம், கஸ்தூரி முதலிய வாசனாத்ரவ்யம், துளசி, தர்ப்பம், தாமரை மலர், ஸத்வ குணத்தை விருத்தி செய்யக்கூடிய அன்னம் ஆகிய இவைகளைக்கொண்டு பூஜித்தார். அவைகள் பிறரை உபத்திரவிக்காமல் ஸம்பாதிக்கப்பட்டவைகள்; "ஸ்ரீகிருஷ்ணனுடைய ஸ்வரூப பூதர்களும் ஸகல தீர்த்தங்களையும் சுத்தப்படுத்தக் கூடிய பாத தூளியுள்ளவர்களுமான இவர்களின் சேர்க்கை, கிருஹமாகிய பாழுங்கிணற்றில் விழுந்து ஸம்ஸாரியாக இருக்கும் எனக்கு எப்படிக் கிடைக்கக் கூடும்" என்று தனக்குள் யோசித்து, ஸுகமாக உட்கார்ந்திருக்கும் அவர்களிடம் பத்னி, புத்திரன், பந்துக்கள் இவர்களுடன் சென்று, அவர்களுடைய பாதங்களைப் பிடித்துக் கொண்டு, "எப்பொழுது நீர் இந்த ஜகத்தை ஸத்வம் முதலிய உம்முடைய சக்திகளால் படைத்து அதில் பிரவேசித்தீரோ, அப்பொழுதே நம்முடைய கண்ணுக்குப் புலப்பட்டீர். அப்படிப்பட்ட பரம புருஷனாகிய நீர் இப்பொழுது தர்சனங் கொடுத்தீர். படுத்துத் தூங்கும் புருஷன் மனத்தாலும் தன்னுடைய அவித்யையாலும் ஸ்வப்ன லோகத்தை ஸிருஷ்டித்து அதில் பிரவேசித்த வன் போல எப்படித் தோன்றுகிறானோ, அதுபோல் நீரும் மாயையால் ஜகத்தைப் படைத்து, அதில் பிரவேசித்தவர் போலத் தோன்றுகிறீர். எப்பொழுதும் உம்முடைய சரித்திரங்களைக் கேட்போர்களும்,

சொல்லுகிறவர்களும், உம்மைப் பூஜிப்பவர்களும், நமஸ்கரிப்பவர்களுமான பக்தர்களுடைய சுத்தமான ஹிருதயத்தில் நீர் பிரகாசிக்கிறீர்; [எப்பொழுதும் ச்ரவணம், கீர்த்தனம் முதலிய பக்தி செய்பவர்களுக்கு ஹிருதயத்தில் பிரகாசிக்கிறீர்; நான் உம்மை நேரில் பார்க்கிறேன் என்னுடைய பாக்கியம் அதிகம் என்று தாத்பரியம்] ஜனங்களுக்கு நீர் இருதயத்தில் இருப்பவரானாலும் கர்மங்களிலேயே நோக்கமுள்ளவர்களுக்குத் தூரத்திலிருப்பவராக ஆகிறீர்; அஹங்காரம் முதலியவைகளால் க்ரஹிக்க முடியாதவரானாலும் பக்தி செய்பவர்களுக்குச் ஸமீபத்திலிருப்பவராக ஆகிறீர்; மேலும் தேஹம் முதலியவைகளில் அபிமானத்தை விட்டவர்களான பக்தர்களுக்கு பரமாத்மாவாக ப்ரகாசிப்பவரும், தேஹம் முதலியவைகளில் அபிமானமுள்ள ஸம்ஸாரிகளுக்கு மிருத்யு போன்ற ஸம்ஸாரத்தைக் கொடுப்பவரும், மஹத்தத்துவம் முதலியகார்யத்தையும் ப்ரகிருதியையும், உபாதியாக உடையவரும், தம்முடைய மாயையால் மறைக்கப்படாதவரும், மற்றவர்களுடைய ஞானத்தை மறைப்பவருமான உம்மை நமஸ்கரிக்கிறேன். உம்மை நேரில் தரிசிக்கும் வரையில் மனிதர்களுக்குக் கஷ்டமேயொழிய அதற்குப் பிறகு கஷ்டமில்லை. ஆனதால் நான் என்ன செய்ய வேண்டும்? வேலைக்காரனாகிய என்னை உத்தரவு செய்யும்" என்று கேட்டுக்கொண்டார்.

51–58. அதனைக் கேட்ட பகவான். அண்டினவர்களுடைய துக்கத்தை நிவர்த்திப்பவராகையால் ச்ருததேவருடைய கையைத் தமது கையால் பிடித்து, சிரித்துக் கொண்டு "ஓ ப்ராஹ்மண! இந்த மஹர்ஷிகள் உம்மை அனுக்கிரஹிப்பதற்காக இவ்விடம் வந்திருக்கிறார்கள். இவர்கள் தங்களுடைய பாததூளிகளால் லோகங்களைப் பரிசுத்தப்படுத்திக்கொண்டும் ஸஞ்சரிக்கிறார்கள், தேவர்களும், புண்ணிய தீர்த்தங்களும், புண்ணிய க்ஷேத்திரங்களும் தர்சனம் கொடுப்பது, பூஜிப்பது இவைகளால் மனிதனைத் தாமதித்துப் பரிசுத்தப்படுத்துகின்றன. அவைகளுக்கு அவ்விதமான யோக்கியதையும் ஸாதுக்களுடைய பார்வையாலேயே கிடைக்கின்றன. ப்ராஹ்மணன் ஜன்மத்தாலேயே ஸகலப் பிராணிகளில் சிறந்தவன்; அதிலும் தபஸ்வியாக இருப்பவன் சிறந்தவன். அதிலும் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷிப்பவன் மிக்க சிறந்தவன். அதிலும் என்னை யுபாஸிப்பவன் சிறந்தவனென்பதில் என்ன ஆட்சேபம்? நான் ஸகல வேத ஸ்வரூபியாக இருக்கிறேன்.

ப்ராஹ்மணன் ஸகல ஸ்வரூபியாயிருக்கிறான். ஆனதால் ப்ராஹ்மணனைக் காட்டிலும் நான்கு கைகளுள்ள இந்த ஸ்வரூபம் எனக்கு இஷ்டமானதல்ல. இதை அறியாத ஜனங்கள் ப்ரதிமையை தேவனென்று நினைத்து, ப்ராஹ்மண ஸ்வரூபியாக இருக்கும் என்னை அவமதிக்கிறார்கள். அசையும் பொருள், அசையாப் பொருள் இவைகளடங்கிய ஜகத்தும், அதற்குக் காரணமாகிய மஹத்தத்வம் முதலியவைகளும் பகவானுடைய ஸங்கல்பத்தால் உண்டானவை. ஆனதால் எல்லாம் பகவத் ஸ்வரூபம் என்று ப்ராஹ்மணன் தெரிந்துகொள்கிறான். ஆனதால் இந்த மஹர்ஷிகளைச் ச்ரத்தையுடன் எப்பொழுதும் நீர் பூஜிக்க வேண்டும். ப்ராஹ்மணர்களை பூஜித்தால் என்னை நேரில் பூஜித்ததாகும். ப்ராஹ்மணர்களை அவமானஞ் செய்து என்னைப் பலவகையான பூஜா

த்ரவ்யங்களால் பூஜித்தாலும் அது பயனைக் கொடுக்கிறதில்லை" என்று சொன்னார்.

59–60. ஸ்ரீகிருஷ்ணனால் ஆக்ஞாபிக்கப்பட்டுச்ருத தேவர் ஸ்ரீ கிருஷ்ணனையும் இந்த மகரிஷிகளையும் ஒன்றாக நினைத்துப் பூஜித்து உத்தம கதியை அடைந்தார். பஹுளாச்வரும் அப்படியே ப்ராஹ்மணர் களைப் பூஜித்து உயர்ந்த பதத்தை அடைந்தார். ஓ பரீக்ஷித்து மஹாராஜனே! பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் அவ்விடத்தில் சில காலம் வசித்து, ஸகல வேதங்களும் பரமாத் மாவையே நிரூபிக்கின்றன என்பதைச் ஸ்ருததேவருக்கும் பஹுளாச்வருக்கும் உபதேசித்து, துவாரகா நகரஞ் சென்றார்.





# அத்யாயம் –87

## ஸ்ருதி கீதை

பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி "ஓ ப்ராஹ்மண ஸகல வேதங்களும் குணமுள்ள வஸ்துவைச் சொல்லக்கூடியவைகள், ப்ரம்ஹமமோ இப்படிப்பட்டதென்று குறிப்பிடமுடியாதது; குணங் களற்றது; கார்யம்; காரணம் இவைகளைவிட மேலானது; ஒன்றிலும் ஸம்பந்தப்படாதது; அப்படிப்பட்ட ப்ரஹ்மத்தை வேதங்கள் எப்படி நேராக நிருபிக்கின்றன ?" என்று கேட்டார்.

### நோட்டு.

முன் அத்தியாயக் கடைசியில் எல்லா வேதங்களும் ப்ரஹ்மத்தையே நிரூபிக்கின்றனவென்று பகவான் பக்தர்களுக்கு உபதேசித்து த்வாரகைக்குச் சென்றார் என்று சொன்னதைக் கேட்டு அரசன் ஸந்தேஹித்து கேட்கிறார். வேதங்கள் பதக்கூட்டங்களடங்கியவை களல்லவா ? பதங்கள் நான்குவகையுள்ளன 1. ஜாதி சப்தங்கள். 2. குணசப்தங்கள். 3. கிரியாசப்தங்கள், 4. பெயர்சொற்கள். ப்ராஹ்மண என்ற சப்தமானது அந்த ஜாதியுள்ளவர்களை யெல்லாரையும் சொல்வ தால் அது போன்றவைகள் ஜாதிப்ரவர்த்தி நிமித்தங் களெனப்படுகின்றன. சுக்ல என்ற சப்தம் வெண்மை யென்ற குணமுள்ள வஸ்துக்கள் எல்லாவற்றையும் சொல்லுகிறது. அதனால் இதுபோன்றவை குணப்பிர விருத்தி நிமித்தங்களெனப்படுகின்றன. பாசக என்ற சப்தமானது சமைக்கும் தொழிலுள்ளவர்களைச்

சொல்வதால் இது போன்றவைகள் கிரியா ப்ரவிருத்தி நிமித்தங்களெனப்படுகின்றன. அர்த்தத்தைக்காண்பிப் பதற்கு சப்தத்தில் விருத்தியென்ற ஒரு வ்பாபாரமி ருக்கிறது அது முக்கியம், லக்ஷணா, கௌணமென்று முவ்வகையுள்ளது. அவைகளில் முக்கியவிருத்தியென்பது யோகம், ரூடம், யோகரூடமென்று முவ்வகையுள்ளது.

தாசரதியென்றால் தசரதருடைய குமாரனைக் காட்டுகிறது. இது காரணப்பெயராம். தேவதத்த னென்றால் ஒருவனுடைய பெயர். இதுரூடம் (இடுகுறி) பங்கஜம் என்றால் தாமரையை குறிக்கிறது ஆனால் அந்த சப்தத்திற்குசேற்றில் முளைத்தது என்ற அர்த்தமிருந்தாலும் சேற்றில் முளைக்கும் அல்லி முதலியவைகளை அது குறிக்கிறதில்லை ஆனதால் அது யோகரூடமெனப்படுகிறது (காரண இடுகுறி) லக்ஷணாயென்ற இரண்டாவது விருத்தி யானது முக்கிய விருத்தியால் ஏற்படும் அர்த்தம் அன்வயிக்காத விடத்தில் உபயோகப்படும்; கங்காயாம் கோஷ என்ற வாக்யத்திற்கு கங்கையில் இடைச்சேரியென்று முக்கிய விருத்தியால் அர்த்தம் ஏற்படுகிறது. ஆனால் கங்கையின் ஜலத்தில் இடைச்சேரி இருக்க முடியாதானதால் அந்த அர்த்தம் பொருந்தாததனால் இந்த இடத்தில் லக்ஷணாவிருத்தியையுபயோகித்து கங்கையின் கரை கங்காயாம் என்பதற்கு அர்த்த மென்று கொள்ளவேண்டும். இது லக்ஷணா விருத்தி யெனப்படுகிறது. அக்னிர்மாணவகயென்ற விடத்தில் ப்ரஹ்மசாரி அக்னியாக விருக்கிறார் என்று அர்த்த மேற்பட்டாலும் அந்த அர்த்தம் பொருந்தாதனதால் அக்னியின் குணமுள்ளவரென்று அர்த்தங் கொள்ள வேண்டும். இது கௌணவிருத்தியெனப்படுகிறது





இவைகளில் அவாந்திர பேதங்கள் அதிகமிருக்கின்றன. 'அப்படிப்பட்ட சப்தங்களின் கூட்டமாகிய வேதம் ப்ரஹ்மத்தை எப்படி நிரூபிக்கும். ப்ரஹ்மத்திற்கு ஜாதியில்லை. ஆனதால் இன்ன ஜாதியுள்ளதென்று குறிப்பிடமுடியாதே; குணமில்லாததால் குணசப்தங்க ளால் நிரூபிக்கமுடியாது. கிரியை இல்லாததால் கிரியா சப்தங்களாலும் காட்டமுடியாது. ஒருவகை யாலும் குறிப்பிடமுடியாத வஸ்துவை வேதங்களால் எப்படிக் காட்டமுடியும்? முக்கிய விருத்தியால் சப்தங்கள் ப்ரஹ்மத்தைக் காட்டமுடியாவிடினும் லக்ஷணா விருத்தியை யுபயோகிக்கலாமேயென்றால் அதுவும் பொருந்தாது. அந்த பரப்ரஹ்மம் கார்ய காரண ஸம்பந்தமில்லாததனால் முக்கிய விருத்தி யால் ஏற்படும் கார்ய காரணமாகிய அர்த்தத்தின் ஸம்பந்தமற்றதை லக்ஷணா விருத்தியால் எப்படிக் காட்டக்கூடும். குணஸம்பந்தமற்றதால் கௌணவிருத் தியுமுபயோகப்படாது. அப்படியிருக்க சப்தராசியான வேதம் எந்தவிருத்தியைக்கொண்டு ப்ரஹ்மமாகிய அர்த்தத்தைக்காட்டுகிறது என்று அரசனுடைய கேள்விக்குத் தாத்பர்யம்.

வீரராகவீயத்தில்—ப்ராஹ்மணன் ஸகல வேதஸ்வரூபி; நான் ஸகல தேவஸ்வரூபியென்று பகவான் 86—வது அத்யாயத்தில் சொல்லியிருப்பதால் வேதமாகிய ப்ரமாணத்தால் ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்று தெரியவருகிறது. 85—வது அத்யாயத்தில் பலிசக்கிர வர்த்தி பகவானை ஸ்தோத்திரஞ் செய்தவிடத்திலும் 84—வது அத்யாயத்தில் மஹர்ஷிகளுடைய வார்த்தை யாலும் மேற்காட்டிய விஷயம் நன்றாக காட்டப்பட்டிருக்கிறது. "எல்லா வேதங்களும் எந்த பதத்தைச் சொல்லுகின்றனவோ,

ஸகல தபங்களும் எதனைச் சொல்லுகின்றனவோ" என்ற ச்ருதியாலும் "ஸகல வேதங்களால் அறியக் கூடியவன் நானே" என்ற ஸ்மிருதியாலும், ப்ரம்ஹ்மம் சித்தைக்காட்டிலும், அசித்தைக் காட்டிலும் விலக்ஷண மென்று காட்டப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட ப்ரம்ஹ்மத்தை "ஸத்யம் ஜ்ஞான மனந்தம்" "எவன் எல்லாவற்றையுமறிந்தவனோ" என்ற ச்ருதிகள் நிருபித்தாலும் "இந்த ஆத்மா ப்ரஹ்மம்" "நீ அதாகிறாய்" "இதெல்லாம் ப்ரஹ்மம்" என்ற ச்ருதிகளிலுள்ள பதங்கள் சித்தையும் அசித்தையும் சொல்பவைகளானதால் அவைகள் விலக்ஷணமான ப்ரஹ்மத்தைச் சொல்லுகின்றனவென்பது எப்படி பொருந்துமென்று ஸந்தேஹித்து அரசன் சுகரை கேட்கலானார்.

வேதங்கள் ஜாதி, குணம், கிரியை இவைகளுக்குள் ஒன்றை நிமித்தமாக வைத்துக்கொண்டு அர்த்தத்தைக் காண்பிக்கும் ஸ்வபாவமுள்ளவைகளல்லவா? அப்படிப்பட்ட சப்தங்கள் அவைகளுள்ள சித் அசித் இவையாகிய அர்த்தங்களைச் சொல்லுமேயொழிய அவைகளுக்கு விலக்ஷணமான வஸ்துவை எப்படிச் சொல்லும்? பொருளை யுணர்த்துவதற்குக் காரணமான ஜாதி முதலியவைகள் ப்ரஹ்மத்திடமில்லையே. லக்ஷணா விருத்தியால் ப்ருஹ்மமாகிய பொருளை வேதங்கள் உணர்த்துகின்றன என்று சொல்வது ஸரியல்ல. மேற்காட்டிய சுருதிகளாலும் ஸ்மிருதிகளாலும் முக்கிய விருத்தியைக் கொண்டே வேதங்கள் பரமாத்மாவை உணர்த்துகின்றனவென்று தெரியவருகிறது. வேதவாக்கியங்களில் சில முக்கிய விருத்தியாலும் ப்ருஹ்மத்தை சொல்லுகின்றனவென்று சொல்வதும் பொருந்தாது.





சில வாக்யங்கள் லக்ஷணா விருத்தியாலும் எல்லா வேதங்களும் என்று சர்வபதமிருக்கிறது என்பதை மனத்தில் வைத்துக்கொண்டு வேதங்கள் முக்கிய விருத்தியால் பிரம்ஹத்தைச் சொல்லக்கூடுமென்று அரசர் கேட்டார். சேதனம் போன்றதென்றாவது அசேதனம் போன்றதென்றாவது பிருஹ்மம் குறிப்பிட முடியாதது. ஏனென்றால் சேதனம் அசேதனம் இவைகளைவிட அது விலக்ஷணமானது. (வேறு).

விஜயத்வஜீயத்தில்:— அளவற்ற வேதங்களால் வர்ணிக்கப்படும் குணங்களுள்ளது எந்தப் ப்ருஹ்மமோ அதுவே ஸ்ரீ கிருஷ்ணனென்ற திவ்ய நாமத்துடன் அவதரித்திருக்கிறது. அதனால் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் எல்லா ஜனங்களும் பக்தி செய்ய வேண்டும். மற்ற விஷயங்களில் வைராக்கியத்தை அடையவேண்டும் என்ற விஷயத்தை இந்த அத்தியாயத்தில் நாரதருக்கும் நாராயண மஹர்ஷிக்கும் நேர்ந்த ஸம்வாதமாகிய இதிஹாஸத்தால் காட்டுவதாகப் பரீக்ஷித்து சுகரைக் கேட்டார். "ஸகல வேதங்களும் எந்த பதத்தைச் சொல்லுகின்றனவோ" என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. வேதங்கள் ப்ரம்ஹத்தை முக்கிய விருத்தியால் (நேராக) சொல்லுகின்றனவா? அல்லது லக்ஷணவிருத்தியால் சொல்லுகின்றனவா? எப்படி சொல்லுகின்றன? ஏனென்றால் பிருஹ்மம் குறிப்பிடக்கூடியதல்லவே. (முக்கிய விருத்தியால் காட்ட முடியாதென்று தாத்பர்யம்) அதனால் எனக்கு உண்டாயிருக்கும் ஸம்சயத்தை நிவர்த்திக்க வேண்டுமென்று அரசன் கேட்கலானார்.

2. அதனைக்கேட்ட சுகர் அரசனை நோக்கி

ஜீவர்கள், விஷயங்களை அனுபவிப்பதற்காகவும் கர்மங்களை அனுஷ்டிப்பதற்காகவும் லோகாந்திரத்தில் அந்தந்த போகத்தை அனுபவிப்பதற்காகவும் மோக்ஷத்தை அடைவதற்காகவும், ஈசுவரன் புத்தி, இந்திரியங்கள், மனம், ப்ராணன் ஆகிய இவைகளைச் ஸிருஷ்டித்தார்.

நோட்டு

மூலத்தில் ப்ரபுவென்ற பதத்தால் உபாதிகளுக்கு வசப்படாதவர் என்று அர்த்தம் ஏற்படுவதால் நித்ய முக்தனென்று தெரியவருகிறது. ஜீவர்களுக்காக ஈசுவரன் ஜகத்தைச் ஸிருஷ்டிக்கிறாரே யொழிய வேறில்லை. ஆனாலும் பகவானுடைய ஸ்வரூபத்தை வேதங்கள் நிரூபிக்கவில்லை என்று சொல்ல முடியாது. ஆனதால் ஏதாவது ஒருவிருத்தியால் வேதங்கள் ப்ரும்ஹத்தை சொல்லுகின்றனவென்பது நிச்சயம். அந்தவிருத்தி இன்னதென்று விசாரிக்க வேண்டும். "எவன் ஸர்வஜ்ஞனோ" எவன் எல்லாவற்றிற்கும் அதிபதியோ, "அது பார்த்தது" "அது தேஜஸைச் ஸிருஷ்டித்தது" என்ற அனேக ச்ருதிகள் எல்லாவற்றையும் அறிந்தவரென்றும் எல்லாவற்றிற்கும் அதிபதியென்றும் எல்லாவற்றிற்கும் நியந்தாவென்றும், எல்லாராலும் உபாஸிக்கக் கூடியவர் என்றும் எல்லா கர்மங்களுக்கும் பலத்தைக் கொடுக்கக்கூடியவர் என்றும் ஸமஸ்த குணங்களுக்கும் இருப்பிடரென்றும் ஸச்சிதாநந்த ஸ்வரூபியென்றும் பரமாத்மாவைச் சொல்லுகின்றன. மேலும் "நீ அதாகிறாய்" என்ற மஹாவாக்யம், ஜீவனே அப்படிப்பட்ட பரப்ரஹ்மமென்றும் ஐக்யத்தைச் சொல்லுகிறது. அந்த வாக்கியங்களில் "நீ அது" என்பதைச் சொல்லும் பதங்கள் இரண்டும் ஒரே





அர்த்தத்தை உணர்த்துகின்றன என்று தோற்றுகிறது. அவ்விரண்டு பதங்களுக்கும் ப்ரும்ஹம் அர்த்தம் என்று சொன்னால் தான் பொருந்தும். ஜீவனோ சிலவற்றை அறிந்தவன். ப்ருஹ்மமே எல்லாவற்றையும் அறிந்தது. இருவர்களிடத்திலுள்ள விருத்தமான "சில எல்லாம்" என்பதைத் தள்ளி விட்டால் இருவர்களிடத்திலும் ஞானம் என்பது தொடர்ந்திருக்கிறது. அப்பொழுது இரண்டு பதமும் ஒரே அர்த்தத்தை உணர்த்துகிறதென்று சொல்லக்கூடும். இதுவே ஜஹத்ஜஹல்லக்ஷணா எனப்படுகிறது.

இப்படிச் சொல்வதால் மேற்காட்டிய சுருதிகள் நிர்க்குணமான பிரம்ஹத்தையே சொல்வதாயிற்று. "ஸ்தூலமல்ல, அணுவல்ல" என்றது முதலிய ச்ருதிகள் உபாதிகளில்லை என்று சொல்வதால், நிற்குண ப்ரம்ஹமத்தையே சொல்லுகின்றன. இந்த ச்ருதி கீதையின் ஆரம்பத்திலும், முடிவிலும் சொல்லியிருப்பதைப் பார்த்தால் உபாதிகளைத் தடுத்து (நிஷேத முகமாக) வேதங்கள் ப்ரம்ஹத்தைச் சொல்லுகின்றன என்று ஏற்படுகிறது. உபாஸனையைச் சொல்லும் ச்ருதி வாக்கியங்கள் ப்ரம்ஹ ஞானத்திற்கு ஸாதனங்களாக இருப்பதால் ப்ரம்ஹத்தைப் பரம்பரையாகச் சொல்லுகின்றன.

வீரராகவீயத்தில்:— "ஜகத்தைச் ஸிருஷ்டித்து அதில் பிரவேசித்தார். அதில் ப்ரவேசித்து ஸத்தாகவும், த்யத்தாகவும் (பஞ்சபூதங்கள்) ஆனார்." இது முதலிய ச்ருதிகளால் ப்ரம்ஹமமே சேதன சரீரமாகவும், அசேதன சரீரமாகவும் இருப்பதால் அந்த சப்தங்கள் சேதனங்களையும், அசேதனங்களையும் சொன்னாலும்

ப்ரம்ஹமத்தையே நிருபித்ததாக ஆகிறது என்ற பதிலை மனத்தில் வைத்துக்கொண்டு, முதலில் ஸிருஷ்டியை மாத்திரம் சொல்லுகிறார். ஈச்வரன் புத்தி முதலியவைகளைச் ஸிருஷ்டித்தார் என்பதால், தாம் அந்தராத்மாவாகையால் புத்தி முதலிய சப்தங்களுக்கு அர்த்தமாகிய மஹாபூதம் வரையிலுள்ள வஸ்துக்களாகத் தம்முடைய ஆத்மாவை மாற்றிக் கொண்டு சேதனம், அசேதனம் இவைகளடங்கிய ஜகத் ஸ்வரூபியாகி, அந்தச் சப்தத்திற்கு அர்த்தமாக ஆனார் என்று தாத்பரியம்.

லோகத்திலுள்ள சேதனம், அசேதனம் ஆகிய பதார்த்தங்கள் எல்லாம் பரமாத்மாவை விட்டு வேறாக இல்லாததால் விசேஷணங்களாகிய அந்தந்தப் பதார்த்தங்களை அந்தந்தச் சப்தங்கள் சொல்வதானாலும், விசேஷ்யமாகிய பரமாத்மாவையும் முக்கிய விருத்தியாலேயே சொல்லுகின்றன. பரமாத்மா மிக்க கருணையுள்ளவரும், ஸமஸ்த காமங்களை அடைந்தவனும், ப்ரயோஜனத்தை அபேக்ஷிக்காதவனுமானதால் ஜகத்தை எதற்காகப் படைத்தார் என்றால், ஜீவர்களுக்கு இந்திரியங்களடங்கிய சரீரத்தைக் கொடுத்து, அதனால் தம்மை உபாஸிக்கும்படி செய்து, அவர்களை அனுக்கிரஹிக்க வேண்டுமென்ற விருப்பத்தாலேயே ஜகத்தைச் ஸிருஷ்டித்தாரென்பது, மூலத்திலுள்ள மூன்று பதங்களால் தெரிகிறது. இவை எல்லாவற்றையும் அந்தப் பரமாத்மா தம்முடைய ஸங்கல்பத்தாலேயே ஏன் செய்யக்கூடாது? இதற்காக ஜகத்தைச் ஸிருஷ்டிக்க வேண்டுமா என்றால், பரமாத்மா ஜகத்தைச் சிருஷ்டித்தது விளையாட்டேயொழிய வேறில்லை. இது 'கல்பனாய' என்ற பதத்தால் காட்டப்படுகிறது.





விஜயத்வஜீயத்தில்:— ஸத்வம் முதலிய குணங்கள் இல்லாததால் நிர்க்குணமும், ஞானம், ஆனந்தம் முதலிய குணங்களுள்ளதுமான பரப்பிரம்ஹத்தை வேதங்கள் முக்கிய விருத்தியால் நிரூபிக்கின்றன என்று பதில் சொல்வதற்காக இந்த ச்லோகம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. புத்தி முதலியவைகளை ஈச்வரன் சப்த பிரவர்த்திக்காகவும், புண்ணியத்திற்காகவும், (அத்தியயன ப்ரவசனத்தால்) ஆத்மஸ்வருப ஞானத்திற்காகவும், மோக்ஷத்திற்காகவும் ஸிருஷ்டித்தார். "முதலில் மனத்தால் நினைக்கிறான் பின்பு வாக்கினால் வ்யவஹரிக்கிறான்" என்ற ச்ருதியின்படி சப்த ப்ரவிர்த்திக்கு புத்தி முதலியவைகள் ஸாதனங்களாக இருக்கின்றன. "இந்த ஆத்மா ஸத்தியத்தாலும், தபஸ்ஸாலும், நல்ல ஞானத்தாலும், ப்ரஹ்மசர்யத்தாலும் அடையக் கூடியவர்" என்ற ச்ருதியின்படி ஞானம் ப்ரஹ்மத்தை அடைவதற்குச் ஸாதனமென்று ஏற்படுகிறது. "அந்தப் பரமாத்மாவை இம்மாதிரியாகத் தெரிந்து கொண்டவன் மரண தர்மமற்றவனாக ஆகிறான். ஞானத்தால் மோக்ஷத்தை அடைகிறான்" என்ற சுருதியின்படி மோக்ஷத்திற்கு ஞானம் ஸாதனமென்று ஏற்படுகிறது. ஆனதால் புத்தி முதலியவைகள் இருந்தால் தான் மனத்தால் ஸங்கல்பித்து, வாக்கினால் சப்தங்களை உச்சரிக்க முடியும். அப்படி வைதீக சப்தங்களை உச்சரிப்பதால் புண்ணியம் உண்டாகிறது. அதனால் பகவத் ப்ரஸாதமும், அதனால் ஸாரூப்பியம் முதலிய மோக்ஷமும் கிடைக்கிறது. ஆதலால் சப்தங்கள் பிரம்ஹத்தை நேரில் சொல்லுகின்றன என்று ஏற்படுகிறது.

3. மேற்காட்டியபடி வேதங்கள் ப்ரம்ஹத்தை நிருபிக்கும் வகையானது மிக்க பெரியோர்களால் ஒப்புக்

கொள்ளப்பட்டது. அதனை எவன் சிரத்தையுடன் தெரிந்து கொள்ளுகிறானோ, அவன் தேஹம் முதலி யவைகளின் அபிமானத்தை ஒழித்து மோக்ஷத்தை அடைவான்.

நோட்டு

*வீரராகவீயத்தில்:—* மேற்காட்டியபடி வேதங்கள் பரமாத்மாவைச் சொல்லுகின்றன என்பது ஸாமான்னிய ஜனங்களுக்குத் தெரியாது. ஸாமான்னிய ஜனங்கள் அந்தந்த சப்தம் அந்தந்த அர்த்தத்தைத் தான் சொல்லுகிறதென்று தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க, ஸகல ஜனங்களாலும் ஒப்புக்கொள்ளப் பட்ட அர்த்தத்தை விட்டு, எல்லா வேதங்களும் ப்ரம்ஹத்தையே முக்கியமாகச் சொல்லுகின்றன என்று பொருந்துமாவென்றால், மேற்காட்டியபடி ஸகல வேதங்களுக்கும் ப்ரஹ்மமே முக்கியப் பொருளாகிறது என்ற விஷயமானது உபநிஷத்தின் அர்த்தத்தை விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டியதாக இருக்கிறது. வேதாந்த சாஸ்திரத்தைப் படிக்காதவர்கள் வேதத்திலுள்ள சப்தங்களுக்கு இயற்கையான அர்த்தத் தையே பொருளென்று நினைப்பார்கள். வேதாந்தத்தின் அர்த்தத்தை யுணர்ந்தவர்கள் ப்ரம்ஹமமே அந்தச் சப்தங்களுக்குப் பொருளென்று அறிவார்கள். அதனால் அதற்கு என்ன கெடுதி? கடம் என்ற சப்தத்திற்கு இன்னது அர்த்தமென்று ஒருவன் அறியாவிடில், அதனால் அந்தச் சப்தத்திலுள்ள பொருளை உணர்த்தும் வியாபாரம் கெடுக்கப்படுமா? இம்மாதிரி ப்ரம்ஹமமே வேதத்தின் அர்த்தமென்பது வாமதேவர் முதலிய பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.





இதனைச் சிரத்தையுடன் எவன் தெரிந்துக் கொள்கிறானோ, அவன் மோக்ஷத்தை அடைவான். அவன் வேறொன்றையும் விரும்பமாட்டான், வாம தேவர், ப்ரஹ்லாதர் முதலியவர்கள் பரப்ரம்ஹமம் எல்லாவற்றிற்கும் அந்தராத்மாவாக இருப்பதையும் எல்லாம் பரமாத்மாவின் சரீரமாக இருப்பதையும் தெரிந்து கொண்டு, "நான் மனுவாக ஆனேன்; நான் ஸூர்யனானேன்" என்ற வாக்கியத்திலுள்ள "நான் என்ற பதத்திற்குத் தன்னைச் சரீரமாயுடைய பரமாத்மா பொருளென்றும், சூரியன் மனு என்ற பதத்திற்கு அவர்களை சரீரமாயுடைய பரமாத்மா பொருளென்றும் தெரிந்துகொண்டு, எல்லாச் சப்தங்களும் பரமாத்மாவையே நிருபிக்கின்றன என்று நிச்சயித்திருக்கிறார்கள் என்று தாத்பரியம்.

*விஜயத்வஜீயத்தில்:—* ஈச்வரனுடைய புத்தியில் இருந்துதான் இந்த உபநிஷத்தானது பெரியோர் களுக்கும், பெரியோர்களான ப்ரம்ஹதேவர் முதலிய வர்களால் அத்தியயனம் செய்யப்பட்டது. ஆனதால் ப்ரம்ஹத்தின் குணத்தை நிருபிக்கின்ற இந்த வேதத்தை எவன் அத்தியயனம் செய்கிறானோ, அவன் வைராக் கியத்தை அடைந்து மோக்ஷத்தை அடைவான்.

4–12. இந்த விஷயத்தில் நாராயண மஹர்ஷியால் நாரதருக்கு உபதேசிக்கப்பட்ட ஒரு இதிஹாஸத்தை உமக்குச் சொல்லுகிறேன். ஒருகால் பகவத் பக்தரான நாரதர் லோகங்களில் ஸஞ்சரித்து நாராயண மஹர்ஷியைத் தர்சிப்பதற்காகப் பதரிகாச்ரமஞ் சென்றார். அவ்விடத்தில் அந்த நாராயண மஹர்ஷி இந்த பாரத வர்ஷத்தில் ஜனங்களுக்கு ஸம்சாரத்தை நிவர்த்தித்து

மோக்ஷத்தைக் கொடுப்பதற்காகத் தர்மம், ஜ்ஞானம், சாந்தி இவைகளுடன் வெகுகாலமாகத் தபஸ் பண்ணிக் கொண்டிருந்தார். ஸ்வாப க்ராமவாஸிகளான மஹர்ஷிகளும் அவரைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அந்த ஸமயத்தில் நாரதர் அந்த மஹர்ஷியைக் நமஸ்கரித்து இப்பொழுது நீர் எதைக் கேட்டீரோ, அந்த விஷயத்தைப்பற்றியே அந்த மஹர்ஷியைக் கேட்டார். அதனைக்கேட்ட அந்த மஹர்ஷியை மற்ற மஹர்ஷிகள் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுது நாரதரை நோக்கி, 'ஓ நாரத! நீர் பகவானைத் தர்சிப்பதற்காக ச்வேதத்வீபஞ் சென்றபொழுது ஜன லோகத்திலுள்ள ப்ரம்ஹாவின் மானஸ புத்திரர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களுமான ஸனகர் முதலிய மஹர்ஷிகள் ப்ரம்ஹ விசாரஞ் செய்தார்கள். அந்த ப்ரம்ஹ விசாரத்தால் எல்லாவேதங்களும் ஒரே வஸ்துவைச் சொல்லுகின்றன என்று ஏற்படுகிறது. நீர் இப்பொழுது என்னைப்பார்த்து எதனைக் கேட்டீரோ, அதே கேள்வி அப்பொழுது ஏற்பட்டது. அந்தக் கேள்விக்கு என்ன பதில் ஏற்பட்டதோ அதனைச் சொல்லுகிறேன் கேளும்; அந்த மஹர்ஷிகள் எல்லோரும் படிப்பிலும் தபஸ்ஸிலும் ஸ்வபாவத்திலும் ஸமமானவர்கள். அவர்களுக்குத் தம்மைச்சார்ந்தவன், சத்ரு, உதாஸீனன் என்ற பேதபுத்தி இல்லை. அப்படிப் பட்ட மஹர்ஷிகள் ஸநந்தனர் என்பவரைச் சொல்லும் படி ஏற்படுத்தி மற்றவர்கள் அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

13–14. அப்பொழுது ஸநந்தனர் சொல்லுகிறார்: எப்படியென்றால் வந்திகள் விடியற்காலத்தில் படுத்திருக்கும் சக்கரவர்த்தியை அவனுடைய பராக்கிர மத்தைக் காட்டும் ச்லோகங்களைச் சொல்லி எப்படி





எழுப்புவார்களோ, அதுபோலப் ப்ரளய காலத்தில் இந்த ஜகத் முழுவதையும் சக்திகளுடன் உபஸம்ஹாரம் செய்துகொண்டு யோகநித்திரை செய்யும் பரமாத்மா வைச் ஸிருஷ்டிக்கவேண்டிய ஸமயத்தில் பரப்ப்ரம்ஹத் தின் அடையாளமுள்ள வாக்கியங்களைக் கொண்டு வேதங்கள் ஸ்தோத்திரஞ் செய்து எழுப்பின. எப்படியெனில்:—

## ச்ருதிகீதை.

சுருதிகள் சொல்லுகின்றன. ஒருவராலும் ஜயிக்கப் படாதவரே! ஜய ஜய! அசையும்பொருள் அசையாப் பொருள் இவைகளடங்கிய ஜகத்திற்குக் கெடுதியைச் செய்வதற்காகக் குணங்களைப் பிரகாசப்படுத்தி கொண்டிருக்கும் இந்த மாயையை நாசஞ்செய்யும். (வ்யபிசாரியானவள் பிறரை வஞ்சிப்பதற்காக நற் குணங்களுள்ளவள் போல் எப்படி அபிநயஞ் செய்கி றாளோ, அப்படி இந்த மாயையானது உண்டு பண்ணுகிறதென்று தாத்பரியம்) நீர் ஸகல ஐச்வரியங் களையும் அடைந்தவரானதால் மாயையைச் சுவாதீன படுத்திக்கொண்டவர். மேலும், நீர் எல்லா ஜீவர் களுக்கும் அந்தர்யாமியாக இருந்து ஸகல சக்திகளையும் பிரகாசிக்கச் செய்கிறீர். (ஆனதால் ஜீவர்களுக்கு ஸ்வாதந்திரியம் இல்லாததால் ஞானம் முதலியவை களைக் கொண்டு மாயையை நிவர்த்தித்துக்கொள்ள அவர்களால் முடியாதென்று தாத்பர்யம்) தடையற்ற ஞானம் ஐச்வர்யம் இவைகளுள்ள நீர் ஜீவர்களுக்கு அவித்தையை நிவர்த்திக்கிறீர் என்ற விஷயத்தில் வேதங்களாகிய நாங்களே ப்ராமணங்களாக இருக்கிறோம். சில காலம் (ஸிருஷ்டி முதலிய சமயம்) மாயையுடன்

க்ரீடிப்பவராகவும் சில ஸமயம் ஸத்திய ஞானானந்த ஸ்வரூபத்துடன் இருப்பவருமாக உம்மை வேதங்கள் சொல்லுகின்றன.

நோட்டு

வேதங்கள்:— "எதனிடமிருந்து இந்தப் பிராணிகள் உண்டாகின்றனவோ, உண்டான பிராணிகள் எதனால் ஜீவிக்கின்றனவோ, எதனிடத்தில் லயிக்கின்றனவோ" "எவர் முதலில் ப்ரம்ஹதேவரைப் படைத்திறாரோ, வேதங்களை அவருக்கு உபதேசிக்கிறாரோ." "ஆத்மா, புத்தி இவைகளைப் பிரகாசிக்கச் செய்பவரான அந்தத் தேவனை, மோக்ஷத்தை அடைய வேண்டுமென்ற விருப்பத்தையுடைய நான் சரணம் அடைகிறேன்." "எவர், ஆத்மாவில் இருக்கிறாரோ" இது முதலிய ச்ருதி வாக்கியங்கள்.

வீரராகவீயத்தில்:—"எல்லோரையும் ஜயித்ததான ப்ரகிருதியையும் ஜயித்தவரே, மேன்மையை அடையும், மேன்மையையடையும்." நீர் இயற்கையில் ஞானம், வைராக்கியம், பூர்ணமான ஐச்வரியம், வீர்யம், கீர்த்தி, காந்தி இவைகளால் நிறைந்தவராகை யால் ஜீவர்களுக்கும் ஸம்ஸாரத்தை உண்டு பண்ணு கின்ற ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களுள்ள ப்ரகிருதியை நாசஞ்செய்து (இயற்கையில் நீர் ஒப்புயர் இல்லாதவரானாலும், ப்ரகிருதியை நாசஞ்செய்து) ஜீவர்களுக்கு உபகரித்ததால் அதிக மேன்மையுண்டாகும் என்று தாத்பரியம். 'தோஷ கிருபீதகுணம் என்ற பாடத்தில், தோஷங்கள் அநேகம் இருந்தாலும் அவைகளைத் தள்ளி குணம் ஸ்வல்பமாக இருந்தாலும்





அதனை எடுத்துக்கொள்ளும் ஸ்வபாவமுள்ள நீர் அபராதிகளான ஜீவர்களிடத்தில் உள்ள அபராதத்தை மனத்தில் வைத்துக் கொள்ளாமல் குணத்தைக் க்ரஹித்து மாயையை நாசஞ்செய்து அவர்களை அனுக்கிரஹிக்க வேண்டுமென்று அர்த்தம் கொள்ள வேண்டும். அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் இவைகளாகச் செய்யப்படப்போகிற ப்ரகிருதி குணங்களுக்கும், அதனை ஆசிரயிக்கப் போகிற ஜீவர்களுக்கும் தங்கள் தங்கள் கார்யத்தைச் செய்யும்படியான ஸாமர்த்தியத்தை நீரே கொடுக்கிறீர். (உம்முடைய அனுக்கிரகமில்லாவிடில் ப்ரகிருதி முதலியவைகள் தங்கள் தங்கள் வேலையைச் செய்யச் சக்தி அற்றவைகளாக இருக்கின்றன. அவைகளுக்கு அப்படிப்பட்ட சக்தியை நீர் கொடுப்பதால் ஜீவர்களுக்கு ஸம்ஸார ஸம்பந்தத்தை உண்டு பண்ணுகிறவரும் நீரே என்று ஏற்படுகிறது. ஆனதால் அந்த மாயையை நாசஞ் செய்யுமென்று கருத்து.) நீர் ப்ரகிருதி, புருஷன் இவர்களுடன் ஜகத் ஸ்வரூபமாக இருப்பதால் உம்மையே வேதஞ் சொல்லுகிறது. (எல்லாவற்றிற்கும் காரணமாகவும், காரிய ஸ்வரூபியாகவும் பரமாத்மா இருப்பதால் சேதனம், அசேதனம் இவைகளைச் சொல்லும் சப்தங்கள் யாவும் பரப்பிரம்மத்தையே சொல்லுகின்றன என்று ஸமாதானம் சொல்லப்பட்டது என்று கருத்து.)

விஜயத்வஜீயத்தில்:— "பிரகிருதியான ஸ்ரீ தேவி, பூதேவி என்ற ஸ்வரூபங்களுடன் ஸ்ரீ மகாவிஷ்ணு வினிடம் தாங்குகிறது. வேதமானது ப்ரளயத்தில் ப்ரஹ்மத்தை ஸ்தோத்திரஞ் செய்கிறது." "ஆதியந்தம் இவைகளில்லாத ஸரஸ்வதியானது ஒன்றானாலும்,

வெவ்வேறு வாக்கியங்களால் ப்ரபுவாகிய நாராயணனை ஸ்தோத்திரஞ் செய்கிறது" என்றபடி ச்ருதிகள் நாராயணனை ஸ்தோத்திரஞ் செய்கின்றன. வேதங்கள் அநேகமானாலும், பகவானுடைய ஆக்ஞையால் துர்க்கையின் ஸ்வரூபத்தை எடுத்துக்கொண்டு ஸ்தோத்திரஞ் செய்கிறது. எப்பொழுதும் விழித்துக் கொண்டிருக்கும் பகவானை வேதங்கள் எழுப்புகின்றன என்பது பொருந்துமா என்றால், எழுப்புவது போல என்று அர்த்தங் கொள்ளவேண்டும். வேதங்கள் சொல்லுகின்றன என்பதால் ஸ்திரீ, சூத்திரன் இவர்கள் வேதத்தை அத்தியயனம் பண்ணக்கூடாதாகையால் அதன் அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளட்டும் என்ற அபிப்பிராயத்தால் வேதம் தன் பொருளை வெளியிட்டது என்று தாத்பரியம். ஒருவராலும் ஜயிக்கப்படாத ஸ்ரீமந் நாராயண! துக்கம், அஞானம் முதலிய துர்க்குணங்களால் ஆனந்தம் ஞானம் முதலிய ஜீவகுணங்களை மறைக்கும் மாயையை நிவர்த்தியும். அப்படிச்செய்வதால் பக்தர்களிடத்தில் உமக்கு இருக்கும் வாத்ஸல்யமானது வெளிப்படும். (லோகத்திலுள்ள அரசர்கள் சத்துருக்களை ஜயிப்பது போல ஸ்ரீமந் நாராயணனைப் பார்த்துப் பிறரை ஜயித்து விடுமென்று சொல்வது பொருந்தாது. ஏனென்றால் அவர் எப்பொழுதும் ஜயமுள்ளவர் எல்லாரையும் ஜயிக்கும் ப்ரகிருதியையும் ஜயித்தவர் ஆனதால் அவரைப் பார்த்துச்சொல்லும் ஜய என்ற சப்தத்திற்கு மாயையை விலக்கி பக்தர்களை அனுக்கிரஹிக்க வேண்டுமென்று அர்த்தங்கொள்ள வேண்டும். நீர் இயற்கையில் பூர்ணமான ஐசுவரியம் முதலிய குணங்களுள்ளவர். (உம்முடைய ப்ரதிபிம்பமான ஜீவன் ப்ரகிருதியால் மறைக்கப்பட்டுத் தன்னுடைய குணத்தை அறியாதவனாக இருக்கிறான்).





ஓ மகாவிஷ்ணுவே! ஜகத்திற்கு ஆஸ்ரயமான ப்ரம்ஹா முதலியவர்களுடைய சகல சக்திகளும் உம்மிடமாகவே பிரகாசிக்கின்றன. வேதமானது ஸிருஷ்டி காலத்தில் ஜீவனுடனும் ப்ரகிருதியுடனும் ஸஞ்சரிக்கும் உம்முடைய மனத்தை அனுசரிக்கிறது. ப்ரளய காலத்தில் ஜீவர்களுக்குச் சரீரமில்லாததால் அவர்கள் விஷயத்தில் வேதம் உபயோகப்படுகிறதில்லை. அப்பொழுது நாராயணனுடைய ஸ்தோத்திரத்தில் உபயோகப்படுகிறது. ப்ரளயத்தின் 8—வது பாகமாகிய ஸிருஷ்டி காலத்தில் வேதமானது ஜீவர்களுக்கும் உபயோகப்படுகிறது. ஆனதால் அப்பொழுது பரமாத்மாவையே வேதம் சொல்லுகிறது என்று தாத்பரியம்.

16. "ஸ்தாவரங்களுக்கும் ஜங்கமங்களுக்கும் இந்திரன் அரசனாக இருக்கிறான்" "அக்னியானவர் த்யுலோகத்திற்குட் சிறந்தவர்." என்ற சுருதிகளின்படி இந்திரன் அக்னி முதலியவர்களை வேதம் சொல்லுகிறது. அப்படியிருக்க பரமாத்மாவைச் சொல்லுகிறதென்று எப்படிச் சொல்லக்கூடும் என்றால் சமாதானம் சொல்லப்படுகிறது. இந்திரன் முதலிய எல்லா பதார்த்தங்களும் ப்ரம்ஹமமென்று பெரியோர்கள் தெரிந்து கொள்ளுகிறார்கள். எல்லா பதார்த்தங்களும் ப்ரம்ஹத்தினிடமிருந்து உண்டாகின்றன. ப்ரம்ஹத்தினிடமே லயிக்கின்றன. பிரளய காலத்தில் பாக்கியாயிருக்கும் வஸ்து பிரம்ஹம் ஒன்றே. மண்ணினால் செய்யப்பட்ட குடம் மடக்கு முதலியவைகள் மண்ணிலிருந்து உண்டாகியும் கடைசியில் மண்ணிலேயே எப்படி லயிக்கின்றனவோ, அப்பொழுது குடம், மடக்கு என்ற பெயரும் உருவங்களும் நாசமடைந்து மண் என்ற காரணம் மாத்திரம் எப்படி பாக்கியிருக்கிறதோ,

அப்படியே இந்திரன், சந்திரன் அக்னி முதலியவர்கள் விகாரமில்லாததான ப்ரம்ஹத்தினிடமிருந்து உண்டாகி கடைசியில் அதனிடத்திலேயே லயிக்கிறார்கள். அப்பொழுது இந்திரன், சந்திரன், அக்னியென்ற பெயர்களும் உருவங்களும் நசிக்கின்றன காரணமாகிய ப்ரம்ஹம் மாத்திரம் பாக்கியாக இருக்கிறது. ஆனதால் எதை மனத்தால் நினைத்தாலும் எதை வாக்கினால் உச்சரித்தாலும் பரமாத்மாவாகிய உம்மையே நினைத்த தாகவும் உச்சரித்ததாகவும் மஹர்ஷிகள் நினைக்கிறார் கள். (ஆனதால் வேதங்கள் இந்திரன் அக்னி முதலிய எந்தப் பதார்த்தங்களைச் சொன்னாலும் பரமாத்மா வையே சொல்லுகின்றனவென்பது தாத்பர்யம்) பூமியில் ஸஞ்சரிக்கும் ஜனங்கள் எவ்விடத்தில் காலை வைத்தாலும் அவைகள் பூமியில் வைத்ததாக ஆகுமே யொழிய வேறில்லை.

வீரராகவீயத்தில்:—'இந்த ஸகல ப்ரஜைகளும் பரமாத்மாவிடத்திலிருந்து உண்டாகின்றன' என்றது முதலில் ச்ருதிகளில் சொல்லியபடி ஸிருஷ்டி காலத்தில் ப்ரகாசித்த ஜகத் முழுவதும் ப்ரம்ஹ மென்றே வேதங்கள் சொல்லுகின்றன. மண்ணுண் டையிலிருந்து உண்டான குடம் முதலியவைகள் அவைகளை விட எப்படி வேறாக ஆகிறதில்லையோ, அப்படி காரணரூபியான பரப்பிரம்ஹத்தினிடமிருந்து உண்டான ஸகல ஜகத்தும் பரப்ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறல்ல. ஆனதால் வேதங்கள் தாத் பர்யத்தாலும் முக்கிய விருத்தியாலும் பரமாத்மாவையே சொல்லுகின்றன. மாடி முதலிய ஸ்தலங்களில் ஜனங்கள் நடந்தால் அது பூமியில்நடந்ததாக ஆகிறதில்லையா ? அதுபோல இந்திரன், அக்னி முதலியவர்களைச் சொன்னால் அவர்களுக்கு ஆதாரமாகிய ப்ரம்ஹத்தையே நிருபித்ததாக ஆகிறது.

விஜயத்வஜீயத்தில்:—இந்த பதினாறாவது ச்லோ கம் விஜயத்வஜீய வ்யாக்யானமுள்ள புஸ்தகத்தில் பின்வருமாறு காணப்படுகிறது. 'விகாரமற்றவராகிய நீர் நித்ய தமஸ்ஸான காலத்தில் மேன்மையை அடைந்தீர். ஸிருஷ்டிக்குமுன் தமஸ்ஸால் மறைக்கப் பட்டிருந்தது. ச்ருதி,- மூலப்பிரகிருதியைவிட மேலான வர் என்று தாத்பர்யம்) மேலும் 'இதைவிட இது மேலானது; அதனைவிட இது மேலானது' என்று சொல்லினும் வேதத்தில் எல்லாவற்றிற்கும் மேலான தென்று உம்மைச் சொல்லியிருப்பதாலும் உம்மைவிட மேலானது இருப்பதாகச் சொல்லாததாலும் நீரே மேலானவரென்று தெரிந்துகொள்ளப்பட்டது. ஆனதால் ப்ரம்ஹதேவர் முதலிய தேவர்கள் மனத்தால் நினைக் கப்பட்டாலும் வாக்கினால் சொல்லப்பட்டாலும் உம்மை நினைத்ததாகவும் சொன்னதாகவும் ஏன் ஆகமாட்டாதென்று (பரமாத்மாவைச் சொன்ன தாகவே ஆகும்) என்று நினைக்கிறார்கள். பூமியில் காலை வைப்பதாக நினைத்து ஜனங்களால் வைக்கப்பட்ட காலடிகள் பூமியில் வைக்கப்படாமல் போகுமா ?

17. மாயைக்கு அதிபதியாகிய ஓ பரப்ரம்ஹமமே! உம்முடைய கீர்த்தியானது ஸகல ஜனங்களுடைய பாபங்களை நிவர்த்திக்கிறதானதால் பெரியோர்களான ஞானிகள் அதனை அடைந்து ஸகல துக்கங்களையும் பாபங்களையும் நிவர்த்தித்துக் கொள்ளுகிறார்கள். அப்படியிருக்க தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை அடைந்து அதனால் ஆசை த்வேஷம் முதலிய அந்தக்

கரண தர்மங்களையும், கிழத்தனம் மரணம் முதலிய காலத்தின் குணங்களையும் நிவர்த்தித்துக் கொண்டிருப்பவர்கள் அகண்டமான ஆனந்த ஸ்வரூபத்தை ஸேவிப்பவர்கள். என்பதில் என்ன சந்தேகம்? "தாமரையிலையில் ஜலம் எப்படி ஸம்பந்தப்படுகிறதில்லையோ அப்படி பாபமில்லா புருஷர்களிடத்தில் கர்மங்கள் ஸம்பந்திக்கிறதில்லை" 'புண்ணியம், பாபம் இரண்டையும் விடுகிறான்' ச்ருதிகள்.

*வீரராகவீயத்தில்:—* ஜகத்தைப் படைத்து அதனைக் காப்பாற்றி அதனை ஸம்ஹரிப்பவராகிய ஓ பகவன்! உம்முடைய கதையைச் சொல்லுகிறவர்களுக்கு ஸகல பாபங்களும் நிவர்த்தியாகின்றனவாகையால் விவேகிகள் அந்தக் கதையாகிய அமிருத ஸமுத்திரத்தில் மூழ்கி ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், ஆத்யாத்மிகம் என்ற தாபங்களை விட்டு விட்டார்கள் அப்படியிருக்க ஸ்வரூப ஞானத்தையடைந்து ஆசை, த்வேஷம், ஜரை, மரணம் ஆகிய இவைகளை நிவர்த்தித்துக் கொண்டு நித்திய மான ஞானம். ஆனந்தம் இவைகளில் ஸ்வரூபமான பதத்தை ஸேவிப்பவர்கள், ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களை அடைகிறதில்லையென்பதில் என்ன ஸந்தேஹம்?

18. மஹத்தத்வம் முதலியவைகள் பரமாத்மாவின் அனுக்கிரஹத்தால் சமஷ்டி, வியஷ்டி, ஸ்வரூபத்தைப் படைத்தன. மேலும், அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்ற ஐந்து கோசங்களில் பரமாத்மா அனுப்பிரவேசித்து அவைகளை சேஷ்டிக்கச் செய்கிறார். மேலுமவர் புருஷனுடைய வகைபோலொத்த வகையுள்ளவர்;





அன்னமயாதி கோசங்களுக்கு கடைசியில் எல்லாவற்றிற்கும் மேலானவராகச் சொல்லப்பட்டவர்; ஸ்தூலம், ஸூக்ஷ்மம் இவைகளுக்கு ஸாக்ஷியாக இருப்பவர்; காலத்தாலும், தேசத்தாலும் பாதிக்க முடியாத ஸத்தியஸ்வரூபி. அப்படிப்பட்ட பரமாத்மாவாகிய உம்மைச் ஸேவியாமலிருக்கும் மனிதர்களுடைய ஜீவனம் பிரயோஜனமற்றது. அவர்கள் துருத்திபோல் ஜீவிக்கிறார்கள் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

## நேராட்டு

"எவர் ஆத்மாவினுடைய உண்மையான ஸ்வரூபத்தையறியாமல் ஆத்மாவை கர்த்தாவென்று, ஸுக துக்க முள்ளவனென்றும் நினைத்து உண்மையான ஸ்வரூபத்தை மறைத்து விடுகிறார்களோ, அப்படிப்பட்ட சரீர அபிமானமுள்ளவர்கள் தேவ சரீரம், மனித சரீரம், பசு பக்ஷி சரீரம் முதலியவைகளை அவரவர்களுடைய கர்மத்திற்குத் தக்கபடி அடைந்து அக்ஞானமுள்ளவர்களாகி ஸம்ஸாரத்தை அடைகிறார்கள்" ச்ருதி. "இந்த மனுஷ்ய ஜன்மத்தில் மனிதன் ஆத்மாவின் உண்மையை அறியாவிட்டால் மிக்க கெடுதியை விளைவிக்கும் ஸம்ஸாரத்தை அடைகிறான்" —ச்ருதி. இவைகள் பகவத் பக்தி இல்லாதவனை நிந்திக்கின்றன.

*வீரராகவீயத்தில்:—* ஓ பரப்பிரம்மமே! எந்த ஜனங்கள் உம்மை ஸேவிக்கத் தகுதியான மனுஷ்ய ஜன்மத்தையடைந்தும், ப்ராணன், இந்திரியம் இவைகளைத் திருப்தி செய்து கொண்டும், உம்மைச் சேவியாமலிருக்கிறார்களோ, அவர்கள் துருத்திபோல மூச்சு விடுகிறவர்களேயாம். (அவர்களுடைய ஜீவனம்

ப்ரயோசனமற்றது என்று தாத்பர்யம்.) மஹத்தத்வம், அஹங்காரம் முதலியவைகள் உம்முடைய அனுக் கிரஹத்தால் ஜகத்தைப் படைத்தன. மஹத்தத்வம், ப்ரதானம் முதலியவைகள் ஜகத்திற்குக் காரணங்க ளானாலும், "அது அநேக வஸ்துக்களாக ஆவோம் என்று ஸங்கல்பித்தது" என்ற ச்ருதியின்படி அசேத னங்களாகிய ப்ரதானம் முதலியவைகளுக்கு மேற் சொல்லிய ஸங்கல்பம் பொருந்தாதாகையால் பரமாத் மாவே ஜகத்காரணம் என்று கொள்ள வேண்டும். அதனால் தான் பரமாத்மாவின் அனுக்கிரஹத்தால் மஹத்தத்வம் முதலியவைகள் ஜகத்தைப் படைத்தன வென்று சொல்லப்பட்டது. "சம்பாப் பயிர்கள் மழையை எதிர்பார்க்கின்றன" என்ற வாக்கியத்தில் மழை பயிர்களை அனுக்கிரஹித்ததென்றால், அவ்விடத்தில் அனுக்கிரஹம் என்ற சப்தத்திற்கு எப்படிக் கௌணமாக அர்த்தம் வைத்துக்கொள்ளுகிறோமோ, அப்படி இவ் விடத்திலும் கௌணமான அனுக்கிரஹமென்றே அர்த்தம் வைத்துக்கொண்டு ப்ரதானம் முதலியவைகளை ஜகத் காரணங்களென்று ஏன் சொல்லக்கூடாது என்று பூர்வபக்ஷம் ஏற்படலாம். ஆனாலும், "இது எல்லாம் அதுவே; அது ஸத்தியமானது; அதுவே ஆத்மா" என்ற சுருதியின்படி காரணமே ஆத்மா வென்று ஏற்படுவதால், மேற்சொல்லிய பூர்வபக்ஷம் பொருந்தாது.

அசேதனங்களாகிய ப்ரதானம் முதலியவைகள் காரணங்களென்று சொல்லாவிடினும், சேதனனாகிய ஜீவனே காரணனென்று சொல்லலாம் என்று பூர்வ பக்ஷம் ஏற்படலாம். ஆனாலும், அன்னமயம் முதலிய ஐந்து கோசங்களைச் சொல்லி கடைசியான ஆனந்த





மயனுக்குத் தலை முதலியவைகளையும் சொல்லியிருப் பதால் ஜீவனென்று சொல்வதும் பொருந்தாது. புருஷனைப் போலச் சுருதியில் சொல்லப்பட்டவர் பரமாத்மாவாகிய நீரே சேதனம், அசேதனம் இவை களைவிட நீர் வேறானவர், அன்னமயம் முதலிய நான்கு கோசங்கள் அழியும் பொழுது பாக்கியாகவும் ஸத்தியாகவும் இருப்பவர் ஒருவரே.

விஜயத்வஜீயத்தில்:— மஹத்தத்வம், அஹங்காரம் முதலியவைகள் உம்முடைய அனுப்பிரவேசமாகிய அனுக்கிரஹத்தால் ப்ரஹ்மாண்டத்தைப் படைத்தன. அப்படிப்பட்ட மிக்க உபகாரியான உம்மிடத்தில் ப்ரீதியில்லாமல் எல்லாவற்றையும் பொய்யென்று எவர்கள் சொல்லுகிறார்களோ, அவர்கள் துருத்தி போல் மூச்சு விடுகின்றவர்களேயாம். மேலும் மனிதர் களில் சிறந்தவர்கள், இந்திரன் முதலிய தேவர்கள், மஹரிஷிகள், கந்தர்வர்கள், ப்ரம்ஹதேவர் ஆகிய இவர்களுக்குள் எவர்கள் நித்தியமும் அளவற்ற ஆனந்தமுள்ளதும், காரிய காரணங்களை விட மேலா னதுமான உம்முடைய ஸ்வரூபத்தையறிந்து சிஷ்யர் களுக்கு அம்மாதிரி உபதேசித்து, ஜகத்தில் உம்முடைய ஸ்வரூபத்தைப் பரவச் செய்கிறார்களோ, அவர்கள் புருஷோத்தமராகிய உம்மை அடைகிறார்கள்.

19. முன் ச்லோகங்களில் ஸகல ச்ருதிகளும் ஸகல ஜகத் ஸ்வரூபியான பரமாத்மாவைச் சொல்லுகின்றன ஆனதாலும், அவரிடம் பக்தி செய்யாதவர்களுக்குக் கெடுதியுண்டாவதாலும் ஈச்வரனை உபாசிக்கவேண்டு மென்று சொல்லப்பட்டது. இந்த ச்லோகத்தில் பகவா னுடைய உபாஸனையைப் பற்றிச் சொல்லப்படுகிறது.

மஹர்ஷிகளுடைய ஸம்பிரதாயத்தை அனுஷ்டித்திருக்கும் ஸ்தூல திருஷ்டிகள் மணிபூரகமென்ற ஸ்தானத்தில் ப்ரம்ஹத்தைத் தியானஞ் செய்கிறார்கள். மூலத்தில் கூர்ப்ப திருச என்று இருப்பதால் கூர்ப்ப என்றால் மணல் என்று அர்த்தம். அதனால் மறைக்கப்பட்ட கண்களுள்ளவர்கள். அதாவது ஸ்தூல திருஷ்டியுள்ள வர்கள் என்று ஏற்படுகிறது; அல்லது கூர்ப்பம் என்றால் ஸூக்ஷ்மமென்று அர்த்தம். அதனால் ஸூக்ஷ்ம திருஷ்டிகள் என்றும் அர்த்தம் சொல்லலாம். இப்படி அர்த்தம் கொண்டால் ஸூக்ஷ்ம திருஷ்டியுள்ள மஹர்ஷிகள் ஹிருதயத்திலிருக்கும் பரப்ரம்ஹத்தைப் பார்த்து அதில் ப்ரவேசிப்பதற்காக மணிபூரகத்திலிருப் பதாக உபாஸிக்கிறார்கள் என்று அர்த்தம் கொள்ள வேண்டும். ஆருணிகளோவென்றால் நாடிகளுடைய பிரிவுக்கு மார்க்கமான ஹிருதயத்தில் ஸூக்ஷ்மமாக விருக்கும் பரப்ரம்ஹத்தை உபாசிக்கிறார்கள். ஓ அனந்தரே! அந்த இருதயத்திலிருந்து ஸூஷும்னா வென்ற நாடியானது தலைவரையில் போகின்றது. அதில் உம்முடைய ஸான்னித்தியமிருக்கிறது. அது நாடிகளுக்குட் சிறந்தது. அதனையடைந்தவன் திரும்பவும் ஸம்ஸாரத்தை யடைகிறதில்லை.

## நோட்டு

"புருஷருடைய ஹிருதயத்திலிருந்து நூற்றொரு நாடிகள் போகின்றன. அவைகளுக்குள் ஒரு நாடி மூர்த்தாவைப் பேதித்துக் கொண்டு போகிறது. மரண காலத்தில் அந்த வழியாக வெளியில் போகிறவன் மோக்ஷத்தையடைகிறான். பலவகையான கதியுள்ள மற்ற நாடிகள் வெளியில் போவதற்குக் காரணங்க ளாக ஆகின்றன." —ச்ருதி.





வீரராகவீயத்தில்:—பரமாத்மா ஜகத் காரணமான தால் அவர் உபாஸிக்கப்பட வேண்டியவரானாலும், அநேகர் பல வகையாகப் பலவிடங்களில் அவரை உபாஸிக்கிறார்களென்பதும், எல்லா உபாஸனைகளுக்கும் மோக்ஷமே பலன் என்பதும் இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது.

வேதாந்தத்தில் சொல்லிய உபாஸனா மார்க் கத்தை அறிந்த ஸூக்ஷ்ம புத்தியுள்ள அருண வம்சத்தில் பிறந்த சில மஹர்ஷிகள் ஹிருதயத் திலிருக்கும் ஸூக்ஷ்ம ஸ்வரூபியான உம்மை உபாஸிக் கிறார்கள். மற்றுஞ்சில மஹர்ஷிகள் வயிற்றில் இருக்கும் ஜாடராக்னி ஸ்வரூபியான உம்மை உபாசிக்கிறார்கள். மற்றுஞ்சிலர் ஸூஷும்னா என்ற நாடி மார்க்கத்தி லிருக்கும் உம்மை உபாஸிக்கிறார்கள். ஓ அனந்தரே! உம்முடைய ஸான்னியத்திற்கு முக்கிய ஸ்தலமாகிய புருவங்களின் மத்தியம் வரையில் அந்த ஸூஷும்னா நாடி செல்லுகிறது. அந்த நாடியை அடைந்த எல்லா உபாஸகர்களும் திரும்பவும் ஸம்ஸாரத்தை அடைகிறதில்லை.

20. அக்னி இயற்கையில் தாரதம்மியமில்லாத வரானாலுங் கட்டைக்குத் தக்கப்படி தாரதம்மிய முள்ளவராகத் தோன்றுவதுபோல நீர் உண்மையில் ஒரே வகையுள்ளவரானாலும் தம்மாற்செய்யப்பட்ட பலவகையான சரீரங்களில் பிரவேசித்தவர் போலிருந்து, உயர்ந்தவர் போலும், தாழ்ந்தவர்போலும், பிரகா சிக்கிறீர். எப்பொழுதும் ஜகத்திற்குக் காரணராக இருப்பதால் இப்பொழுது ஜகத்தில் பிரவேசித்தீரென் பதில்லை; (மிக்க ப்ரகாசமுள்ள ஸூர்யன் ஆகாசம்

முழுவதையும் ஓரேவகையாகப் பிரகாசிக்கச் செய்ப வரானாலும் மழைக்காலத்தில் பிரகாசக் குறைவுள்ளவர் போலும், சரத்காலத்தில் அதிகப் பிரகாசமுள்ளவர் போலும் தோன்றுவதுபோல பரமாத்மா சரீரம் முதலிய உபாதிகளின் ஸம்பந்தத்தால் தாழ்ந்தவர் போலவும் மேலானவர் போலவும் தோன்றுகிறாரே யொழிய உண்மையில் தாரதம்மியமில்லையென்பது கருத்து.) ஆனதால் கர்மங்களின் பயனில் ஆசை யில்லாதவர்கள் பொய்யாகிய இந்தச் சரீரங்களில் ஸத்தியமாகிய உம்முடைய ஸ்வரூபத்தைத் தாரத ம்மியமில்லாமலிருப்பதாகவே தெரிந்து கொள்ளுகிறார்கள். (ஈச்வரனை, வயிறு, ஹிருதயம் முதலிய ஸ்தானங்களில் உபாஸிக்கிறார்கள் என்று சொன்னதால் ஜீவனைப் போல் பரமாத்மாவுக்கும் தாரதம்மியம் ஏற்படுகிறது. அவர் எல்லோராலும் எப்படி உபாஸிக்கக்கூடியவரா வார்? என்ற பூர்வபக்ஷம் இந்த ச்லோகத்தால் நிவர்த்திக்கப்பட்டது.) "ஒரு தேவனே சகலப் பிராணிகளிடத்திலும் மறைந்திருக்கிறார். மேலுமவர் எங்குமிருப்பவர். ஸகலப் பிராணிகளுக்கும் அந்தராத் மாவாக இருப்பவர், கர்மங்களுக்கு அதிபதி. ஸகலப் பிராணிகளுக்கும் இருப்பிடம்; எல்லாவற்றிற்கும் ஸாக்ஷி; கேவலம் சைதன்னிய ஸ்வரூபி; குணமற்றவர்" —ச்ருதி.

*வீரராகவீயத்தில்:—* பரமாத்மா கார்யமாகிய ஜகத்தில் பிரவேசித்திருப்பதாலும், தோஷஸம்பந்த மற்றவராகையாலும் அவர் உபாஸிக்கத் தகுந்தவர் என்று இந்த சுலோகத்தால் காட்டப்படுகிறது. ஓ பகவன்! அக்னியானது உண்மையில் தாரதம்மிய மில்லாததனாலும் கட்டைக்குத் தக்கபடி உயர்வு தாழ்வு உள்ளதாக எப்படித் தோன்றுகிறதோ, அப்படி





நீர் எல்லாவற்றிற்கும் முக்கிய காரணராக இருந்து செய்யப்பட்ட பலவகையான சரீரங்களில் அந்தராத் மாவாக இருந்து உயர்வு தாழ்வை அனுசரிக்கிறீர். மேலும், பலவகையான உம்முடைய குணங்களை ஸ்தோத்திரஞ் செய்யும் சுத்த சித்தர்களான யோகிகள் இந்தச் சரீரங்கள் நாசமடைந்த பொழுதும், உம்மை நாசமடையாதவரென்றும், கார்யங்களில் பிரவேசித் தவரானாலும் அவைகளின் தோஷ ஸம்பந்தமற்றவ ரென்றும், அகண்டமான ஆனந்தமென்றும் உபாஸிக் கிறார்கள்.

*விஜயத்வஜீயத்தில்:—* அக்னி கட்டைகளைக் கொண்டுபோனால் தான் போவது போலும், திரும்பவும் கொண்டு வந்தால் தான் வருவது போலும் எப்படித் தோற்றுகிறதோ, அப்படி உம்மால் செய்யப் பட்ட பலவகையான சரீரங்களில் பிரவேசித்திருக்கும் ஜீவனை போல உம்மையும் அஞானிகள் நினைக்கிறார்கள். ஞானிகளாகிய பெரியோர்கள் அநித்தியங்களான இந்தச் சரீரங்களில் நித்தியரான நீர் பலவகையாக வஸிக்கிறீர் என்று சுத்தமான மனத்தால் த்யானஞ் செய்கிறார்கள். "ஈசுவரன் எல்லாவற்றிக்கும் காரண மென்று ப்ராஹ்மணன் தெரிந்துகொள்ளுகிறான். அதனால் அவன் மேலானவனாகி அவனுக்கும் மேலான ஸ்ரீமந் நாராயணனை அடைகிறான். கட்டையைக் கொண்டு வந்தால், அதிலிருக்கும் அக்கினியும் எப்படிக் கொண்டு வரப்படுகிறதோ அப்படி தேஹத்திலிருக்கும் மஹா விஷ்ணு தேஹத்துடன் வருகிறார். அதற்கு அவருடைய இச்சையே காரணம்; பெரியோர்கள் அநித்தியமான சரீரங்களில் நித்யராகி பகவான் பலவகையாக வஸிக் கிறார் என்று தெரிந்துகொள்ளுகிறார்கள்" —தந்திர பாகவதம்.

21. தன்னுடைய கர்மத்தால் கிடைத்த இந்த மனித சரீரம் முதலியவைகளில் போக்தாவாக இருக்கும் புருஷனைச் ஸகல சக்திகளால் பூர்ணமாகிய உம்முடைய அம்சமென்று சொல்லுகிறார்கள். உம்முடைய ஸ்வரூபமானது வெளியிலும் உள்ளேயும் ஆவரணமற்றது. ஆனதால் ஜீவனுடைய உண்மையை அறிந்த வித்வான்கள் வேதத்திற் சொல்லிய கர்மங்களை, அனுஷ்டித்து சமர்ப்பிப்பதற்கு ஸ்தலமாயுள்ளதும், ஸம்ஸாரத்தை நிவர்த்திப்பதுமான உம்முடைய பாதாரவிந்தத்தை மிக்க சிரத்தையுடன் உபாஸிக்கிறார்கள்.

*வீரராகவீயத்தில் :—* உம்மால் செய்யப்பட்ட தேவ மனுஷ்ய சரீரங்களில் இருக்கும் புருஷனை ஸகல சக்திகளுள்ளவரான உம்முடைய ஸங்கல்பத்தால் ஏற்படுத்தப்பட்டவரென்றும், உள் வெளியென்ற பேதமில்லாமல் எங்கும் வியாபித்திருக்கக் கூடியவரென்றும், மறைவற்ற புருஷனென்றும் வேதங்கள் நிரூபிக்கின்றன. ஆனதால் விவேகிகள் இந்த மனித ஜன்மத்தை உம்மை ஆராதிப்பதற்கு உபயோகமென்று நினைத்து, வேதங்களால் நிரூபிக்கப்பட்டதும், ஸம்ஸாரத்தை நிவர்த்திப்பதுமான உம்முடைய பாதாரவிந்தத்தை மிகுந்த பக்தியுடன் உபாஸிக்கிறார்கள்.

*விஜயத்வஜீயத்தில்:—* சகல புருஷர்களிடத்திலும் எல்லா புத்திகளிலும் லக்ஷ்மீ ப்ரஹ்மா முதலியவர்களிடத்திலும் இருந்து மேலான செய்கைகளைச் செய்பவரும் நீர்தானென்று சொல்லுகிறார்கள். அண்டத்திற்கு உள்ளும் வெளியிலும் கெட்ட கார்யம் செய்பவனிடத்திலுமிருந்து பாபத்தைச் செய்கிறவரும் நீரே என்று சொல்லுகிறார்கள். நீர் ஸகல புருஷர்களின்





இந்திரியங்களுடைய சக்தியை அவைகளுக்குத் தக்கபடி விஷயங்களில் ப்ரவர்த்திக்கச் செய்கிறீர். ஆனதால் எல்லாம் பிறரை அபேக்ஷியாமல் உம்மாலேயே செய்யப்படுகிறது. "லக்ஷ்மீதேவி, ப்ரஹ்மா, ருத்திரன் முதலியவர்களிடத்தில் ஸ்ரீமஹா விஷ்ணு வசித்து தம்மையே பூஜித்துக் கொள்கிறார். அஸத்துக்களிடத்தில் காணப்படும் கெட்ட நடை அவனுக்குக் கெடுதியைக் கொடுக்கிறதானாலும் ஈசுவரனைப் பூஜித்ததாகவே ஆகிறது" —சுருதி.

22. ஓ ஈச்வர! உம்முடைய ஸ்வருபத்தின் உண்மையைத் தெரிந்து கொள்வது கஷ்டமானதால் அதனைப் பிரகாசிக்கச் செய்வதற்காகவே பூமியில் நீர் அவதரிக்கிறீர். அப்படிப்பட்ட சரிதமாகிய பெரிய ஸமுத்திரத்தில் மூழ்கி சில பெரியோர்கள் தாபமற்றவர்களாகி மோக்ஷத்தைக்கூட விரும்புகிறார்களில்லை. இப்படிப்பட்ட பக்தர்கள் அரிதிலும் அரிதே. மேலுமவர்கள் உம்முடைய பாதாரவிந்தத்தில் ஹம்ஸங்கள் போல் ரமித்துக்கொண்டிருக்கும் பக்தர்களுடைய சேர்க்கையால் கிருஹம் முதலிய ஆசைகளை யொழித்து விடுகிறார்கள். "ஸகல தேவர்களும் முமுக்ஷுக்களும் ப்ரம்ஹத்தை அறிந்தவர்களும் எதனை நமஸ்கரிக்கிறார்களோ" ச்ருதி.

*விஜயத்வஜீயத்தில்:—* அறியமுடியாத ஸ்வருபமுள்ளவரே வேதமாகிய பெரிய ஸமுத்திரத்தில் அலைந்து ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டுச் சில பெரியோர்கள் வேதங்களால் நிரூபிக்கப்படும் உம்மையாகம் முதலிய கர்மங்களைச் செய்து உபாஸிக்கிறார்கள். "வேதமாகிய ஸமுத்திரத்தைக் கடந்து

மிகவும் கஷ்டப்பட்டு பரமேச்வரனாகிய உம்மைக் கண்டுபிடித்து மஹர்ஷிகள் மோக்ஷத்தையடைந்தார்கள். வேதத்திற் சொல்லிய கர்மங்களுக்குப் பலத்தைக் கொடுப்பவரான உம்மைத் த்யானம் செய்கிறார்கள்; யாகத்தால் உபாஸிக்கிறார்கள்" :—குசிக ச்ருதி.

23. பரமாத்வாகிய உம்மை உபாஸிப்பதற்கு உபயோகமான இந்தச் சரீரமானது ஆத்மா போலவும், ஸ்நேஹிதன் போலவும், பிரியன் போலவுமிருக்கிறது. அப்படியிருந்தும் ரக்ஷிப்பதில் நோக்கமுள்ளவரும், அனுகூலரும் பிரியமுள்ளவருமான உம்மைச் ஸேவிக்காமல், தேஹம் முதலியவைகளைக் காப்பாற்றிக் கொண்டு, ஆத்ம ஸ்வரூபத்தை அறியாமல் மிக்க பயத்தைக் கொடுக்கக்கூடிய ஸம்ஸாரத்தில் ஜனங்கள் சுழன்று கொண்டிருக்கிறார்கள். அதனால் அவர்கள் ஆத்ம காதியென்று சொல்லப்படுகிறார்கள்.

வீரராகவீயத்தில்:— 21வது ச்லோகத்தில் இந்த தேஹம் பரமாத்மாவைச் ஸேவிப்பதற்கு உபயோகமானது என்று சொல்லப்பட்டது. அப்படியே அந்த விஷயத்தில் அந்தச் சரீரத்தை உபயோகப்படுத்தாவிடில் சரீரம் வீணாய்ப்போய்விடுமென்றும், அனர்த்தத்தைக் கொடுக்குமென்றும் இந்த ச்லோகத்தில் காட்டப்பட்டது. இந்த மனித சரீரமானது உம்முடைய ஸேவையில் உபயோகப்படுமானால் ஆத்மா போலவும் மித்திரன் போலவும், ப்ரியன்போலவுமிருக்கும். ஜனங்கள் சப்தம் முதலிய விஷயங்களில் ஆசைகொண்டு உம்மை ஸேவிக்கிறதில்லை. நீர் ஜனங்களுக்கு க்ஷேமத்தைச் செய்வதில் நோக்கமுள்ளவராகவும், ப்ரியராகவும், ஆத்மாவாகவும் இருக்கிறீர்.





ஜனங்களோ முந்திய கர்ம வாஸனையுள்ளவராகி, அற்பமான தேஹத்தையடைந்து மிக்க பயங்கரமான ஸம்ஸாரத்தில் அலைகிறார்கள். ஆனதால் அவர்கள் ஆத்மகாதிகள் எனப்படுகிறார்கள்.

விஜயத்வஜீயத்தில் :— சில யோகிகள் உம்முடைய பாதாரவிந்தத்தில் ஹம்ஸங்கள் போல ரமித்துக் கொண்டிருக்கும் ஸந்நியாஸிகளுடைய சேர்க்கையால் வீடு முதலியவைகளில் ஆசையை யொழித்து உம்மை யடைவதற்குச் ஸாதனமான இந்தச் சரீரத்தை ஆத்மாவாகவும் பிரியனாகவும் நினைக்கிறார்கள். மேலும் அவர்கள் அனுகூலத்தைச் செய்பவரும், பிரியரும், ஆத்மாமாகிய, உம்மிடத்தில் பக்தியுள்ளவர்களாகி மோக்ஷத்தையும் விரும்புகிறதில்லை.

24. யோகிகள், ப்ராணன், இந்திரியங்கள் ஆகிய இவைகளை அடக்கி, ஸ்திரமான யோகஞ் செய்து ஹிருதயத்தில் எதை யுபாஸிக்கிறார்களோ, அந்த ஆத்மதத்துவத்தைச் சத்ருக்களான சிசுபாலன் முதலியவர்களும் எப்பொழுதும் த்யானஞ் செய்ததால் அடைந்தார்கள். கோபிகை முதலிய ஸ்திரீகள் ஆதிசேஷனுடைய உடல்போன்ற கையில் மனத்தை வைத்து அந்த ஆத்மாவை அடைந்தார்கள். ஸமபுத்தியுள்ள நாங்களும் உம்முடைய பாதமாகிய தாமரை மலரின் மதுவைப் பானஞ் செய்கிறோம். ஆனதால் எல்லோரும் ஸமமாக இருக்கிறோம்.

வீரராகவீயத்தில்:— 'ஸமதிருச' என்பதைப் பகவானுக்கு விசேஷணமாகச் செய்து நீர் ஸமதிருஷ்டியுள்ளவரானதால் உமக்கு எல்லோரும்

ஸமானர்களேயாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

*விஜயத்வஜீயத்தில்:—* பரமாத்மாவையுபாஸியாமல், 'நான் ப்ரம்ஹதேவன் என்று வேறு வகையாக உபாஸிப்பவர்கள் ஆத்மகாதிகளெனப்படுகிறார்கள். அவர்கள் பகவானிடத்தில் பக்தி செய்கிறதில்லை. நித்யம் துக்கத்தைக் கொடுக்கும் அல்ப சரீரத்தை அடைந்து ஸம்ஸாரத்தில் கஷ்டப்படுவார்கள். எவர்கள் மோக்ஷத்திற்காகப் பகவானை ஸேவிக்கிறார்களோ அந்த பக்தர்களான மஹர்ஷிகளைத் த்வேஷிப்பவர்களும் மஹாவிஷ்ணுவைத் துவேஷித்தவன் போலக் கெடுதியை அடைகிறார்கள்.

25. ஓ பகவன்! நீர் நித்திய ஸித்தமான வஸ்து. மற்றவையெல்லாம் உமக்குப்பின் உண்டானவை. ஆனதால் உம்முடைய ஸ்வரூபத்தை யாரால் அறிய முடியும்? உம்மிடமிருந்து பிரும்ஹதேவர் உண்டானார். அதன்பின் ஆத்யாத்மிக, ஆதிதைவிக தேவகணங்கள் உண்டாயின. மற்றவையெல்லாம் அவர்களுக்குக் கீழ்ப்பட்டவை. எப்பொழுது நீர் எல்லாவற்றையும் உபஸம்ஹரித்து யோக நித்திரை செய்கிறீரோ, அப்பொழுது ஆகாயம் முதலிய ஸ்தூலமும், மகத்தத்வம் முதலிய ஸூக்ஷ்மமும் ஸ்தூல ஸூக்ஷ்மங்களாலேற்பட்ட சரீரமும், காலத்தின் வேகமும், இந்திரியங்களும், ப்ராணனும், சாஸ்திரம் முதலியவைகளும் ஒன்றுமில்லை. (ஞானசாதனமேயில்லையென்று கருத்து).

*வீரராகவீயத்தில்:—* எல்லாவற்றிற்கும் காரணமாக இருக்கும் உம்முடைய ஸ்வரூபத்தை உமக்குப்பின் ஜனித்து, நாசமடைகின்ற எவன் தெரிந்து





கொள்வான்? சாஸ்திரத்தால் நான் உம்முடைய ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். முதலில் உம்மிடத்திலிருந்து ப்ரம்ஹதேவர் உண்டானார். அதன்பின் நிவிருத்திமார்க்கமுள்ள மரீசி முதலிய ப்ரஜாபதிகளுமுண்டானார்கள். அதன் பிறகு தேவர்களுண்டானார்கள். நீர் எப்பொழுது சாஸ்திரத்தை ஹிருதயத்தில் உபஸம்ஹரித்து நித்திரை செய்கிறீரோ, அப்பொழுது சேதனவஸ்துக்களாவது, அசேதன வஸ்துக்களாவது அவ்விரண்டுள்ள கார்யங்களாவது, காலத்தின் வேகமாவது ஒன்றுமில்லை.

*விஜயத்வஜீயத்தில்:—* "ஆதிசேஷனுடைய உடலில் படுத்துக் கொண்டிருப்பவரான உம்முடைய ஸ்வரூபம் உம்மால்தான் அறியமுடியும். ஸத்யலோகத்திற்கு அதிபதியான ப்ரஹ்மதேவரால் அறியமுடியாது. மற்ற தேவர்களாலும் அறியமுடியாது. அவர்கள் உற்பத்தியுள்ளவர்கள்" என்ற ஸாங்கிருத ச்ருதியின் அர்த்தம், இந்த ச்லோகத்தால் காட்டப்படுகிறது. ஸ்மரிப்பவர்களிடத்தில் ப்ரியமுள்ள பகவன்! ஆதிசேஷருடைய உடலில் படுத்திருக்கும் உம்முடைய ஸ்வரூபத்தை நீர் தான் அறியவேண்டும், மற்றவர்களால் அறிய முடியாது. உம்முடைய எல்லா மஹிமையையும் நாங்கள் வர்ணிக்கச் சக்தியற்றவர்களாக இருக்கிறோம். உத்பத்தி நாசமில்லாத உம்முடைய ஸ்வரூபத்தை எவன் தெரிந்து கொள்ளப் போகிறான்? உம்மிடத்திலிருந்து ப்ரம்ஹதேவரும், அதன்பின் அதிகாரத்தை அடையப் போகின்ற தேவகணங்களும், உண்டானார்கள்.

26. சிலர் இல்லாத திரவியம் உண்டாகிறதென்றும், ஸத்தான த்ரவியம் நசிக்கிறதென்றும்

சொல்லுகிறார்கள். (தார்க்கியர்கள் என்று தாத்பர்யம்.) மற்றுஞ்சிலர் ஆத்மாவை வெவ்வேறு என்று சொல்லு கிறார்கள். (தேஹத்தை ஆத்மாவென்று நினைத்த சார்வாகர்கள் ஆத்மா பருத்திருப்பதாகவும் இளைத்தி ருப்பதாகவும், மனுஷ்யனாக இருப்பதாகவும், மிருகமாக இருப்பதாகவும், சொல்லுகிறார்கள் என்று கருத்து) இன்னுஞ் சிலர் தேவர்களும், மனுஷ்யர்களும் ஒருவருக்கொருவர் உபகாரம் செய்து கொள்வதால் கர்ம பலம் வியாபாரத்திற்குச் ஸமமானது என்று சொல்லுகிறார்கள் (மீமாம்ஸகர்கள்). புருஷனை ஸத்வம் முதலிய மூன்று குணங்களுள்ளவர் என்று மற்றுஞ் சிலர் சொல்லுகிறாரகள். அப்படிச் சொல்லு கிறவர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் மதத்தை ஆபாச யுத்திகளால் ஸ்தாபிக்கிறார்கள். இம்மாதிரியான மத பேதங்கள் உம்முடைய உண்மையையறியாததால் ஏற்பட்டிருக்கின்றன. ஆனதால் ப்ரகிருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணரும், ஞானஸ்வரூபியுமான உம்முடைய உண்மையைத் தெரிந்து கொண்டால் மேற்காட்டிய பேதங்கள் ஏற்படமாட்டாது.

விஜயத்வஜீயத்தில்:– ஓ பகவன்! நீர் எப்பொழுது வேதத்தை உபஸம்ஹரித்துக்கொண்டு (அத்தியயனம் செய்பவர்கள் இல்லாததால்) எப்பொழுது யோக நித்திரை செய்கிறீரோ, அப்பொழுது ஸ்தூலமாகிய அண்டம் முதலியவைகளும் ஸூக்ஷ்மமாகிய மஹத்தத்வம் முதலிய வைகளும் இரண்டும் சேர்ந்த அக்னி முதலியவைகளும் இல்லை. காலத்தினுடைய மஹிமையும் அப்பொழுது இல்லை. அப்பொழுது வேறு ஒரு வஸ்துவுமில்லை. ஓ உத்பத்தியற்றவரே. ஸூக்ஷ்மரூபியான உம்மிடத்திலிருந்து ஸ்தூலமாகிய ஜகத் உண்டாயிற்றென்பதையும். அதனி





டத்தில் லயிக்கிறதென்பதையும், எல்லாவற்றிற்கும் மேலான பரமாத்மாவிடத்தில் பேதபுத்தி வைப்பதையும் வ்யவஹாரம். என்று எவர்கள் நினைக்கிறார்களோ அவர்கள் வேதம் முதலியவைகளைக்கொண்டு உம்மைத் தோத்திரஞ் செய்யும் வாயுவின் அனுக்கிரஹத்தால் அப்படிச் சொல்லுகிறார்கள்.

## குறிப்பு

வ்யவஹாரம் –உம்மை ஸேவிப்பதாகிற பணத்தைக் கொடுப்பவனுக்குச் ஸுகமாகிய வஸ்துவைக் கொடுக் கிறதென்ற ஸங்கல்பம்.

27. ஸத்வம் முதலிய முக்குண சுரூபமான இந்த ஜகத்தானது உண்மையில் இல்லாததானாலும், உம்மிடத்தில் இருப்பது போல் தோற்றுகிறது. அது மனத்தின் விளையாட்டேயாம். (அதிஷ்டானமாகிய ப்ரம்ஹம் இருப்பதால் ஜகத்தும் இருப்பதாகத் தோன் றுகிறது என்று தாத்பரியம்.) அப்படியே ஜகத்தில் தனியாகப் புருஷன் ஒருவன் இருப்பதாகத் தோன் றுவதும் பொய்யேயாம் ஆத்மாவின் உண்மையை யறிந்தவர்கள் போக்தாவாகிய புருஷன்: போக்கிய மாகிய ஜகத் இவைகளெல்லாம் ப்ரம்ஹமென்று தெரிந்து கொள்ளுகிறார்கள். (எல்லா ப்ரம்ஹத்தி னுடைய காரியமானதால் எந்தக் காரியம் எதை முக்கிய காரணமாக உடையதோ அது அந்த ஸ்வரூபமாக இருக்குமென்பது கருத்து). தங்கத்தில் அபேக்ஷை யுள்ளவன் அதனால் செய்யப்பட்ட வளை முதலிய வைகளை விட்டுவிடுவானா? அவைகளும் ஸ்வர்ண மல்லவா? அதுபோல், தம்மால் ஸிருஷ்டிக்கப்பட்ட

ஜகத்தும் அதில் ப்ரவேசித்த புருஷ ஸ்வரூபமும் ப்ரஹ்மமென்றும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

*வீரராகவீயத்தில்:—* மனுஷ்யர்கள் வரையிலுள்ள பிராணிகளுக்கு மனமானது ஸகல கார்யங்களையுஞ் செய்வது போல் தோன்றினாலும் ஜகத்ஸ்வரூபியான உம்மைக் காண்பிக்கிறதில்லை. உம்மையுபாஸித்து, சுத்தமான சித்தமுள்ளவர்கள் இந்த ஜகத் முழுவதும் பரமாத்ம ஸ்வரூபமென்று தெரிந்து கொள்ளுகிறார்கள். ஸூக்ஷ்மமான சேதனம் அசேதனம் இவை களடங்கிய காரணமான ப்ரஹ்மமே காரியமாகிய ஜகத்தைவிட வேறு அல்லாததால் ஜகத்தும் உபாதேய (அங்கீகரிக்கக் கூடியது) மாகிறது. ஸூவர்ணத்தின் கார்யமான வளை முதலியவைகள் ஸூவர்ண மான தால் அவைகளை எடுத்துக் கொள்ளுகிறார்களே யொழிய விட்டுவிடுகிறதில்லை. ஆனதால் பரமாத் வினால் செய்யப்பட்டதும் பரமாத்மாவினால் ப்ர வேசிக்கப்பட்டதுமான ஜகத் பரமாத்ம ஸ்வரூப மென்று நிச்சயிக்கப்பெற்றது.

*விஜயத்வஜீயத்தில்:—* ஜீவன், ஸத்வம் முதலிய குணங்களுடைய ஸ்வரூபி; (குணங்களுக்குக் கட்டுப் பட்டவன்.) என்று சொல்வதும் அஞானத்தால் ஏற்பட்டதேயாம். ஞான ஸ்வரூபியாகிய உம்மிடத்தில் அந்த குணங்களுடைய ஸம்பந்தம் இல்லை. முக்குண ஸ்வரூபமாகிய மனமானது உம்மிடத்திலும் இருப்பது போல் இருக்கிறது. இப்படி சொல்வது அஸத்துக்களு டைய மதம். ஆத்ம தத்துவத்தை யறிந்த மனிதர் முதலியவர்கள் உம்மை உண்மையில் ஸகல ஜீவ ஸ்வரூபியென்று அறிகிறார்கள். “அஸூர பாவமுள்ள ஜனங்கள் ஸ்ரீ மஹா விஷ்ணுவை ஸத்வம் முதலிய குணங்கள், தேஹம், இந்திரியம் ஆகிய இவைகளுள்ள வரென்று சொல்லுகிறார்கள்; தேவர்கள் (தேவ ஸ்வபாவமுள்ளவர்கள்) ஸ்ரீ மஹா விஷ்ணுவை முக் குணங்களுக்கு மேற்பட்டவரென்றும், ஸூகத்தால் நிறைந்தவரென்றும் சொல்கிறார்கள் ஜீவர்கள் குணங்களுக்கு வசப்பட்டவர்களானதால் உபத்திரவத்தை அடைகிறார்கள். உபத்திரவமற்றவரான பகவானுடைய அனுக்கிரஹத்தை அடைகிறார்கள்” — சைதன்னிய விவேகம்.

28. ஓ பகவன்! எவர்கள் உம்மை ஸகலப் பிராணிகளுக்கும் இருப்பிடமென்று நினைத்து உபாஸிக்கிறார்களோ, அவர்கள் மிருத்யுவை அலக்ஷ்யம் செய்து மிருத்யுவின் தலையில் காலை வைப்பார்கள். எவர்கள் உம்மை உபாஸிக்கவில்லையோ, அவர்கள் வித்வான்களானாலும் அவர்களைப் பசுக்களைப் போல நீர் வாக்கினால் கட்டுகிறீர். உம்முடைய பக்தர்கள் தங்களையும், மற்றவர்களையும் பரிசுத்தப்படுத்துகிறார் கள். மற்றவர்கள் அப்படிப் பரிசுத்தப்படுத்துகிறதில்லை.

*வீரராகவீயத்தில்:—* எவர்கள் ஸகல ப்ராணி களுக்கும் ஆதாரமாக இருப்பவரென்று உம்மை உபாஸிக்கிறார்களோ, அவர்கள் மிருத்யுவை லக்ஷ்யஞ் செய்யாமல் மிருத்யுவின் தலையில் காலை வைக்கி றார்கள். எவர்கள் மேற்காட்டியபடி உம்மையுபாஸிக்க வில்லையோ, அவர்களுக்கு சாஸ்திரங்களை உபதேசித்து, முரட்டு மாடுகளை மூக்கு கயிறுகள் முதலியவை களால் அடக்குவது போல நல்ல மார்க்கத்திற்குக் கொண்டு வருகிறீர். எவர்கள் சாஸ்திரம் படிப்பதற்கு

அதிகாரமில்லாமல் இருக்கிறார்களோ, அவர்களை உம்முடைய பக்தர்கள் பரிசுத்தப்படுத்துகிறார்கள். (எவர்கள் ஸாதுக்களிடத்திலும் பிரியப்படுகிறதில்லையோ, அவர்களுக்கு ஒரு பொழுதும் நல்ல கதியில்லை யென்று தாத்பரியம்.)

விஜயத்வஜீயத்தில்:— தங்கத்தால் செய்யப்பட்ட வளை முதலிய ஆபரணங்கள் எப்படி தங்கமாகவே இருக்குமோ அதுபோல உம்மால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஜகத்தில் பிரவேசித்த நீர் ஜகத்ஸ்வரூபியேயாம் (எல்லாற்றிலும் மஹாவிஷ்ணு வியாபித்திருக்கிறார் என்று தாத்பர்யம்). எவர்கள் உம்மைச் ஸகல பிராணிகளுக்கும் அதிஷ்டானமென்று உபாஸிக்கிறார்களோ, அவர்கள் ப்ரம்ஹத்தையடைவதற்குத் தடையாயுள்ள ஸம்ஸாரத்தை லக்ஷ்யஞ் செய்யாமல் அதிலிருந்து விடப்படுவார்கள். "தங்கத்தால் செய்யப் பட்ட வளையிலுள்ள தங்கத்தை, வளையைத் தள்ளி எப்படி வேறாக எடுக்கமுடியாதோ, அது போல தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் ஆகிய இவர் களிடத்திலிருக்கும் பகவத் ஸ்வரூபத்தைப் பிரித் தெடுக்க முடியாது. ஜீவர்கள் வெவ்வேறானாலும், பகவானை ஒருவரென்றும் ஸகல ஸ்வரூபியென்றும் நினைக்கவேண்டும். இம்மாதிரி, பகவானுடைய ஸ்வரூ பத்தைத் தெரிந்து கொண்ட மஹர்ஷிகள் ப்ரஹ் மத்தை யடைவதற்கு விரோதமான ஸம்ஸாரத்தை லக்ஷ்யஞ் செய்யாமல் விஷ்ணுபதத்தை அடைகி றார்கள்" —கருட புராணம்.

29. ஓ பகவன்! உமக்கு இந்திரியங்களில்லை. ஆனாலும், ஸகல ப்ராணிகளுடைய இந்திரியங்களுக்குச்





சக்தியை உண்டுபண்ணுகிறீர்; தாமாகவே ப்ரகாசிக்கிறீர். (இயற்கையான ஞான சக்தியுள்ளவருக்கு இந்திரியங் களுடைய அபேக்ஷை இல்லை என்று தாத்பர்யம்) சிற்றரசர்கள் தங்கள் ராஜ்ஜியத்திலுள்ள ஜனங்களால் கொடுக்கப்பட்ட வஸ்துக்களைத் தாங்கள் புஜித்து, சக்கரவர்த்திக்குக் கப்பங்கட்டி, அவருடைய உத்தரவின் படி நடப்பதுபோல மனிதர்களால் கொடுக்கப்படும் ஹவ்யம், கவ்யம் முதலியவைகளைப் புஜிக்கும் அவித்தையுள்ள தேவர்கள் உம்மைப் பூஜிக்கிறார்கள். உம்மிடம் பயந்து, அவரவர்களுடைய வேலையை சரியாக நடத்தி வருகிறார்கள். "அவருக்குக் கார்யமாவது, இந்திரியமாவது இல்லை. அவருக்கு ஒப்புயர்வுமில்லை." "இவருடைய சக்தி மேலானது, பலவகையானது; ஞானசக்தியும், கிரியா சக்தியும் இயற்கையானது." "இவருக்கு கை கால்களில்லை. ஆனால் வேகமாய் நடப்பவர்; பதார்த்தங்களை எடுப்பவர். இவருக்கு கண்களில்லை. ஆனாலும் பார்க்கிறார். இவருக்குக் காதுகளில்லை; ஆனாலும் எல்லாவற்றையுங் கேட்டுத் தெரிந்துகொள்ளுகிறார். இவரால் அறியப்பட வேண்டிய வஸ்து ஒன்றுமில்லை; இவரை ஒருவனும் தெரிந்து கொள்ளவில்லை" —சுருதிகள். இவரிடமிருந்து பயந்து காற்று வீசுகிறது; இவருடைய பயத்தால் ஸூர்யன் உதயமாகிறான். அக்னி, இந்திரன், மிருத்யு முதலியவர்களும் இவரிட மிருந்து பயந்தே தங்கள் தங்கள் வேலையைச் செய்கிறார்கள் — ச்ருதி.

வீரராகவீயத்ல்:— தேவர்கள் உம்மால் கொடுக்கப் பட்ட போகங்களை அனுபவிக்கிறார்கள்.

விஜயத்வஜீயத்தில்:— எந்த வித்வான்கள் உம்மையே

ஸேவிக்கிறார்களோ, அவர்களைப் பசுக்களைப் போல் வேதத்தில் சொல்லிய கர்மங்களை அனுஷ்டிக்கும்படி செய்கிறீர். உம்மிடத்தில் அதிகமான பிரீதி செய்த பக்தர்கள் ஜகத்தைப் பரிசுத்தப்படுத்துகிறார்கள். உம்மிடத்தில் பக்தி செய்யாதவர்கள் பரிசுத்தப்படுத்தப் படுகிறதில்லை ஸகல சக்திகளையும் தரிப்பவர் நீர் ஒருவரே: வேதங்களாகிய எங்களுக்கு சக்கிரவர்த்தியாக விருப்பவர்; நீர் ஒருவரேயாம் தேவர்கள் எல்லோரும் மனிதர்களால் கொடுக்கப்பட்டதைப் புஜித்து உம்முடைய உத்தரவைச் சிரஸால் தரிக்கிறார்கள்.

30. ஓ நித்யமுக்தரே! மாயையுடன் எப்பொழுது நீர் விளையாடுகிறீரோ, அப்பொழுது உம்முடைய ஸங்கல்த்தால் கர்மங்கள் ப்ரகாசிக்கின்றன. அவை களால் உண்டான சரீரங்களுடன் தாவர ஜங்கமங்கள் உண்டாகின்றன. ஆகாயம் போல் ஸமரும், மிக்க கருணையுள்ளவரும், வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதவரும், சூன்யம் போன்றவருமான உமக்குத் தம்மைச் சார்ந்தவன், பிறன் என்ற பேதபுத்தியில்லை. (முன்சுலோகத்தில் ஸகல ஜனங்களுடைய இந்திரியங் களையும் விஷயங்களில் பிரவிருத்திக்கும்படி செய்ப வரான பகவானை இந்திரியங்களுக்கு வசப்பட்ட வர்கள் ஸேவிக்கிறார்களென்று சொல்லப்பட்டது. இந்த ச்லோகத்தில் பரமாத்மாவிடமிருந்து எல்லாம் உண்டானதால் அவர்கள் பரமாத்மாவை உபாஸிக் கிறார்களென்று காட்டப்பட்டது.)

வீரராகவீயத்தில்:— விரஹமென்ற பாடத்தில் ஸ்தாவரம், ஜங்கமம் ஆகிய ப்ராணிகள் ப்ரகிருதியால் ஏற்பட்ட சரீரமுள்ளவர்கள் (எல்லா ஜனங்களுக்கும்





ப்ரகிருதி ஸம்பந்தம் தள்ள முடியாதது.) இப்படிப் பட்ட ஜனங்களில் சிலருக்குப் ப்ரகிருதி ஸம்பந்தம் நிவர்த்தியடையுமானால் அவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கிறது. அதுவும் பரமாத்மாவாகிய உன்னுடைய கடாக்ஷத்தால் தான் உண்டாகிறது. ஓ துஷ்ட குணமில்லாதவரே! உம்மைவிடக் கருணையுள்ளவன் ஒருவனுமில்லை. ஆனதால் உமக்குக் காப்பாற்றக் கூடாதவன் என்பதுமில்லை ஸகல ப்ராணிகளுக்கும் சரீரமாக இருப்பதால் எல்லாம் உம்மால் ரக்ஷிக்கக் கூடியதேயாம். ஆகாயம் எங்கும் வ்யாபித்திருந்தாலும், தோஷ ஸம்பந்தமில்லாமல் இருப்பது போல் நீர் எங்கும் வியாபித்திருந்தாலும், கெட்ட குணங் களுடைய ஸம்பந்தமற்றவராக இருக்கிறீர். அதனால் சூன்யம் போல் இருக்கிறீர். (அப்படிப்பட்ட உமக்குப் பேத புத்தியில்லையென்று தாத்பர்யம்).

விஜயத்வஜீயம்:— சிற்றரசர்கள் சக்கிரவர்த்தியின் உத்தரவைத் தலையால் சுமப்பது போலப் ப்ரஜாபதிகள் எந்த எந்த வேலையில் நியமிக்கப் பட்டிருக்கிறார் களோ, அவர்கள் உம்மிடம் பயந்து தங்கள் தங்கள் வேலையை நடத்துகிறார்கள். ஆனதால் எல்லா ஜனங்களுக்கும் பரமாத்மாவிடமிருந்தே முக்தி கிடைக் கிறதென்று தெரிந்துகொள்ள வேண்டும். ஓ உற்பத்தி யில்லாதவரே ஸ்தாவர ஜங்கம ப்ராணிகளெல்லாம் பரமாத்மாவிடமிருந்தே ஸம்ஸாரத்தை அடைகின்றன, (மோக்ஷம் பரமாத்மாவிற்கு அதீனமானதால், ஸம் ஸாரமும் பரமாத்மா தீனமென்று கருத்து).

31. இயற்கையில் ஜீவர்கள் அநேகர்களென்றும், எங்குமிருப்பவர்கள் என்றும் இருக்குமானால் உம்மால்

அவர்கள் சிக்ஷிக்கப்படுகிறார்கள் என்று சொல்ல முடியாது. (அவர்கள் ஒருவருக்கொருவர் ஸமர்களான தாலும் நியந்தா, நியம்யன் என்றது ஏற்படாது. அப்படிச் சொல்லாவிடில் (ஜீவர்கள் ஸ்வதந்திரர் களென்று) உம்மால் நியம்யர்கள், அவர்களுக்கு நீர் நியந்தாவென்று சொல்வது பொருந்தும். எப்படி யென்றால் ஜீவர்கள் உபாதி ஸம்பந்தத்தால் உம்முடைய கார்யங்களே யொழிய வேறில்லை. அவர் களுக்கு நீர் காரணமாக இருப்பதால் நீர் அவர்களுக்கு நியந்தாவாக (அதிபதி) ஆகிறீர். உம்முடைய ஸ்வரூபம் எல்லாவற்றிலும் தொடர்ந்திருக்கிறது. அறியப்பட்ட வஸ்துக்கள் தோஷமுள்ளவையாதலால், என்னால் அறியப்பட்டதென்று சொல்லக் கூடாது. (அவித் தையாகிய உபாதியுள்ள பரமாத்மாவின் அம்சங்களே ஜீவர்களென்று தாத்பரியம்.)

வீரராகவீயத்தில்:— "ஜீவர்கள் அநேகர்கள், நித் யர்கள்; எங்கும் இருப்பவர்கள். ஆனதால் அவர்கள் ஒருவனுக்குள் அடங்கினவர்களல்லர்" என்ற நியம மானது பொருந்தாது. ஜீவன் அணுவென்றால் தான் பொருந்தும். "வியாபகமான எந்தப் ப்ரஹ்மத்தினால் ஜகத் படைக்கப்பட்டதோ, அந்தப் ப்ரஹ்மமானது அந்த ஜகத்தில் அந்தர்யாமியாக இருந்து நியந்தாவாக இருக்கிறது. ஆனதால் ஸகல ஜகத்திற்கும் பரமாத் மாவே நியந்தா" என்று எவர்கள் அறியவில்லையோ, அவர்களுடைய மதம் ப்ரமாண விருத்தமானதால் ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல.

வியஜத்வஜீயம் :— ஓ ஒப்பற்றவரே! ஜீவர்க ளுக்குள் எல்லாவற்றையும் அறிந்தவனான (ஸர்வக்ஞன்)





ப்ராஹ்மணனைக் காட்டிலும் மேலானவன் இல்லாதது போலப் ப்ராஹ்மணனை விட மேலானவராக உம்மைக் காட்டிலும், மேலானவன் ஒருவனு மில்லை. (நீரே எல்லாவற்றிற்கும் அதிபதி. ப்ராணன், ஸ்ரீதேவி முதலியவர்களும் உமக்குத் தாழ்ந்தவர்கள்.) ஓ எங்கும் நிறைந்திருப்பவரே! ஜீவர்கள் ப்ராணனுக்குச் சுவாதீனப் பட்டவர்கள். அநேகர்கள், ஆனால் "ப்ரம்ஹும் ஒன்று" என்ற ச்ருதி வாக்கியத்திற்கு விரோதம் வருமே என்றால் அந்த ச்ருதி ஜீவர்கள் ஒன்று என்று சொல்லவில்லை. ப்ரம்ஹும் ஒன்று என்று சொல்லுகிறது.

32. பரமாத்மாவிடத்திலிருந்து ஜீவர்கள் உண்டா கிறார்கள். அதனால் பரமாத்மா அவர்களுக்கு நியந் தாவாக இருக்கிறார் என்று சொல்வதானால் ஜீவர்கள் அநித்யர்களென்று ஏற்படும். ஒவ்வொரு நாளும் சில ஜீவர்கள் நசிக்கிறார்கள், சிலர் ஜனிக்கிறார்கள் என்றும் ஏற்படும். ஜீவர்கள் நாசத்தை அடைவதே மோக்ஷ மென்றும் ஏற்படுமேயென்றால், உபாதிகளின் ஜனனத்தை ஜீவர்களுக்கு ஜன்மமென்று சொல்லுகிறோம். உண் மையில் ஜீவர்களுக்கு உற்பத்தியில்லையென்று இந்த ச்லோகத்தில் காட்டப்படுகிறது. —ப்ரகிருதி, புருஷன் ஆகிய இவர்கள் உத்பத்தியற்றவர்களானதால் ப்ரகிருதி ஜீவரூபியாக ஆயிற்று என்பதும், புருஷன் என்பதும், புருஷன் ஜீவரூபியானான் என்பதும் பொருந்தாது. (ச்ருதியில் புருஷனை அஜன் என்றும், ப்ரகிருதியை அஜா என்றும் சொல்லியிருக்கிறது). ஆனதால் ப்ரகிருதியை புருஷன் இவ்விருவர்களுடைய ஸம்பந்தத்தால் ப்ராணன் முதலிய உபாதிகளுள்ள ஜீவர்கள் உண்டாகிறார்கள். ஜலத்தில் குமிழி உண்டாக வேண்டுமானால் ஜலத்தால் மாத்திரம்

உண்டாகிறதில்லை. காற்றினால் மாத்திரம் உண்டாகிறதில்லை இரண்டும் சேர்ந்தால்தான் குமிழி உண்டாகிறது. ஜலம் நிமித்த காரணம், காற்று உபாதான காரணம். (முக்கிய காரணம்). அதுபோல ப்ருகிருதி நிமித்த காரணம்; புருஷன் உபாதான காரணம். "அடி மைத்ரேயி இந்த ஆத்மா நாசமற்றவர்" என்று சுருதியின்படி, ஜீவன் நித்யனென்று ஏற்படுவதால் உபாதியின் ஜன்மத்தை ஜீவனுடைய ஜனனமாகச் சொல்லுகிறோமேயொழிய உண்மையில் ஜீவனுக்கு ஜனனமில்லை. அது போல உபாதி நாசம் ஜீவனுடைய நாசமாகச் சொல்லப்படுகிறதேயொழிய, உண்மையில் ஜீவனுக்கு நாசமில்லை. எப்படி, தேனில் மற்ற புஷ்பரசங்கள் சேர்ந்து இன்ன புஷ்பத்தின் ரசமென்று பிரித்தெடுக்க முடியாமல் தேனாக லயிக்கின்றனவோ, எப்படி நதியின் ஜலம் ஸமுத்திர ஜலத்தில் சேர்ந்து நாம ரூபங்கள் விட்டு ஒரே ஜலமாக ஆகின்றனவோ, அப்படி ஜீவன் உண்மையில் ஜனனமில்லாதவனானதால் பலவகையான பெயர், குணங்கள் ஆகிய இவைகளுடன் காரணமாகிய உம்மிடத்தில் லயத்தையடைகிறான். (உபாதி நாசமடைந்தால் ஜீவத்வம் போய்விடுகிறது. ஸ்வரூபமாக இருக்கிறாரென்று தாத்பரியம். ஜீவன் ப்ரகிருதிக்கு வசப்பட்டவன்; ப்ருகிருதி ஈச்வரனுக்கு வசப்பட்டது.)

வீரராகவீயம்:— ப்ருகிருதி, புருஷன் ஆகிய இருவர்களுக்கும் உத்பத்தியில்லை. ஆனாலும் ஜலம் வாயு இவ்விரண்டும் சேர்ந்து ஜலத்தில் குமிழியை உண்டாக்குவது போல ப்ருகிருதி, புருஷன் இவ்விருவர்களின் சேர்க்கையாலேயே ஆதாரமாக இருக்கும் உம்மிடத்தில் பலவகையான நாம ரூபங்களுள்ள





ப்ராணிகள் உண்டாகிறார்கள். நதிகள் ஸமுத்திரத்தில் விழுவது போலும், தேனில் மற்ற புஷ்ப ரஸங்கள் சேருவதுபோலும், பிரளயகாலத்தில் அந்தப் பிராணிகள் உம்மிடத்தில் லயத்தை அடைகிறார்கள். (பதார்த்தங்களுக்கு அநேக அவஸ்தைகள் நேர்ந்தாலும் அந்த அவஸ்தைகள் அநித்யங்களே யொழிய, பதார்த்தம் நித்யம். முன் அவஸ்தையை விடுவது நாசமென்றும், பிந்திய அவஸ்தையை அடைவது ஜனனமென்றும் சொல்லப்படுகிறது.)

விஜயத்வஜீயம்:— ஓ உத்பத்தியற்றவரே! ஒரு வகையாக எங்குமிருப்பவரும், தோஷமற்றவரும், நாசமற்றவருமான பரமாத்மாவையறிந்த ஆசார்யனால் உபதேசிக்கப்பட்ட புருஷன் அஜ்ஞானத்தால் கல்பிக்கப்பட்ட ஸம்ஸாரத்திலிருந்து விடப்படுவான். ப்ருகிருதி, புருஷன் இவர்கள் உத்பத்தியற்றவர்கள். (அவர்கள் நித்ய முக்தர்களென்று கருத்து.) எவ்விடத்தில் பரமாத்மாவோ, அவ்விடத்தில் ப்ருகிருதி எவ்விடத்தில் ப்ருகிருதியோ, அவ்விடத்தில் பரமாத்மா என்று தேசத்தாலும் காலத்தாலும் சேர்ந்திருக்கும். அவ்விருவர்களிடமிருந்து ஜலத்தில் குமிழிபோல ஜீவர்களுண்டாகிறார்கள் என்று தெரிந்துகொண்ட ஆசாரியனிடம் உபதேசம் பெற்றவர்கள் மோக்ஷத்தை அடைவார்கள். "பரன், ப்ரகிருதி இவ்விருவர்கள் இயற்கையில் முக்தர்கள்" என்ற ஜ்ஞானமுள்ள ஆசார்யனுடைய உபதேசத்தால் ஸம்ஸார பந்தத்தை நிவர்த்தித்துக் கொள்ளுகிறான்." — கலாபச்ருதி. "பரனும், ப்ரகிருதியும் தேசத்தாலும் எங்கும் ஸமமாக வ்யாபித்திருக்கின்றன. அவ்விருவர்களுடைய சேர்க்கையால் புருஷர்கள் உண்டாகிறார்கள்" — கௌடரவ்ய ச்ருதி.

33. புத்திசாலிகள் மேற்காட்டியபடியுள்ள உம்முடைய மாயையை அறிந்து ஸம்ஸாரத்தை நிவர்த்திப்பவரான உம்மிடத்தில் மனத்தைச் செலுத்துகிறார்கள். உம்மை உபாஸிக்கிறவர்களுக்கு ஸம்ஸார பயம் எப்படி உண்டாகும்? (உண்டாகாதென்று தாத்பரியம்) குளிர்காலம், மழைக்காலம், கோடை காலமென்ற மூன்று அவயவங்களுள்ள உம்முடைய புருவ நெரித்தலாகிய காலமானது உம்மைச் சரணமடையாதவர்களுக்கு இறப்பு பிறப்பாகிய ஸம்ஸாரத்தை உண்டு பண்ணுகிறது.

விஜயத்வஜீயம்:—ஓ ஸகல ஜகத்திற்கும் பிதாவாக இருப்பவரே! ஆனந்தத்தால் நிறைந்தவரே! எல்லாவற்றிலும் மேலானவரே! (மூலத்திலிருக்கும் த.தொ. என்ற பதத்தை 'தத்' ஓ என்று பிரித்துக்கொள்ளவும், அ.உ இரண்டும் சேர்ந்தால் ஓ என்று ஆகிறது. அதனால் மேற்காட்டிய அர்த்தம் ஏற்பட்டது) இந்திரன் முதலிய தேவர்களுடைய பெயருக்குப் பொருளாயுள்ள ஐச்வர்யம் முதலிய குணங்கள் யாவும் மதுவின் ஸமுத்திரத்தில் புஷ்ப ரஸங்கள் போல உம்மிடத்தில் வயிக்கின்றனவென்றும், எல்லாவற்றையும் காட்டிலும் பரமாத்மா மேலான குணமுள்ளவரென்றும், மனிதர்களில் புத்திசாலிகளான ஜனங்கள் தெரிந்து கொள்கிறார்கள், "பரனுக்கும் ஜீவனுக்குமுள்ள பேதம் ஆதியற்றது, அந்தமற்றது. இது ஸ்வயமாகவும் நசிக்கிறதில்லை; பிறராலும் நசிக்கிறதில்லை. இப்படி தெரிந்து கொண்டவர்களுக்கு ஸ்ரீ மஹாவிஷ்ணு அதிக ஜன்மங்களைக் கொடுக்கிறதில்லை." ஸ்மிருதி ஆனதால் உம்மை ஆசிரயித்தவர்களுக்கு உம்முடைய புருவமானது பயத்தை உண்டுபண்ணுகிறதில்லை. (பயத்தை





நிவர்த்திக்கிறதென்று தாத்பர்யம்)

34. எவர்கள் ஆசார்யனுடைய பாதத்தை உபாஸியாமல், இந்திரியங்களையும் ப்ராணனையும் ஜயித்து அடக்கமுடியாத மனமாகிய குதிரையை அடக்க முயற்சிக்கிறார்களோ, அவர்கள் ஓடக்காரனில்லாமல் ஸமுத்திரத்தில் கஷ்டப்படும் கப்பல் வியாபாரிகள்போல இந்த ஸம்ஸார ஸமுத்திரத்தில் கஷ்டப்படுவார்கள். (முன் ச்லோகத்தில் காட்டியபடி மனதைப் பகவானிடத்தில் செலுத்தவேண்டுமானால் மனம் அலையாமல் ஒருவகைப்பட வேண்டும். அது குருவை உபாஸித்தால்தான் கிடைக்குமென்று இந்த ச்லோகத்தில் காட்டப்பட்டது.

விஜயத்வஜீயத்தில்:— எந்த விவேகிகள் உம்மைப் பூஜிக்கித்தக்க யோக்கியதை உள்ளவர்களோ, அவர்கள் இந்திரியம், ப்ராணன் ஆகிய ஸாரதி, குதிரை இவைகளால் மிக்க சபல ஸ்வபாவமுள்ள புத்தியை, பயனை விரும்பாமலிருக்கச் செய்ய முயற்சித்து மேலாக ஜீவிக்கிறார்கள். அவர்கள் அநேக துக்க ஸமுத்திரத்தைத் தாண்டுவிப்பதான குருவின் பாதத்தை ஆச்ரயித்தே அப்படிப்பட்ட பயனையடைகிறார்கள்.

35. பரமானந்த ஸ்வரூபியான நீர் இருக்கும் பொழுது பந்துக்கள், புத்திரன், தேஹம், களத்திரம், பணம், வீடு, பூமி இவைகளில் ஆசை வைத்து ஸ்வல்ப ஸுகத்தை விரும்பும் மனிதர்களுக்கு என்ன ஸுகம் கிடைக்கப் போகிறது? ஒருவித ஸுகமுமில்லை. ஆனதால் உம்மையே உபாஸிக்கவேண்டும் என்பதை

அறியாமல், ஸ்திரீ ஸுகத்தில் ஆசைப்பட்டு, அனித்யமும் ஸாரமற்றதுமான ஸம்ஸாரத்தில் மூழ்கியிருப்பவர்களை எதுதான் ஸுகப்படுத்தும்?

விஜயத்வஜீயம்:— எவனுக்குத் தேவரிடத்தில் மிக்க பக்தியும், அது போல குருவினிடத்திலும் முக்கிய பக்தியிருக்கிறதோ அந்த மஹாத்மாவிற்கு விஷயங்கள் பிரகாசிக்கின்றன. பகவானை அடைவதற்கு ஆசார்யனுடைய அனுக்கிரஹத்தைவிட வேறு ஸாதனம் ஒன்றுமில்லை. ஆசார்யனுடைய உபதேசத்தால் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை அடைவான். ஸம்ஸயமில்லை" என்று ச்ருதி ஸ்ம்ருதியின் அர்த்தங் காட்டப்பட்டது.

36. மஹர்ஷிகள் உம்முடைய பாதாரவிந்தத்தை ஹ்ருதயத்தில் தியானஞ் செய்து, அஹங்காரமற்றவர்களாகி, பாபத்தை நிவர்த்திக்கும் பாத ஜலமுள்ளவர்களானாலும், பூமியிலுள்ள பல புண்ணிய தீர்த்தங்களுக்கும் க்ஷேத்திரங்களுக்கும் செல்லுகிறார்கள். (பெரியோர்களுடைய சேர்க்கை உண்டாகுமென்று). புருஷர்களுடைய விவேகத்தை மாற்றும் க்ருஹம் முதலிய ஸுகத்தை விரும்புகிறதில்லை. ஒரு தடவை உம்மைத் தியானிப்பவர்களும் விஷயத்தில் ஆசையை யொழித்து விடுகிறார்கள். அப்படியிருக்க, மஹர்ஷிகள் ஒழிக்கிறார்களென்பதில் என்ன ஸந்தேஹம்?

வீரராகவீயம்:— தீர்த்தங்களையும் பரிசுத்தப் படுத்துவதற்காகச் ஸஞ்சரிக்கிறார்கள்.

விஜயத்வஜீயம்:—ப்ரஹ்மத்தை அறியாமல் ஸ்திரீ ஸுகத்தில் ஆசை கொண்டு ஸஞ்சரிப்பவர்களுக்கு





மோக்ஷத்தைக் கொடுத்து யார் ஸுகப்படுத்துவான்? ஆனதால் பரிசுத்தியையுண்டுபண்ணும் சாஸ்திரங்களை ஆச்ரயித்த தேவர் முதலியவர்கள் பாபத்தை நிவர்த்திக்கும் உம்முடைய பாதத்தை ஹ்ருதயத்தில் தியானிக்கிறார்கள். நித்ய ஸ்வரூபியும். சித்ஸ்வரூபியுமான உம்மிடத்தில் மனதைச் செலுத்துகிறார்கள். ஓ புருஷோத்தம! அஹங்காரத்தை அடைகிறதில்லை.

37. ஸத்தாகிய ப்ரம்ஹத்தினிடமிருந்து உண்டான ஜகத்தும் ஸத்தாகவே இருக்கவேண்டும். (எதனிடத்திலிருந்து எது உண்டாயிற்றோ, அது ஸ்வரூபமேயாம். ஸ்வர்ணத்திலிருந்து உண்டான வளை முதலியவை சுவர்ணமாகக் காணப்படுகின்றன) என்றால் காரணம் விருத்தமாக இருக்கிறது. (இரண்டும் ஒன்று என்று அபேதத்தைச் சொல்லவில்லை. பேதமில்லையென்பதைச் சொல்லுகிறோமென்றால், அதுவும் அபேதமென்று தான் ஏற்படுகிறது) சில இடத்தில் மாறுதலாகவும் காணப்படுகிறது. (பிதாவினிடத்திலிருந்து) உண்டான புத்திரன் பிதாவைவிட வேறாக இருக்கிறான் உலக்கையால் குடத்தை உடைத்தால் அதன் ஸ்வபாவமும் உலக்கையும் ஒன்றாக ஆகுமா?) அதிலிருந்து உண்டானதென்றால் அதை உபாதான காரணமாகக் கொண்டது என்று அர்த்தங்கொள்ள வேண்டும். புத்திரனுக்குப்பிதா நிமித்த காரணமேயொழிய உபாதான காரணமல்லவென்றாலும் சிலவிடத்தில் மித்யையாக இருக்கிறது, (கயிற்றைச் ஸர்ப்பம் என்று நினைக்குமிடத்தில் அசைவது, கோணல், முதலிய குணங்களை உபாதான காரணமாகக் கொண்ட குணமாக இருக்கவில்லை.) அவித்தையுடன் கூடி உபாதான காரணமென்று சொல்வது பொருந்தாது.

அப்படிப்பட்ட வஸ்துவல்ல. ஆனதால் ஜகத் உண்மையில் ஸத்தியவஸ்துவல்ல. ஆனாலும் வ்யவஹாரத்துக்காகப் ப்ரம்ஹமானது உபயோகப்படுகிறது. (ஒரு இடத்திலிருக்கும் வஸ்துவை மற்றொரு இடத்தில் ஆரோபித்தால் அது ப்ரம்ஹமென்று லோகப்பிரஸித்தம். இல்லாததான வஸ்துவைப் ப்ரம்ஹமென்று எப்படி சொல்லக்கூடும் என்றால்) அந்த பரம்பரா நியாயத்தால் இந்த ப்ரம்ஹம் ஏற்பட்டிருக்கிறது. (வஸ்து இருப்பதுபோல் தோன்றும் ஸம்ஸ்காரத்தால் ப்ரம்ஹம் உண்டாகலாம். உண்மையில் வஸ்து இருக்கவேண்டுமென்ற நியமமில்லை. ஆனதால் ப்ரம்ஹமானது அனாதி. அதனால் அந்த பரம்பரா நியாயத்தை அனுசரித்து ஜகத் இருப்பதாக வ்யவஹாரம் உண்டாகிறது. ஜகத்தானது வேதத்தால் சொல்லப்பட்டதாகையால் அதனை இல்லை என்று எப்படிச் சொல்லலாம்? என்றால் ஓ பகவன்! உம்முடைய வாக்காகிய வேதமானது கர்மத்தில் ச்ரத்தையுள்ள மந்த புத்திகளான ஜனங்களைக் கௌண விருத்தி, லக்ஷணா விருத்தி, முதலிய விருத்திகளால் பிரமிக்கச்செய்கிறது. (சாதுர்மாஸ்ய யாகம் செய்தவனுக்கு அதனுடைய பயன் குறையாதது என்று ஒருச்ருதியில் சொல்லப்பட்டிருந்தாலும், கர்மத்தால் ஸம்பாதிக்கப்பட்ட பலமானது குறைகிறதென்று மற்றொரு ச்ருதி சொல்லுகிறபடியால் முன் காட்டிய ச்ருதி அதன் மேன்மையைச் சொல்லிற்று என்று தாத்பர்யம்).

வீரராகவீயத்தில்:— 'ஸத்தாயிருக்கிற பரப்பிரும்மத்தினிடமிருந்து உண்டான இந்த ஜகத்தும் ஸத்தியமாகத்தானிருக்கவேணடும் என்று சொல்வது யுக்தி விரோதமாகையால், பொருந்தாது என்று சொல்வது





ஸரியல்ல. அது ஒரு இடத்திலும் விபசாரத்தை அடைகிறதில்லை. ஒரு இடத்திலும் பொய்யாக ஆகிறதில்லை. ஸத்வ விலக்ஷணமாகிய இரண்டு தர்மங்களுள்ள த்ரவ்யமாகவும் இல்லை. ப்ரம்ஹமமானது வ்யவஹாரத்திற்கு உபயோகப்படுகிறது. கர்மங்களில் ச்ரத்தையுள்ளவர்களை உம்முடைய வாக்காகிய வேதமானது பிரமிக்கச் செய்கிறது.

விஜயத்வஜீயம்:— இந்த ஜகத்திற்கு விஷ்ணு அதிபதியேயொழிய ஜீவன் அதிபதியல்ல. இதற்கு என்னைக்காட்டிலும் வேறொருவனுமதிபதியல்ல. சேதனனாக இருப்பதால் என்ற தர்க்கம் சிலவிடத்தில் வ்யபிசரிக்கிறது, சிலவிடத்தில் பொய்யாக இருக்கிறது. (ஜீவனும் ஈச்வரனும், வெயிலும் நிழலும் போல விருத்த தர்மங்களுள்ளவர்கள். அதனால் அவ்விருவர்களும் வேறு என்று தாத்பரியம்,) எல்லாச் சரீரங்களிலும் ஸுக துக்கங்களை அனுபவிப்பதால் சரீரத்தின் பரிணாமமே ஜீவன்'' என்ற க்ஷபணக மதத்தில் சொல்லப்பட்ட யுக்தியும் பொய்யாக இருக்கிறது. அணுவாகிய சரீரத்திலிருந்த ஜீவன் கர்மவசத்தால் யானைச்சரீரத்தை அடைந்தால் விகாரமுள்ளவனாகி விடுவான். ஆனதால் மேற்காட்டிய யுக்தி பொய்யாக ஆகிறது. தர்க்கங்கள் தோஷமுள்ளவையாக இருப்பதால் அவைகள் மூடர்களுடைய புத்திக்குப் ப்ரம்ஹத்தை உண்டு பண்ணுகின்றன. இப்படி வேதத்திற்கு விரோதமாய்ச் சொல்வது அந்த பரம்பரையாக வந்திருக்கிறது; உம்முடைய பலவித குணங்களையும் கர்மங்களையும் நிருபிப்பதில் வேகமுள்ள வேதம் பலவிதமாகச் சொல்லி வேதத்தின் உண்மையான தாத்பரியத்தை அறியாத மூடர்களை ப்ரமிக்கச்

செய்கிறது.

38. முன் ச்லோகத்தில் ஜகத் ஸத்யமென்பதற்கு ஸாதகமான யுக்தியில்லையென்று சொல்லப்பட்டது, இந்த ச்லோகத்தில் ஜகத் ஸத்யமென்பதற்குப் பாதகமான யுக்திகள் காட்டப்படுகின்றன. ஸிருஷ்டிக்கு முன் இந்த ஜகத் இல்லை. "சிருஷ்டிக்கு முன் ஸத்தாகிய ப்ரம்ஹமே இருந்தது." – ச்ருதிகள். பிரளயத்திற்குப் பின் இருக்கப் போகிறதில்லை, ஆனதால் கேவல ஆத்மாவாகிய உம்மிடத்தில் தோன்றும் இந்த ஜகத்தானது மித்யையேயாம். (முற்காலத்திலும், பிற்காலத்திலும் எது இல்லையோ, அது மத்திய காலத்திலும் இல்லை யென்று தாத்பர்யம்) அதனால் வேதங்கள் த்ரவ்யங் களுடைய பேதங்களுள்ள மார்க்கத்துடன் உம்மைச் ஸமமாக நிரூபிக்கின்றன. (மண் முதலிய த்ரவ்யங் களின் விகாரங்கள் குடம் முதலியவை. அவைகளின் குடமென்ற பெயர், அதன் உருவம் ஆகிய இவை ஸத்தியமல்ல. காரணமாகிய மண்* என்பதே ஸத்யம். அது போல் பிரஹ்மமே ஸத்ய வஸ்து; ஆகாயம் முதலியவை அநித்யமென்று வேதங்கள் சொல்லு கின்றனவென்று தாத்பரியம்) ஆனதால் பொய்யான ஜகத்தை ஸத்யமென்று நினைப்பவர்கள் மூடர்கள்.

வீரராகவீயம்:– "ஸிருஷ்டிக்கு முற்காலத்தில் இந்த ஜகத்தில்லை; பிரளயத்திற்குப் பிற்காலத்திலும் இல்லை, ஆனதால் மத்திய காலத்தில் உம்மிடத்தில் தோண்றுவது மித்யை. ஆனதால் மண் முதலிய த்ரவ் யங்களுடைய விகாரங்களாகிய குடம் முதலியவை களுடைய பெயர், உருவங்கள் எப்படி அநித்யமோ (வ்யவஹாரத்திற்கு மாத்திரம் உபயோகமோ), காரணமாகிய மண் என்பது மாத்திரம் நித்யமோ, அப்படியே காரணமாகிய ப்ரம்ஹம் நித்தியம். ஜகத் அநித்யமென்று வேதங்கள் உம்மைப்பற்றிச் சொல்லு கின்றன" என்று சொல்வது பொருந்தாது. அந்த வேதத்தின் உண்மையான அர்த்தத்தை அறியாத மூடர்கள் மேற்காட்டிய வண்ணம் ஜகத்து பொய் என்று சொல்லுகிறார்கள். (அந்த வேதவாக்கியத்தால் கார்யம் பொய்யென்றும்' காரணம் ஸத்யமென்றும் சொல்லப்படவில்லை. கார்யம் காரணத்தைவிட வேறல்ல என்று மாத்திரம் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம்.)

விஜயத்வஜீயத்தில்:– ஜீவனை ஈச்வரனாகச் சொல்வதற்கு பாதகமான யுக்திகள் காட்டப்படுகின்றன. ஜீவர்கள் கர்ப்பத்திலிருக்கும்பொழுது (உண்டாவதற்கு முன்) ஈச்வரனாக இருந்ததில்லை. பிந்தியகாலத்திலும் ஈச்வரனாகவிருக்கப்போகிறதில்லை. ஆனதால் மத்தியிலும் (ஜனன மரணத்திற்கு) ஜீவனை ஈச்வர னென்று சொல்லமுடியாது ஜீவன் உத்தமனென்றும், பணக்காரனென்றும் நல்ல குலத்தில் பிறந்தவனென்றும், மூடர்கள் ப்ரமித்துச் சொல்லுகிறார்களே யொழிய உண்மையில் வித்வான்கள் மேற்காட்டிய உத்தம குணங்கள் ஈச்வரனாகிய உம்முடையவைகளென்றும் ஔபசாரிகமாக ஜீவனிடத்தில் சொல்லப்டுகின்றன, அப்படி சொல்வதற்கும் நீரே காரணமென்றும் தெரிந்து கொள்ளுகிறார்கள்.

39. ஜகத்து உண்மையில்லாவிடில் சேதனனுக்கு அதில் ஸம்பந்தமேற்பட ந்யாயமில்லை. ஆனதால் ஜீவன் ஸம்ஸாரியென்றும், ஈச்வரன் நித்யமுக்தனென்றும்

சொல்வது எப்படி பொருந்தும்? கர்மகாண்டத்தின் அர்த்தமென்னவென்றால் —அந்த ஜீவன் எப்பொழுது மாயையுடன் அவித்யையை ஆச்ரயிக்கிறானோ அப்பொழுது தேஹம் இந்திரியம் முதலியவைகளை ஆத்மாவென்று நினைத்து அதனுடைய தர்மங்களையும் அடைந்து இயற்கையான ஆனந்தம் முதலிய குணங்களை மறந்து ஸம்ஸாரத்தை அடைகிறான். (கர்மகாண்டம் அதைச் சொல்லுகிற தென்று கருத்து) ஸர்ப்பமானது தோலை விட்டு விடுவதுபோல நீர் அந்த மாயையை விட்டு விடுகிறீர். மேலும் நீர் ஸகல ஐச்வர்யங்களையும் எப்பொழுதும் அடைந்தவர்; எட்டு மஹா விபூதிகளிலிருந்து ப்ரகாசிக்கிறீர்.

*வீரராகவவீயம்:—* அந்த ஜீவன் உம்முடைய மாயையால் மோஹித்து. ப்ரகிருதிபரணா ஸ்வ ரூபமான தேவ சரீரம் முதலிய விஷயங்களை அனு பவித்துக் கொண்டு தேஹத்தில் அபிமானத்தை அடைகிறான். அதனால் ஜனனமரணம் முதலிய ஸம் ஸாரத்தை அடைகிறான். ஞானம், ஐச்வரியம் இவைகள் மறைக்கப்படுகின்றன. நீர் இயற்கையில் ஸகல ஐச்வர்யங்களை அடைந்தவர்; அணிமா முதலிய விபூதி களுள்ளவர்; அதனால் மாயைக்கு வசப்படுகிறதில்லை. (ஜீவன் மாயைக்கு வசப்பட்டவன்; பரமாத்மா மாயைக்கு ஸ்வாதீனனல்ல. இதுவே இவ்விருவர்களுக்குமுள்ள பேதமென்று கருத்து.)

*வீஜயத்வஜீயம்:—*புருஷன் ச்ருதியில் சொல்லப் பட்ட உம்முடைய குணங்களை ஸ்மரிக்கிறான். அதன் பின் ஸம்ஸாரத்தில் இருந்து விடுபடுகிறான். அதன்பின் ஸாயுஜ்யம், ஸாரூப்யம், ஸாலோக்யம்





என்ற முக்தியை அடைகிறான். பரமனாகிய உம்மால் அபஹரிக்கப்பெற்ற சக்தியுள்ள மாயையை விடுவது மன்னியில் நாசஞ்செய்கிறான். அதுவும் உம்முடைய சக்தியேயாம். மேலும், அஸுரர்களை மோஹிக்கச் செய்வதற்குப் பரமசிவன் முதலியவர்களைப் பூஜிக்கிறீர். மற்ற தேவர்களால் பூஜிக்கப்படுகிறீர்.

40. வெளியிலிருக்கும் விஷயங்களில் ஆசையை யொழித்து, பகவானை உபாஸிப்பவர்களானாலும் எவர்கள் ஹிருதயத்திலிருக்கும் அஞான வாஸனையின் மூலத்தை நாசஞ்செய்ய வில்லையோ, அவர்களுடைய ஹிருதயத்தில் நீர் இருந்தாலும் அவர்களால் உம்மை அடையமுடியாது. கழுத்தில் ரத்ன ஹாரமிருந்தாலும் அதனை மறந்தவனுக்கு அவன் ஸமானனாவான். யோகி களென்று பெயர் வைத்துக்கொண்டு இந்திரியங்களை திருப்திசெய்து வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு ஸம்ஸாரம் நிவர்த்தியடையாததால் இவ்வுலகத்தில் ஸுகமில்லை. ஈச்வர பதத்தை அடையாததால் மேலுலகத்திலும் ஸுகமில்லை.

*வீஜயத்வஜீயத்தில்:—* யதிகளானாலும், எவர்கள் விஷயங்களில் ஆசை கொண்டு ஸம்ஸாரத்தில் நிவர்த்தியடைய வில்லையோ அவர்களால் உம்மை அறியமுடியாது. கழுத்தில் ஹாரமிருப்பதான ஞாபக மில்லாத புருஷன் கழுத்தில் ஹாரமிருந்தாலும் அதனை எப்படி அறியமாட்டானோ, அதுபோல மேற்காட்டிய வர்கள் ஈசுவரனை அடைகிறதில்லை. நிவிருத்தி மார்க் கத்தை அடைந்த யோகிகளுக்கு அபயத்தைக் கொடுத்து காலம் முதலியவைகளிடமிருந்துக் காப்பாற்றுகிறீர்.

*41.* ஆறு வகையான குணங்களுள்ளவரே! உம்முடைய ஸ்வரூப ஞானமுள்ளவன் உம்மிடமிருந்து உண்டான புண்ணிய பாபங்களின் பயனாகிய ஸுக துக்கங்களில் ஸம்பந்தப்படுகிறதில்லை. அப்பொழுது தேஹாபிமானிகளைக் கட்டுப்படுத்தக்கூடிய விதி நிஷேதங்கள் அவனிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. ஒவ்வொரு யுகத்திலும் ஏற்படுத்தப்பட்ட ஸம்பிரதாயப் படி உம்முடைய சரிதங்களைச் சிரவணஞ் செய்து, உம்மை மனத்தில் த்யானஞ் செய்வதால் அவனுக்கு மோக்ஷமாகிய கதியாக இருக்கிறீர்.

*வீரராகவீயம்:–* இந்த ஸம்ஸாரத்தில் பகவானாகிய உம்மையறிந்தவன் பயனைக் கொடுக்க ஸித்தமாக இருக்கும் புண்ய பாபங்களுடைய பயனாகிய ஸுகதுக்கங்களில் ஸம்பந்தப்படமாட்டான். அந்த அவஸ்தையில் பிறருடைய நிந்தைகளையாவது, ஸ்தோத்திரத்தையாவது அவன் கவனிக்கமாட்டான், அப்படிப்பட்டவனுக்கு நீர் மோக்ஷத்தைக் கொடுக்கிறீர். (பரலோகத்தில் ஸுகத்தை அடைகிறானென்று சொல்லப்பட்டது) இவ்வுலகத்திலும் உம்முடைய பக்தர்களுடன் அளவற்ற கல்யாண குணங்களுள்ள உம்முடைய கதாமிருதத்தைக்கேட்டு ஸுகத்தை அடைகிறான்.

*வீஜயத்வஜீவியம்:–* ஸகல பிராணிகளுடைய வாக் முதலிய இந்திரியங்கள் நித்யமுக்தரான மகா விஷ்ணு, அவருக்கு ஸ்வாதீனப்பட்டவளான ஸ்ரீதேவி ஆகிய இவர்களை அடையவில்லை. இந்த யோகிகளால் எவர்களுக்கு ஞானம் உபதேசிக்கப்படுகிறதோ, அவர்களுடைய இந்திரியங்கள் விஷ்ணுவை அடையும்;





உமிக்குள் இருக்கும் அரிசி தூசியை அடையாதது போல் ரஜோகுணமுள்ள மனிதர்கள் ஸ்ரீ மஹா விஷ்ணுவை அடையார்கள்.

*42.* ஓ பகவன்! ப்ரஹ்மா முதலியவர்களும் உம்முடைய மஹாத்மியம் முழுவதையும் அறியவில்லை. நீர் அனந்தரானதால் உம்முடைய மஹிமையை நீரும் அறியவில்லை. ஏழு ஆவரணங்களுள்ள அண்டங்கள் ஒரே காலத்தில் காலத்தால் உமக்குள் சுற்றுகின்றன. அது ஆகாயத்தில் தூளி சுற்றுவது போலிருக்கிறது. அதனால் ஸகல வேதங்களும் அனாத்மாவை நிஷேதித்து, உம்மையே சொல்லுகின்றன. (வேதம் பரமாத்மாவை விதி முகமாக சொல்ல வில்லை; நிஷேத முகமாகச் சொல்லுகிறதென்று காட்டப்பட்டது).

*வீரராகவீயம்:–* இப்படி வேதங்கள் பகவானை ஸ்தோத்திரஞ் செய்து, உம்முடைய மஹிமை அளவற்றதானதால் முழுவதையும் எங்களால் சொல்ல முடியாதென்று முடிக்கின்றன. ப்ரம்ஹா முதலிய தேவர்களும் உம்முடைய மஹிமையின் கோடியை அடையவில்லை (மனிதர்களால் அறிய முடியுமாவென்று கருத்து) உம்முடைய ஸ்வரூபம் மஹிமை இவைகள் காலத்தாலும், தேசத்தாலும் அளவிடக்கூடாதானதால் உம்மாலேயே அறியமுடியாது. உம்முடைய ஒவ்வொரு மயிர்காலிலும் ஏழு ஆவரணங்களுள்ள அநேக ப்ரஹ்மாண்டங்கள், ஆகாயத்தில் தூளிகள் பக்ஷிகளுடன் ஸஞ்சரிப்பது போலச் ஸஞ்சரிக்கின்றன. ஆனதால் உமக்கு ஸஜாதீயமான வஸ்து ஒன்றுமில்லையென்று வேதங்கள் சொல்லி, உம்மை தாத்பர்யவிருத்தியால் சொல்லுகின்றன.

43–50. இப்படி ஆத்மதத்வத்தை ஸனந்தனர் முகமாக ப்ரஹ்மதேவருடைய புத்திரர்களான ஸித்தர்கள் கேட்டு தெரிந்துகொண்டு ஸனந்தனரைப் பூஜித்தார்கள். ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்களும், மஹாத்மாக்களுமான ஸனகர் முதலியவர்களால் ஸகல ச்ருதி, ஸ்மிருதி, புராணம், இதிஹாஸம் இவைகளின் ரஹஸ்யமானது எடுக்கப்பட்டது. ப்ரஹ்மதேவருடைய புத்திரராகிய நீரும் ஸகல காமங்களையும் நிவர்த்திக்கும் இதனை ச்ரத்தையுடன் மனத்தில் வைத்துக் கொண்டு லோகங்களில் ஸஞ்சரியும். (ப்ரம்ஹதாயாத என்பதற்கு எளிதில் ப்ரம்ஹத்தை அடைந்தவர்) கேட்ட விஷயத்தை மனதில் தரிக்கும் சாமார்த்தியமுள்ளவரும், கிருத கிருத்தியரும், இந்திரியத்தை ஜயித்தவர்களின் வ்ரதம் போன்ற விரதமுள்ளவருமான நாரதர், குருவாகிய நாராயண மஹர்ஷியால் சொல்லப்பட்டதைக் கேட்டு, அவரை நோக்கி "சுத்தமான கீர்த்தியுள்ள பகவானாகிய அந்தக் கிருஷ்ணனை நமஸ்கரிக்கிறேன். அந்தப் பகவான் ஸகல பிராணிகளுக்கும் அபயத்தை கொடுப்பதற்காக அம்சாவதாரத்தை அடைகிறார். ஸகல பிராணி களுக்கும் மோக்ஷத்தைக் கொடுப்பதற்காகச் சுத்தமான வித்யைகளைத் தரிப்பவரும், அவைகளை அபேக்ஷித்த வர்களுக்கு உபதேசித்து ஸுகப்படுத்துகிறவருமான உம்மை நமஸ்கரிக்கிறேன்" என்று அவரிடத்திலும், சுத்த சித்தர்களான அவருடைய சிஷ்யர்களிடத்திலும் விடைபெற்று, என்னுடைய பிதாவாகிய வியாஸ ருடைய ஆசிரமஞ்சென்றார். அவ்விடத்தில் பகவானாகிய வ்யாஸர் ஆஸனங் கொடுத்து நாரதரைப் பூஜித்தார். நாரதர் ஆஸனத்தில் உட்கார்ந்து நாராயண மஹர் ஷியின் முகமாகக் கேட்டபடி சொன்னார். ஓ அரசனே! நீர் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லப்





பட்டது. இதனைத் தெரிந்துகொண்டால் ப்ரம்ஹம் குறிப்பிட முடியாததானாலும், குணங்களற்றதானாலும் அதை வேதங்கள் நிரூபிக்கின்றனவென்று ஸம்சய மில்லாமல் தெரிந்து கொள்வான்.

51. எவர் இந்த ஸகல லோகங்களுக்கும் ஸிருஷ்டி பரிபாலனம், ஸம்ஹாரம் இவைகளைப் பற்றி ஆலோசிப்பவரோ, (ஜகத்திற்கு நிமித்த காரணரென்று காட்டப்பட்டது ) எவர் இந்த ஜகத்தைப் படைப்பது, பரிபாலிப்பது, ஸம்ஹரிப்பது இவைகளைச் செய்கிறாரோ (உபாதான காரணமென்று காட்டப்பட்டது) எவர் ப்ரகிருதி புருஷர்களுக்கும் காரணமோ, இந்த ஜகத்தைப் படைத்து அதில் ஜீவனுடன் ப்ரவேசித்து அந்தச் சரீரத்தை அவனுக்கு உபயோகஸ்தானமாகச் செய்து அவனைக் காப்பாற்றுகிறாரோ, எவரை அடைந்த ஜீவன் கார்யம், காரணம் என்ற பேதமாகிய அவித்தையை விட்டுவிடுகிறானோ, தூங்குகிறவன் சரீரத்தை விட்டு விடுகிறானல்லவா (தூங்குகிறவனுக்குத் தேஹமிருப்பதாக மற்றவர்கள் பார்க்கிறார்களே யொழிய அவன் தான் சரீரமுள்ளவனென்று எப்படி நினைக்கவில்லையோ, அப்படி ஜீவன் முக்தனுக்குச் சரீரமிருந்தாலும் அவனுக்கு அதில் அபிமானமில்லை யென்று கருத்து) அப்படிப்பட்ட ஈச்வரனும் ஸ்வரூபமாக இருப்பதால் மாயையை திரஸ் கரித்தவரும், ஸகல பயத்தையும் நிவர்த்திப்பவருமான ஸ்ரீ ஹரியை எப்பொழுதும் த்யானஞ் செய்ய வேண்டும்.



## அத்தியாயம்–88

### விருகாஸுரன் வரம்பெற்றது.

பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி "ஓ ப்ராஹ்மண! பரமசிவன் விஷய போகங்களில் ஆசையில்லாமல் (ஸ்மசானத்தில் வஸிப்பது, வஸ்திர மில்லாமலிருப்பது, பிக்ஷை வாங்குவது) இருக்கிறார். மஹாவிஷ்ணுவோ லக்ஷ்மீபதியாக பீதாம்பரம் முதலிய வைகளைத் தரித்துக் கொண்டிருக்கிறார். இப்படி இவ்விரண்டு தேவர்களுடைய ஸ்வபாவம் ஒன்றுக் கொன்று வேறுபாடுள்ளதாகவிருக்கிறது. தேவர்கள் அஸுரர்கள் மனிதர்கள் ஆகிய இவர்களுக்குள் எவர்கள் பரமசிவனை யுபாஸிக்கிறார்களோ அவர்கள் பெரும்பாலும் ஐச்வர்யத்தையடைகிறார்கள். மஹா விஷ்ணுவை உபாஸிப்பவர்கள் தரித்திரர்களாகவிருக் கிறார்கள். அதன் காரணத்தைச் சொல்லவேண்டும் என்று கேட்டார். (துரித்ரனான தேவதையை உபாஸிப்பவர்கள் பணக்காரர்களாகவும்; 'பணமுள்ள தேவதையை உபாஸிப்பவர்கள் ஏழைகளாகவுமிருப்பது எப்படிப் பொருந்துமென்று தாத்பர்யம்.)

2–7. அதனைக்கேட்ட சுகர் அரசனை நோக்கி "வைகாரிகம்! தைஜஸம், தாமஸம், என்று அஹங்காரம் முவ்வகையானது. அந்த முவ்வகை லிங்கத்துடனும், சக்தியுடனும், பரமசிவன் சேர்ந்திருப்பதால் அவர் குணஸம்பந்தமுள்ளவர். அதிலிருந்து பதினாறு விகாரங்கள் உண்டாயின. அவைகளில் எதை யுபாஸிக்கிறானோ அதற்குத் தகுதியான ஐச்வர்யத்தை யடைகிறான். மஹாவிஷ்ணுவோ குணஸம்பந்த





மில்லாதவர். எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாகவிருப்பவர்; ப்ருகிருதையைவிட மேலான புருஷர்; அவரை யுபாஸிக்கும் புருஷன் குணசம்பந்தமில்லாதவனாக ஆகிறான். உம்முடைய பிதாமஹராகிய தர்மபுத்திரர் அச்வமேத யாகங்களைச் செய்து பகவத் விஷயமான தர்மங்களைக்கேட்டு இந்த ஸம்சயத்தைப்பற்றியும் ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்துக்கேட்டார். மனிதர்களுக்கு க்ஷேமத்தைச் செய்வதற்காக யதுகுலத்தில் அவதரித்தி ருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் அதனைக்கேட்டு பதில் சொன்னார். அதனை உமக்கு சொல்லுகிறேன். எப்படியென்றால்:–

8–39. "எவனுக்கு அனுக்ரஹஞ் செய்யவேண்டு மென்று நினைக்கிறேனோ, அவனுடைய பணத்தை அபஹரிப்பேன். அதனால் மிகவும் துக்கித்தவன் போலிருக்கிற புருஷனைப் பந்துக்கள் இவர் ஏழை யென்று விட்டுவிடுவார்கள். மேலுமவன் பணம் சம்பாதிப்பதற்காக முயன்றும் அந்த முயற்சி வீணாகி அதனால் வைராக்கியத்தையடைவான். பின்பு என்னுடைய பக்தர்களான ஸாதுக்களுடன் ஸ்நேஹம் செய்துகொள்வான். அதன்பின் அவனை அனுக்கிர ஹிப்பேன். ஜனங்கள் பரப்ரஹ்மமும், சித்ஸ்வரூபியும், ஸூக்ஷ்மஸ்வரூபியும், ஆராதிக்க முடியாதவருமான என்னை ஸேவியாமல் மற்ற தேவதைகளை யுபாஸிக் கிறார்கள். பின்பு அவர்கள் சீக்கிரத்தில் ஸந்தோஷப் படுகின்ற தேவர்களை யுபாஸித்து ஐச்வர்யத்தை யடைந்து அதனால் கர்வங்கொண்டு, வரங்கொடுத்த தேவர்களை மறந்து விடுவதுமின்றி, அவர்களை லக்ஷ்யம் செய்கிறதுமில்லை. ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் முதலியவர்கள் சாபம் கொடுப்பதற்கும் அனுக்கிரஹம்

செய்வதற்கும் வல்லமையுள்ளவர்கள்; ஆனாலும் பிரஹ்மதேவனும், பரமசிவனும் சீக்கிரத்தில் கோபங் கொண்டு சாபங் கொடுப்பவர்களுமாகவிருக்கிறார்கள். மஹாவிஷ்ணுவோ அப்படிச் செய்கிறதில்லை. முன்னொருகால் பரமசிவன் விருகனென்ற அஸுரனுக்கு வரங்கொடுத்து மிகவும் ஸங்கடத்தை யடைந்தார். அந்த இதிஹாஸத்தை இந்த விஷயத்தில் உதாஹரணமாகச் சொல்லுகிறேன். எப்படியெனில் சகுனியென்பவனுடைய புத்திரனாகிய விருகனென்ற அஸுரன் மார்க்கத்தில் நாரதரை ஸந்தித்து அவரை நோக்கி "ஓ ப்ராஹ்மண! ப்ரஹ்மா, விஷ்ணு பரமசிவன் இந்த மூன்று தேவர்களில் சீக்கிரமாக ஸந்தோஷப்படுகிறவர் யார்? அதனைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டான்.

அந்த துஷ்டனுடைய வார்த்தையைக்கேட்டு நாரதர் "மூன்று தேவர்களில் பரமசிவன் ஸ்வல்பமாக யுபாஸிக்கப்பட்டாலும் ஸந்தோஷத்தையடைவார். அவருக்கு ஸ்வல்ப அபராதம் செய்தாலும் சீக்கிரத்தில் கோபித்துக்கொள்வார். ஆனதால் சீக்கிரத்தில் பயனையடைய வேண்டுமானால் பரமசிவனை யுபாஸிக்க வேண்டும். அந்தப் பரமசினை ராவணன், பாணாசுரன் இவர்கள் வந்திகள்போல ஸ்தோத்திரம் செய்தார்கள். அதனால் அவர் ஸந்தோஷமடைந்து ஒப்பற்ற ஐச்வர்யத்தை அவர்களுக்குக் கொடுத்தார். பின்பு அதனால் மிக்க ஸங்கடத்தையுமடைந்தார், என்று சொன்னார். (ராவணன் பரமசிவனிடம் வரம்பெற்று கைலாஸ பர்வதத்தை அசைத்தான். பாணாஸுரன் தன்னுடைய பட்டணத்திற்குப் பரம சிவனைக் காவலாக வைத்துக்கொண்டான்; அதனால்





பரமசிவனுக்கு ஸங்கடம் நேர்ந்ததென்று கருத்து) அதனைக் கேட்ட அஸுரன் கேதார ஷேத்திரஞ் சென்று தன்னுடைய மாம்ஸத்தை அக்னியில் ஹோமஞ்செய்து பரமசிவனை யுபாஸித்தான். இப்படி ஆறு நாட்கள் சென்றும் பரமசிவன் ப்ரத்யக்ஷம் ஆகாததால், மிகவும் நிர்வேதத்தையடைந்து, அஸுரன் அந்த தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, ஏழாவது நாளில் தன்னுடைய தலையை வெட்டிக்கொள்ள ஆரம்பித்தான். அப்பொழுது மிக்க கருணையுள்ளவரான பரமசிவன் ஸந்தோஷத்தையடைந்து, அக்னிபோன்ற தேஜஸ்ஸுள்ளவராகி, அக்னி குண்டத்திலிருந்து கிளம்பி அஸுரனுடைய இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு தலையை வெட்டாமலிருக்கும்படி தடுத்தார்.

அந்த பகவானுடைய திவ்ய ஹஸ்தம்பட்டதினால் அவனுடைய சரீரம் பூர்ணமாயிற்று. அப்பொழுது பரமசிவன் அஸுரனை நோக்கி "நான் ஜலத்தைக் கொடுத்து யுபாஸிக்கும் மனிதர்களிடத்திலும் ஸந்தோஷப்படுகிறவன். அப்படியிருக்க என்னை ஸந்தோஷிக்கச் செய்வதற்காக உன்னுடைய சரீரத்தை ஏன் வீணில் கஷ்டப்படுத்துகிறாய்? இதுவரையில் செய்த தபம் போதும். வேண்டியதைக்கேள் கொடுக்கிறேன் என்றார்:– அதனைக்கேட்ட பாபியான அந்த அஸுரன் பரமசிவனை நோக்கி "எவனுடைய தலையில் நான் கையை வைக்கிறேனோ, அவன் நாசத்தை அடையவேண்டும்" என்று ப்ராணிகளுக்கு பயத்தைக் கொடுக்கக்கூடிய வரத்தைக் கேட்டான், அதனைக்கேட்டுப் பரமசிவன் வருத்தமடைந்து வெளியில் சிரித்துக்கொண்டு ஸர்ப்பத்திற்குப் பாலைக்

கொடுத்தார். பின்பு அவர் ஆகட்டுமென்று அந்த அஸுரனுக்கு வரங்கொடுத்தார். பின்பு அந்த அஸுரன் பரமசிவனால் கொடுக்கபட்ட வரம் உண்மையானதா அல்லவாவென்று பரீக்ஷிப்பதற்காகப் பரமசிவனுடைய தலையில் கையை வைப்பதற்காக யத்தனித்தான் அதனைக்கண்டு பரமசிவன் பயந்து ஓடினார். அஸுரன் பின் தொடர்ந்து சென்றான். பூமி முழுவதும் அலைந்தார் திக்குகளில் எல்லை வரையில் ஓடினார். அஸுரனும் பின் தொடர்ந்து சென்றான். இந்திரன் முதலிய தேவர்கள் அதற்குச் செய்யவேண்டியது இன்னதென்று அறியாமல் மௌனிகளாகவிருந்தார்கள். அப்பொழுது பரமசிவன் வைகுண்டஞ்சென்றார். அவ்விடத்தில் ஸ்ரீமந் நாராயணன் வஸிக்கிறார்.

அவர் விஷயங்களில் ஆசையற்ற சாந்தர்களான யோகிகளுக்குக்கதி. அந்த வைகுண்டஞ் சென்றவர் களுக்கு ஸம்ஸார ஸம்பந்தமில்லை. அப்பொழுது ஸ்ரீமஹாவிஷ்ணு விருகாஸுரனையும், அப்படிப்பட்ட துக்கமுள்ள பரமசிவனையும், வெகு தூரத்திலேயே பார்த்துத் தமது யோக மாயையால் ப்ரஹ்மசாரி வேடங்கொண்டு அக்னிபோன்ற தேஜஸுடன் ஜ்வலித்துக்கொண்டு மேகலை, அஜினம், தண்டம் ஜபமாலை இவைகளைத் தரித்து அஸுரனுக்கு எதிரில் சென்று, தர்பத்தைக் கையில் வைத்துக் கொண்டு, அவனை நமஸ்கரித்து “ஓ சகுனியின் புத்திர! நீ வெகுதூரம் வந்ததால் களைத்திருக்கிறாய் கொஞ்சநேரம் ச்ரமத்தை நிவர்த்தித்துக்கொள். ஸகல ப்ராணிகளுக்கும் சரீரமானது ஸகல புருஷார்த்தங் களைக் கொடுக்கக்கூடியது. (அதனால் சரீரத்தை





ச்ரமப்படுத்த வேண்டாமென்று கருத்து) ஸகல ஜனங்களும் பிறருடைய ஸஹாயத்தால் காரியத்தை முடித்துக்கொள்ள விரும்புகிறார்கள். ஆனதால் உன்னுடைய அபிப்ராயத்தை என்னிடம் சொல்லக் கூடுமானால் சொல்லு” என்று கேட்டார். அதனைக் கேட்ட அஸுரன் பகவானுடைய அமிருத மயமான வார்த்தையால் ச்ரமமற்றவனாகி பரமசிவனிடம் வரம் பெற்ற விஷயத்தைச் சொன்னான். அதனைக்கேட்ட அந்த ப்ரஹ்மசாரி அஸுரனை நோக்கி “பரம சிவனுடைய வார்த்தையை நான் நம்பமாட்டேன். அவர் தக்ஷனுடைய சாபத்தால் பிசாசத் தன்மையை அடைந்து பிரதேங்களுக்கும், பிசாசங்களுக்கும், அதிபதியாகவிருக்கிறார்.

ஓ அஸுரச்ரேஷ்ட! அவருடைய வார்த்தையில் உனக்கு நம்பிக்கையிருக்குமானால் உன்னுடைய தலை யில் கையை வைத்துப்பார். பரமசிவன் வார்த்தை பொய்யாக விருக்குமானால் இப்படி திரும்பவும் பொய் சொல்லாமலிருக்கும்படி பொய் சொல்பவரான பரமசிவனை கொன்றுவிடலாம்" என்று மனோஹரங் களான வார்த்தைகளைப் பேசி அவனுடைய புத்தியைக்கலைத்தார். துர்புத்தியுள்ளவனாகிய அஸுரன் அந்த வார்த்தைக்கிணங்கி தன்னுடைய தலையில் தன் கையை வைத்துக்கொண்டான். உடனே வஜ்ரத்தாலடிக்கப்பட்டாற் போல தலை உடைந்து கீழேவிழுந்தான். அப்பொழுது ஆகாயத்தில் ஜயவென்றும், நமஸ்காரமென்றும், நல்லது என்றும் சப்தமுண்டாயிற்று. தேவர்களும், மஹர்ஷிகளும், பிதிருக்களும், கந்தர்வர்களும், புஷ்பங்களை வர்ஷித் தார்கள். பரமசிவனுக்கு ஆபத்து நீங்கிற்று. ஸங்கடம்

நீங்கிய பரமசிவனை நோக்கி ஸ்ரீ மஹாவிஷ்ணு "மஹாதேவ! இந்தப்பாபியான அஸுரன் தனது பாபத்தால் நாசமடைந்தான். பெரியோர்களுக்கு அபராதஞ்செய்து எவன் க்ஷேமத்தை அடைவான்? அப்படியிருக்க ஜகத்திற்குக் குருவும் அதிபதியுமான உம்மிடத்தில் குற்றஞ்செய்தவன் க்ஷேமத்தை அடைவானா" என்றார்.

40. வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத அளவற்ற சக்தியுள்ள பரமாத்மாவாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணு விருகாஸுரனைக் கொன்று பரமசிவனுக்கு நேர்ந்த ஆபத்தை நிவர்த்தித்தான். இச்சரிதத்தை எவன் சொல்லுகிறானோ, கேட்கிறானோ அவனுக்கு ஸம்ஸார பயமாவது, சத்ருபயமாவது நேரிடுகிறதில்லை.





# அத்தியாயம்–89

## ப்ருகு மஹர்ஷி தேவர்களில் விஷ்ணு மேலானவரென்று கண்டுபிடித்தது

முன்னொருகால் ஸரஸ்வதி நதிக்கரையில் மஹர்ஷிகள், ஸத்ரஞ் செய்தார்கள் (யாகவிசேஷம்) அப்பொழுது ப்ரஹ்மா, விஷ்ணு பரமசிவன் ஆகிய மூன்று தேவர்களுக்குட் சிறந்தவர் யார்? என்று விவாதமுண்டாயிற்று. அதனை தெரிந்து வருவதற்காக ப்ரஹ்மதேவருடைய புத்திரராகிய ப்ருகு மஹர்ஷியை அங்குள்ளவர்கள் அனுப்பினார்கள். அவர் ப்ரஹ்ம தேவருடைய மஹிமையை பரீக்ஷிப்பதற்காக அவரை துதிக்காமல் மௌனமாகவிருந்தார். அதனால் ப்ரஹ்ம தேவர் கோபங்கொண்டு ஜ்வலித்தார்; ஆனாலும் தம்மிடத்திலுண்டான கோபாக்னியைத் தமது தேஜஸ்ஸால் அடக்கிக் கொண்டார்.

அது ஜலத்தால் அக்னியை அணைத்தாற் போலிருந்தது. பின்பு மஹர்ஷி கைலாசஞ்சென்றார். அவரைக்கண்ட பரமசிவன் தமக்கு ஸஹோதரராகிய மஹர்ஷியை ஆலிங்கனஞ் செய்துகொள்ள யத்தனித்தார். அப்பொழுது மஹர்ஷி பரமசிவனை நோக்கி "நீர் அமங்களமான கார்யங்களை செய்கிறீர், அதனால் உமக்கு ஆலிங்கனம் கொடுக்கமாட்டேன்" என்றார். அதனைக்கேட்டுப் பரமசிவன் கோபங்கொண்டு ஜ்வலிக்கும் நேத்திரமுள்ளவராகி சூலமென்ற ஆயுதத்தையெடுத்து மஹர்ஷியைக் கொல்லவாரம்பித்தார். அதனைக்கண்ணுற்ற பார்வதி பரமசிவனுடைய பாதங்களில் நமஸ்கரித்து நல்வார்த்தை சொல்லி

ஸமாதானஞ் செய்தாள். இப்படி மஹர்ஷி மிகவும் ச்ரமப்பட்டுப் பரமசிவனிடமிருந்து விடுபட்டு வைகுண்டஞ் சென்றார் அவ்விடத்தில் லக்ஷ்மீதேவியின் மடியில் ஸ்ரீமந் நாராயணன் படுத்திருக்கக் கண்டார் பின்பு மஹர்ஷி அந்த நாராயணனை காலால் மார்பில் உதைத்தார்; அதன்பின் ஸாதுக்களுக்கு ஆச்ரயமான ஸ்ரீமஹாவிஷ்ணு தம்முடைய படுக்கையி லிருந்து இறங்கி மஹர்ஷியை நமஸ்கரித்து "ஓ ப்ராஹ்மண நல்வரவா? இந்த ஆஸனத்தில் க்ஷண நேரம் உட்காரும்; நீர் வந்தது எனக்குத்தெரியாததால் உமக்கு மரியாதை செய்யத்தவறினேன். அந்தக் குற்றத்தை மன்னிக்கவேண்டும். உம்முடைய பாத தீர்த்தம் புண்ணிய தீர்த்தங்களையும் பரிசுத்தப்படுத்து கிறது. அப்படிப்பட்ட பாததூளியால் என்னையும், என்னைச்சார்ந்த லோகபாலர்களையும் பரிசுத்த படுத்தும். இன்றைய தினம் நான் லக்ஷ்மீதேவிக்கு முக்கிய ஸ்தானமாக ஆனேன், உம்முடைய பாதம் பட்டதால் பரிசுத்தமாகவிருக்கும் என்னுடைய மார்பில் லக்ஷ்மீதேவி இனி வஸிப்பாள்" என்றார்.

13–21. இம்மாதிரி கம்பீரமான மஹா விஷ்ணு வின் வார்த்தையைக்கேட்டு ஸந்தோஷத்தை அடைந்து மிக்க பக்தியால் ஆனந்தக் கண்ணீரைப்பெருக்கி திரும்பவும் ஸரஸ்வதி நதிக்கரை சென்று தம்மால் அனுபவிக்கப்பட்ட விஷயங்களை மஹர்ஷிகளுக்குத் தெரிவித்தார். அதனைக்கேட்டு மஹர்ஷிகள் ஆச்சரி யத்தை அடைந்து ஸந்தேஹமற்றவர்களாகி ஸ்ரீ மஹா விஷ்ணுவே மேலானவரென்று நினைத்தார்கள். "அவரிடத்தில் சாந்தி (பொறுமை) தர்மம், ஸ்வரூப ஞானம் நான்கு வகையான வைராக்கியம், எட்டு





வகையான ஐச்வர்யம், பாபத்தை நிவர்த்திக்கக்கூடிய கீர்த்தி, ஆகிய இவைகளிருக்கின்றன. அவரை ஸேவித் தவர்களுக்கு பயமில்லை. மேலுமவர் இந்திரியங்களை அடக்கி சாந்தர்களாய் ஸமபுத்தியுள்ளவர்களாகி ஒன்றிலும் பற்றுதலில்லாமலிருக்கும் ஸாதுக்களுக்குக் கதியாகவிருப்பவர். அவருக்கு ஸத்வமே இஷ்டமான சரீரம்; ப்ராஹ்மணர்கள் இஷ்டதைவம், சாந்தர்களும், வைராக்கிமுள்ளவர்களுமான ஸாதுக்கள் அவரை யுபாஸிப்பார். குணமுள்ளமாயையால் ஸிருஷ்டிக்கப் பட்ட ராக்ஷஸர்கள், அஸுரர்கள், தேவர்கள் ஆகிய மூவர்களும் அவருக்கு சரீரம். அவைகளில் ஸத்வ குணமே புருஷார்த்தத்தைக் கொடுக்கக்கூடியது" என்று ஸரஸ்வதி நதிக்கரையிலுள்ள மஹர்ஷிகள் தெரிந்துகொண்டு மற்றவர்களுக்கும் இதனைத் தெரிவித்து புருஷோத்தமராகிய நாராயணருடைய பாதாரவிந்தங்களை ஸேவித்து அவருடைய பாதத்தை அடைந்தார்கள். இப்படி சுகமஹர்ஷியின் முகமாகிய தாமரை மலரிலிருந்து பெருகிய அமிருதமும், ஸம்ஸார தாபத்தை நிவர்த்திப்பதுமான பரமபுருஷனுடைய சரிதத்தை எவன் இருகாதுகளால் கேட்கிறானோ, அவன் ஸம்ஸாரதாபத்தை நிவர்த்தித்துக் கொள்வான்.

22–25. ஒரு சமயம் த்வாரகா நகரத்தில் ஒரு ப்ராஹ்மணனுடைய பத்னி ப்ரஸவித்தாள். அந்தக் குழந்தை பூமியில் விழுந்தவுடன் மரணமடைந்தது. அந்த ப்ராஹ்மணன். அந்தக் குழந்தையை யெடுத்துக் கொண்டு கிருஷ்ணனுடைய அரண்மனை வாசற்படி சென்று மிக்க தீனமான மனத்துடன் "ப்ராஹ்மண த்வேஷியும், வஞ்சகனும், லுப்தனும் ஸதா விஷயங் களிலேயே நோக்கமுள்ளவனுமாகிய அரசனுடைய

குற்றத்தால் என்னுடைய குழந்தை மரணமடைந்தது. பிறருக்கு ஹிம்ஸை செய்வதை விளையாட்டாக கொண்டவனும், துஷ்ட ஸ்வபாவமுள்ளவனும், இந்திரியங்களை ஜயிக்காதவனுமான அரசனுடைய ராஜ்யத்திலிருக்கும் ஜனங்கள் ஏழைகளாகி மிக்க துக்கத்தை அடைவார்கள்" என்று அந்த ப்ராஹ்மணன் இம்மாதிரி மூன்றுதரம் சொல்லி அழுதார்.

27 – 44. அதனைக்கேட்ட அர்ஜுனர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய முன்பாக ப்ராஹ்மணனை நோக்கி "ஓ ப்ராஹ்மண! உம்முடைய வாஸஸ்தலமான இவ்விடத்தில் தனுஸ்ஸை தரிக்கும் க்ஷத்திரியன் என்பவனே இல்லையா? ப்ராஹ்மணர்களால் யாகஞ் செய்யமுடியும்; எவர்களுடைய ராஜ்யத்திலுள்ள ப்ரஜைகள் பணமில்லாமல் ஏழைகளாகவும், பத்னி யில்லாதவர்களும், புத்திரனில்லாதவர்களாகவுமிருக் கிறார்களோ, அவர்கள் அரசர்களல்ல; வேஷதாரிகள் போல தங்கள் வயிற்றை நிரப்பிக்கொள்வார்கள்; ஆனதால் மிக்க தீனர்களான உங்களுடைய ப்ரஜைகளை நான் காப்பாற்றுகிறேன். அப்படிச் செய்யாவிடில் அக்னி ப்ரவேசஞ்செய்வேன்" என்றார். அதனைக்கேட்ட ப்ராஹ்மணன் அர்ஜுனனை நோக்கி "பலராமன், ஸ்ரீகிருஷ்ணன், ப்ரத்யும்னர், அநிருத்தர் ஆகிய இவர்களால் எது காப்பாற்றமுடியவில்லையோ, அதனை நீ எப்படிக்காப்பாற்றுவாய்? ஜகதீசர்களால் செய்யமுடியாத கார்யத்தைச் செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்வது மூடத்தனம். ஆனதால் உன் வார்த்தையை நம்பமாட்டேன்" என்றார். அதனைக்கேட்ட அர்ஜுனர் "ஓ ப்ராஹ்மண! நான் பலராமனல்ல; ஸ்ரீ கிருஷ்ணனுமல்ல; ப்ரத்யும்னனுமல்ல; நான் குந்தியின்





புத்திரனாகிய அர்ஜுனன். என்னுடைய வில்லிற்கு காண்டீவமென்று பெயர். யுத்தத்தில் என்னுடைய பலத்தைப் பார்த்து பரமசிவன் ஸந்தோஷித்தார், அப்படிப்பட்ட என் பலத்தை அலக்ஷ்யஞ் செய்ய வேண்டாம். யமனை ஜயித்து உம்முடைய குழந்தையை திருப்பிக்கொண்டு வருகிறேன்" என்றார். அதனைக் கேட்டு ப்ராஹ்மணன் அர்ஜுனனை மிக்கபலசாலி யென்று நம்பி தம்முடைய வீடு சென்றார். பின்பு அந்த ப்ராஹ்மணனுடைய பத்தினிக்கு ப்ரஸவகாலம் நேர்ந்தபொழுது ப்ராஹ்மணன் அர்ஜுனரிடம் வந்து குழந்தை ஜனிக்கப்போகிறது, அதனைக்காப்பாற்றும் என்று கேட்டுகொண்டான்.

அப்பொழுது அர்ஜுனர் ஆசமனஞ்செய்து சுத்தராக பரமசிவனை நமஸ்கரித்து காண்டீவத்தை வளைத்து திவ்யமாகிய அஸ்திரங்களை ஸ்மரித்து அநேக அஸ்திரங்களாலும், பாணங்களாலும், குறுக்கா கவும், மேலும் கீழுமாகவும் ப்ரஸவகிருஹத்தை மறைத்தார். (பாணக்கூடு கட்டினார்.) அப்பொழுது ப்ராம்ஹண ஸ்த்ரீ ப்ரஸவித்தாள். குழந்தை அழுது கொண்டு ஜனித்தது. உடனே அது கண்ணுக்குப் புலப்படாமலே ஆகாயஞ்சென்றது. அப்பொழுது ப்ராஹ்மணன் ஸ்ரீ கிருஷ்ணன் முன்பாக அர்ஜுனரை நிந்தித்து "என்னுடைய மூடத்தன்மையைப் பாருங்கள். பராக்கிரமம் இல்லாதவனுடைய வார்த்தையை நம்பினேன் ப்ரத்யும்னர், அனிருத்தர், பலராமன், ஸ்ரீ கிருஷ்ணன் இவர்களால் காப்பாற்ற முடியாததை வேறு யார் காப்பாற்றப்போகிறார்? தைவத்தால் கொடுக்கப் பட்டதை எவன் மூடத்தன்மையால் காப்பாற்றுவதாக நினைக்கிறானோ, அந்த பொய் பேசும் அர்ஜுனனுடைய

வில்லையும் நிந்திக்கவேண்டும்” என்று சொன்னார். அதனைக்கேட்ட அர்ஜுனர் தம்முடைய வித்யையின் மஹிமையால் ஸம்யமனி பட்டணஞ்சென்றார். அவ்விடத்தில் யமனுடைய ஸமீபத்தில் அந்த ப்ராஹ்மணக் குழந்தையில்லை. அதன்பின் அவ்விடமிருந்து இந்திரலோகஞ் சென்றார். அவ்விடத்திலும் அந்தக் குழந்தையில்லை. அவ்விடமிருந்து அக்னி திக்கு நிருதி திக்கு, மேற்கு, வடக்கு முதலிய திக்குகளில் சென்று அவ்விடங்களில் அந்தக் குழந்தையைக் காணாமல் பாதாலம் முதலிய ஸகல லோகங்களிலும் ஆயுதபாணியாக ஸஞ்சரித்தும், ப்ராஹ்மணக்குழந்தை அகப்படவில்லை. அதனால் தம்முடைய ப்ரதிஜ்ஞை நிறைவேறாமல் அக்னி ப்ரவேசஞ்செய்ய முயன்றார்.

45–60. அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனரைத் தடுத்து “ப்ராஹ்மணனுடைய புத்திரர்களை உனக்குக் காண்பிக்கிறேன். என்னை அலக்ஷ்யஞ் செய்யவேண்டாம்; எவர்கள் நம்மை நிந்திக்கிறார்களோ, அவர்களே நம்முடைய கீர்த்தியைப்பரவச் செய்வார்கள்” என்று சொல்லி திவ்யமான தம்முடைய ரதத்தின் மீதேறி மேற்கு திக்கை நோக்கி சென்றார். ஏழுமலைகளிலுள்ள ஏழுத்வீபங்களையும், ஏழு ஸமுத்ரங்களையும், லோக லோகமென்ற மலையையும், தாண்டி மிகுந்த இருளுள்ளவிடஞ்சென்றார். அந்த இருளில் ஸைன்யம், ஸுக்ரீவம், மேகபுஷ்பம், வலாஹகம் என்ற குதிரைகள் நடக்கமுடியாமலிருந்தன. அதனைக்கண்ணுற்ற யோகேசர்களுக்குமதிபதியான பகவான் ஆயிரம் ஸூரியன் போல் ப்ரகாசிக்கும் சக்கரத்தை முன் நடத்தினார். அந்த சக்கரமானது வில்லில் பூட்டி





ப்ரயோகிக்கப்பட்ட ராமனுடைய பாணம் ஸைன்யத்தில் ப்ரவேசித்தாற் போல் ப்ரகிருதி பரிணாம ஸ்வரூபமும், கோரமும், ஆகாயத்தை மறைக்கக் கூடியதுமான மிகுந்த இருளை நிவர்த்தித்துக் கொண்டு, மனம் போன்ற வேகத்துடன் முன்னடந்தது. சக்கரம்போகிற மார்க்கமாக அந்த இருளைக்கடந்து அதற்கு வெகு தூரத்திலிருக்கும் பகவானுடைய தேஜஸை நோக்கி கிருஷ்ணன் செல்லுவதை கண்ணுற்ற அர்ஜுனன் கண்களை மூடிக்கொண்டார். அதன் பின் கிருஷ்ணன் ஜலத்தில் ப்ரவேசித்தார். அதில் காற்றினால் அதிக அலைகள் அலைந்து கொண்டிருந்தன. அவ்விடத்தில் அத்புதமான ஒரு கிருஹத்தைக் கண்டார்.

அவருடைய ஆயிரம் படங்களிலிருக்கும் ரத்தினங்களுடைய காந்திகளால் அந்த கிருஹம் பிரகாசித்தது. இரண்டு ஆயிரம் கண்களால் அந்த ஆதிசேஷன் ப்ரகாசித்தார். மேலுமவர் வெள்ளி மலைப்போல வெளுத்த சரீரமுள்ளவராக விருந்தும் அவருடைய கழுத்தும், நாக்குகளும் கருமையாகவிருந்தன. அப்படிப் பட்ட ஆதிசேஷனுடைய உடலில் புருஷோத்தமராகிய நாராயணன் உட்கார்ந்திருந்தார். அவர் மிக்க மஹிமையுள்ளவர், மேகம் போன்ற கருத்த திருமேனியுள்ளவர் பீதாம்பரத்ததைதரித்தவர், ப்ரஸன்னமான முகமுள்ளவர்; அழகிய நீண்ட கண்களுமுள்ளவர், கிரீடத்திலுள்ள மேலான ரத்தினங்களுடைய காந்தியால் அழகான தலை மயிருள்ளவர்; தொங்குகின்ற எட்டு கைகளுள்ளவர்; கௌஸ்துபத்தை தரித்தவர்; ஸ்ரீ வத்ஸமென்ற அடையாளமுள்ளவர்; வனமாலையுள்ளவர்; “ப்ரஜாபதிகளுக்கும் அதிபதி, மேலும் ஸுநந்தர், நந்தர் முதலிய பார்ஷத கணங்களும், புஷ்டி

ஸ்ரீ, கீர்த்தி, மாயை, சரீரமுள்ள சக்கரம் முதலிய ஆயுதங்கள், அணிமா, முதலிய விபூதிகள், ஆகிய இவைகள் அவரை யுபாஸிக்கின்றன. அப்படிப்பட்ட பகவானைக்கண்டு ஸ்ரீ கிருஷ்ணன் நமஸ்கரித்தார். அர்ஜுனரும் மிக்க நடுக்கத்துடன் நமஸ்காரஞ் செய்தார். அஞ்ஜலி செய்துகொண்டு நிற்கும் கிருஷ்ணனையும், அர்ஜுனரையும் நோக்கி அந்தப் பகவான் "உங்களைப்பார்ப்பதற்காக ப்ராஹ்மணனுடைய குழந்தைகளை இவ்விடம் வரவழைத்தேன். நீங்கள் என்னுடைய அம்சம். தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக பூமியில் அவதரித்தவர்கள். பூமிக்குச் சுமையாகவிருக் கும் அரசர்களை சீக்கிரத்தில் கொன்று என்னுடைய ஸமீபம் வரவேண்டும். நீங்கள் பூர்ண காமர்கள் (தர்மத்தையனுஷ்டித்தாலும் உங்களுக்கு அதனால் மேன்மையில்லை. அனுஷ்டிக்காவிடினும் பாபமில்லை.) ஆனாலும் நீங்கள் தர்மத்தை அனுஷ்டித்துப் பிறரையும் அனுஷ்டிக்கும்படி செய்யுங்கள்" என்று கம்பீரமாகச் சொன்னார்.

61–66. அதனைக்கேட்டு ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ஜுனரும் அப்படியே செய்கிறோம் என்று ஒப்புக் கொண்டு மிக்க ஸந்தோஷத்துடன் த்வாரகா நகரம் வந்து ப்ராஹ்மணனிடம் குழந்தைகளைக் கொடுத்தார் கள். அப்பொழுது அர்ஜுனர் விஷ்ணுவின் மஹிமை யைப்பார்த்து மிக்க ஆச்சர்யமடைந்து லோகத்தில் ஜனங்களிடத்தில் காணப்படும் ஸ்வல்பமஹிமையையும் கிருஷ்ணனுடைய அனுகிரஹத்தால் ஏற்பட்டதென்று நினைத்தார். இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் அத்புதமான அநேககாரியங்களைச் செய்தும் அநேக யாகங்களைச் செய்துகொண்டும் விஷயங்களை அனுசரித்துக்





கொண்டிருந்தார். மேலும் அவர் அந்தந்தகாலத்தில் ப்ராஹ்மணர்கள் முதலிய ஜனங்களுக்கு இஷ்டத்தை கொடுத்து இந்திரன் போல ஸம்ரக்ஷித்தார். துஷ்டர்களை அர்ஜுனன் முதலியவர்களால் நாசஞ் செய்தார். தர்மபுத்திரர் முதலியவர்களைக் கொண்டு தர்மத்தைப் பரவச்செய்தார்.



# அத்தியாயம்–90

## ஸ்ரீ கிருஷ்ணலீலைகளின் சுருக்கம்.

த்வாரகா நகரத்தில் ஸ்ரீ:யதுபதியாகிய பகவான் ஸுகமாக வஸித்தார். அந்த நகரத்தில் ஸகல ஸம்பத்துக்களும் நிறைந்திருந்தன. விருஷ்ணிகள் பகவானை யுபாஸித்துக் கொண்டிருந்தார்கள். மேலும் அந்தநகரத்தில் மின்னல் போன்ற காந்தியுள்ள யுவதிகள் மேலான அலங்காரத்துடன் மாடிகளில் பந்து முதலியவை விளையாடுகிறார்கள். மதம் பெற்ற யானைகள் வீதிகளில் நெருக்கமாக நிற்கின்றன. யோதர்களும், குதிரைகளும், ரதங்களும் அலங்கரிக்கப் பெற்றிருந்தன தோட்டங்கள் விசேஷமாகவிருந்தன. அதிலுள்ள மரங்களில் வண்டு முதலியவை சப்தித்தன. அப்படிப்பட்ட நகரத்தில் பகவான் பதினாறு ஆயிரம் ஸ்வரூபமெடுத்துக்கொண்டு அவ்வளவு ஸ்திரீகளுடைய. அந்தபுரத்தில் அவர்களுடன் விளையாடினார். மேலு மந்தப்பகவான் உத்பலம்; கல்ஹாரம் முதலியவைகள் மலர்ந்து அவைகளின் தூளிபரவி அதனால் வாஸனை யுள்ள ஜலத்தால் நிறைந்த தடாகங்களில் அந்த ஸ்திரீகளுடன் ஜலக்ரீடை செய்தார். ஸ்திரீகளை ஸ்ரீ கிருஷ்ணன் ஆலிங்கனஞ்செய்து கொள்ள, அதனால் அவர்களுடைய ஸ்தனங்களிலிருக்கும் குங்குமப்பூ சேர்ந்த சந்தனம் பகவானுடைய மார்பில் ஸம்பந்தித்தது. அப்பொழுது கந்தர்வர்கள் மிருதங்கம், பணவம், ஆனகம், வீணை ஆகிய வாத்யங்களை கோஷித்து, பகவானுடைய சரிதத்தைக் கானஞ்செய்தார்கள். ஸூதர்களும், மாகதர்களும், வந்திகளும் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். அந்த ஸ்திரீகள் சிரித்துக்கொண்டு





ஜலத்தை கிருஷ்ணன் மீது இறைத்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனும் அவர்கள் மீது ஜலத்தை இறைத்து குபேரன் யக்ஷ ஸ்திரீகளுடன் விளையாடினாற்போல் க்ரீடித்தார். அந்த ஸ்திரீகளுடைய வஸ்திரமானது நனைந்ததால் அவர்களுடைய துடை, ஸ்தனம் முதலியவை ப்ரகாசித்தன. ஜலத்தை வாரியிறைப்பதால் தலைமுடிச்சு அவிழ்ந்து புஷ்பங்கள் கீழேவிழுந்தன. அவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனைக் கெட்டியாக ஆலிங்கனஞ் செய்துகொண்டு மன்மத விகாரத்தால் ப்ராகாசிக்கும் முகங்களுள்ளவர்களாக விருந்தார்கள். பின்னும் ஸ்ரீ கிருஷ்ணன் அந்த ஸ்திரீகளால் ஆலிங்கனஞ் செய்யப்பட்டு அவர்களுடைய ஸ்தனங் களிலிருந்த குங்குமங்களால் பூசப்பட்ட மார்புள்ள வராகி விளையாட்டிலுள்ள அபிநிவேசத்தால் தலைமுடிச்சு அவிழும்படி ஸ்திரீகளால் ஜலம் வாரி இறைக்கப்பட்டு ஸ்திரீகளின் மீது ஜலத்தைவாரி இறைத்துக்கொண்டும், அனேக பெண் யானைகளுடன் ஆண்யானை விளையாடினாற்போல கிரீடித்தார்.

இப்படி விளையாடும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய நடை, பேச்சு, பார்வை, சிரிப்பு, விளையாட்டு, ஆலிங்கனம் இவைகளால் அந்த ஸ்திரீகளுடைய மனம் அபஹரிக்கப்பட்டது; மேலும், ஸ்ரீ கிருஷ்ணனும் அவருடைய அந்த ஸ்திரீகளும் நடர்களுக்கும் நர்த்தகர்களுக்கும் ஆபரணம், வஸ்திரம் இவைகளைக் கொடுத்தார்கள். பின்னும் அந்த ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனையே மனத்தில் நினைத்துக் கொண்டு பயித்தியங் கொண்டவர்கள் போல் கொஞ்சகாலம் மௌனமாக விருந்து பின்பு அவரையே நினைத்து மூடர்களாகி எதனைச் சொன்னார்களோ, அதனைச் சொல்லுகிறேன்.

15. ஓ குரரி பக்ஷியே! ஈச்வரனுடைய மஹிமையால் ஜகத்தானது தூங்கும்பொழுது நீ ஏன் சப்திக்கிறாய்? ஆனால் உன்மீது குற்றமில்லை. தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீகிருஷ்ணனுடைய கம்பீரமான சிரிப்புள்ள பார்வையினால் சித்தம் அபஹரிக்கப்பட்டதால் நீ கத்துகிறாய்.

16. ஓ சக்ரவாகமே! இரவில் பந்துவைக்காணாமல் கண்ணை மூடிக்கொண்டு கேட்பவர்கள் விசனப்படும்படி சப்திக்கிறாய். நாங்கள் கிருஷ்ணனுக்கு வேலைக்காரிகளாகவிருந்து அவருடைய பாதங்களிலுள்ள புஷ்பமாலையைத் தலையில் வைத்துக்கொள்ளவேண்டுமென்று ஆசைப்படுவது போல நீயும் ஆசைப்படுகிறாயா?

17. ஓ ஸமுத்திரமே! எப்பொழுதும் தூக்கமில்லாமல் விழித்துக்கொண்டு ஏன் சப்திக்கிறாய்? ஸ்ரீ கிருஷ்ணன் எங்களை ஆலிங்கனம் செய்துக்கொள்ளும்பொழுது, குங்குமம் முதலிய அடையாளங்களை அபஹரித்துக் கொண்டதால், நாங்கள் எப்படி பிரலாபிக்கிறோமோ, அப்படி உன்னுடைய ஸ்வத்தாகிய கௌஸ்துபம் முதலியவைகளை பகவான் அபஹரித்துக் கொண்டதால் கஷ்டதசையையடைந்து வருந்துகிறாயா?

18. ஓ சந்திர! பகவானுடைய ரஹஸ்ய வார்த்தைகளை நாங்கள் மறந்து எப்படி மௌனமாகவிருக்கிறோமோ, அதுபோல நீயும் யக்ஷ்மா என்ற வியாதியால் உபத்திரவிக்கப்பட்டு குறைந்தவனாகி இருளை நிவர்த்திக்கச் சக்தியற்றவனாகியிருக்கிறாயா?





19. ஓ தென்றல் காற்றே! ஸ்ரீ கோவிந்தனுடைய கடைக்கண் பார்வையால் பிளக்கப்பட்ட எங்களுடைய ஹ்ருதயத்தில் மன்மதனை விருத்தி செய்கிறாயல்லவா? உனக்கு நாங்கள் என்ன அபராதம் செய்தோம்?

20. அழகு பொருந்திய மேகமே! யதுக்களுக்குச் சிறந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கு நீ தோழனென்பது நிச்சயம். நீ எங்களைப் போல மிக்க ப்ரேமையுடன் ஸ்ரீ வத்ஸம் என்ற அடையாளமுள்ள ஸ்ரீ பகவானை த்யானஞ் செய்கிறாய். அதனால் தான் அவரை நினைத்து ஹ்ருதயம் உருகி கண்ணீரை, பெருக்குகிறாய். அவரிடத்தில் ஸ்நேஹம் செய்வது துக்கத்தைக் கொடுக்கக்கூடியது.

21. ஓ குயிலே! ப்ரியமாகப் பேசுபவரான ஸ்ரீ கிருஷ்ணனுடைய வார்த்தை போல் பேசுகிறாய். உன்னுடைய வார்த்தை மரணமடைந்தவர்களைப் பிழைக்கச் செய்வதாகவிருக்கிறது. ஆனதால் உனக்கு என்னால் செய்யப்படவேண்டிய பிரியமான காரியமென்ன? அழகிய வார்த்தையால் சொல்லு.

22. ஓ பர்வதமே! நீ அசைகிறதில்லை, பேசுகிறதில்லை. பெரிதான விஷயத்தைப்பற்றி ஆலோசிக்கிறாய். அதனால் நல்ல புத்திசாலியாக விருக்கிறாய். நாங்கள் வஸுதேவபுத்திரனாகிய கிருஷ்ணனுடைய பாதத்தை ஸ்தனங்களில் தரிக்கவேண்டுமென்று விரும்புவதுபோல நீயும் உன்னுடைய சிகரங்களில் ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதத்தைத் தரிக்கவேண்டுமென்று விரும்புகிறாயா?

23. ஓ ஸமுத்திரத்தின் பத்னிகளாகிய நதிகளே! நாங்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அன்பு பொருந்திய பார்வையையடையாததால், ஹிருதயம் வாடி எப்படி மிக்க கஷ்டத்தை அனுபவிக்கிறோமோ, அப்படி உங்கள் பர்த்தாவாகிய ஸமுத்திரமானது இந்த கோடைகாலத்தில் மேகத்தின் வழியாக உங்களை விருத்திபண்ணாததால் நீங்கள் இளைத்திருக்கிறீர்கள். தாமரைமலர் புஷ்பிக்கவில்லை; மடுக்களில் ஜலம் வற்றிப்போயிற்று.

24. ஓ ஹம்ஸமே! நல்வரவா? இவ்விடத்திலுட்காரு. பாலைக்குடி. ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதையைச் சொல்லு. நீ கிருஷ்ணனுடைய தூதனென்று எங்களுக்குத்தெரியும். ஸ்ரீ கிருஷ்ணன் ஸுகமாகவிருக்கிறாரா? அவருடைய ப்ரியம் நிலையில்லாதது ஆனதால் முந்தி எங்களுக்குச் சொன்ன வார்த்தைகளை நினைத்துக் கொண்டிருக்கிறாரா? அற்பனாகிய கிருஷ்ணனுடைய தூதனே அவரை நாங்கள் எப்படி அடைவோம்? அவரிடத்தில் எங்களைப் பற்றி சொல்வதானால் எப்பொழுதும் அவரைவிட்டுப் பிரியாமல் இருக்கும் லக்ஷ்மீதேவி இல்லாத காலத்தில் சொல்லு.

25–27. இப்படி யோகேச்வரர்களுக்கும் அதிபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மனத்தைச்செலுத்திய ஸ்திரீகள் விஷ்ணு ஸம்பந்தமான கதியை அடைந்தார்கள்; பகவானுடைய குணமானது பிறரால் கானம் பண்ணப்பட்டாலும் தன்னால் உச்சரிக்கப்பட்டாலும், கேட்டவர்களுடைய மனத்தை பலாத்காரமாய் அபஹரிக்கிறது. பகவானை தர்சிப்பவர்களுடைய மனத்தை அபஹரிப்பதில் என்ன ஸந்தேஹம்? எந்த ஸ்திரீகள் ஜகத்குருவாகி ஸ்ரீகிருஷ்ணனை தங்களுடைய பர்த்தாவென்று நினைத்து கால் பிடிப்பது முதலியவைகளைச் செய்து உபசரித்தார்களோ அவர்களுடைய தபஸ்ஸைப்பற்றியும் சொல்லவேண்டுமோ?

28–36. ஸாதுக்களுக்குக் கதியான ஸ்ரீ கிருஷ்ணன் இம்மாதிரி வேதத்திற் சொல்லிய தர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு தர்மம், அர்த்தம், காமம் இவைகளுக்குக் கிருஹமே ஸ்தானமாயிருக்கிறது என்பதைக் காண்பித்தார். இப்படி கிருஹஸ்த தர்மத்தை அனுஷ்டித்துவரும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு 16800 ஸ்திரீகள் இருந்தார்கள். அவர்களுக்குள் எட்டுஸ்திரீகள் பட்டமஹிஷிகள் என்று முன்னமே சொல்லியிருக்கிறோம். கிருஷ்ணன் தம்முடைய ஒவ்வொரு பத்னிகளிடத்திலும் பத்து புத்திரர்களை உண்டுபண்ணினார். அவர்களில் பதினெட்டு புத்திரர்கள் மஹாரதர்கள்; மிக்க கீர்த்தியுள்ளவர்கள்; அவர்களுடைய பெயரைச் சொல்லுகிறேன் கேளும். ப்ரத்யும்னன், அனிருத்தன், தீப்திமான், பானு, ஸாம்பன், மித்திரன், ப்ரஹத்பானு, மித்திரவிந்தன், விருகன், அருணன், புஷ்கரன், தேவபாஹு, ச்ருததேவன், ஸுநந்தன், சித்ரபானு, வரூதன், கவி, ந்யக்ரோதன், என்பவர்களாம்; திருவக்ரா என்பவளிடத்திலுண்டானவன் உபக்ரோசனென்பவன். அவன் கிருஷ்ணனையே அனுஸரித்திருந்தான். அவன் நாரதருக்கு சிஷ்யனாக இருந்து பகவானிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தியிருந்தான். அவன் ஸாத்வததந்திரத்தை செய்தான். அதில் ஸ்திரீ சூத்திரர் இவர்களுக்கு வைஷ்ணவமான ஸம்ஸ்காரம் சொல்லப்

பட்டிருக்கிறது. அதனையறிந்தவன் முக்தியடைவான்.

37 – 48. கிருஷ்ணனுடைய புத்திரர்களுக்குள் ருக்மிணியின் புத்திரனாகிய ப்ரத்யும்னன் சிறந்தவனாகவிருந்தான். அவன் ருக்மியின் புத்ரியை விவாஹம் செய்துகொண்டு அனிருத்தனென்ற புத்திரனைப்பெற்றான். அவன் பதினாயிரம் யானை பலமுள்ளவன். அந்த அனிருத்தன் ருக்மியின் பிள்ளையின் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு வஜ்ரனென்ற பிள்ளையைப்பெற்றான். அவன்தான் அந்த குலத்தில் மிகுதியாக விருந்தவன். அவனுடைய புத்திரன் ப்ரதிபாஹு; அவனுடைய புத்திரன் ஸுபாஹு; அவனுடைய புத்திரன் உக்கிரஸேனன். அவனுடைய புத்திரன் சதஸேனன்; இந்த குலத்தில் பிறந்தவர்கள் தரித்திரர்களாகவாவது, படிக்காதவர்களாகவாவது, அல்பாயுஸுள்ளவர்களாகவாவது, பராக்கிரமமில்லாதவர்களாகவாவது, ப்ராஹ்மண பக்தியில்லாதவர்களாகவாவது இருக்கிறதில்லை.

யதுவம்சத்தில் பிறந்த புருஷர்களைக் கணக்கிடுவதற்கு அநேக வருஷங்களைக் கழித்தாலும் முடியாது ஆனாலும் யதுகுமாரர்களுக்கு ஆசார்யர்கள் 30088100 என்று கேள்விப்பட்டிருக்கிறோம். வஸுதேவருடைய வம்சத்திற்கேபதினாயிரம் லக்ஷம்புத்திரர்களுண்டேன்றால் யதுவம்சத்தை யாரால் கணக்கிடமுடியும். தேவாஸுரயுத்தத்தில் எந்த அஸுரர்கள் அடிபட்டார்களோ, கொடிய ஸ்வபாவமுள்ள அவர்கள் மனுஷ்யர்களாக ஜனித்து ஜனங்களை உபத்திரவித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களை நிக்கிரஹிப்பதற்காக பகவானால் தூண்டப்பட்டு, தேவர்கள் யதுகுலத்தில்





ஜனித்தார்கள். அது நூற்றொரு வம்சமாகப் பிரிந்திருந்தது. அவர்களெல்லோருக்கும் கிருஷ்ணன் அதிபதியாகவிருந்தார். அவர்களெல்லோரும் கிருஷ்ணனுடைய மனத்தை அநுஸரித்திருந்ததால் விருத்தியடைந்தார்கள். மேலுமவர்கள் படுக்கும்பொழுதும், ஸஞ்சரிக்கும் பொழுதும், பேசும்பொழுதும், ஸ்நானஞ் செய்யும் பொழுதும், பூஜிக்கும்பொழுதும், ஸ்ரீ கிருஷ்ணனையே மனத்தில் நினைத்திருந்தமையால் தம்முடைய சரீரத்தை அறியவில்லை.

49 – 50. புண்ணிய ச்லோகர்களுக்குள் உத்தமராகிய ஸ்ரீ கிருஷ்ணன் குருக்ஷேத்திரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களில் தம்முடைய யோகமாயையால் ஏற்படுத்தப்பட்ட யாக விதிப்படி ஸகல தேவ ஸ்வரூபியாகிய தம்மை பூஜிப்பதற்காக பட்டமஹிஷிகளுடன் தீக்ஷை செய்துகொண்டு யாகஞ்செய்தார்.

51. யதுகுலத்திலவதரித்த பகவானுடைய கீர்த்தியாகிய தீர்த்தமானது கங்கையைவிட மேலானதாயிற்று. ஸ்ரீ கிருஷ்ணனை த்வேஷித்தவர்களும், ஸ்நேஹித்தவர்களும் அவருடைய ஸாரூப்பியத்தை அடைந்தார்கள். எந்த லக்ஷ்மீதேவியின் அனுக்கிரஹத்திற்காக ப்ரஹ்மா முதலியவர்கள் முயல்கிறார்களோ, அந்த லக்ஷ்மீ ஸ்ரீ கிருஷ்ணனை ஆச்ரயித்திருக்கிறாள். கிருஷ்ணனுடைய திவ்விய நாமமானது கேட்கப்பட்டாலும், உச்சரிக்கப்பட்டாலும் பாபத்தை நிவர்த்திக்கிறது. ரிஷிகளுடைய வம்சங்களில் தர்மமானது ஸ்ரீகிருஷ்ணனால் ஸ்தாபிக்கப்பட்டது. மேலும் அவர் எல்லாவற்றையும் ஸம்ஹாரஞ்செய்யும் காலஸ்வரூபி, மிக்க மஹிமை பொருந்திய சக்கிராயுதமுள்ளவர்;

அப்படிப்பட்ட பகவான் பூமியின் சுமையை நிவர்த்தித் தாரென்பது ஆச்சர்யமல்ல.

52. ஸ்ரீ கிருஷ்ணன் தேவகியினிடத்தில் ஜனித்தாரென்ற ப்ரவாதமேயொழிய அவருக்கு உத்பத்தியில்லை. அவர் ஸகல ப்ராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக வஸிப்பவர்; ஸகல ப்ராணிகளுக்கும் ஆச்ரயமாகவிருப்பவர்; யாதவர்களால் ஸேவிக்கப் பட்டவர்; அப்படிப்பட்ட பகவான் தமது கைகளால் அதர்மத்தை நிவர்த்தித்துக் கொண்டும் பிருந்தா வனத்திலுள்ள ஸ்தாவரஜங்கம பிராணிகளுக்கு ஸம்ஸார துக்கத்தை நிவர்த்திசெய்து கொண்டும், அழகிய சிரிப்புள்ள முகத்தால் கோபிகைகளுக்கும், பட்டணத்து ஸ்திரீகளுக்கும், மன்மதனை விருத்தி செய்து (இவ்வுலகத்தில் போகத்தைக்கொடுத்து அதன் வழியாக மோக்ஷத்தைக்கொடுத்து கொண்டும்) எல்லோருக்கும் மேலானவராக ப்ரகாசித்தார்.

53–54. இப்படிப் பகவான் தம்மாலேற்படுத்தப் பட்ட தர்மத்தை காப்பாற்றுவதற்காகத் தமது இச்சைப்படி மத்ஸ்யம், கூர்மம்; முதலிய அவதாரங் களைச் செய்து, அந்த அந்த அவதாரங்களுக்குத் தக்கபடி அத்புதமான சரிதங்களைச் செய்தார். அந்தச் சரிதங்கள் கேட்டமாத்திரத்தில் கர்மபந்தத்தை நிவர்த்திக்கின்றன. அப்படிப்பட்ட பகவான் யதுகுலத் தில் அவதரித்துச்செய்த அத்புத லீலைகளைக் கேட்கவேண்டும். அதனால் அவரிடத்தில் பக்திவிருத் தியாகும் அவருடைய கதையைக் கேட்பதாலும், உச்சரிப்பதாலும், அவரையே த்யானிப்பதாலும் தாண்டமுடியாத ஸம்ஸாரத்தைத்தாண்டி அவருடைய பதத்தை அடைவான். அப்படிப்பட்ட பதத்தை அடையவிரும்பி அநேக அரசர்கள் நாட்டைவிட்டு காட்டிற்குச் சென்றார்கள்.



# ஸ்ரீமத்பாகவதம்.

## ஸ்கந்தம்–11.

## அத்யாயம்–1

### யதுகுலத்தை ப்ராஹ்மணர்கள் சபித்தது.

ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடன் அஸுரர்களைக் கொன்று யாதவர்களுடன் வஸித்து மிக்க சண்டை யையுண்டு பண்ணி பூமியின் சுமையை நிவர்த்தித்தார். மேலும் துர்யோதனன் முதலியவர்கள் கபடமாக சொக்கட்டான் விளையாடுவது, பரிஹஸிப்பது த்ரௌ பதியின் தலைமயிரைப் பிடித்திழுப்பது முதலிய அனேக கெட்ட கார்யங்களைச் செய்ததால் தர்ம புத்திரர் முதலிய பாண்டு குமாரர்கள் மிக்க கோபங் கொண்டார்கள். அந்தப் பாண்டவர்களை நிமித்தமாக வைத்துக்கொண்டு, ஸர்வேச்வரராகிய ஸ்ரீ கிருஷ்ணன் இரண்டு கக்ஷியிலும் சேர்ந்திருந்த அரசர்களைக் கொன்று பூமியின் சுமையை நிவர்த்தித்தார். பூதனை முதலிய சிலரைத் தாமே கொன்றார். ப்ரலம்பன் முதலிய சிலரை பலராமனைக் கொண்டு கொன்றார். பந்துக்களாகவிருந்த அஸுரர்களை ஒவ்வொரு நிமித்தத்தையுண்டுபண்ணி யாதவர்களைக் கொண்டு கொன்றார்) பூமிக்குச் சுமையாகவிருக்கும் மற்ற அரசர் களுடைய ஸைன்யத்தைத் தம்மால் ஸம்ரக்ஷிக்கப்பெற்ற யாதவர்களைக் கொண்டு கொன்றார். பின்னுமளவிடக் கூடாத மஹிமையுள்ள ஸ்ரீ கிருஷ்ணன் பூமிக்குச் சுமையாக விருந்தவர்களைக் கொன்றும் பூமியின் பாரம் நிவர்த்தியடையவில்லையென்றே நினைக்கிறேன்;

யதுகுலம் ஸஹிக்கமுடியாததாக விருக்கிறது இந்த யாதவர்கள் என்னை ஆச்சரயித்திருப்பதாலும், யானை, குதிரை, ரதம், காலாட்கள் முதலிய ஸைன்யங்கள் அதிகமாக விருப்பதால் இதனைக் கொல்வதற்குப் பிறரால் முடியாது (நாம் நேரில் கொல்வதும் சரியல்ல) ஆனதால் இவர்களில் ஒருவருக்கொருவர் விரோதத்தை யுண்டுபண்ணுகிறேன்; அதனால் அவர்கள் ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டு மரணமடைவார்கள்! மூங்கில் ஒன்றோடொன்று உரைந்து அதனாலுண்டான அக்னியால் எரிக்கப்படு வது போல யதுகுலம் நாசமடையும்; அதன்பின் நாம் வைகுண்டஞ் செல்வோம்" என்று தமக்குள் யோசித்து ஸத்யஸங்கல்பராகிய ஈச்வரன் பிராஹ்மண சாபமென்ற நிமித்தத்தால் தன்னுடைய வம்சத்தைக் கொன்றார்.

பின்னுமந்தப் பகவான் மிக்க அழகுபொருந்திய தமது திவ்ய சரீரத்தால் ஜனங்களுடைய கண்களை திருப்தி செய்தும், தம்முடைய இனிமையான வார்த்தைகளால் வாக்குகளையும், தம்மை ஸ்மரிப்பவர் களுடைய சித்தத்தையும் அபஹரித்தார். அவருடைய காலடியைத் தர்சித்தவர்கள் அதன் அழகைப்பார்த்து அவ்விடத்திலேயே அசையாமல் நிற்கிறார்கள். இம்மாதிரி கிருஷ்ணாவதார காலத்திலிருந்த ஜனங் களை அனுக்ரஹித்தார். பிந்திய ஜனங்களிடத்தில் கருணையால் பகவான் தம்முடைய கீர்த்தியைக்கேட்டு நல்லகதியை அடையட்டுமென்ற எண்ணத்துடன் பூமியில் கீர்த்தியை ஸ்தாபித்து தம்முடைய பதத்தை அடைந்தார், என்று சுகர் சொன்னார்.

8–9. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி





"ஓ ப்ராஹ்மண! யாதவர்கள் ப்ராஹ்மண பக்தியுள்ள வர்களல்லவா? கொடையாளிகள்; எப்பொழுதும் பெரியோர்களுடைய சேர்க்கையுள்ளவர்கள்; கிருஷ்ண னையேத்யானித்துக் கொண்டிருப்பவர்கள் அப்படிப் பட்ட யாதவர்களுக்கு ப்ராஹ்மண சாபம் எப்படி நேர்ந்தது? எதற்காக ப்ராஹ்மணர்கள் சபித்தார்கள்? எப்படி சபித்தார்கள்? ஒரே மனமுள்ளவர்களான யாதவர்களுக்கு எப்படி விரோதமுண்டாயிற்று? அதெல்லாவற்றையும் சொல்லும்" என்று கேட்டார்.

10–14. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி "ஸ்ரீ கிருஷ்ணன் மிக்க அழகு பொருந்திய சரீரமுள்ள வரானாலும் விஷயங்களிலேயே ஆசைக்கொண்டு காமியாகவிராமல் மங்களமான கர்மங்களைச் செய்து கொண்டு தாம் ஸகலகாமங்களையும் அடைந்தவரான தால் கர்மங்களின் பயனை விரும்பாமலும், த்வாரகா நகரத்தில் கிருஹஸ்தராகவிருந்து தர்ம கர்மங்களை யனுஷ்டித்துக் காண்பித்து பிறரையும் அனுஷ்டிக்கச் செய்தும் தம்முடைய கீர்த்தியைப் பரவச்செய்து கொண்டும் தம்முடைய வம்சத்தை ஸம்ஹரிக்க வேண்டுமென்று நினைத்தார். பூபாரத்தை நிவர்த்திப்ப தற்காக அவதரித்த வரானதால் அந்தக் காரியம் பாக்கியாகவிருப்பதால் அப்படி நினைத்தார். இப்படி பகவான் வஸுதேவருடைய கிருஹத்தில் வஸித்து மிக்க புண்ணியத்தைக் கொடுக்கக்கூடியவைகளும், மிக்க ஸுகரங்களும், அவைகளைக் கானஞ்செய்ப வர்களுக்குக் கலியின் தோஷத்தை போக்கடிப்பவை களுமான சரிதங்களைச் செய்து தமது வம்சத்தை ஸம்ஹரிக்க விரும்பி விச்வாமித்ரர், அஸிதர், கண்வர், துர்வாஸர், ப்ரகு, அங்கிரஸ், காச்யபர், வாமதேவர்,

அத்ரி, வஸிஷ்டர், நாரதர் முதலிய மஹர்ஷிகளை வரவழைத்து (சில கார்யத்திற்காக வரவழைத்து அந்தக் கர்மங்கள் செய்த பின்) த்வாரகைக்கு ஸமீபத்திலிருக்கும் பிண்டாரக மென்ற தீர்த்தத்திற்குப் போகும்படி அவர்களை அனுப்பினார். அவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஆஜ்ஞைப்படி பிண்டாரகமென்ற தீர்த்தஞ்சென்றார்கள். அப்பொழுது அவ்விடத்தில் யதுகுமாரர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் குமாரர்கள் ஸாம்பனுக்கு பெண் வேஷம் போட்டு அவளை முன்னிட்டு மஹர்ஷிகளை நோக்கி "வீணாகாத பார்வையுள்ளவர்களே! இவள் கர்ப்பிணி யாக விருக்கிறாள். இவளுக்கு ப்ரஸவகாலம் ஸமீபித்திருக்கிறது; இவள் உங்களைக் கேட்பதற்கு வெட்கப்படுகிறாள். ஆனதால் நாங்கள் கேட்கிறோம். இவள் ஆண் குழந்தையினிடம் பிரியமுள்ளவளாக விருக்கிறாள், இவளிடத்தில் பிறக்கும் குழந்தை ஆண் குழந்தையா? பெண் குழந்தையா சொல்லுங்கள்" என்று மிக்க வணக்கமுள்ளவர்கள் போல் கேட்டார்கள்.

*15–23.* அதனைக்கேட்ட மஹர்ஷிகள் கோபங் கொண்டு "ஓ மூடர்களே! உங்களுடைய குலத்தை கொல்லக்கூடிய உலக்கை பிறக்கும்" என்று சொன்னார்கள். அதனைக்கேட்டு அந்தக் குமாரர்கள் மிகவும் பயந்து ஸாம்பனுடைய வயிற்றைப்பார்க்க அதில் இரும்புமயமான ஒரு உலக்கையிருந்தது. அதனைக் கண்ட அந்தக் குமாரர்கள் "அதிருஷ்டமில்லாதவர் களான நாம் என்ன கார்யம் செய்தோம்? ஜனங்கள் நம்மை என்ன சொல்வார்கள்? என்று கவலைப்பட்டு அந்த உலக்கையை யெடுத்துக் கொண்டு தங்கள் வீடு சென்றார்கள். மேலுமவர்கள் அந்த உலக்கையை





ஸபையில் உக்ரஸேனர் முன்பாகவைத்து நடந்த சமாசாரத்தைத் தெரிவித்தார்கள். அதனைக்கேட்ட த்வாராகாவாஸிகள் "ப்ராஹ்மண சாபம் வீணாகாது; அவர்கள் சொல்லியபடி உலக்கையுமிருக்கிறது; இதென்ன ஆச்சர்யம் என்று பயந்தார்கள். யாதவர் களுக்கு அரசனாகிய உக்ரஸேனர் அந்த உலக்கையைப் பொடியாக்கி அப்பொடிகளை ஸமுத்திரத்தில் எறியச் செய்து பாக்கியான இரும்பையும் ஸமுத்திரத்தில் போட்டார். அந்த இரும்புத்துண்டை ஒரு மீன் விழுங்கிற்று. இரும்பு பொடிகள் அலையடித்து ஸமுத்திரக்கரையில் ஒதுங்கி கோரைகளாக முளைத்தன. பின்பு மீன் பிடிப்பவர்கள் ஸமுத்திரத்தில் வலைவீசி மீன் பிடித்தார்கள். அப்பொழுது இரும்புத்துண்டை விழுங்கிய மத்ஸ்யம் மற்ற மத்ஸ்யங்களுடன் வலை யில் சிக்கிக்கொண்டது. அதைப் பிடித்து, அதைப் பிளந்து, அதன்வயிற்றிலிருந்து இரும்புத் துண்டை ஒரு வேடன் அம்பின் நுனியில் வைத்துக்கொண்டான். ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இந்த விஷயங்கள் யாவும் தெரியும். ஆனாலும் அவர் காலஸ்வரூபியாகவிருந்து யதுவம்சத்தை ஸம்ஹரிக்க விரும்பியவரானதால் இவைகளை வேறாகமாற்ற ஸாமர்த்திய முள்ளவரானா லும் ப்ராஹ்மண சாபத்தை மாற்ற இஷ்டமில்லாமல் அதனை ஒப்புக்கொண்டிருந்தார்.



# அத்யாயம்—2

## வஸுதேவருக்கு நாரதர் பாகவத தர்மத்தை யுபதேசித்தது

ஓ பரீக்ஷித்து மஹாராஜ! கோவிந்தருடைய கைகளால் காப்பாற்றப்பட்ட த்வாரகா நகரத்தில் நாரதர் ஸ்ரீ கிருஷ்ணனை யுபாஸிக்க விரும்பி எப்பொழுதும் வஸித்துவந்தார். ஓ அரசனே! மனிதன் எங்கும் மிருத்யுபயமுள்ளவனானதால் இந்திரியமுள்ள எவன் தான் சிறந்த தேவர்களாலும் உபாஸிக்கக்கூடிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தை உபாஸிக்க மாட்டான்? அவர் ஒருநாள் வஸுதேவருடைய கிருஹத்திற்குச் சென்றார். வஸுதேவர் தேவர்ஷியாகிய கிய நாரதரைப் பூஜித்து ஆஸனத்தில் உட்காரச் செய்து நமஸ்கரித்து "ஓ பகவன்! தாய் தந்தைகளுடைய வரவு எப்படி குழந்தைகளுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கிறதோ, உத்தமச்லோகராகிய பகவானிடத்தில் பக்தியுள்ள பெரியோர்களுடைய வரவு எப்படி ஸம்ஸாரிகளுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியதோ, அப்படி பகவத் ஸ்வரூபியான உம்முடைய வரவு ஸகல ப்ராணிகளுக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியது. தேவர்களுடைய நடை பிராணிகளுக்கு துக்கத்தையும் (அதிகமழை பெய்வதால்) ஸுகத்தையுங் கொடுக்கிறது. ஸ்ரீமந் நாராயணனையே மனத்தில் நினைத்திருப்பவர்களான உம்மைப் போன்ற ஸாதுக்களுடைய நடை, பிராணிகளுக்கு ஸுகத்தையே உண்டுபண்ணுகிறது. எந்த மனிதர்கள் கர்மங்களைச் செய்து எப்படி தேவர்களை உபாஸிக்கிறார்களோ, அதற்குத் தக்கபடி தேவர்களும் கர்மத்தின்படி





மனிதர்களுக்கு நிழல் போல் உபசரிக்கிறார்கள். ஸாதுக்கள் அப்படியல்ல. தீனர்களிடத்தில் மிக்கவாத்ஸல்யமுள்ளவர்கள் (தம்மை ஆச்ரயிக்காவிடினும் தீனர்கள ப்ரீதி செய்கிறார்களென்று கருத்து), ஓ ப்ராஹ்மண! உம்முடைய வரவாலேயே கிருதார்த்தனாக விருக்கிறேன். ஆனாலும் நீர் எதனை யனுஷ்டித்து ஈச்வரனுடைய அனுக்ரஹத்தை அடைந்தீர்? அந்துப் பாகவத தர்மத்தைச்சொல்லும். அதனை ச்ரத்தையுடன் கேட்ட மாத்திரத்தில் பயத்திலிருந்து நிவர்த்தியடைவான். நான் முன்ஜன்மத்தில் அனந்தராகிய பகவானை புத்திரன் பிறக்க வேண்டி பூஜித்தேன் முக்தியைக் கொடுப்பவரானாலும் அவருடைய மாயையால் மோஹித்து மோக்ஷத்திற்காக பூஜிக்கவில்லை. ஆனதால் பலவகையான வ்யஸனமுள்ளதும், எங்கும் பயமுள்ளதுமான ஸம்ஸாரத்திலிருந்து சீக்கிரத்தில் நிவர்த்தியடைவேனோ அப்படி எனக்குபதேசிக்க வேண்டும். நீர் நல்ல வ்ரதங்களை அனுஷ்டித்தவர்" என்று கேட்டுக் கொண்டார்.

10–14. ஓ அரசனே! புத்திசாலியாகிய வஸுதேவருடைய வார்த்தையைக்கேட்டு தேவர்ஷியாகிய நாரதர் ஸ்ரீ நாராயணனுடைய குணங்களை நினைத்து மிக்க ப்ரீதியுடன் "ஓ ஸாத்வதர்களுக்குட் சிறந்தவரே! நல்லகார்யத்தில் முயற்சித்தீர்; ஜகத்தைப்பரிசுத்தப் படுத்தும் பாகவததர்மங்களைப்பற்றி கேட்டீரல்லவா? இந்தப் பாகவத தர்மத்தைக்கேட்டாலும், படித்தாலும், த்யானஞ்செய்தாலும், அதில் பிரியம்வைத்தாலும், அதனை அனுமோதித்தாலும், தேவர்களுக்கும் ஜகத்திற்கும் த்ரோஹஞ்செய்பவர்களானாலும் சுத்தர்களாவார்கள். மிக்கக்கல்யாண ஸ்வரூபமுள்ளவரும்,

தம்முடைய திவ்யநாமங்களை ச்ரவணஞ்செய்பவர்களுக்கும், உச்சரிப்பவர்களுக்கும் புண்யத்தைக்கொடுப்பவருமான ஸ்ரீமந்நாராயணனை ஸ்மரிக்கும்படி செய்தீர். இந்த விஷயத்தில் ரிஷபருடைய புத்திரர்களுக்கும் நிமிக்கும் நேர்ந்த ஸம்வாதமாகிய வெகுநாளைக்கு முன் நடந்த இதிஹாஸத்தை உதாரணமாகச் சொல்லுகிறேன்.

15–31. ஸ்வாயம்புவ மனுவின் புத்திரனாகிய ப்ரியவ்ரதருக்கு ஆக்னீத்ரரென்பவர் புத்திரர். அவருடைய புத்திரர் நாபியென்பவர், அவருடைய புத்திரர் ரிஷபரென்பவர்; மோக்ஷதர்மத்தை லோகத்திற்கு உபதேசிப்பதற்காக பகவானுடைய அம்சமே ரிஷபராக அவதரித்தது என்று சொல்லுகிறார்கள்; அவருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்கள் ப்ரஹ்மத்தை அறிந்தவர்கள். அவர்களில் பரதரென்ற மூத்தவர் நாராயணனிடத்தில் மிக்கபக்தியுள்ளவர்: அவருடைய பெயரால்தான் இந்த வர்ஷம் பாரத வர்ஷமென்று பெயரடைந்தது; (முன் அஜநாபமென்ற பெயருள்ள வர்ஷம். பாரதமென்ற பெயரடைந்தது) அவர் இந்தப்பூமியை பரிபாலித்து ஸகல போகங்களையும் அனுபவித்து பின்பு காட்டிற்குச் சென்று தபஸ்செய்து, ஸ்ரீ ஹரியை மூன்று ஜன்மங்களில் உபாஸித்து அவருடைய பதத்தை அடைந்தார். மற்ற புத்திரர்களில் ஒன்பது குமாரர்கள் ஒன்பது த்வீபங்களுக்கு அதிபதிகளாகவிருந்தார்கள். எண்பத்தொன்று குமாரர்கள் கர்மமார்க்கத்தைப் பூமியில் பரவச் செய்துகொண்டிருந்தார்கள். கவி, ஹரி, அந்தரிக்ஷர், ப்ரபுத்தர், பிப்பலாயனர், ஆவிர்ஹோத்திரர், த்ரமீளர், சமஸர், கரபாஜனர், என்ற ஒன்பது குமாரர்கள் ஆத்ம தத்துவத்தை அப்யஸிப்பதில் ச்ரமப்பட்டவர்களும், தத்வத்தை நிரூபிப்பவர்களும், திகம்பரர்களும், ஆத்மவித்யையில் ஸமர்த்தர்களுமாகவிருந்தார்கள். அவர்கள் இந்த ஜகத்தை பகவத் ஸ்வரூபமாகவும் ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபமாகிய அதனைத் தாமாகவும், பார்த்துக்கொண்டுப் பூமியில் ஸஞ்சரித்தார்கள். அவர்கள் ஒன்றிலும் பற்றுதலில்லாமல் மஹர்ஷிகள், சாரணர்கள், பூதநாதர், வித்யாதரர்கள், ப்ராஹ்மணர்கள், பசு, தேவர்கள், ஸாத்யர்கள், ஸித்தர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், நாகர்கள் ஆகிய இவர்களுடைய லோகங்களில் தங்களிஷ்டப்படி ஸஞ்சரித்தார்கள். ஒருகால் பாரதவர்ஷத்தில் நிமியாகஞ் செய்துகொண்டிருக்க அந்த யாகசாலைக்கு அந்த யோகிகள் வந்தார்கள். ஸூர்யன் போன்ற அந்தப் பாகவதர்களான யோகிகளைக்கண்டு யஜமானன், ஆஹவனீயம் முதலிய அக்னிகள், ப்ராஹ்மணர்கள் ஆகிய எல்லோரும் எழுந்திருந்தார்கள்.

நிமி அவர்களை ப்ரஹ்ம வித்துக்களென்று தெரிந்துகொண்டு மிக்கப்பிரியத்துடன் ஆஸனங்கொடுத்து விதிப்படி பூஜித்தார். மேலுமவர் ஸனகர் முதலிய ப்ரஹ்மதேவருடைய புத்திரர்கள்போல் ப்ரகாசிக்கும் அந்த யோகிகளை நோக்கி மிகுந்த வணக்கத்துடன் 'விஷ்ணுபக்தர்கள் லோகங்களைப் பரிசுத்தப்படுத்துவதற்காக லோகங்களில் ஸஞ்சரிப்பார்கள். ஆனதால் உங்களை ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பார்ஷதர்களென்று நினைக்கிறேன். ஒரு க்ஷணத்தில் நாசமடையக்கூடியதானாலும் மனுஷ்ய ஜன்மம் கிடைப்பது அரிது. (புருஷார்த்தங்களை அடைவதற்கு ஸாதனமாகவிருக்கிறது) அந்த ஜன்மத்திலும் விஷ்ணு பக்தர்களாகிய ஸாதுக்களுடைய தர்சனங்கிடைப்பது

